ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மயர்வற மதிநல மருளப்பெற்ற

குலசேகராழ்வார் அருளிச்செய்த

# பெருமாள் திருமொழி.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

செந்தமிழ்ச்செல்வர் - அண்ணங்கராசார்யஸ்வாமிகளால்,

இலக்கண முறைமைக்கு இணங்கும் வகையால்

எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு

எளியநடையில் தெளிய எழுதப்பட்ட

"அருளிச்செயலமுதம்" என்னும் உரையுடன்

டி. ஆர். அண்டு கம்பெனியாரால்

ஸ்ரீநிகேதந முத்ராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

மதராஸ்.

1923



ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

    

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்திருவடிகளே சரணம்.

# பொதுத்தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥
𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ॥
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌲𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌲𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌪𑌰𑌕𑌾𑌲𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

---

ஸ்ரீ:



ஸ்ரீகுலசேகரப் பெருமாள் திருவடிகளேசரணம்.

# பெருமாள் திருமொழி.

குலசேகராழ்வாரைக் குலசேகரப் பெருமாள் என்று வழங்கும் ஸம்ப்ரதாயமுளதாதலால் இங்குப் பெருமாள் என்றது குலசேகராழ்வாரை எனக் கொள்க. திருமொழி என்பதற்குச் சிறந்த வார்த்தை என்பது பொருள்; ஸ்ரீகுலசேகராழ்வாருடைய ஸ்ரீஸூக்தி என்றதாயிற்று. பெருமாளென்னும் மறு பெயரையுடைய குலசேகராழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திவ்யப்ரபந்தமென்பது கருத்து. குலசேகராழ்வார்க்கு 'பெருமாள்' என்ற திருமாலின் பெயர் வழங்கிய காரணம் அவரது சரித்திரத்தில் விளக்கப்பட்டது.

இங்ஙனன்றி 'பெருமாள் திருமொழி' என்பதற்கு - திருமாலின் விஷயமான திவ்ய ப்ரபந்தமென்றும் பொருள் கொள்ளலாமாயினும் அது ஸம்ப்ரதாயமன்று. அன்றியும், அங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்து, இத் தொடர்மொழி, வைஷ்ணவ திவ்ய ப்ரபந்தங்கட்கெல்லாம் திருநாமமாகத் தக்கதாய், இந்த ஒரு பிரபந்தத்துக்கு மாத்திரம் காரணப் பெயராவதற்கு ஏலாதாம். 'பெரியாழ்வார் திருமொழி' 'நாச்சியார் திருமொழி' என்ற இடங்களிற்போல, 'பெருமாள் திருமொழி' என்ற பெயரிலும், தொக்குநின்ற ஆறும் வேற்றுமையுருபு - செய்யுட்கிழமைப் பொருளதென அறிக.

தமிழ் வேதமாகிய நாலாயிர திவ்யப்ரபந்தத்துள் முதலாயிரத்தில் ஐந்தாவது பிரபந்தமாகிய இத்திவ்ய ப்ரபந்தம் ஸ்ரீராமாயண ஸாரமெனப்படும்.

இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை மணிப்ரவாள நடையில் சிறந்த வியாக்கியானஞ் செய்துள்ளார்; அதனைத் தழுவி வேறுவிஷயங்களையுஞ் சேர்த்து இதற்கு அடியேன் ஓர் உரை எழுதத் தொடங்குகின்றேன்; குற்றங் குறைகளைப் பெரியோர் பொறுத்தருள்வாராக.

ஸ்ரீ.

இந்நூலாசிரியராகிய

# குலசேகராழ்வார் வைபவம்.

சேரநாட்டில் கோழிக்கூடு என்னும் ராஜதானியில் அரசாண்ட த்ருடவ்ரதன் என்ற அரசன் வெகுநாளளவும் பிள்ளையில்லாத குறையால் திருமாலுக்கு விசேஷமான ஆராதநத்தைச் செய்ய, அதன்பயனாக அவனுக்கு ஒரு குமாரன் கலியுகம் பிறந்த உஅ-ஆம் வருஷமான பராபவ வருஷத்து மாசிமாதத்தில் புநர்வஸு நக்ஷத்திரத்திலே, பட்டத்து இராணியினிடத்தில் திருவஞ்சிக்களமென்ற ஊரிலே கௌஸ்துபாம்ஸமாய் அவதரித்தனன். அச்செய்தியை அறிந்த அரசன் ஆநந்தக் கடலில் ஆழ்ந்து, உரிய காலத்தில் நாமகரணஞ் செய்யத் தொடங்கி இம்மகன் தன் குலத்துக்குச் சிரோபூஷணம் போலச் சிறப்புத்தந்து யாவராலுங் கொண்டாடத் தக்கவனெனக் கொண்டு 'குலசேகரன்' எனப் பெயரிட்டான்.

பின்பு அவ்விள மகன் நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாகச் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல வளர்ந்து சௌளமும் உபநயநமும் தக்கபருவங்களில் தந்தையாற் செய்விக்கப் பெற்று, நல்லாசிரியரைத் துணைக்கொண்டு நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும் தநுர்வித்தையையும் மற்றும் அரசர்க்கு உரிய நீதிநூல்களையும் யானை குதிரை தேர் முதலியவற்றின் நூல்களையும் சிறிது காலத்திலேயே ஐயந்திரிபற முற்றுங்கற்று வல்லனாயினான். அம்மைந்தனது திறத்தைக் கண்டு களிப்புக் கொண்ட காவலன் அவனுக்கு இளவரசு முடி சூட்டினன்.

பின்னர், குலசேகரன் பராக்கிரமத்தாற் பகைவெல்லலுற்று நால்வகைச் சேனையோடு புறப்பட்டுச் சென்று, சோழபாண்டியர் முதலிய அரசர்களனைவரையும் புறங்கொடுத்தோடுமாறு வென்று அவர்களைக் கீழ்ப்படுத்தி அவர்கள் நாடுகளைத் தம் வசப்படுத்தி, இங்ஙனம் சேர சோழ பாண்டியமென்னும் தமிழ்நாடு மூன்றுக்கும் தலைமை பூண்டதனால் "கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்னும்படி பலபிருதுகளைப் பெற்று மீண்டுவந்தனன். பிறகு, த்ருடவ்ரத மஹாராஜா குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து ராஜ்யபாரம் முழுவதையும் அம்மகன் தோளில் நிலை நிறுத்தி க்ஷத்ரிய ஜாதி முறைப்படியே தான் தவஞ்செய்து உயர்கதி பெறுதற் பொருட்டுத் தவவனஞ் சென்றான்.

தந்தையின் பிரிவுக்கு ஆற்றாது வருந்தி மந்திரிகள் தேற்றத் தேறிய மன்னவ் குமாரன், மத்யஸ்த நிலைமை தவறாது, சிறியவற்றைப் பெரியவை நலியாதபடி ராமராஜ்யம் என்னுமாறு எதிரின்றி அரசாண்டு ஒரு பெண்மணியை மணந்து, திருமாலின் தேவிமார் மூவருள் நீளாதேவியின் அம்சமான இளை என்னும் ஒரு புத்திரியையும், த்ருடவ்ரதனென்று பிதாமஹன் பெயரையே பெறும் ஒரு புத்திரனையும் பெற்றுக் கவலையற்றிருக்கையில், 'இம்மை மறுமை வீடு என்னும் மும்மையின்பங்களையும் தரவல்லனாய் முதலும் முடிவும் அற்ற முழுமுதற் கடவுள் யாரோ?"

என்று பரதத்வ விசாரம் பண்ணத் தொடங்கிப் பலபண்டிதர்களுடனே ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலிய ஸகலகலைகளையும் பரிசோதித்துப் பார்த்து வர, அதுவே ஸமயமென்று அவ்வரசனை ஆட்கொண்டு உய்விக்கக் கருதிய கருணை நிதியான கமலக் கண்ணனது திருவருள் நோக்கத்தால ஸ்ரீமஹாவிஷ்ணுவே சிறந்த தெய்வமென்கிற ஸத்யமான ஸித்தாந்தம் அவனது ஞானக் கண்ணுக்குத் தெள்ளிதிற் புலப்பட்டது.

இப்படி எம்பெருமானை எல்லாவுயிர்கட்கும் இறைவனாக அறிந்து அப்பிரானது அநந்த கல்யாண குணகணங்களாகிய பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகி ஈடுபட்ட இந்தக் குலசேகராழ்வார், திருமாலின் விபவாவதாரங்களில் ஸ்ரீராமாவதார கிருஷ்ணாவதாரங்களி னிடத்திலும் அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம் திருவேங்கடம் முதலிய திவ்யதேசத்து எம்பெருமான்களிடத்திலும் மிக்கபக்திப்பெருங்காதல்கொண்டு, ஸ்ரீராமாயண காலக்ஷேபத்தையே எப்போதும் தமக்குப் போது போக்காகப்பெற்றும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டு அழைத்து வந்து விசேஷமாக உபசரித்தும் தமது திருமாளிகைத் திருவாராதநத்தில் எழுந்தருளியுள்ள இராமபிரானுக்கும் ஸ்ரீராஜகோபாலனுக்கும் நித்யநைமித்திக உத்ஸவங்களைக் குறையறச் செய்துகொண்டு மிருந்தார்.

இவர், ஒருநாள் ஸ்ரீராமாயண காலக்ஷேபஞ் செய்து வருகையில், ஆரண்ய காண்டத்தில் 'இராவணன் தங்கையான சூர்ப்பணகை மூக்கு அறுப்புண்டு (தனக்குத் துணையாக இராவணனால் நியமிக்கப்பட்டு) ஜநஸ்தாநத்திலிருந்த கரதூஷணாதியரிடத்திற் போய் முறையிட்டதை யறிந்து அவர்கள் அதிஉக்ரமாக எண்ணிறந்த சேனைகளைத் திரட்டிக்கொண்டு படையெடுத்துவந்த சமயத்தில், பெருமாள், பிராட்டிக்குக் காவலாக இருக்கும்படி இளையபெருமாளைப் பர்ணசாலையிலே நிறுத்திவிட்டு, தமக்கு ஒருவருந் துணையின்றித் தாம் தனியே அவ்வரக்கர்களனைவரோடும் போர்க்குச்சென்று நின்றார்' என்று பௌராணிகர் சொல்லக் கேட்டவுடனே, ஸ்ரீராம சரித்திரத்தில் தமக்குள்ள மிக்க அன்பினால் வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அந்தச் சரித்திரத்தை அன்றுதான் நடக்கின்றதாக நினைத்து, 'இப்படிப்பட்ட ஸங்கட காலத்தில் எம்மால் இயன்ற உதவியைச் செய்யாது விடுவது சிறிதும் தக்கதன்று' என்று துணிந்து, தமது ஸேனைகளை யெல்லாம் போர்க்குச் சித்தமாய் முன் செல்லும்படி பணித்துத் தாமும் ஜநஸ்தாநத்தை நோக்கிப் புறப்பட்டார். அச்சமயத்தில் யாவரும் இன்னதென்று அறியாது திடுக்கிட்டு நிற்கையில், அதிநிபுணரான ஆசிரியர், இராமபிரான் தாம் ஒருவராகவே நிர்ப்பயமாகப் பெரும் போர்செய்து சத்துருக்களத்தனை பேரையும் வென்று தமது ஆச்ரமத்துக்கு மீண்டுவர, அவரைச் சீதாதேவி களிப்புடன் அணைத்து அவரது இளைப்பைத் தணித்தாள்' என்ற செய்தியை எடுத்துக்கூற, அதுகேட்ட ஆழ்வார் ஆநந்தமடைந்து ஸேனையைத் திருப்பிக்கொண்டு தாமும் பிரயாணத்தை நிறுத்தினார்.

அது முதல், இராமாயணங் கூறுபவர், எந்தெந்தப் பாகத்தில் இராமனது விஜயப்ரஸ்தாவம் வருகின்றதோ, அந்தந்தப் பாகத்தையே வளர்த்தி யுரைத்தும், அரக்கராதியால் இராமபிரானுக்குத் துன்பம் நேர்ந்த இடங்களையெல்லாம் சுருக்கியுரைத்தும் வந்தனர். இப்படியிருக்கையில், ஒருநாள் அந்தக் குரு வேறொரு

காரிய நிமித்தம் தாம் அவசியமாக வேறிடஞ் செல்லவேண்டி வந்ததனால், காலக்ஷேபஞ் சொல்லுதற்குத் தாம் வாராமல் தமது குமாரரை அனுப்பினார்.

அவர், குலசேகரருடைய இயற்கையை உணராமல் இராவணன் ஸீதையை எடுத்துப்போன வ்யஸநகரமான செய்தியை உபந்யாஸஞ் செய்ய, அது செவியிற் பட்டவுடனே குலசேகரர் மனங்கொதித்து ‘நான் இப்பொழுதே வெகு விரைவாகச் சென்று கடல் கடந்து இலங்கையை நீறுபடுத்தி ராக்ஷஸராஜனைப் பந்துமித்திரரோடும் போரில் தொலைத்து எனது அன்னையை மீட்டுவருவேன்’ என்று சொல்லி யெழுந்து ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு ஸேநாஸமூஹத்தோடு இலங்கை நோக்கிப் பிரயாணமானார். அப்பொழுது விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் இந்தக் கண்டு பெரு வியப்புக்கொண்டு ‘இதன் முடிவு என்னாகுமோ?’ என்று பெருங் கவலையோடு பார்த்து நின்றனர். ஆழ்வார் கடலை நீந்தியே கடக்க நிச்சயித்துக் கழுத்தளவினதான தண்ணீரில் இறங்கிநின்ற சமயத்தில், இவரது அன்புக்கு இடமான இராமமூர்த்தி, இவரைத் தடுப்பதற்கு வேறுவகை யொன்றும் இல்லாமையைக் கருதி, தாம் நேரிலே சீதையைக் கைப்பற்றிக்கொண்டு இலக்குமணனோடு எதிரில் வந்து நின்று தரிசனந்தந்து, தமது போர் வெற்றியையும் சத்துரு விநாசத்தையும் தேவியை மீட்டதையும் தெளிவாகக் கூறி, பிறவிப் பெருங் கடலினின்று கரையேற்றுதற்கு ஓர் அறிகுறியாகுமாறு இவரைக் கரையேற்றி நகரினுட் செலுத்திவிட்டு, பின்பு மறைந்தருளினர்.

இப்படி எம்பெருமானுடைய திவ்ய சரித்திரங்களைக் கேட்பதில் மிக்க அன்புடையரான குலசேகரர், புராணங்களிற் கூறப்பட்ட ஸ்ரீரங்க க்ஷேத்ர மேன்மையைக் கேட்டு, ‘திருவரங்கத்தை நோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லுதலும், அத்திருப்பதிக்குச் செல்ல வேண்டுமென்ற விருப்பமும் ஸகல கருமங்களையும் தொலைக்கும்’ என்ற தன்மையையும், ‘அக்கோயிலில் நித்யவாஸஞ் செய்தலும் நம்பெருமாளைக் கண்ணாரக் கண்டு களித்தலும் பேரின்பத்தைத் தரும்’ என்ற தகைமையையும் உணர்ந்து அங்குப் போவதற்கு மிக்க குதூஹலமுடையராய்ப் பரிவாரங்களோடு புறப்படுபவரானார்.

இவர் இவ்விடத்தை விட்டு அவ்விடத்துச் சென்று பெரிய பெருமாளைச் சேவிப்பாராயின் பின்பு இங்கு மீளுதல் அரிது என்றும், அங்குத் தானே நித்யவாஸஞ் செய்யக்கருதி விடுவரென்றும் நினைத்து அந்த யாத்திரையைத் தடுப்பதற்கு ஆலோசித்து மந்திரிகள் ஒருபாயஞ் செய்தனர்; அது யாதெனில்:—இவர் ஸ்ரீவைஷ்ணவர்களை உபசரிப்பதில் மிக்க விருப்பமுள்ளவராதலால் அநேக பாகவதர்களை அமைச்சர்கள் வரவழைத்து இவர்முன் செலுத்த, இவர் ‘அறுபதினாயிரம் வருஷகாலம் விஷ்ணுவை ஆராதநஞ்செய்த பயனும், ஒருகால் வைஷ்ணவர்களைப் பூசித்த பேற்றுக்கு ஈடாகாது’ என்ற சாஸ்திர முறைமையை அறிந்தவராதலால் ஸ்ரீரங்க யாத்திரையை நிறுத்தி, ஷோடசோபசாரத்தோடு திருமாலடியார்களைப் பலவாறு உபசரித்தார். இவ்வாறு இவர் திவ்யதேச யாத்திரை தொடங்கும் பொழுதெல்லாம் மந்திரிகள் மெய்யடியார்களைக் கொணர்ந்துவிட்டுத் தடுத்துவந்தனர். ஆழ்வார் இங்ஙனம் அவர்களை அகங்கனிந்த அன்போடு கொண்டாடி வருகையில் அந்நாடெங்கும் ஸ்ரீவைஷ்ணவர் திரள் மிக்கது.

அரண்மனையினுள்ளும் ஆலோசனைச் சபா மண்டபத்திலும் இன்னும் அந்தரங்கமான இடங்களிலும் பாகவதர்கள் எக்காலத்திலும் சிறிதுந் தடையின்றிப் போக்குவரவு செய்தலையும் தமது அரசன் பக்கல் இவர்கள் வரம்பு கடந்த ஸ்வாதந்திரியம் பாராட்டுதலையுங்கண்டு பொறாமைகொண்ட மந்திரிகள், இவர்களிடத்திக் குலசேகரர்க்கு வெறுப்பை உண்டாக்கக் கருதினர். இவ்வாறு இருக்கையில், அனைவருங் கொண்டாடத்தக்க ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம் வந்தது. அதன் பொருட்டு, தோரணம் நாட்டியும் கொடிகள் கட்டியும் வாழைமரங்களை நிறுத்தியும் நகர் முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. பின்பு திருக்கோயிலில் அர்ச்சகர் இராமமூர்த்திக்கும் மற்றும் விக்ரஹரூபமாயுள்ள எம்பெருமான்கட்கும் திருமஞ்சனஞ் செய்தற்பொருட்டு அவர்களுடைய திவ்யாபரணங்களை யெல்லாம் களைந்து வைத்தனர். பின்பு வேத கோஷத்தோடும் வாத்ய கோஷத்தோடும் திருமஞ்சனம் நடந்தேறிற்று. அச்சமயத்தில் யாவரும் ஸ்வாமி ஸேவையிலே கருத்தூன்றி நிற்கையில், மந்திரிகள் ஒரு நவரத்நமாலையைத் திருவாபரணத் திரளிலிருந்து எடுத்து ஒளித்துவைத்திட்டனர். பின்பு பெருமாளுக்கு அலங்காரஞ் செய்யும்பொழுது அவ்வணிகலத்தைக் காணாமல் அர்ச்சகர் கவலைப்பட்டு அரசரிடத்து அறிவிக்க, அது கேட்டு ஆழ்வார் மனங்கலங்கி மந்திரிகளை அழைப்பித்து 'கள்வனை விரைவில் தேடிப்பிடியுங்கள்' என்று கட்டளையிட்டார். அதுவே வியாஜமாக, அவர்கள் 'இது கொண்டுபோனவர் வைஷ்ணவரே யன்றி வேறு எவருமல்லர்; இவர்களே எப்பொழுதும் இங்கு எங்கும் தட்டின்றித் திரிகின்றவர்; பிறனொருவன் புதியனாக வந்து அஞ்சாது இத்தொழில் செய்யான்' என்று பாகவதர் மீது அடாப்பழி சுமத்தினர். நாராசம் புக்கதுபோல அக்கடுஞ் சொல் செவி புகப்பெற்ற ஆழ்வார் ஹரிபக்தர்களின் நற்குண நற்செய்கைகளை நன்றாக அறிந்தவராதலால் அவர்கள்மேற் சிறிதும் சங்கை கொள்ளாமல் அவர்களின்மீது குற்றங் கூறின தமது மந்திரிகளையே கடிந்து, வைஷ்ணவ சிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய கடுந்தொழிலை நினைதலுஞ் செய்யார்; இது திண்ணம்; இதனை உங்கட்கு உறுதிப்படுத்துதற்காக, யானே பிரமாணங்காட்டுவேன்' என்று சொல்லி, பாம்பை உள்ளிட்ட தொரு குடத்தைச் சபைமுன்பே தருவித்து, "ஸ்ரீவைஷ்ணவர் மனம் மொழி மெய் யென்னும் த்ரிகரணத்தாலும் சுத்தராயின், இப்பாம்பு என்னை யாதொன்றுஞ் செய்யாது; இல்லையாயின், இந்நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லுக' என்று சபதஞ்செய்து அக்குடத்தினுள்ளே கையிட்டனர். அப்பொழுது, ஸத்யத்துக்குக் கட்டுப்படுந் தன்மையதான ஸர்ப்பம் சிறிது கொடுமையும் புரியாது தணிந்திருந்தது. அது நோக்கி, மந்திரிகள் தமது சூழ்ச்சி சிறிதும் பலியாதொழிந்ததே! என்று வருத்தமும், தேர்ந்த ஆராய்ச்சியின்றி இங்ஙனம் தவறுசெய்து விட்டோமே! என்று அநுதாபமும், இனி நமது கதி என்னாகுமோ என்று பேரச்சமுங் கொண்டு நடுநடுங்கி, தாம் கவர்ந்திட்ட அந்த ஆபரணத்தை உடனே கொணர்ந்து ஸமர்ப்பித்து, தாம் அறியாதுசெய்த அப்பெரும் பிழையைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்து, ஆழ்வாரது திருவடித்தாமரைகளைச் சரணமடைந்தார்கள். ஆழ்வார் மிக்க பொறுமையுடையவராதலால் மந்திரிகளின் பிழையைப் பொறுத்து, 'இனி நீவிர் பாகவதர்கட்கு எப்பொழுதும் பணி

விடை செய்வதே, நமது குற்றம் தீரும் வகை' என்று சொல்லிவிட, அவர்கள் அங்ஙனமே அடியவர்க்கு அடியாராய்க் குறிப்பறிந்து குற்றேவல் புரிந்து பேறு பெற்றனர்.

பின்பு குலசேகரர் பொய்ம்மைக்கு இடமான அரசாட்சியில் இருப்பதற்கு இஷ்டப்படாமல் தமது குமாரனை த்ருடவ்ரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்துத் தாம் திருவரங்கம் பெரியகோயிலுக்குச் சென்று நம்பெருமாளைச் சேவித்து, அவ்வழகிய மணவாளனையே தனக்கு உரிய மணவாளனாகக் கருதிய தம் திருமகளை அப்பெருமானுக்கே உரியபொருளாகக் கொடுத்து மணஞ் செய்வித்து, பகவத் பாகவத கைங்கரியங்களை விதிமுறை வழுவாது நித்தியஞ்செய்து கொண்டு அத்திருப்பதியிற் சிலகாலம் இருந்தனர்.

பிறகு மற்றுஞ் சில திவ்யதேசங்கட்கும் யாத்திரைசெய்ய எண்ணி, திருவேங்கடம் திருவயோத்தி தில்லைத் திருச்சித்திரகூடம் திருக்கண்ணபுரம் திருமாலிருஞ்சோலை திருவித்துவக்கோடு முதலிய திருப்பதிகட்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளியிருக்கின்ற பெருமாளைக் கண்ணாரக்கண்டு ஸேவித்து, அப்பால், நம்மாழ்வாரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூர்க்கு அருகிலுள்ள பிரமதேசமென்னும் ஊரை யடைந்து, அங்கு ஸ்ரீராஜகோபாலஸ்வாமி ஸந்நிதியிற் சிலகாலம் திருத்தொண்டு செய்து கொண்டிருந்து தமது அறுபத்தேழாவது பிராயத்திற் பரமபதமடைந்தனர்.

இவர் எம்பெருமானை அநுபவிக்கும்போது அவ்வநுபவத்தாலாகிய ஆநந்தம் உள்ளடங்காமையால் அதனை வெளியே வழியவிடுவாராகி அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள் (முகுந்தமாலை என்னும் வடநூலும்), பெருமாள் திருமொழி என்னும் தமிழ் நூலுமாம்.

"அரசமர்ந்தா னடி சூடுமரசையல்லால் அரசாகவெண்ணேன் மற்றரசுதானே" என்று கோவிந்த பாதாரவிந்தத்தைச் சிரமேற் கொள்ளுதலேயே கிரீடாபிஷேகமாகப் பாவிக்கின்ற இவர், பெருமாளுடைய [இராமபிரானுடைய] இன்ப துன்பங்களைத் தமது சுகதுக்கங்களாகக் கருதியதனால் இவர்க்குப் பெருமாள் என்னும் ஒரு பெயர் வழங்கும்.

இவ்வாழ்வார், "செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே!. நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாயில், அடியாரும் வானவரும் அரம்பையருங் கிடந்தியங்கும், படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பேனே" என்று வேண்டியமை பற்றி விஷ்ணுவாலயங்களில் கோயிலினுள் வாயிற்படி குலசேகரன்படி என்று இவர் பெயரையிட்டு வழங்கப்படும்.

குலசேகராழ்வார் வைபவம் முற்றிற்று.

---

"மாசிப்புனர்பூசங் காண்மினின்று மண்ணுலகீர்
தேசித்திவசத்துக்கே தென்னில்—பேசுகின்றேன்
கொல்லி நகர்க்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்"

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

# பெருமாள் திருமொழித் தனியன் உரை.

உடையவர் அருளிச் செய்த தனியன்.

(இருவிகற்ப நேரிசை வெண்பா.)

இன்னமுத மூட்டுகே னிங்கேவா பைங்கிளியே!
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோ னெங்கள்
குலசேகர னென்றே கூறு.

பதவுரை.

பைங் கிளியே—பசுமை தங்கிய கிளியே!
இன் அமுதம் ஊட்டுகேன்—(உனக்கு) இனிமையானதோர் அம்ருதம் உண்ணத் தருகிறேன்;
இங்கே வா—என்னருகே வருவாயாக;
தென் அரங்கம்—தென் திருவரங்கத்தைக் குறித்து
பாட வல்ல—(இனிய கவிகளை) அருளிச் செய்யவல்ல
சீர்—கல்யாண குணசாலியான
பெருமாள்—மஹாநுபாவர்—,
பொன் அம் சிலை சேர் நுதலியர் வேள்—விரும்பத்தக்கதாய் அழகியதான புருவத்தை நெற்றியிலே யுடைய மாதர்கட்கு மனோஹரரானவர்—,
சேரலர் கோன்—சேரவம்சத்தவர்களுக் கெல்லாம் ராஜா—,
எங்கள் குலசேகரன்—ப்ரபந்நரான நம்முடைய குலத்துக்குச் சிரோபூஷணமான குலசேகராழ்வார்
என்றே கூறு—என்று இதையே நீ வாய்பிதற்ற வேணும்.

கருத்துரை:—ஸ்ரீராம பக்தரான குலசேகரப் பெருமாள் அவ்விராமபிரானது திருநாமங்களைக் கிளிக்குக் கற்பித்துவைத்து அதன் முகத்தினின்று அவற்றைக் கேட்க விரும்புமாபோலே, குலசேகர பக்தரானவர்கள் அக்குலசேகாருடைய திருநாமங்களைக் கிளிக்குக் கற்பித்து அதன் முகமாகக் கேட்க விரும்புகிறபடி. ஒவ்வொருவரும் ஒவ்வொரு கிளியை வளர்ப்பதும் அதற்கு நல்ல திருநாமங்களைக் கற்பித்து வைப்பதும், தம் வாயால் திருநாம ஸங்கீர்த்தநம் பண்ண முடியாதபடி தாம் தளர்ச்சியடைந்த காலத்து அக்கிளியைப் பேசவிட்டுச் செவிக்கினிதாகக் கேட்டுக் கொண்டிருப்பதும் வழக்கம்: "திருமாலைப் பாடக் கேட்டு, வளர்த்த தனால் பயன் பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பிவணங்கினாளே" என்ற திருநெடுந்தாண்டக மறிக. "இன்னடிசிலொடு பாலமுதூட்டி யெடுத்த வென் கோலக்கிளியை" என்றாள் ஆண்டாளும். இவ்விடங்களில் கிளி என்றது சிஷ்யனைக் கூறியபடி. "இன்னமுத மூட்டுகேன்" என்றது - "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" (திருவாய் மொழி) என்றபடி அமுதமன்ன [—பரம போக்யமான] அருளிச் செயல்களைக் கற்பிக்கிறேன் என்றபடி. அதாவது - பிள்ளாய்! குலசேகராழ்வாருடைய திருநாமங்களை நீ செவிக்கினியவாகச் சொல்வாயாகில் லக்ம்மாருக. உனக்கு அருளிச் செயல்களைக் கற்பிப்பேன் என்று சிஷ்யனை நோக்கிக் கூறுகிறபடி. இத்தனியன் எம்பெருமானார் அருளிச்

செய்த தாகையால் "பைங்கிளியே!" என்ற விளி - கூரத்தாழ்வானைக் கருதிய தென்ப.

'ஆரங்கனடியிணை தங்கு சிந்தைத்தனிப் பெரும்பித்தனும் கொங்கர் கோன் குலசேகரன்" "ரமயாதா திவெநதிவெந" இத்யாதியை அடியொற்றித் தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் எனப்பட்டது.

"பொன்னஞ்சிலை சேர்" என்றவிடத்து, சிலை என்ற சொல் - வில் போன்ற புருவத்துக்கு வாசகமாதலால், உவமவாகு பெயர். ... ... *

---

(மணக்கால்நம்பி அருளிச் செய்தது.)

கட்டளைக் கலித்துறை.

ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன்—மாற்றலரை
வீரங்கெடுத்த செங்கோல் கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே.

பதவுரை.

ஆரம் கெட—நவரத்தினமாலை யொன்று கெட்டுப்போக, (அதனை ஸ்ரீவைஷ்ணவர்கள் களவு செய்ததாகக் கள்ள மந்திரிகள் கூற)

அவர்களுக்கே வாரம் கொடு } அந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் விஷயத்திலே பக்ஷபாதம் பூண்டு

பரன் அன்பர் கொள்ளார் என்று } "பாகவதர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் களவு செய்யமாட்டார்கள்" என்றுசொல்லி

குடப் பாம்பில் கை இட்டவன் } பாம்புக்குடத்தில் கையிட்டருளியவர்,—

மாற்றலரை—சத்துருக்களை

வீரம் கெடுத்த செங்கோல் } பரிபவப்படுத்திய செங்கோன்மையை உடையவரும்

கொல்லி காவலன்—கொல்லி என்கிற நகருக்கு நிர்வாஹகரும்

வில்லவர் கோன்—தநுர்வித்யை பயின்றவர்களில் தலைவரும்

சேரன்—சேரதேசத் தரசரும்

முடி வேந்தர் சிகாமணி } முடியுடை மன்னர்களிற் சிறந்தவருமான

குலசேகரன்—குலசேகராழ்வாராவர்.

கருத்துரை:—குலசேகராழ்வார்க்குள்ள ஸ்ரீவைஷ்ணவ பக்ஷபாதாதிசயத்தைக் கூறுவது இது.

இவ்வாழ்வார் அரசாட்சி புரியுங்காலத்து அரண்மனையினுள்ளும் ஆலோசனைச் சபாமண்டபத்திலும் இன்னும் அந்தரங்கமான இடங்களிலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் எப்போதும் தடையில்லாமல் போக்கு வரவு செய்தலையும், அவர்கள் எதுசெய்தாலும் குலசேகரர் அதனைப் பரமபோக்யமாகக்கொள்ளும்படி அவர்கள் திறத்தில் மிக்க அன்புடையரா யிருத்தலையுங்கண்டு பொறாமைகொண்ட மந்திரிகள், அந்த ஸ்ரீவைஷ்ணவர்களிடத்துக் குலசேகரர்க்கு வெறுப்பையுண்டாக்கக் கருதி, குலசேகரருடைய திருவாராதனைப் பெருமாளுடைய ஒரு நவரத்னமாலையைத் தாங்கள் களவு செய்துவிட்டு அப்பழியை ஸ்ரீவைஷ்ணவர்கள்மீது ஆரோபிக்க, இஃதறிந்த குலசேகரர் ஸ்ரீவைஷ்ணவர்களின் நற்குண நற்செய்கைகளை நன்கறிந்தவராதலால் அவர்கள்மீது சிறிதும் சங்கைகொள்ளாமல் 'ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருபோதும் கெட்டகாரியஞ்செய்யார்' என்று குடப்பாம்பிற் கையிட்டு சபதம்பண்ணின வரலாறு சரித்திரத்தில் விசதம்.

ஆரம்—ஹாரம் என்ற வடசொல்விகாரம். வாரம்—ப்ரீதி. கொடு=கொண்டு என்பதன்சிதைவு. குடப்பாம்பில்—பாம்புக்குடத்தில் எனமொழிமாற்றுக. வில்லவர்—'வில்லவர்' என்று ஒரு ராஜவகுப்பைக் கூறியவாறுமாம். ... *

தனியன் உரை முற்றிற்று.

---

## பெருமாள் திருமொழியின்

# உள்ளுறை.

---

திருமகள் கொழுநனான ஸர்வேச்வரன், தனக்கு அடிமை செய்து உய்தற்கு இட்டுப்பிறந்த ஆத்மாக்களை யெல்லாம் ஆட்கொண்டு உய்விக்கும் பொருட்டுப் பரமகிருபையால் (பயிர் செய்பவன் பயிர்த்தலையிலே குடிசை யமைத்துக்கொண்டு அதில் இருந்துகொண்டு அப்பயிரைப் பாதுகாப்பது போல) இந் நிலவுலகத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கிற திவ்யதேசங்கள் நூற்றெட்டினுள் முதலதும் தலைமை பெற்றதுமான திருவரங்கம் பெரியகோயிலில் எழுந்தருளி யிருக்கிற அடியவர்க் கெளியனான நம்பெருமாள் விஷயமாக முதல் மூன்று திருமொழிகள் ; திருவேங்கட முடையான் விஷயமாக நான்காவது திருமொழி; மலைநாட்டில் திருவித்துவக் கோட்டம்மான் விஷயமாக ஐந்தாவது திருமொழி; ஆக இப்படி அர்ச்சாவதாரங்களிலே ஈடுபட்டு பக்திபரீவாஹமாக விண்ணப்பஞ்செய்த குலசேகராழ்வார், அர்ச்சாவதாரங்களிற் போலவே விபவாவதாரங்களுள்ளும் ராமாவதாரத்திலும் க்ருஷ்ணாவதாரத்திலும் மிக்க ஈடுபாடுடையராதலால், அவற்றிற் கருத்தைச் செலுத்தி, அவற்றுள்ளும் தமக்குச் சிறிது காலமே முந்தினதாதலாற் சமீபத்ததான க்ருஷ்ணாவதாரத்தை நினைத்து, அதில் அப்பெருமானைத் தாம அநுபவிக்கப் பெறாமற் போனமைக்கு இரங்கி, அவ்விரக்கத்தை அவ்வவதாரத்திலே ஆய்ச்சியர்கள் கண்ணபிரானோடு ஊடல்கொண்டு உரைத்த பேச்சுக்களால் ஆறாந் திருமொழியையும், கண்ணபிரானுடைய குழந்தைத் திருவிளையாடல்களை யசோதை கண்டு களித்தாற் போலத் தேவகி தானுங் கண்டு களிக்கப் பெறாமல் இழந்த தேவகிப் பிராட்டி பின்பு கண்ணனைக்கண்ட பொழுது கழிவிரக்கத்தோடு பேசின பேச்சுக்களால் ஏழாந் திருமொழியையும், அதன்பிறகு ஸ்ரீராமாவதாரத்தில் மனஞ்செல்லப் பெற்றவராய், அவ்வவதாரத்தில் கௌஸல்யை பெற்ற பேற்றைக்கருதி அவள் அவ்விராமபிரானைத் தொட்டிலி லிட்டுத் தாலாட்டுக் கூறின முகத்தால் எட்டாவது திருமொழியையும், தாம் அக்காலத்தில இராமபிரானை அநுபவிக்கப் பெறாமல் இழந்தது - மைந்தனான அப்பெருமானைப் பாலப்பிராயத்திலெல்லாம் அநுபவித்து யௌவநபருவத்தில் அநுபவிக்கப் பெறாதே இழந்த தந்தையான தசரத சக்கரவர்த்தியின் தன்மை போலுதலால், இராமன் வனவாஸம் புகுமளவில் அச் சக்கரவர்த்தி அப்பிரிவை ஆற்றமாட்டாது புலம்பிய புலம்பல் முகமாக ஒன்பதாந் திருமொழியையும், செல்வச் செருக்காலும் அதிகாரத்தாலும் அஹங்கார மமகாரங்களை அடைதற் குரிய ராஜகுலத்திலே பிறந்திருந்தும் பகவானுடைய கருணையினாலும் ஆசார்யோபதேசத்தாலும் அந்தத் துரபிமானங்கள் சிறிதுமில்லா தொழியப் பகவானிடத்திற் பக்தியையும் அப்பெருமானது அடியார்களிடத்திற் ப்ரதிபத்தியையுமே விசேஷமாகப் பெற்றவரான இவ்வாழ்வார் "கற்பார் ராமபிரானை யல்லால் மற்றுங்கற்பரோ" என்றபடி ஸ்ரீராமாவதார வைபவத்தில் மிகவு மீடுபட்டு எப்பொழுதும் ஸ்ரீராமாயணத்தையே பாராயணஞ் செய்பவரா யெழுந்தருளியிருந்தமையால் அந்த ஸ்ரீராமாயண கதையைப் பின்புள்ளாரும் எளிதாக உணர்ந்து உய்யுமாறு * எல்லையில் சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்றது முதலாத் தன்னுலகம் புக்கதீறாகவுள்ள சரித்திரங்களைச் சுருக்கமாக உணர்த்தவல்ல பத்தாந் திருமொழியையும் அருளிச்செய்து இத்திவ்ய ப்ரபந்தத்தைத் தலைக்கட்டி யருளினார்.

---



ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்.

மயர்வற மதிநல மருளப்பெற்ற

குலசேகரப் பெருமாள் அருளிச்செய்த

# பெருமாள் திருமொழி.



## முதல் திருமொழி—இருளிரிய.

ஸ்ரீ குலசேகரப் பெருமாள், பகவத்கடாக்ஷத்தாலும் பாகவதாநுக்ரஹத்தாலும் திருமகள் கொழுநனான எம்பெருமானுடைய ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றை உள்ளபடி உணரப்பெற்றவராகையாலே ஶரீராவஸாநத்திலே போய் க்ரமமாக எம்பெருமானை அநுபவிக்கிறோமென்று ஆறியிருக்க மாட்டாமல் அப்போதே அநுபவிக்கப் பெறவேணுமென்றவிடாய் வளரப்பெற்று, எம்பெருமானுடைய சீலாதிகுணங்கள் பரமபதத்திற்காட்டில் திருவரங்கம் பெரியகோயிலில் இருட்டறையில் விளக்குப்போலே நன்குவிளங்குகையாலே அக்கோயிலிலே அநுபவிக்கவேணுமென்று பாரித்து, அவ்வநுபவமும் நினைத்தவுடனே ஸித்திக்க முடியாதபடி ராஜாவாகையாலே பல தொல்லைகளை யுடையரா யிருப்பதனாலும், 'பெரும் பேறாகிய இவ்வரசாட்சிச் செல்வத்தைத் துறந்து செல்வதுகூடாது' என்று மறுப்பவர்கள் பலர் உண்டாகையாலும் இவ்வகை இடையூறுகள் தொலைந்து அழகிய மணவாளனுடைய நித்யாநுபவமும் அவ்விடத்துக் கைங்கர்யபரர்களோடு நித்ய ஸஹவாஸமும் தமக்கு விரைவில் கிடைக்குமாறு எம்பெருமான் அருள்புரிய வேணுமென்று ப்ரார்த்திப்பதாய்ச் செல்லுகிறது இத்திருமொழி.

இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும்நெற்றி
இனத்துத்தியணிபணம் ஆயிரங்களார்ந்த
அரவரசப்பெருஞ்சோதி அனந்தனென்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளையணையைமேவித்
திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி
திரைக்கையால் அடிவருடப்பள்ளிகொள்ளும்
கருமணியைக்கோமளத்தைக் கண்டுகொண்டு என்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்குநாளே. (க)

பதவுரை.

திரு அரங்கம்—ஸ்ரீரங்கமென்கிற
பெரு நகருள்—பெரிய நகரத்திலே
இருள் இரிய சுடர்மணிகள் இமைக்கும் — இருளானது சிதறியொழியும்படி ஒளி விடுகின்ற மணிகள் விளங்கா நிற்கப்பெற்ற
நெற்றி—நெற்றியையும்
இனம் துத்தி—சிறந்த புள்ளியையும்
அணி—அழகாக உடைய
ஆயிரம் பணங்கள் ஆர்ந்த — ஆயிரம் படங்களை உடையனாய்
அரவு அரசன்—நாகங்களுக்குத் தலைவனாய்
பெரு சோதி-மிக்க தேஜஸ்ஸையுடையனான
அனந்தன் என்னும்-திருவனந்தாழ்வானென்கிற
அணி விளங்கும் உயர் வெள்ளை அணையை — அழகு மிக்கு உயர்த்தியையுடைய வெண்ணிறமான திருப் படுக்கையிலே
மேவி—பொருந்தி
தென் நீர் பொன்னி—தெளிந்த தீர்த்தத்தை யுடைய காவிரியானது
திரை கையால் அடி வருட — அலைகளாகிற கைகளாலே திருவடிகளைப் பிடிக்க
பள்ளி கொள்ளும்—திருக்கண்வளர்ந்தருளா நின்ற
கரு மணியை—நீலமணிபோன்றவராய்
கோமளத்தை—ஸௌகுமார்யமே வடிவெடுத்தவரான பெரியபெருமாளை
என் கண் இணைகள்—என் கண்களானவை
கண்டு கொண்டு—ஸேவிக்கப் பெற்று
களிக்கும் நாள்—ஆநந்த மடையும் நாள்
என்று கொல்—என்னாளோ !

கருத்துரை:—திருவரங்கம் பெரியகோயிலில் உபயகாவேரீமத்யத்தில் திருவனந்தாழ்வான்மீது திருக்கண்வளர்ந்தருளாநின்ற அழகிய மணவாளனை அடியேன் கண்ணாரக்கண்டு களிக்கும்பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ? என்கிறார்.

பட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தோத்ரத்தில்,

“ கதா ஹம் காவேரீ தட பரிஸரே ரங்க நகரே ஶயாநம்
போகீந்த்ரே ஶத மகமணி ஶ்யாமள ருசிம் ”

இத்யாதி ஸ்லோகமானது பெரும்பாலும் இப்பாசுரத்தின் மொழிபெயர்ப்பாகும். இப்பாட்டில் முதலடி - திருவனந்தாழ்வானுக்கு இட்ட அடைமொழி. நெற்றி என்பது தலைக்கும் பெயர் (தலையின்பெயர்கள் நெற்றிக்குமாம்.) ஆயிரம் பைந்தலைய அனந்தனாகையால் ஒவ்வொருதலையிலும் ஒவ்வொருமாணிக்கமணி உண்டாகையால் மணிகள் எனப்பட்டது. ஒருமணியின் சுடரே இருளனைத்தையும் ஒழிக்கவற்றாயிருக்க, ஆயிரம் மணிகளின் சுடரால் இருளிரியச்சொல்ல வேண்டாவே. இமைத்தல் - விழித்தல்; அதாவது இங்கு, விளங்குதல். துத்தி-படத்தின் மேலுள்ள பொறி. “இரண்டாய்ச்சேர்ந்த திருவடிநிலையென்று சொல்லுகிறவற்றையுடைத்தான” என்பது வியாக்கியானம். பணம் - ஃபணமென்ற வடசொல்

விகாரம். அரசன் + பெருஞ்சோதி, அரசப்பெருஞ்சோதி. மேவி என்ற வினையெச்சம் பள்ளிகொள்ளும் வினையைக்கொண்டு முடியும். நகர் - நகர மென்ற வடசொற்சிதைவு.

[தெள்ளீர்ப் பொன்னி] தொண்டரடிப்பொடியாழ்வார் "தெளிவிலாக்கலங்கல் நீர் சூழ்திருவரங்கம்" என்கிறார்; இவர் "தெள்நீர்ப்பொன்னி" என்கிறார்; இரண்டுக்கும் கருத்து யாதெனில்; "தெளிவிலாக்கலங்கல் நீர் சூழ்," என்றதன் கருத்து "[illegible] ஶ்ரீரங்கம் [illegible]" என்ற ஸ்ரீரங்க ராஜஸ்தவ ஶ்லோகத்திலே விசதம். (நதிகளுக்கெல்லாம் பர்த்தா கடலாகையாலே காவேரியானது கடலுக்குப்பத்நியாய், பிராட்டியானவள் திருப்பாற்கடலினின்று பிறந்தவளாகையாலே) தந்தையோ திருப்பாற்கடல், தாயோ நான், மகளோ ஸாக்ஷாத் லக்ஷ்மி, மணவாளனோ ஸ்ரீரங்கநாதன்; ஆனபின்பு இதுக்கெல்லாம் தகுதியாக நான் என்ன வரிசை செய்யப்போகிறேன் என்று விசாரமுற்று, சாமரைக்கற்றை, சந்தனம், பலபல மணிகள், முத்துக்கள் இவற்றை யெல்லாம் கொழித்துக்கொண்டு பெருவெள்ளமாக ஓடிவருகையாலே தெளிவிலாக்கலங்கல் நீராம். இனி, "தெண்ணீர்ப்பொன்னி" என்றதன் கருத்து—"[illegible] யமுநா [illegible]" [ஸ்ரீவிஷ்ணுபுராணம் 5-3-4.] என்றவிடத்திற் போலக் கொள்ளத்தகும், அதாவது கண்ணபிரான் திருவவதரித்த ஆநந்தாதிஶயத்தாலே யமுனையாறு தெளிவுபெற்றாற்போல, பரமபதநாதன் ஸ்ரீவைகுண்டத்தைவிட்டுக் காவிரிக்கரையிலே குடிவமைத்துக்கொண்ட ஸந்தோஷத்தாலே காவிரியாறு தெளிவுற்றதென்றபடி.

பொன்னி—பொன்களைக் கொழிக்கையாலே காவிரிக்குப் பொன்னி யென்று பெயராயிற்று. கநகநதீ என்றும் ஹேமாபகா என்றும் வடநூலில் வழங்கப்படுவதும் இதுவே. "பொன்னி திரைக்கையாலடிவருட" என்றது—காவிரியின் அலைகள் இனிதாக மோதிக் குளிர்ச்சி பெற்றுள்ள கரையிலே பரமஸுகமாகக் கண்வளர்ந்தருள்கின்றமையைக் கூறியவாறு. கோமளம்—வடசொல், "கண்ணால் துகைக்க வொண்ணாத ஸௌகுமார்யமுடையவனை" என்பது வியாக்கியானம். (க)

---

வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த
வளையுடம்பினழல்நாகம் உமிழ்ந்தசெந்தீ
வீயாதமலர்ச்சென்னி விதானமேபோல்
மேன்மேலும்மிக எங்கும்பரந்ததன்கீழ்
காயாம்பூமலர்ப்பிறங்க லன்னமாலைக் [illegible]
கடியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
மாயோனை, மணத்தூணே பற்றிநின்று என்
வாயார என்றுகொலோ வாழ்த்துநாளே. (உ)

பதவுரை.

கடி அரங்கத்து — நறுமணம்மிக்க கோயிலிலே
ஓர் ஈர் ஐ நூறு வாய்— ஓராயிரம் வாய்களிலே
துதங்கள் ஆர்ந்த— ஸ்தோத்ரவாக்கியங்கள் நிறைந்திருக்கப்பெற்றவனாய்
வளை உடம்பின்—வெளுத்த உடம்பை யுடையவனாய்
அழல்—(எதிரிகள்வந்து கிட்டவொண்ணாதபடி) அழலை உமிழாநிற்பவனான
நாகம்—ஆதிசேஷன்
உமிழ்ந்த- தன் வாயினின்று) வெளிக்கக்கிய
செம் தீ—செந்நிறமான அக்நிஜ்வாலையானது
சென்னி—தலையின் மேலே
வீயாத மலர் விதானம் போல் — அழிவில்லாத பஷ்பங்களாற் சமைத்ததொரு மேற்கட்டிபோல
எங்கும் மேல்மேலும் பரந்து மிக — மேற்புறமெங்கும் விஸ்தரித்து விளங்க
அதன் கீழ்—(ஆதிசேஷன் உமிழ்ந்த அக்நிஜ்வாலையாகிற) அந்தப் புஷ்பவிதானத்தின் கீழே
அரவ அணையில்—சேஷசயநத்திலே
பள்ளிகொள்ளும்—கண்வளர்ந்தருளாநிற்பவனும்
காயா பூ மலர் பிறங்கல் அன்ன — காயாவின் அழகிய பூக்களாலே தொடுக்கப்பட்ட நீலமாலை போன்றவனாய்
மாலை — பெருமைபொருந்தியவனாய்
மாயோனை—ஆச்சர்யனான ஸ்ரீரங்கநாதனை,
(அடியேன்)
மணம் தூண் பற்றி நின்று — திருமணத்தூண்களிரண்டையும் அவலம்பமாகப் பற்றிக்கொண்டு நின்று
என்வாய் ஆர வாழ்த்தும் நாள் என்று கொல் — என் வாய்த்தினவு தீர ஸ்துதிசெய்யுங் காலம் என்றைக்கு வாய்க்குமோ ?

கருத்துரை:—ஆயிரம் வாய்களாலும் ஆயிர நாமங்களைச் சொல்லி எம்பெருமானைத் துதிப்பவனும், ‘சுத்த ஸத்வகுணமுடையவன்’ என்பது நன்கு விளங்குமாறு பால்போல் வெளுத்த உடலையுடையவனுமான ஆதிசேஷன், எம்பெருமானிடத்துள்ள பரிவின் மிகுதியாலே அஸ்தாநத்திலும் பயத்தை ஶங்கிப்பவனாதலால் கொடிய அரக்கரசுரர்கள் விபவாவதாரங்களிற் போல அர்ச்சையிலும் வந்து நலிவர்களோ என்னும் அதிஶங்கையினால் அவர்கள் அணுகமுடியாதபடி எப்போதும் அழலை வாயில்நின்று கக்கிக்கொண்டிருப்பதனால் செந்நிறமான அந்த அக்நிஜ்வாலையானது அவனுடைய தலைகளின்மேற் கிளம்பி விசேஷமாகப் பரவி, ‘சண்பகம் முதலிய செம்மலர்களாலே ஒரு மேற்கட்டி அமைக்கப்பட்டுளதோ’ என்று உத்ப்ரேக்ஷிக்கத்தக்கதாய் விளங்க, அத்தகைய மேற்கட்டியின் கீழே அரவணையின்மீது பள்ளிகொண்டருளாநின்ற அழகிய மணவாளனை ஸேவித்தமாத்திரத்திலேயே “காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்” என்றபடி ஸௌதில்யம் பிறந்து தரித்து நிற்க முடியாத அவஸ்தை விளையுங்கால் அவ்வழகிய மணவாளனுடைய திருக்கண்ணோக்கத்திலே நிலாவுகின்ற இரண்டு திருமணத் தூண்களை அவலம்பமாகப் பற்றிக்கொண்டு தரித்துநின்று, வெகுநாளாக இழந்த இழவுதீர ஸ்தோத்ரம் பண்ணும்படியான பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ ? என்கிறார்.

(இரண்டாமடிக்கு இங்கு அடியேன் பொருளுரைத்தவாறு பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்துக்குச் சிறிது மாறுபடுமாயினும் அந்வயத்தின் எளிமையைக்கருதி அவ்விரோதம் ஸஹ்யமாகக் கடவது.)

துதம்—ஸாவெதுவ க்ருயாகம்ய், ஸ்தோத்ரமென்னும் பொருளதான ஸம்ஸ்க்ருதஶப்தம் துதமென விகாரப்பட்டது. ‘துதம்’ என்பதும் கீழ்ப்பாட்டில்

வந்த துத்தியே என்பாருமுளர். விதானம்—வடசொல். எம்பெருமானுக்கு ஒவ்வொருமையத்தில் ஒவ்வொன்றை மேற்கட்டியாக உத்ப்ரேக்ஷிப்பர்; "வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ்வருவானை"- (நாய்ச்சியார் திருமொழி) என்று—பெரிய திருவடியின் சிறகை மேற்கட்டியாகக் கூறினள் ஆண்டாள்; "துன்னிய தாரகையின் பேரொளி சேராகாசமென்னும் விதானத்தின் கீழால்" (பெரிய திருமடல்) என்றார் திருமங்கையாழ்வார். நாகமுமிழ்ந்த செந்தீயை விதானமாகக் கூறுகின்றார் இவ்வாழ்வார். செந்தீவிதானத்தின்கீழ் கரியதிருமேனிப்பெருமாள் பள்ளிகொண்டிருப்பதன் பரபாக ஶோபையை அநுபவிப்பவர் போலக் "காயாம்பூ மலர்ப்பிறங்கலன்ன" என்கிறார். 'அழகிய காயாம்பூக்களாலே தொடுக்கப்பட்ட தொருமாலைகொல் சாய்ந்து கிடக்கிறது!' என்று நினைக்கும்படியிறே யிருப்பது.

கடி—காவல், மதிள், வாஸனை. அரணைப் போரும்படியான ஸப்தப்ராகாரங்களையுடைய திருவரங்கமென்றுமாம். [மாயோன்] மாயன் மாயோன் எனச் சிறுபான்மை னகர வீற்றயலகாரம் ஓகாரமாயிற்று. [நன்னூல், பொது-உ. உரையைக் காண்க.]

[மணத்தூணே பற்றிநின்று.] அழகிய மணவாளன் ஸந்நிதியில் மஹாத்வாரத் தண்டையிலிருக்கும் இரண்டு தூண்களுக்குத் "திருமணத் தூண்" என்பது ஸம்ப்ரதாயத்திருநாமம். இதனை ஆமோதஸ்தம்பமென்று வடமொழியில் வழங்குவர். ஆமோதம்—மணம். "மணத்தூணருகில் நின்றுகொண்டு" என்னாமல் "பற்றிநின்று" என்றதன் உட்கருத்தை ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் வெளியிட்டருளினார்;

"ஶேஷஶயனோபநாஸ்ய நிர்யாஸவிதஸோபானாநாம் ।
ஆமோதஸ்தம்பயுகலம் ஸஞ்சியாஸ்வதே ॥" என்று.

அழகிய மணவாளனுடைய திருக்கண்ணோக்கமாகிற அமுதவாற்றின் பெருவெள்ளமானது அநுபவிக்க இழிந்தவர்களை ஒருமித்து நிலைநின்று அநுபவிக்கவொண்ணுதபடி தூக்கித்தள்ளி அசைக்குமளவில், அவர்கள் அவலம்பமாகப்பற்றிக்கொண்டு நிற்பதற்காக நாட்டப்பட்டுள்ளவைபோன்ற திருமணத்தூண்களைப் பற்றுவோம் என்பது இந்த ஶ்லோகத்தின்கருத்து. அழகிய மணவாளனது திருமேனியின் பரிமளம் இரண்டு தூணைப் பரிணமித்து உருவெடுத்து நிற்பதால் "திருமணத்தூண்" என்று திருநாமமாயிற்று என்பர்.

ஐஞ்ஞூறு—ஐந்நூறு; ஞகரநகரப்போலி. (உ)

---

எம்மாண்பினயன் நான்குநாவினுலும்
எடுத்தேத்தி ஈரிரண்டுமுகமுங்கொண்டு
எம்மாடேம்எழிற்கண்க ளெட்டினுேம்
தொழுதேத்தி இனிதிறைஞ்சநின்ற செம்பொன்

அம்மான்தன்மலர்க் கமலக்கொப்பூழ்தோன்ற
அணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
அம்மான்றனடியிணைக்கீழ் அலர்களிட்டு அங்கு
அடியவரோடென்றுகொலோ அணுகுநாளே. (௯)

பதவுரை.

எமாண்பில் அயன் — ஸர்வஸித்தாலுமுண்டான மாட்சிமையையுடைய நான்முகன்
நான்கு நாவினாலும் — (தனது) நாலு நாக்கினாலும்
எடுத்து — சொற்களை யெடுத்து
ஏத்தி — துதித்து
ஈர் இரண்டு முகமும் கொண்டு — நான்கு முகங்களாலும்
இனிது ஏத்தி — இனிமையாக (வேதங்களாலே) ஸ்தோத்ரம்பண்ணி
எழில் கண்கள் எட்டினோடும் — அழகிய எட்டுக் கண்களினாலே
எம் மாடும் — எல்லாப்பக்கங்களிலும்
தொழுது இறைஞ்ச நின்ற — நன்றாக ஸேவிக்கும்படி அமைந்த
செம் பொன் அம்மான் தன் — செவ்விய பொன்போல் (விரும்பத்தக்க வடிவுடைய) ஸ்வாமியான தன்னுடைய
கமலம் மலர் கொப்பூழ் — தாமரைப்பூவையுடைய திருநாபியானது
தோன்ற — விளங்கும்படி
அணி அரங்கத்து அரவு அணையில் பள்ளிகொள்ளும் —;
அம்மான் தன் — பெரிய பெருமாளுடைய
அடி இணை கீழ் — திருவடிகளின் கீழே
அலர்கள் இட்டு — புஷ்பங்களை ஸமர்ப்பித்து
அங்கு அடியவரோடு — அங்குள்ள கைங்கர்யபரர்களோடு கூட
அணுகும் நாள் என்று கொல் — நெருங்கி வாழ்வது என்றைக்கோ?

கருத்துரை—அயன் என்று நான்முகனொருவனைச் சொன்னது மற்றைத் தேவர்கட்கு மெல்லாம் உபலக்ஷணம். பிரமன் முதலிய தேவர்கள் வாயாரவாழ்த்திக் கண்ணாரக் கண்டு களிக்கும்படியாகவும், ஸகல லோகங்களினுடையவும் ஆவிர்ப்பாவத்துக்குக் காரணமாகிய திருநாபிக்கமலம் நன்கு விளங்கும்படியாகவும் திருவனந்தாழ்வான் மீது சாய்ந்தருளாநின்ற அழகிய மணவாளனை ஆராதிக்கின்ற அடியார்களோடுகூட அடியேனும் ஆராதிக்கும்படி அந்த திவ்யஸந்நிதானத்திற்குப் போய்ச் சேரும் பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ? என்கிறார்.

எம்மாண்பில்—துதிப்பதற்கு உறுப்பான வாக்தேவியை எப்போதும் தன் வசமாகக் கைக்கொண்டிருக்கும் அதிசயத்தையுடையவன் என்பது உட்கருத்து.

பட்டர் இப்பாசுரத்தைப் பெரும்பாலும் திருவுள்ளம்பற்றியே ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில், [எகூ.]

“ [illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ”

என்ற ஶ்லோகமருளிச்செய்தாரென்க.

“நான்கு நாவினாலும்” என்றால் போதுமே; மீண்டும் “ஈரிரண்டு முகமுங்கொண்டு” என்பானேன்? நாவினால் சொல்வது வேறும் முகத்தினால் சொல்வது வேறுமாயிருக்குமோ? இது புநருக்தி [கூறியது கூறல்] தானே? என்று சங்கை பிறக்கக்கூடும். ‘நான்முகனுடைய பாக்கியமே பாக்கியம்’ என்கிற மகிழ்ச்சி

யாலும்' அவன் பெற்ற பேறு நமக்குக் கிடைப்பது அருமையாகிறதே!' என்கிற வயிற்றெரிச்சலாலும் மதியயங்கி இங்ஙனமருளிச் செய்கின்றார் என்னலாம். ஸந்தோஷத்தினாலும் வயிற்றெரிச்சலாலும் சொல்லும்போது இங்ஙனம் நிகழ்வதை உலகவழக்கிலும் காணலாம்.

அயன்—அஜ:. அ—விஷ்ணுவினிடமிருந்து, ஜ:—பிறப்பவன் என்று பொருள். இப்பெயர்தானே விஷ்ணுவுக்கும் நிகழ்வதுண்டு; அப்போது பிறப்பிலி என்று பொருள். (௩)

---

மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலை
வண்ணனைஎன்கண்ணனை வன்குன்றமேந்தி
ஆவினைஅன்றுய்யக் கொண்டஆயரேற்றை
அமரர்கள்தந்தலைவனைஅந்தமிழினின்பப்
பாவினை அவ்வடமொழியைப் பற்றற்றார்கள்
பயிலரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
கோவினை, நாவுறவழுத்தி என்றன்கைகள்
கோய்ம்மலர்தூய் என்று கொலோ கூப்புநாளே. (௪)

பதவுரை.

மாவினை வாய் பிளந்து உகந்த மாலை } குதிரை வடிவுகொண்டு வந்த கேசியினுடைய வாயைக் கிழித்து மகிழ்ந்த பெருமானாய்

வேலை வண்ணனை—கடல் போன்ற வடிவை யுடையவனாய்

என் கண்ணனை—'என்னுடையவன்' என்று அபிமானிக்கக்கூடிய (ஸுலபனான) க்ருஷ்ணனாய்

அன்று—(இந்திரன் கல் மழை பெய்வித்த) அக்காலத்திலே

வல் குன்றம் ஏந்தி } வலிய (கோவர்த்தன) மலையை (குடையாகத்) தூக்கி

ஆவினை உய்யக் கொண்ட } பசுக்களைக் காப்பாற்றியருளின

ஆயர் ஏற்றை—இடையர் தலைவனாய்,

அமரர்கள் தம் தலைவனை—நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாய்,

அம் தமிழின் இன்பம் பாவினை } அழகிய தமிழ்ப்பாஷையாலாகிய ஆநந்தமயமான அருளிச் செயல் போல் போக்யனாய்

அ வட மொழியை—அழகிய ஸம்ஸ்க்ருத பாஷையாலாகிய ஸ்ரீராமாயணத்தின் போல் போக்யனாய்

பற்று அற்றார்கள் பயில் அரங்கத்து } ஸம்ஸார பந்தம் அற்றவர்களான விரக்தர்கள் நித்ய வாஸம்செய்கிற கோயிலிலே

அரவு அணையில் பள்ளிகொள்ளும்—;

கோவினை—ஸ்வாமியான ஸ்ரீரங்கநாதனை

நா உற—நாக்குத் தடிக்கும்படி

வழுத்தி—துதித்து

என் தன் கைகள்—என்னுடைய கைகளானவை

கொய் மலர் தூய்—(காலத்தில்) பறிக்கப்பட்ட புஷ்பங்களைப் பணிமாறி

கூப்பும் நாள் என்று கொல் } அஞ்ஜலி பண்ணும் நாள் எதுவோ?

கருத்துரை—குதிரை வடிவங்கொண்டு தன்னைக் கவளங்கொள்ளவந்த கேசியென்னு மஸுரனைக் கொன்று தன்னை நித்யாநுபாவ்யனாக உபகரித்தருளினவனும், கடலைக் கண்டாற்போலே வடிவைக்கண்டபோதே தாபத்ரயமும் தீரும்படியிருப்பவனும், அரியன செய்து ஆஸ்ரிதரைக் காப்பாற்றினவனும் பரம போக்யனுமான ஸ்ரீரங்கநாதனை நாத்தழும் பெழத் துதித்து நன்மலர்களைக் கொணர்ந்து ஸமர்ப்பித்து 'அடியேனை ஆட்கொள்ள வேணும்' என்கிற ப்ரார்த்தனை தோற்றக் கைகூப்பி நிற்கும்படியான பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ என்கிறார்.

எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற போக்யதைக்கு அவனுடைய திவ்ய குணங்களை ப்ரதிபாதிக்கின்ற திருவாய்மொழி முதலிய திவ்ய ப்ரபந்தங்களும் ஸ்ரீராமாயணம் முதலிய இதிஹாஸ புராணங்களுந் தவிர வேறொன்றும் ஒப்புச் சொல்லத் தகாமையால் "அந்தமிழினின்பப் பாவினை அவ்வட மொழியை" என்றார் "தாவிவையங்கொண்ட தடந் தாமரைகட்கே" என்ற விடத்திற்போல் முற்றுவமை. இந்த ஸாமாநாதிகரண்யம் ப்ரதிபாத்ய ப்ரதிபாதக பாவத்தைப் பற்றியாகவுமாம். "அந்தமிழின்பப்பாவினை" என்று ஓதுவது ஒவ்வாதென்க.

[பற்றற்றார்கள் பயிலரங்கம்.] "சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்றுதண்டரொன்றினர், அற்ற பற்றர் சுற்றிவாழு மந்தணீரரங்கமே" என்றார் திருமழிசைப்பிரானும். ... ... ... ... (௪)

---

இணையில்லா இன்னிசையாழ்கெழுமி இன்பத்
தும்புருவும் நாரதனும் இறைஞ்சியேத்தத்
துணையில்லாத்தொன்மறை நூல்தோத்திரத்தால்
தொன்மலர்க்கணயன் வணங்கியோவாதேத்த
மணிமாடமாளிகைகள்மல்கு செல்வ
மதிளரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
மணிவண்ணனம்மானைக் கண்டுகொண்டு என்
மலர்ச்சென்னி என்றுகொலோவணங்குநாளே. (௫)

பதவுரை.

இன்பம்—(வீணாகானத்தாலே) இன்பந்தருகின்ற
தும்புருவும்—தும்புரு மஹர்ஷியும்
நாரதனும்—நாரதமுனிவரும்
இணை இல்லா இன் இசை—ஒப்பற்றதும் போக்யமுமான இசையை
யாழ்—வீணையிலே
கெழுமி—நிறைத்து [வீணாகானத்தைப் பண்ணிக்கொண்டு]
இறைஞ்சி ஏத்த—(திருவடிகளிலே விழுந்து) வணங்கித் துதிக்கவும்,
தொல் மலர்க் கண் அயன்—நித்யமான நாபீகமலத்திலுதித்த நான்முகனானவன்
வணங்கி—நமஸ்கரித்து
துணை இல்லா—ஒப்பு இல்லாததும்
தொல்—அநாதியுமான
மறை நூல் தோத்திரத்தால்—வேதசாஸ்த்ரங்களாகிற ஸ்தோத்ரங்களாலே
ஓவாது ஏத்த—இடைவிடாமல் துதிக்கவும்
மணி மாடம் மாளிகைகள்—மணிமயமான மாடமாளிகைகளையும்
மல்கு செல்வம்—பூர்ணமான ஸம்பத்தையும்
மதிள்—ஸப்தப்ராகாரங்களையுமுடைய
அரங்கத்து—கோயிலிலே
அரவு அணையில் பள்ளிகொள்ளும்—;
மணி வண்ணன் அம்மானை—நீலமணிபோன்ற திருநிறத்தையுடையனான எம்பெருமானை
கண்டு கொண்டு—ஸேவித்து
என் மலர் சென்னி—என்னுடைய பூமாலையணிந்த தலையானது
வணங்கும் நாள் என்று கொல்—(அவன் திருவடிகளில்) நமஸ்கரிப்பதென்றைக்கோ?

கருத்துரை :—தும்புருநாரதர் முதலிய முனிவர்கள் பகவத்குணங்களை இனிய இசையுடன் வீணையிலேயிட்டுப் பாடிக்கொண்டும், நான்முகன் நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களை ஓதிக்கொண்டும் வணங்கப் பள்ளிகொண்டருளா நின்ற அழகிய மணவாளனை நான் ஸேவிக்கப் பெறுவதும், அரசாட்சிக்கு ஏற்பப் பூமுடி சூடிக்கிடக்கின்ற என் தலை அவனுடைய திருவடியை முடிசூடப் பெறுதலும் என்றைக்கு வாய்க்குமோ? என்கிறார்.

இன் இசை யாழ் கெழுமி—இனிய இசையை யுடைத்தான வீணையை அப்ய ஸித்து என்றுமாம். தொன்மறைநூல் தோத்திரத்தால்—“வேதாக்ஷராணி யாவந்தி படிதாநி த்விஜாதிபி: । தாவந்தி ஹரிநாமாநி கீர்த்திதாநி நஸம்ஶய:॥” என்ற துகாண்க. ஸ்தோத்ரமென்ற வடசொல் தோத்திர மெனத்திரிந்தது. மலர்க் கண்=கண்—ஏழனுருபு. ... ... ... (ரு)

அளிமலர்மேலயனரனிந்திரனோடு ஏனை
அமரர்கள்தம்குழுவும் அரம்பையரும் மற்றும்
தெளிமதிசேர்முனிவர்கள் தம்குழுவு முந்தித்
திசைதிசையில் மலர்தூவிச்சென்றுசேரும்
களிமலர்சேர்பொழிலரங்கத்து உரகமேறிக்
கண்வளரும்கடல்வண்ணர் கமலக்கண்ணும்
ஒளிமதிசேர்திருமுகமும் கண்டுகொண்டு என்
உள்ளமிகஎன்றுகொலோ உருகுநாளே. (சு)

பதவுரை.

அளி மலர் மேல் அயன்—(மதுபானத்துக்காக) வண்டுகள் படிந்திருக்கிற தாமரைப் பூவில் தோன்றிய பிரமனும்
அரன்—சிவனும்
இந்திரனோடு ஏனை அமரர்கள் தம் குழுவும்—இந்திரனோடுகூட மற்றைத் தேவர்களின் திரளும்
அரம்பையரும்-ரம்பைமுதலிய தேவமாதரும்
மற்றும்—மற்றுமுள்ள
தெளி மதி சேர் முனிவர்கள் தம் குழுவும்—தெளிந்த ஞானத்தையுடைய (ஸநகாதி மஹர்ஷிகளின் ஸமூஹமும்
உந்தி—ஒருவர்க்கொருவர் நெருக்கித் தள்ளி
திசை திசையில்—பார்த்த பார்த்தவிடமெங்கும்
மலர் தூவி—புஷ்பங்களை இறைத்துக்கொண்டு
சென்று சேரும்—வந்துசேர்தற்கு இடமான
களி மலர் சேர் பொழில் அரங்கத்து—தேன்மிக்க மலர்களையுடைய சோலைகளை யுடைத்தான கோயிலிலே
உரகம் ஏறி—திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டு
கண் வளரும் - திருக்கண்வளர்ந்தருளாநின்ற
கடல் வண்ணர்—கடல்போன்ற வடிவை யுடையரான பெரிய பெருமாளுடைய
கமலம் கண்ணும்—செந்தாமரைபோன்ற திருக்கண்களையும்
ஒளி மதி சேர் திரு முகமும்—ஒளியை யுடைய சந்திரன் போன்ற திருமுகமண்டலத்தையும்
கண்டு கொண்டு—ஸேவிக்கப் பெற்று
என் உள்ளம்—என்னுடைய மனமானது
மிக உருகும் நாள் என்று கொல்—மிகவும் உருகுங்காலம் என்றைக்கோ ?

கருத்துரை:—“ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்ர:” என்ற ஶ்ருதிச் சாயையிலே “அயனரனிந்திரன்” என்கிறார். ஹர: என்ற வடசொல் அரனெனத்திரிந்தது; அழித்தற்கடவுள். ரஜஸ்தமோ குணங்கள் விஞ்சியவாறே தேவதாந்தரங்களைப் பற்றி யோடுவதே முனிவர்களின் இயல்பாதலால், தெளிமதிசேர் என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது: ஸத்வகுண ப்ரசுரரான மஹர்ஷிகள் என்றபடி; அன்றி, கர்மபாவனையை விட்டு ப்ரஹ்மபாவனையிலே ஊன்றியவர்களென்றுமாம். “சேருமரங்கத்து” என்று அந்வயம். உரகம்—வடசொல்: உரஸா கச்சதீதி உரக:. மார்பினால் ஊர்ந்து செல்வது என்று பொருள்.

தேவர்களும் தேவமாதர்களும் முனிவர்களும் ஆராதநோபகரணங்களைக் கொண்டுவந்து, திரள் மிகுதியாலே ஒருவரையொருவர் நெருக்கித் தள்ளிப் புகும்படியான கோயிலிலே கண்வளர்ந்தருளா நின்ற பெரிய பெருமாளுடைய செந்தாமரைக் கண்ணையும் முகசந்த்ர மண்டலத்தையும் ஸேவிக்கப் பெற்று, 'பாவியேனுக்கும் இப்பேறு வாய்த்த அதிசயம் என்கொல்!' என்று நெஞ்சுருகும்படியான நாளும் வரப்போகிறதா? என்கிறார். ... ... ... (௬)

---

மறம்திகழும்மனமொழித்து வஞ்சமாற்றி
வன்புலன்களடக்கி இடர்ப்பாரத்துன்பம்
துறந்து இருமுப்பொழுதேத்தி எல்லையில்லாத்
தொன்னெறிக்கண் நிலைநின்றதொண்டரான
அறம்திகழும்மனத்தவர் தம்கதியைப் பொன்னி
யணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
நிறம்திகழும்மாயோனைக் கண்டு என்கண்கள்
நீர்மல்கஎன்றுகொலோ நிற்குநாளே. (௭)

பதவுரை.

மறம் திகழும் மனம் ஒழித்து — கொடுமையால் விளங்காநின்றுள்ள மனதையொழித்து
வஞ்சம் மாற்றி—வஞ்சனைகளைப் போக்கி
வல் புலன்கள் அடக்கி — கொடிய இந்திரியங்களை அடக்கி [பட்டி மேயாதபடி தடுத்து]
இடர் பாரம் துன்பம் துறந்து — (மேன்மேலும்) துக்கத்தை விளைப்பனவாய்ப் பெருஞ் சுமையாயிராநின்ற பழவினைகளை வேரறுத்து
இரு முப் பொழுது ஏத்தி — பஞ்ச காலங்களிலும் துதித்து
எல்லை இல்லா தொல் நெறிக்கண் நிலை நின்ற — அளவிறந்தபழைய மர்யாதையிலே நிலைநின்ற
தொண்டர் ஆன—தாஸபூதர்களான
அறம் திகழும் மனத்தவர் தம் — தர்மசிந்தையே விளங்கும் மனமுடையரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு
கதியை—பரமப்ராப்யனாய்,
பொன்னி அணி அரங்கத்து — காவிரியால் அழகுபெற்ற கோயிலிலே
அரவு அணையில் பள்ளிகொள்ளும்—;
நிறம் திகழும்—அழகு விளங்காநின்றுள்ள
மாயோனை—ஆச்சரியனான எம்பெருமானை
என் கண்கள்—எனது கண்களானவை
கண்டு—ஸேவிக்கப் பெற்று
நீர் மல்க நிற்கும் நாள் என்று கொல் — ஆநந்தக் கண்ணீர் ததும்பும்படி நிற்பது என்றைக்கோ ?

கருத்துரை:—ஒழித்து, மாற்றி, அடக்கி, துறந்து, ஏத்தி என்ற ஐந்து வினையெச்சங்களும் நிலைநிற்கும் வினையைக்கொண்டு முடியும். முன்னடிகளிரண்டும் ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கூறுவன. "திகழும் மனம் மறம் ஒழித்து" என்று அந்வயித்து, விளங்காநின்ற மனதில் நின்றும் கொடுமையை நீக்கி என்றுரைத்தலுமாம். மறம்—கொலை, கோபம், கொடுமை. வஞ்சம்—வஞ்சநா என்ற வடசொற்சிதைவு. "ஐம்புலன்களடக்கி" என்பது அத்யாபகபாடம்; "வன் புலன்கள்" என்ற பாடமே மோனையின்பத்திற்குச் சிறக்கும்; வியாக்கியானத்துக்கும் சேரும்; ப்ராசீகபாடமுமாகும்.

இடர்ப் பாரத்துன்பம் துறந்து—"பாரமாய பழவினை பற்றறுத்து" என்கை. மஹத்தான துக்கத்தை விளைக்கக்கூடியதும், மனிதனைக் கீழே அமுக்குவதில் தலைச்சுமை போன்றதுமான பழையவினையை வேரோடு களைந்து என்றபடி.

[இருமுப் பொழுதேத்தி.] இரண்டும் மூன்றும் ஐந்து ; பஞ்ச காலபராயணர் களாய் என்றபடி. இதனைச் சிறிது விவரிப்போம்;—ஒருதினத்தின் பகற்பொழுதை ப்ராத:காலம், ஸங்கவகாலம், மத்யாஹ்நகாலம், அபராஹ்நகாலம், ஸாயங்காலம் என்று ஐந்தாகப்பகுத்து, ஸூர்யோதயம் முதல் அவ்வாறு நாழிகை இவற்றிற்கு முறையே உரியவை என்று வரையறுத்து, அபிகமநம், உபாதாநம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற ஐந்து ஒழுக்கங்களையும் முறையே அந்த (ப்ராத: காலம் முதலிய) ஐந்து சிறுபொழுதிலும் அநுஷ்டிக்கும்படி பாஞ்சராத்ரம் முதலிய ஆகமங்கள்கூறும். இரவில் ஆசரிக்கவேண்டுவதும் யோகாநுஷ்டாநமே; இவற்றின் விவரம் வருமாறு :—முதலாறு நாழிகையாகிய ப்ராத:காலத்திலே, ஸ்நாநம் ஸந்த்யாவந்தநம் ஜபம் முதலிய காலைக் கடன்களைச் செய்து முடித்துத் தாம் ஆராதிக்கவேண்டிய எம்பெருமானுடைய ஸந்நிதியிற் சென்று ப்ரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்ரம் முதலியவற்றால் எம்பெருமானை உகப்பிக்கவேண்டும் : இஃது அபிகமநகாலநியமம். அதற்கு அடுத்த ஸங்கவகாலத்திலே, பகவதாராதநத்துக்கு வேண்டிய சுத்ததீர்த்தம் சந்தனம் புஷ்பம் தூபதீபத்ரவ்யங்கள் முதலியவற்றையும், திருமஞ்சனத்துக்கு வேண்டிய பால் தயிர் நெய் தேன் முதலியவற்றையும், எம்பெருமானுக்கு அமுது செய்விப்பதற்கு வேண்டிய அரிசி பருப்பு கறியமுது சர்க்கரை நெய் தயிர் பழம் முதலிய போஜநோபகரணங்களையும் ஸம்பாதித்துத் தொகுத்து ஸித்தஞ்செய்ய வேண்டும் : இஃது உபாதாநகால நியமம். மூன்றாவதான மத்யாஹ்நகாலத்திலே, மாத்யாஹ்நிக ஸ்நாநமும் மாத்யாஹ்நிகச் சடங்கும்செய்து விதிமுறைவழுவாது பகவானுக்குத் திருவாராதநம் பண்ணிப்பக்குவமான உணவுகளை அமுது செய்வித்து அங்ஙனம் நிவேதித்த உணவுகளை அதிதிகளோடும் [illegible] திதர்களோடும் புஜிக்கவேண்டும் : இஃது இஜ்யாகாலநியமம். அதற்கு அடுத்ததான அபராஹ்நகாலத்திலே, மோக்ஷமார்க்கத்துக்கு உரிய வேத வேதாந்த வேதாங்கங்களையும் இதிஹாஸ புராணங்களையும் மற்றும் உரிய நூல்களையும் தாம் கற்றலும் பிறர்க்குக் கற்பித்தலும் வேண்டும் : இது ஸ்வாத்யாய காலநியமம். ஈற்றதான ஸாயங்காலத்திலே, மாலைக்கடனாகிய ஸந்த்யாவந்தநத்தைச் செய்யத் தொடங்கி ஸூர்யாஸ்தமனமான பின்பு ஜபத்தைப் பூர்த்திசெய்து இரவு போஜநாநந்தரம் ஏகாந்தமாக இருந்து ஐம்பொறிகளை யடக்கி ப்ராணாயாமஞ் செய்து மனத்தைப் பரமாத்மாவினிடத்தே நிலை நிறுத்தி பகவத்குணாநுஸந்தாநத்தோடு பள்ளிகொள்ள வேண்டும் : இது யோககாலநியமம். இவ்வாறு அநுஷ்டிக்கும் பாகவதர் பஞ்சகாலபராயணர் எனப்படுவர்.

எல்லையில்லாத் தொன்னெறிகளாவன—வேதம் முதலியவற்றுள் விதிக்கப்பட்டுள்ள "[illegible]" இத்யாதி பல்லாயிரம் நல்லொழுக்கங்கள். நின்றவாநில்லா நெஞ்சினையுடையாராய் ஒருநாள் பன்னிரண்டு திருமண்காப்பும் திருமணித்தாவடமும் திகழநிற்றலும், மற்றொருநாள் அடையவளைந்தானுடுத்து வேசித்தெருவேற உலாவுதலுமாயிராமல் நன்னெறியிலேயே எப்போதும் நிலைத்திருக்கவேணுமென்கிறது.

அறம்—ஆந்ருசம்ஸ்யம்; அதாவது எவ்வுயிர்க்கும் எவ்விதமான தீங்கு செய்தலையும் நெஞ்சாலும் நினையாதிருக்கை. ["அந்தண ரென்போர் அறவோர் மற்

றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்.”] பாட்டடியில் “மறந்திகழு மனமொழித்து” என்றதனாலும் இந்த ஆந்ருஶம்ஸ்யமே கூறப்பட்டதாம். ஸ்ரீவைஷ்ணவலக்ஷணத்தில் இதுவே முக்கியமென்பது தோன்ற இரட்டித்துக் கூறினரெனக் கொள்க. இப்பாட்டிற் கூறியபடி ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் நன்கு அமையப் பெற்றவர் நம் தர்ஶநத்திலே கூரத்தாழ்வானொருவரே என்று நம் முதலிகள் பலகாலும் ஈடுபடுவர். ... ... ... (எ)

---

கோலார்ந்தநெடுஞ்சார்ங்கம் கூனற்சங்கம்
கொலையாழிகொடுந்தண்டு கொற்றவொள்வாள்
காலார்ந்தகதிக்கருடனென்னும் வென்றிக்
கடும்பறவை இவையனைத்தும் புறஞ்சூழ்காப்பச்
சேலார்ந்தநெடுங்கழனி சோலைசூழ்ந்த
திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
மாலோனைக்கண்டு இன்பக்கலவியெய்தி
வல்வினையேன்என்று கொலோ வாழுநாளே. (அ)

பதவுரை.

கோல் ஆர்ந்த—அம்புகளோடு கூடிய
நெடு சார்ங்கம்—பெரிதான ஸ்ரீசார்ங்கமென்னும் வில்லும்
கூன் நல் சங்கம்—வளைந்து விலக்ஷணமான ஸ்ரீபாஞ்சஜந்ய மென்னும் சங்கமும்
கொலை ஆழி—(எதிரிகளைக்) கொலைசெய்ய வல்ல ஸுதர்சநமும்
கொடு தண்டு—(பகைவர்களுக்குக்) கொடுந்தொழில் புரிகின்ற கௌமோதகி யென்னும் கதையும்
கொற்றம் ஒள் வாள்—வெற்றிபெற்று ஒளிமிக்க நந்தகமென்னும் வாளும்
கால் ஆர்ந்த கடும் கதி—வாயுவேகம் போன்ற மிகவும் விரைந்த கமனத்தையுடைய
கருடன் என்னும்—பெரியதிருவடி யென்னும் பேரையுடைய
வென்றி பறவை—ஜயசீலமான பக்ஷிராஜனும் (ஆகிய)
இவை அனைத்தும்- இவ்வனைத்துக்கொத்தும்
புறம் சூழ் காப்ப—நாற்புறமும் சூழ்ந்துகொண்டு ரக்ஷியிட.
சேல் ஆர்ந்த நெடு கழனி—(நீர்வளத்தால்) மீன்கள் நிரம்பிய விசாலமான கழனிகளாலும்
சோலைசூழ்ந்த—சோலைகளாலும்சூழப்பட்ட
திரு அரங்கத்து அரவு அணையில் பள்ளி கொள்ளும்—;
மாலோனை - ஸர்வாதிகனான எம்பெருமானை
வல் வினையேன்—மஹாபாபியான அடியேன்
கண்டு—ஸேவிக்கப்பெற்று
இன்பம் கலவி எய்தி—ஆநந்தமயமான ஸம்ச்லேஷத்தையும் பெற்று
வாழும் நாள் என்று கொல்—வாழ்வது என்றைக்கோ?

கருத்துரை :—பஞ்சாயுதங்களும், திருவடி விஷ்வக்ஸேநன் முதலிய நித்யஸூரிவர்க்கங்களும் ‘அழகியமணவாளனுக்கு எந்த ஸமயத்தில் என்னதீங்கு நேரிடுமோ ?’ என்று அதிஶங்கைபண்ணி எப்போதும் நாற்புறமும் சூழ்ந்து காவலாயிருக்கத் திருவனந்தாழ்வான்மீது திருக்கண் வளர்ந்தருளாநின்ற பெரியபெருமாளை, ஸாம்ஸாரிகஸுகா பாஸங்களிலேயே ருசிகண்டிருக்கும்படி மஹாபாபத்தைப் பண்ணி நித்யகைங்கரியத்தை இழந்து கிடக்கிற அடியேன் என்றைக்கு ஸேவித்து வாழப்போகிறேன் என்கிறார்.

இப்பாசுரத்தை அடியொற்றியே ஆழ்வான் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில்

"த்வாம்ஸேவிதும் ஜஜஜவக்ருதாவிரோதௌ ஜுஷ்டௌ
தார்க்ஷ்யக்ருத்ஸ்ந ஸைந்யபதிநாதபரௌ ஸநந்ய:।
தேவ்யா ஸ்ரியா ஸஹ வஸந்நநகௌமநே
ஸம்ஜீய ஸாம்ஜவிரஸம்கரவிதாக்ஷிவக்ஷா" ‖

என்ற ஶ்லோகமருளிச் செய்தாரென்க. பஞ்சாயுதங்கள் புறஞ்சூழ்காக்குந் திறத்தை, பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்

"நாயநிஶோர்வி தொந்ருத்ர தாரௌ க்ஷணாம்
ஸஞ்ஜுஷீம் ஸதஹஸ்ராம்வ வம்வாயமீயம்"

என்று அநுஸந்தித்தருளினர்.

அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனை ஸர்வேஶ்வரனுக்கு ஒரு தீங்கும் நேரிடுவதற்கு ப்ரஸக்தியுமில்லாமற்போனாலும் அஸ்தாநே பயசங்கிகளான பரிவர்கள் ப்ரேமத்தின் மிகுதியாலே அறிவுகலங்கி எப்போதும் அவனுக்குக் காப்பிடுவதையே தொழிலாகக் கொண்டிருப்பர்கள் : "உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே சங்கே! அற வெறி நாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே! இறவு படாமலிருந்த எண்மர் உலோகபாலீர்காள்! பறவையரையா! உறகல் பள்ளியறை குறிக்கொண்மின்" என்று - நித்யஸூரிகளை யெல்லாம் விளித்து, "நீங்கள் தூங்கவேண்டா; எப்போதும் பெருமாளுக்குத் திருமேனிக் காவலாக இருங்கள்" என்றாரிறே பெரியாழ்வாரும்.

இன்பக்கலவி என்றதனால், துன்பக்கலவியும் ஒன்று உண்டுபோலே. அதாவது - 'ஸம்ஶ்லேஷத்துக்கு அடுத்தபடி விஶ்லேஷம் நேரும்' என்கிற ப்ரஸித்தியாலே கலவி நேர்ந்தவுடனே மீண்டும் பிரிவு நேரிடுகை. அங்ஙனமன்றி * ஸதாவஶ்யமநுபவத்தை விரும்புகிறபடி.

"காலார்ந்த"=கால் - காற்று; ஆர்ந்த - உவமவுருபு. சதி - கதி: என்றவடசொல் விகாரம். "சிறைப்பறவை புறங்காப்பச் சேனையர்கோன் பணிகேட்ப...... ஆயிரவாய் நாகத்தினறிதுயிலினினி தமர்ந்தோய்!" என்றார் ஐயங்காரும். அ.

---

தூராதமனக்காதல் தொண்டர்தங்கள்
   குழாங்குழுமித் திருப்புகழ்கள்பலவும்பாடி
ஆராதமனக்களிப்போடு அழுதகண்ணீர்
   மழைசோர நினைந்துருகியேத்தி நாளும்
சீரார்ந்தமுழவோசை பரவைகாட்டும்
   திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
போராழியம்மானைக்கண்டு துள்ளிப்
   பூதலத்திலென்று கொலோபுரளுநாளே. (க)

பதவுரை.

தூராத காதல் மனம் — ஒருநாளும் த்ருப்திபெறாத ஆசையையுடைய மனதை யுடையரான

தொண்டர் தங்கள் குழாம் — ஸ்ரீவைஷ்ணவர்களின் கோஷ்டியிலே

குழுமி—கூடி

திரு புகழ்கள் பலவும் பாடி — (எம்பெருமானது) கீர்த்திக ளெல்லாவற்றையும் (வாயா ரப்) பாடி

ஆராத மனம் களிப்போடு — (அவ்வளவிலும்) த்ருப்திபெறாத மநஸ்ஸிலுள்ள ஆநந்தத் தோடே

அழுத கண் நீர்—அழுத கண்களிலுண்டான நீர்த்துளிகள்

மழை சோர—மழைபோல் பெருகிவர

நினைந்து உருகி ஏத்தி — (எம்பெருமானை) நினைத்து (அத்தாலே) மனமுருகி ஸ்தோத்திரம் பண்ணி,—

நாளும்—எப்போதும்

சீர் ஆர்ந்த முழவு ஓசை — நல்ல வாத்யங்களின் கோஷமானது

பரவை காட்டும்—கடலைக்காட்டாநின்றுள்ள

திரு அரங்கத்து—ஸ்ரீரங்கத்திலே

அரவு அணையில் பள்ளிகொள்ளும்—;

போர் ஆழி—(பகைவரோடு) யுத்தஞ்செய்வதையே தொழிலாகவுடைய திருவாழியாழ்வானை யுடையரான

அம்மானை—எம்பெருமானை

கண்டு—ஸேவிக்கப் பெற்று

துள்ளி—(ஆநந்தத்துக்குப் போக்கு வீடாகத்) தலைகால் தெரியாமல் கூத்தாடி

பூதலத்தில்—பூமியிலே

புரளும் நாள் என்று கொல் — (உடம்பு தெரியாமல்) புரள்வது என்றைக்கோ?

கருத்துரை :—"இன்கனிதனியருந்தான்" [நல்ல பொருள்தனைத் தனியே அநுபவிக்கலாகாது] என்றாற்போல, பகவத்குணங்களைத் தனியே அநுபவிக்கக் கூடாதாகையால், அக்குணங்களை வாய்விட்டுக் கதறினாலன்றி த்ருப்திபெற முடியாதபடி கரைபுரண்ட காதலையுடைய பாகவதர்களின் கோஷ்டியிலே கலந்து அவர்களுடன் எம்பெருமானது கீர்த்திகளை வாயாரப்பாடி அதனால் ஆநந்தக்கண்ணீர் பெருகப்பெற்று 'நமக்குமன்றோ இவ்வநுபவம் கிடைத்தது!" என்கிற உள்ளடங்காத பேரின்பப் பெருமையாலே "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிற திருவாய்மொழியிற்படி தலைகால் தெரியாமல் துள்ளிக்கூத்தாடி, இப்போது ஸிம்ஹாஸநத்திலே மார்பு நெறித்திருக்கு மிருப்புத்தவிர்ந்து ஆநந்தமிகுதியாலே நிலத்தில் வீழ்ந்து புரளும்படியான பாக்கியம் வாய்ப்பது என்றைக்கோ? என்கிறார்.

தூராதமனக்காதல்=ஶப்தாதிவிஷயங்களை எவ்வளவு அநுபவித்தாலும் எத்தனைநாள் அநுபவித்தாலும் சிறிதும் த்ருப்தியடையாத இந்திரியங்களையுடையவர்களின் கோஷ்டியில்நின்றும் விலகி, எம்பெருமானை எவ்வளவு அநுபவித்தாலும் பர்யாப்தி பெறாத மெய்யடியார்கள் திரளிலே புக விரும்புகிறபடி.

பரவை காட்டும் என்றது—கடலில் அலைகளின் கோஷத்துக்கு ஓய்வு இல்லாதாப்போலே கோயிலில் வாத்யங்களின் முழக்கத்துக்கு ஓய்வு இல்லாமையால் கடலை ஒத்திருக்கின்ற என்றவாறு. பரவை—கடல்; பரவியது: ஐ - கருத்தாப் பொருள்விகுதி.

[பூதலத்தில் இத்யாதி.] கண்ணபிரான் திருவவதரித்த ஆநந்தப்பெருமையாலே ஆய்ப்பாடி ஆயர்கள் ஓடுவார் விழுவாரானாப்போலே நிலத்தில் உடம்பு தெரியாமல் வீழ்ந்து புரள்வதும் ஆநந்த பரீவாஹமேயாம். திருமலையில் அங்கப்ரதக்ஷிணம் முதலியவை காண்க. பூதலம் - வடசொல். ... ... (க)

———

வன்பெருவானகமுய்ய அமரருய்ய
மண்ணுய்யமண்ணுலகில் மனிசருய்யத்
துன்பமிகுதுயரகல அயர்வொன்றில்லாச்
சுகம்வளர அகமகிழுந்தொண்டர்வாழ
அன்பொடுதென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்
அணியரங்கன்திருமுற்றத்து அடியார்தங்கள்
இன்பமிகுபெருங்குழுவுகண்டு யானும்
இசைந்துடனேயென்றுகொலோ இருக்குநாளே. (க0)

பதவுரை.

வல்—(நைமித்திக ப்ரளயத்தில்) அழியாதிருக்கக்கடவதும்
பெரு—பெருமை தங்கியதுமான
வானகம்—ஸ்வர்க்கம்முதலிய மேலுலகங்கள்
உய்ய—உஜ்ஜீவிக்கவும்
அமரர்—தேவர்கள்
உய்ய—உஜ்ஜீவிக்கவும்
மண் உய்ய—பூலோகம் உஜ்ஜீவிக்கவும்
மண் உலகில் மனிசர் உய்ய } பூலோகத்திலுள்ள மனிதர்களெல்லாம் உஜ்ஜீவிக்கவும்
மிகு துன்பம் துயர் அகல } மிக்கதுக்கத்தை விளைப்பதான பாவங்கள் நீங்கவும்
அயர்வு ஒன்று இல்லா சுகம் வளர } துக்கம் கலசாத ஸுகம் வளரவும்
அகம் மகிழும்—(எப்போதும்) மனதில் ஆநந்தத்தையுடையரான
தொண்டர்—ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ—உஜ்ஜீவிக்கவும்
அன்பொடு—திருவுள்ளத்தில் உகப்போடு
தென் திசை நோக்கி—தெற்குத் திக்குக்கு அபிமுகமாக
பள்ளிகொள்ளும்—பள்ளிகொண்டிராநின்ற
அணி அரங்கன்—அழகிய மணவாளனுடைய
திரு முற்றத்து-ஸந்நிதியுன்திருமுற்றத்திலே
அடியார் தங்கள்—ஸ்ரீவைஷ்ணவர்களுடைய
இன்பம் மிகு பெரு குழுவு கண்டு } ஆநந்தம் நிரம்பிய பெரிய கோஷ்டியை ஸேவித்து
யானும்—அடியேனும்
இசைந்து—(அவர்களுள் ஒருவனாக) மனம் பொருந்தி
உடனே—அவர்களோடுகூட
இருக்கும் நாள் என்று கொல் } வாழ்ந்திருக்குங்காலம் எப்போது (வாய்க்குமோ ?.)

கருத்துரை :—தேவர்களும் மநுஷ்யர்களும் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவர்களும் வாழவும், பாவங்கள் நீங்கிப் புண்யங்கள் செழிக்கவுமாகக் குடதிசைமுடியை வைத்துக் குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கிப் பள்ளிகொண்டருளாநின்ற பெரியபெருமாள் ஸந்நிதித் திருமுற்றத்திலே திளைக்கின்ற பாகவதர்களுடைய கோஷ்டியிலே சேர்ந்து அடியேனும் அவர்களைப்போலே திளைத்து வாழ்வது என்றோ! என்கிறார்.

இதில் முன்னிரண்டடிகளுக்குத் தகுதியாக,

" ஸம்ஸாரஸாகரே மக்நாநாம் ஸம்ஸாராணாம்
விமோசநம் கரோதி யஸ்ய தேவதாநாம் ।
ஸர்வேஷாம் லோகாநாம் ஸர்வேஷாம் ப்ராணிநாம்
ஸ்ரீரங்கேசஃ ஸர்வஜநரக்ஷகஃ ॥ "

என்ற புராணஸ்லோகத்தை உதாஹரித்தருள்வர்.

திருப்பள்ளியெழுச்சியில் அருளிச்செய்துள்ளபடி தேவர்களனைவரும் கோயிலேற வந்து படுகாடுகிடப்பாதலால் அவர்கள் உய்யக்குறையில்லை. அங்ஙனம் உய்வுபெற்ற வானவர்கட்கு இடமாதலால் வானகமும் உய்ந்ததாம். " மண்ணுல

கில் மனிசருய்ய" என்றவிடத்து உய்தலாவது ஜீவநமாய், "தொண்டர்வாழ" என்றவிடத்து வாழ்ச்சியாவது உஜ்ஜீவநமாகக்கடவது. விசேஷஞானமில்லாத ஸாமாந்ய மனிதர்கள் உஜ்ஜீவிக்கவேணுமென்ற கருத்தின்றி, சோறுவிற்பனை முதலிய உதரபோஷணத் தொழில்களுக்காகக் கோயிலை இருப்பிடமாக உடையராயிருப்பதால் அவர்கள் அவ்வாறு ஜீவித்துப்போம்படி நம்பெருமாள் ஸந்நிதிபண்ணியிருக்கிறாரென்ப: அந்த ஜீவனமும் காலக்ரமத்திலே உஜ்ஜீவனத்தில் மூட்டிவிடுமென்பதும் உணரத்தக்கது.

[தென்திசை நோக்கி.] தனது அந்தரங்க பக்தனை ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காகத் தென்திசை நோக்கினபடி. விபீஷணாழ்வான் சிரஞ்ஜீவியாய் என்றும் இலங்கையில் வாழ்ந்து வருகின்றானென்பது நூற்கொள்கை: "விபீடண நம்பிக்கு, என்னிலங்கு நாமத்தளவும் அரசென்ற" என்றார் பெரியாழ்வாரும்.

குழுவு=உ - சாரியை. 'குழவு' என்பது பிழையே. சக்ரவர்த்தியாய்ப் பட்டங்கட்டியிராநின்ற தமக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளில் புகுவதென்றால் பாழும் மனமானது விரைவில் ஸம்மதிக்கமாட்டாதே! என்ற வருத்தக்கருத்துத் தோன்ற "யானும் இசைந்து" என்கிறார். (கo)

---

திடர்விளங்குகரைப் பொன்னிநடுவுபாட்டுத்
திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
கடல்விளங்குகருமேனி யம்மான்தன்னைக்
கண்ணாரக்கண்டுகக்கும் காதல்தன்னால்
குடைவிளங்குவிறல்தானைக் கொற்றவொள்வாள்
கூடலர்கோன்கொடைக் குலசேகரன்சொற்செய்த
நடைவிளங்குதமிழ்மாலை பத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக் கீழ்நண்ணுவாரே. (கக)

பதவுரை.

திடர் விளங்கு கரை—மணற்குன்றுகள் விளங்காநின்ற கரையையுடைத்தான
பொன்னி நடுவு பாடு—காவிரியின் நடுவே
திரு அரங்கத்து அரவு அணையில் பள்ளி கொள்ளும்—;
கடல் விளங்கு—கடல்போல் விளங்குகின்ற
கரு மேனி—கரிய திருமேனியையுடைய
அம்மான் தன்னை—அழகிய மணவாளனை
கண் ஆர கண்டு உகக்கும் காதல் தன்னால்—'கண்கள் த்ருப்தியுடையம்படி ஸேவித்து ஆநந்திக்க வேணும்' என்று உண்டான ஆசையினால்.
குடை விளங்கு-(அரசாட்சிக்கு ஏற்ப) வெண்கொற்றக்குடையுடன் விளங்காநிற்பவரும்
விறல் தானை—பராக்கிரமம்மிக்க ஸேனைகளை யுடையவரும்
கொற்றம் ஒள் வாள்—வெற்றியும், ஒளியும் பொருந்திய வாளையுடையவரும்
கூடலர் கோன்—மதுரையிலுள்ளவர்க்குத் தலைவரும்
கொடை—ஔதார்யத்தையே இயற்கையாகவுடையவருமான
குலசேகரன்—குலசேகரப் பெருமாள்
சொற்செய்த—அருளிச்செய்த
நடை விளங்கு—தமிழ் நடையானது நன்கு விளங்காநிற்கிற
தமிழ் மாலை பத்தும்—தமிழ்ப் பிரபந்தரூபமான இப்பத்துப் பாசுரங்களையும்
வல்லார்—ஓதவல்லவர்கள்
நலம் திகழ் நாரணன்—கல்யாண குணசாலியான ஸ்ரீமந்நாராயணனுடைய
அடி கீழ் நண்ணுவார்—திருவடிகளில் சேரப்பெறுவர்.

கருத்துரை:—இந்தப் பாசுரம் இத்திருமொழியின் பயனுரைத்தது. இது ஃபலஸ்ருதி யென்றும் திருநாமப்பாட்டு என்றும் வழங்கப்படும். இத்திருமொழி கற்பவர்கள், தம்மைப்போலே 'என்று கொலோ, என்று கொலோ' என்று கதற வேண்டாமல் எம்பெருமான திருவடிகளை எளிதில் சேரப்பெறுவர் என்கிறார்.

திடர் - மேடு, மணற்குன்று. நடுவு=உ - சாரியை. பாடு - ஏழனுருபு. உகக்கும் காதல் - உகப்பதற்குக் காரணமான காதல்: காரியப்பொருளில் வந்த பெயரெச்சம்.

[குடை விளங்க இத்யாதி.] குலசேகரர் பராக்கிரமத்தால் பகைவரை வெல்லக் கருதி நால்வகைச் சேனையோடு புறப்பட்டுச் சென்று சோழபாண்டியர் முதலிய அரசர்களனைவரையும் புறங்கொடுத்தோடுமாறு வென்று அவர்களைக் கீழ்ப்படுத்து அவர்கள் நாடுகளைத் தம்வசப்படுத்தி, இங்ஙனம் சேர சோழபாண்டியமென்னும் தமிழ்நாடு மூன்றுக்கும் தலைமை பூண்டதனால், "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்னும்படி பல பிருதுகளைப் பெற்று மீண்டுவந்தார் என்றவாலாறு இங்கு அறியத்தக்கது.

"மன்னவர்தம் கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்" "மண்ணரசும் யான்வேண்டேன்" என்று அரசாட்சிச் செல்வத்தை மிக இகழ்ந்து, அணியரங்கன் திருமுற்றத்தடியார் தங்கள் இன்ப மிகு பெருங்குழுவிலே அந்வயிக்க ஆசைகொண்ட இவ்வாழ்வார் "குடைவிளங்கு" இத்யாதி க்ஷாத்ரமான பெருமையைப் பாராட்டிப் பேசுவானேன்? என்று சங்கை பிறக்கக்கூடும்; அங்ஙனம் ராஜாதிராஜராயிருந்து புவனிமுழுதும் செங்கோல்செலுத்தியவர் இங்ஙனம் உலகவாழ்க்கையில் விரக்தியடைந்து பரமபாகவதராயினர் என்பதைப் பின்புள்ளாரு மறிந்து திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்து உய்தற்கு உறுப்பாகுமென்ற திருவுள்ளத்தினால் இங்ஙன மருளிச்செய்கின்றாரென்றுணர்க.

நடை - சொல்நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்குமாகிய எல்லாக் குணங்களும் நன்கு அமையப்பெற்ற ஶைலி.

தமிழ்மாலை=எம்பெருமானும் பிறரும் மேற்கொண்டு ஆதரிக்கத்தக்க இனிய பூமாலைபோன்ற பாமாலை.

சொற்செய்த - சொன்ன; இதில், செய் - துணைவினை.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

முதல் திருமொழி உரை முற்றிற்று.



************************

ஸ்ரீ:.

# இரண்டாந் திருமொழி - தேட்டருந்திறல்.

அவதாரிகை:—திருவரங்கநாதன் விஷயத்திலே தமக்குள்ள அளவிறந்த அபிநிவேசத்தைக் கீழ்த்திருமொழியில் வெளியிட்டருளிய குலசேகரப் பெருமாள், பகவத்விஷயத்தோடு நின்று தரிக்கமாட்டாமல் பாகவத விஷயத்திலே தாம் பித்தேறிக்கிடக்கின்றமையை வெளியிடுகிறார் இத்திருமொழியில். பகவத்விஷயத்திலே மெய்யன்பு பூண்டவர்கள் பாகவத விஷயத்திலே ப்ரவணராகாமலிருக்க முடியாது. பாகவத ப்ராவண்யம் அதிசயித்தாலன்றி பகவத்விஷய ப்ராவண்யம் ஸத்தை பெறாது. இவ்வாழ்வார்க்கு பகவத்விஷய ப்ராவண்யத்திற் காட்டில் பாகவதவிஷய ப்ராவண்யமே பள்ளமடையாயிருக்கும்; * ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென்றவர்களுக்கே வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவரிறே.

"ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" - (கீதை) 'ஞானிகளான பாகவதர்களே தனக்கு உயிர்நிலை' என்று சொன்ன எம்பெருமான் திருவுள்ள முகப்பது பாகவத ப்ராவண்ய முண்டானாலிறே. ஆனதுபற்றியே பகவத்விஷயத்திற் காட்டிலும் பாகவத விஷயமே வீறு பெற்றிருப்பது.

திருவாய்மொழிக்கு * நெடுமாற்கடிமைபோலவும், பெரிய திருமொழிக்கு * நண்ணாதவாளவுணர், * கண்சோர வெங்குருதிபோலவும், திருமாலைக்கு * மேம்பொருட்குமேலிற் பாட்டுக்கள் போலவும், இப்பெருமாள் திருமொழிக்கு இத்திருமொழி மிக்க கௌரவமுடைத்தாமென்க. ... ... ... *

---

தேட்டருந்திறல்தேனினைத் தென்னரங்கனைத் திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்வனைவாழ்த்தி மால்கோள்சிந்தையராய்
ஆட்டமேவியலர்ந்தழைத்து அயர்வெய்தும்மெய்யடியார்கள்தம்
ஈட்டம்கண்டிடக்கூடுமேல் அதுகாணும்கண்பயனாவதே. (க)

பதவுரை.

தேட்டரும்—(தன் முயற்சியால்) தேடிப்பெறுதற்கு அருமையானவனும்

திறல்—(தன்னை முற்ற அநுபவிப்பதற்கு உறுப்பான) வலிவைக் கொடுப்பவனும்

தேனினை—தேன்போல் பரம போக்யனும்

தென் அரங்கனை—தென் திருவரங்கத்தில் வாழ்பவனும்

திரு மாது வாழ் வாட்டம் இல் வனமாலை மார்பனை—பெரிய பிராட்டியார் நித்யவாஸம் செய்தற்கிடமாய் வாடாமல் செவ்வி பெற்றிருக்கிற வனமாலையை அணிந்துள்ள திருமார்வையுடையவனுமான ஸ்ரீரங்கநாதனை

வாழ்த்தி—மங்களாசாஸநம் பண்ணி

மால் கொள் சிந்தையர் ஆய—(அவன்திறத்தில்) மோஹங்கொண்ட மனதையுடையராய்

ஆட்டம் மேவி—(அந்த மோஹத்தாலே நின்றவிடத்தில் நிற்கமாட்டாமல்) ஆடுவதிலே ஒருப்பட்டு

அலர்ந்து அழைத்து—(பகவந்நாமங்களை) வாய்விட்டுக் கதறிக் கூப்பிட்டு

அயர்வு எய்தும்—இளைப்படைகின்ற

மெய் அடியார்கள் தம்—உண்மையான அன்புடைய பாகவதர்களின்

ஈட்டம்—கோஷ்டியை

கண்டிட கூடும் ஏல்—ஸேவிக்கப் பெறுவோமாகில்

அது காணும் கண் பயன் ஆவது—கண்படைத்ததற்குப் பயன் அதுவேயன்றோ?

கருத்துரை:—"பூணாரமார்பனைப் புள்ளூரும் பொன்மலையைக் காணாதார் கண்ணென்றுங் கண்ணல்ல கண்டாமே" என்று 'எம்பெருமானைக் காண்பதே கண்படைத்ததற்கு ப்ரயோஜநம்' என்கிற ஸித்தாந்தம் ஸாமாந்யமானதென்றும் 'பாகவதர்களுடைய கோஷ்டியை ஸேவித்தாலன்றிக் கண்களுக்கு ஸாபல்யம் கிடையா'தென்பதே விசேஷஸித்தாந்தமென்றும் ஸாரமாகக்கண்டறிந்தவர்களுள் இவ்வாழ்வார் தலைவர் என்னுமிடம் இப்பாட்டில் விளங்கும்.

அடியவர்கட்குப் பரமபோக்யனான ஸ்ரிய:பதியை வாயாரத்துதித்து அவனிடத்திலே மிக்க மோஹங்கொண்டு அதனால் உடம்பு நின்றவிடத்தில் நில்லாது கூத்தாடி, 'ஸ்ரிய:பதியே! ஸ்ரீமந்நாராயணனே!' என்றிப்படி பல திருநாமங்களைக்கூறி யழைத்து, அவ்வளவில் எம்பெருமான் கண்ணெதிரே வந்து ஸேவை தந்தருளக் காணாமையாலே வருந்தி ஏங்குகின்ற பாரமார்த்திக பாகவதர்களின் கோஷ்டியை ஸேவிக்கப் பெறுவதே கண்களுக்கு ப்ரயோஜநமா மென்கிறார்.

[தேட்டரும் திறல்தேன்.] உபநிஷத்துக்களில் "ரஸோ வை ஸ:"-"அஸௌ வா ‡ ஆதித்யோ தேவமது" என்று தேனாகச் சொல்லப்படுகிற எம்பெருமான் உலகத்தார் பருகும் தேனிற்காட்டில் பரமவிலக்ஷணமாயிருக்கும். உலகில் தேனானது ஸ்ரமத்துடன் தேடி ஸம்பாதிக்கக்கூடியதாயிருக்கும்; எம்பெருமானாகிற தேனானது ஒருவராலும் தமது முயற்சியால் தேடிப்பிடிக்கக்கூடியதல்ல; அதுவே நம்மைத்தேடிக்கொண்டுவரின் அப்போதுதான் அது நமக்கு எளிதாகும். ஒருவன் தன் முயற்சியாலே தேடிப்பெற்றானாகில் அவனுக்கு அதன் அநுபவம் ஸ்வல்பமாகத்தானிருக்கும். த்ருஷ்டாந்தம் காண்மின்: வஸுதேவர் பன்னீராயிரம் வருஷம் தவஞ்செய்து ஸ்வப்ரயத்ந பரராயிருந்ததனால் அவருடைய தவமானது கண்ணபிரானுடைய திருமுக மண்டலத்தைக் கண்டவுடனே உபக்ஷீணமாகி, அப்பெருமானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைத் தாம் அநுபவிப்பதற்கு உரிய பாக்கியமற்றவராய், தாமே அக்கண்ணனைத் திருவாய்ப்பாடியில் கொண்டுவிடவேண்டிற்று. நந்தகோபர் இங்ஙனம் ஸ்வப்ரயத்ந பரராக இல்லாமையால் "எடுத்தபேராளன் நந்தகோபன்றன் இன்னுயிர்ச் சிறுவனே!" என்றும் "நந்தன் பெற்றனன், நல்வினையில்லாநங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே" என்றும் ஆழ்வார்கள் அருளிச்செய்யும்படி பரமபாக்யசாலியானார். இந்த வாசியை இவ்விருவருடைய பெயரே காட்டுகின்றது. வஸுதேவர் என்பதற்குப் 'பணத்தினால் விளங்குமவர்' என்று பொருளாதலால் ஸாதநாநுஷ்டாந நிஷ்டர் என்றதாகிறது. நந்தகோபர் என்பதற்கு 'ஸந்தோஷப்படுகிறவர்' என்று பொருளாதலால் ஸாத்யத்தில் [அதாவது - ஃபலத்தில்] நிஷ்டையுடையவர் என்றதாகிறது. வேதங்களும், பரகதஸ்வீகாரமென்றும் ஸ்வகத ஸ்வீகாரமென்றும் இரண்டைச் சொல்லி இவற்றில் பரகதஸ்வீகாரமே சிறக்குமென்று முறையிடுகின்றன. தைத்திரீய ஸம்ஹிதா, முதற்காண்டம் ஆறாவது ப்ரஶ்நத்தில்,

‡ இந்த ஆதித்யசப்தம் எம்பெருமானுக்கு வாசகமென்னுமிடம் ஜ்யோதிரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் விளங்கும்.

“ வ ஜாவ திம் ஜொவெஷ வ ஜாவ திஸம்வெஷ
யம் வ ஜாவ தி வெஷஸவ ஷ ணெ ஹ்ர ஸவ தி” என்றது குறிப்பிடத்தக்கது.

இதன் பொருள்:—ஒருவன் எம்பெருமானை ஸ்வீகரிக்கிறான்; எம்பெருமான் ஒருவனை ஸ்வீகரிக்கிறான்; (இவ்விருவர்களுள்) எவனை எம்பெருமான் தானாக ஸ்வீகரிக்கிறானோ அவனே புண்ணியன் என்கை. இனி இதன் விரிவை நம்முடைய ஸம்ப்ரதாய ஸித்தாஞ்ஜநத்திற் கண்டு தெளிக.

திறல்=வலிவை அளிக்கின்ற என்றபடி. தேனைப்பருகினால் வலிவு உண்டாகுமிறே. தன்னை அநுபவிக்க இழிந்தவர்களுக்குத் தன்னையுங் கொடுத்து, தன்னை அநுபவிப்பதற்கு உறுப்பான வலிவையும் தருமென்றவாறு. “ய ஆத்மதா பலதா:” என்று வேதமும் ஓதிற்று.

வனமாலை=திருமால் திருமார்பில் அணிந்துள்ள மாலையின் திருநாமம் இது: “ஆபாதலம்பிநீ யா து மாலா வநமாலேதி ஸா ஸ்ம்ருதா” என்பர் நிகண்டுகாரர். “மால்கோண்ட சிந்தையராய்” என்ற அத்யாபகபாடம் யாப்பிலக் கணத்திற்குச் சேராது, ஸம்ப்ரதாய பாடமுமல்ல.

மேவி=மேவுதல் - விரும்புதல்: “நம்பும் மேவும் நசையாகும்மே.” “கண்டிடக் கூடுமேல்” என்றது -இத்தகைய மெய்யடியார்களை இந்நிலவுலகத்தில் காணப் பெறுவதின் அருமையை விளக்கும். (க)

---

தோலோமலர்மங்கை தோளிணைதோய்ந்ததும் சுடர்வாளியால்
நீடுமாமரம்செற்றதும்நிரைமேய்த்ததும் இவையேநினைந்து
ஆடிப்பாடி அரங்கவோ! என்றழைக்கும் தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறில் கங்கைநீர்குடைந்தாடும்வேட்கை என்னாவதே? (உ)

பதவுரை.

சோடு உலாம் மலர் மங்கை — இதழ்கள் மிக்கிருந்துள்ள தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டியினது
தோள் இணை தோய்ந்ததும் — திருத்தோள்களோடு அணையவமுக்கிக் கட்டிக்கொண்டதும்
சுடர் வாளியால் — புகரையுடைய அம்பினால்
நீடு மா மரம் செற்றதும் — நீண்ட ஸப்த ஸாலவ்ருக்ஷங்களைத் துளைசெய்து தள்ளியதும்
நிரை மேய்த்ததும் — பசுக்கூட்டங்களை மேய்த்ததும் (ஆகிய)
இவையே நினைந்து — இப்படிப்பட்ட பகவச்சரிதங்களையே அநுஸந்தித்து
ஆடி — சரீர விகாரம்பெற்று
பாடி — (காதலுக்குப் போக்கு வீடாக வாய்விட்டுப்) பாடி
ஓ! அரங்க!! என்று — ‘ஓ அரங்கனே!’ என்று (அவன் திருநாமங்களைச் சொல்லி)
அழைக்கும் — கூப்பிடுகிற
தொண்டர் — கைங்கரியத்தையே நிரூபகமாகவுடைய பாகவதர்களின்
அடி பொடி — திருவடித் தூள்களிலே
நாம் ஆட பெறில் — நாம் அவகாஹிக்கப்பெற்றால் (பிறகு)
கங்கை நீர் — கங்கா ஜலத்திலே
குடைந்து ஆடும் வேட்கை — அவகாஹித்து நீராடவேணுமென்கிற ஆசையானது
என் ஆவது — எதுக்கு? (உ)

கருத்துரை:—“பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு, உண்டிராக் கிடக்கும்போது முடலுக்கே கரைந்து நைந்து” என்றபடி அல்லும்

பகலும் ஸாம்ஸாரிக சிந்தனைகளே நிகழும் லௌகிகர்படியில்லாமல் எம்பெருமானுடைய திவ்யசரிதங்களையே மாறிமாறி அநுசந்தித்து, அவ்வநுஸந்தாநத்தாற் பிறந்த உகப்பு உள்ளடங்காமல் பகவந்நாமங்களை வாய்விட்டுக் கதறுகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸ்ரீபாததூளிகளில் அவகாஹிக்கப்பெற்றால், பிறகு 'கங்கையில் நீராடவேணும்' என்கிற விருப்பமும் வியர்த்தமேயாம் என்கிறார். எப்போதோ ஒரு ஸமயத்தில் மாத்திரமே கங்கைக்கு எம்பெருமானுடைய திருவடி ஸம்பந்தமுண்டு; ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அது அநவரதம் உண்டாகையால் கங்காஸ்நாநத்திற் காட்டில் ஸ்ரீவைஷ்ணவ பாததூளியில் அவகாஹநமே சிறக்குமென்க. "கங்கையிற் புனிதமாயகாவிரி" (திருமாலை) என்றவிடத்தும், "ஸஜலஜீவ தஜம்ஹா: விஷ்ணுவங்க்ரீ க்ஷாத்ரோஷ்வாராம் ஹ ஸாவஹா" (ஸ்ரீரங்கராஜஸ்தவம்) என்றவிடத்தும் இவ்வர்த்தம் விசதம்.

ஆடும் வேட்கை=ஆடுதற்குக் காரணமாகிய வேட்கை: காரியப்பொருளில் வந்த பெயரெச்சம்.

நீடோமரஞ் செற்ற வரலாறு:—இராவணன் கவர்ந்து சென்ற ஸீதையைத்தேடிக் கொண்டு சென்ற ராமலக்ஷ்மணர்களை ஹநுமான் மூலமாகத் தோழமைகொண்ட பிறகு, ஸுக்ரீவன், தனது பகைவனும் மஹாபலசாலியுமான வாலியைக் கொல்லும் வல்லமை இராமபிரானுக்கு உண்டோ இல்லையோ வென்று ஐயமுற்று, தன் ஸந்தேஹந் தீரும்படி 'எதிரிலுள்ள ஸப்தஸால வ்ருக்ஷங்களை ஏககாலத்தில் தொளைபடும்படி எய்யவேண்டும்' என்று சொல்ல; உடனே இராமபிரான் ஓரம்பு தொடுத்து அந்த ஸப்தஸால வ்ருக்ஷங்களை ஒருங்கு தொளைபடுத்தினன் என்பதாம்.

---

ஏறடர்த்ததும் ஏனமாய்நிலங்கீண்டதும் முன் இராமனாய்
மாறடர்த்ததும்மண்ணளந்ததும் சொல்லிப்பாடி வண்பொன்னிப்பே
ராறுபோல்வரும்கண்ணநீர்கொண்டு அரங்கன்கோயில்திருமுற்றம்
சேறுசெய்தொண்டர்சேவடிச்செழுஞ்சேறு என்சென்னிக்கணிவனே. (௯)

பதவுரை.

ஏறு அடர்த்ததும்—(நப்பின்னைக்காக) ஏழு ரிஷபங்களை வலியடக்கியதும்
ஏனம் ஆய் நிலம் கீண்டதும்—வராஹரூபியாய் பூமியைக்கோட்டாற் குத்தியெடுத்ததும்
முன் இராமன் ஆய்—முன்பு சக்ரவர்த்தி திருமகனாய்ப் பிறந்து
மாறு அடர்த்ததும்—சத்ரு ராக்ஷஸர்களைக் கிழங்கெடுத்ததும்
மண் அளந்ததும்—(த்ரிவிக்ரமனாய்) உலகளந்ததும் (ஆகிய இந்த சரிதங்களை)
சொல்லி பாடி—வாயாற்சொல்லி வாய்விட்டுப் பாடி,
வண் பொன்னி ஆறு போல் வரும் கண்ண நீர் கொண்டு—ஔதார்யத்தையும் பெருமையையுமுடைய காவிரியாறுபோற் பெருகுகின்ற ஆநந்த பாஷ்பங்களாலே
அரங்கன் கோயில் திரு முற்றம்—நம்பெருமாள் ஸந்நிதியுள் திருமுற்றத்தை
சேறு செய் தொண்டர்—சேறாக்குகிற பாகவதர்களின்
சே அடி செழு சேறு—திருவடிகளால் துகையுண்ட அழகிய சேற்றை
என் சென்னிக்கு—என்னுடைய நெற்றிக்கு
அணிவன்—திலகமாகக் கொள்வேன். (௯)

கருத்துரை:—எம்பெருமானுடைய பல அவதார சரித்திரங்களையே அநவரதம் வாயாரப் பாடிக்கொண்டு அன்பு மிகுதியால் கண்களினின்று பெரியநதி போலப் பரவசமாகப் பெருகுகின்ற ஆநந்த பாஷ்பங்களாலே ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதித் திருமுற்றத்தைச் சேறாக்குகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடிகளால் தொகையுண்ட சேற்றை எனது தலைக்கு அலங்காரமாகக் கொள்வேன் என்கிறார். [என் சென்னிக்கு அணிவனே.] பிராகிருத ஸம்பத்தாகிய அரசாட்சிச் செல்வத்திற்கு அறிகுறியாக வஹிக்கப்படும் கிரீடத்தைப்பறித் தெறிந்து, அப்ராகிருத ஸம்பத்தாகிய பாகவத பக்திலக்ஷ்மிக்கு அறிகுறியாக அப்பாகவதர்களின் ஸ்ரீபாத தூளிச் சேற்றைச் சிரோபூஷணமாகக் கொள்வேன் என்கிறார்.

கண்ணநீர் எவ்வளவு அடக்கினாலும் நில்லாமல் பெருவெள்ள மிடுதற்குப் பொருத்தமான த்ருஷ்டாந்தம் காவிரியேயாம். கண்ண நீர்=(கண் அ) அ - ஆறும் வேற்றுமை யுருபு; கண்களினுடைய நீர் என்றபடி. (௫)

---

தோய்த்ததண் தயிர்வெண்ணெய்பாலுடனுண்டலும் உடன்றாய்ச்சிகண்டு
ஆர்த்ததோளுடை எம்பிரான் என்னரங்கனுக்கு அடியார்களாய்
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்தழும்பத்தொழுது
எத்தி இன்புறும்தொண்டர்சேவடி ஏத்திவாழ்த்துமென்நெஞ்சமே. (௬)

பதவுரை.

தோய்த்த தண் தயிர்—தோய்த்துக் குளிர்ந்த தயிரையும்
வெண்ணெய்—வெண்ணெயையும்
பால்—பாலையும்
உடன் உண்டலும்—ஒரே காலத்திலே அமுது செய்தவளவில்
ஆய்ச்சி—யசோதைப் பிராட்டியானவள்
கண்டு—(அந்தக் களவு தன்னைப்) பார்த்து
உடன்று—கோபித்து
ஆர்த்த—(பிறகு அவளாலே) பிடித்துக் கட்டப்பட்ட
தோள் உடை—தோள்களை யுடைய
எம் பிரான்—எமக்குத் தலைவனான
என் அரங்கனுக்கு—என் ரங்கநாதனுக்கு
அடியார்கள் ஆய்—ஆட்பட்டவர்களாய்
நா தழும்பு எழ—நாக்குத் தடிக்கும்படி
நாரணா என்று அழைத்து—நாராயணா! என்று கூப்பிட்டு
மெய் தழும்ப தொழுது—சரீரம் காய்ப்பேறும்படி ஸேவித்து
எத்தி—தோத்திரம் பண்ணி
இன்புறும்—ஆநந்த மடைகின்ற
தொண்டர்—ஸ்ரீவைஷ்ணவர்களுடைய
சே அடி—திருவடிகளை
என் நெஞ்சம்—என் மனமானது
ஏத்தி வாழ்த்தும்—துதித்து (அவர்களுக்கே) பல்லாண்டு பாடும். (௬)

கருத்துரை:—"எத்திறம்! உரலினோடிணைந்திருந்தேங்கிய எளிவே!" என்று நம்மாழ்வார் ஆறுமாதம் மோஹித்துக் கிடக்கும்படி மயக்கவல்ல * கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ட அபதாநத்தை அநுஸந்தித்து, "கொண்டல் வண்ணனைக் கோவலனைப் வெண்ணெயுண்டவாயன் - அணியரங்கன்" என்றபடி ஸ்ரீரங்கநாதனை அக்கண்ணபிரானாகப் பாவித்துப் பணிசெய்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பல்லாண்டு பாடுவதையே தொழிலாகக் கொண்டிருப்பேன் நான் என்கிறார்.

"மெய்தழும்பத் தொழுது" என்றதனால் ஒருமுறை நமஸ்காரம் செய்யும் ஸம்ப்ரதாயம் ஆதாரமற்றதாகு மென்று சில சிற்றறிவினர் மயங்குவர்; "ஸத்ருஜ ஹத்ய-ஙா-நாம் நஸாஸ்ரம் ஜெநவவ கூஜ:" என்றபடி பக்திப்ரகர்ஷத்தாலே மெய்மறந்து நூல்வரம்பை மீறுமவர்களின் அநுஷ்டாநம் கபட பக்திமான்களுக்கு ஆதரணீயமாவது பரிஹாஸ்யம். கணக்கெண்ணித் தொழுமவர்களாயும், * பஞ்சியன்ன மெல்லடி நற்பாவைமார்களாடகத்தின் அஞ்சிலம்பின் ஒலியைக் கேட்டு உள்குழைந்து ஓடுமவர்களாயுமுள்ள கள்ளபக்தர்களுக்கு எந்த சாஸ்த்ரத்திலும் ப்ரமாணம் கிடைப்பரிதாம். இனி, எமது திருப்பாவைத் தனியனுரையில் இவ் விவரணத்தை விசதமாகக் காண்க.

உடன்று - கோபித்து: 'உடல்' என்பது வினைப்பகுதி. (ச)

---

பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப் போரராவீர்த்தகோன்
செய்சிலைச்சுடர்சூழொளித் திண்ணமாமதிள்தென்னரங்கனும்
மெய்சிலைக்கருமேகமொன்று தம்நெஞ்சில்நின்றுதிகழப்போய்
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்து என்மனம்மெய்சிலிர்க்குமே. (ரு)

பதவுரை.

பொய்—க்ருத்ரிமமாய்
சிலை குரல்—கோபத்தை வெளியிடுகின்ற கோஷத்தை யுடைத்தான
ஏறு—(ஏழு) ரிஷபங்களின்
எருத்தம் இறுத்து—முசுப்புகளை முறித்தவனாய்,
போர் அரவு ஈர்த்த கோன்—போர் செய்யவந்த காளிய நாகத்தை நிரஸித்த ஸ்வாமியாய்,
சிலை செய்—கல்லினால் செய்யப்பட்டு
சுடர் ஒளி—மிக்க தேஜஸ்ஸையுடைத்தாய்
திண்ணம்—த்ருடமாயிருக்குந் தன்மையையு முடைத்தாய்
மா—பெரிதான
மதிள் சூழ்—மதில்களாலே சூழப்பட்ட
தென் அரங்கன் ஆம்—தென்னரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனான ரங்கநாதனாகிற
மெய் சிலை கரு மேகம் ஒன்று—சரீரத்தில் வில்லோடு கூடிய ஒரு காளமேகமானது
தம் நெஞ்சுள் நின்று திகழப் போய்—தங்கள் மனதில் நிலைத்து விளங்கப்பெற்று
மெய் சிலிர்ப்பவர் தம்மையே—மயிர்க்கூச்செறியும் சரீரமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களையே
என் மனம் நினைந்து—என் நெஞ்சானது அநுஸந்தித்து
மெய் சிலிர்க்கும்—மயிர்க்கூச்செறியப் பெற்றது. (ரு)

கருத்துரை :—அடியார்களை ஆட்கொள்வதற்காக அருமையான செயல்களைச் செய்தருளின எம்பெருமானாகிற காளமேகத்தை ஹ்ருதயத்திலே வஹிக்கப் பெற்று எப்போதும் மயிர்க்கூச்செறியும் திருமேனியையுடையரா யிருக்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களை அநுஸந்தித்து. அவர்கள் படும் பாட்டை என்நெஞ்சு படாநின்றதென்கிறார்.

ஏற்றெருத்தமிறுத்த வரலாறு :—கண்ணபிரான் நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் புணர்தற்காக, அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி, யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கித்தழுவின னென்பதாம்.

அரவீர்த்த வரலாறு :—யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியால் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாகச்செய்த காளியனென்னும் கொடிய ஐந்தலை நாகத்தைக் கிருஷ்ணன் தண்டிக்கவேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு, அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ள தொரு கடம்ப மரத்தின்மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேலேறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில் 'மாங்கல்யபிக்ஷை இட்டருளவேண்டும்' என்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாக கன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற் சென்று வாழுமாறு விட்டருளினன் என்பதாம்.

"திகழப்போய்" என்றவிடத்து, போய்—வார்த்தைப்பாடு.

"மனம் மெய்கிளிர்க்கும்" என்றது - மனம் விகாரப்படாநின்றதென்றபடி.()

---

ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான்
பாதமாமலர்சூடும்பத்தியிலாத பாவிகள் உய்ந்திடத்
தீதில்நன்னெறிகாட்டி எங்குந்திரிந்து அரங்கனெம்மானுக்கே
காதல்செய்தொண்டர்க்கு எப்பிறப்பிலும் காதல்செய்யும் என்நெஞ்சமே. (௬)

பதவுரை.

ஆதி—ஜகத்காரணபூதனாய்
அந்தம்—ப்ரளயகாலத்திலும் வாழ்பவனாய்
அநந்தம்—ஸர்வவ்யாபியாய்
அற்புதம் ஆன—ஆச்சரிய பூதனாய்
வானவர் தம் பிரான்—அமரர்க் கதிபதியான ரங்கநாதனுடைய
மா மலர் பாதம்—சிறந்த மலர்போன்ற திருவடிகளை
சூடும் பத்தி இலாத—சிரஸா வஹிப்பதற்குறுப்பான அன்பு இல்லாத
பாவிகள் உய்ந்திட—பாபிகளும் உஜ்ஜீவிக்கும்படி
எங்கும் திரிந்து—ஸர்வதேசங்களிலும் ஸஞ்சாரஞ்செய்து
தீது இல்—குற்றமற்ற
நல் நெறி—நல்வழிகளை
காட்டி—(தமது அநுஷ்டாந முகத்தாலே) வெளிப்படுத்திக்கொண்டு
எம்மான்—நமக்குத் தலைவனான
அரங்கனுக்கே—ஸ்ரீரங்கநாதனுக்கே
காதல் செய்—பக்திபூண்டிருக்கின்ற
தொண்டர்க்கு—பாகவதர்கள் விஷயத்தில்
என் நெஞ்சம்—எனது மனமானது
எப் பிறப்பிலும்—எந்த ஜன்மத்திலும்
காதல் செய்யும்—அன்பு பூண்டிருக்கும். (௬)

கருத்துரை :—ஸகல ஜகத்காரண பூதனாய் ஸர்வவ்யாபகனான எம்பெருமானிடத்து அன்பு இல்லாதவர்களான பாவிகளும் அவ்வன்பைப் பெற்று உஜ்ஜீவிக்குமாறு தேச தேசாந்தரங்களெங்கும் ஸஞ்சரித்து ஸ்வரூபாநுரூபமான அர்த்த விசேஷங்களை ஆங்காங்கு உபந்யாஸமுகேந உபதேசித்தவரும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே நான் பிறவிதோறும் அன்பு பாராட்டுவேன் என்கிறார். "எப்பிறப்பிலும்" என்ற சொற்போக்கால், அப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவர்கள் பக்கல் பக்திபண்ணுவதற்காக இன்னும் பல ஜந்மங்களைத் தாம்பெற விரும்பியிருக்குமாறு விளங்குமென்ப·

---

காரினம்புரைமேனிநற்கதிர் முத்தவெண்ணகைச்செய்யவாய்
ஆரமார்வனரங்கனென்னும் அரும்பெருஞ்சுடரொன்றினைச்
சேரும்நேஞ்சினராகிச் சேர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால்
வாரநிற்பவர்தாளிணைக்கு ஒருவாரமாகும் என்நேஞ்சமே. (எ)

பதவுரை.

கார் இனம் புரை—மேகங்களின் திரளை ஒத்த
மேனி—திருமேனியையும்
நல் கதிர்—அழகிய லாவண்யத்தையும்
முத்தம் வெண் நகை செய்ய வாய்—முத்துக்கள் போல் வெளுத்த புன்சிரிப்பையுடைய சிவந்த திருப்பவளத்தையும்
ஆரம் மார்வன்—முக்தாஹாரமணிந்த மார்வையு முடையனான
அரங்கன் என்னும்—ஸ்ரீரங்கநாதனென்கிற
அரும் பெரும் சுடர் ஒன்றினை—அருமை பெருமையுள்ள விலக்ஷணமானதொரு தேஜஸ்ஸை
சேரும் நெஞ்சினர் ஆகி—கிட்டி அநுபவிக்கவேணுமென்ற சிந்தையையுடையராய்
சேர்ந்து—(அங்ஙனமே) சேர்ந்து
கசிந்து இழிந்த—(பக்தி பாரவச்யத்தாலே) சுரந்து பெருகின
கண் நீர்கள்—ஆநந்த பாஷ்பங்கள்
வார நிற்பவர்—வெள்ளமிட்டொழுகும்படி நிற்குமவர்களுடைய
தாள் இணைக்கு—இரண்டு திருவடிகள் விஷயத்தில்
என் நெஞ்சம்—என் மனமானது
ஒரு வாரம் ஆகும்—ஒப்பற்ற அன்பையுடையதாகும். (எ)

கருத்துரை:—பல காளமேகங்கள் திரண்டாற்போன்று விளங்குகின்ற திருமேனியையும், அத்திருமேனியில் ஓடுகின்ற விலக்ஷணமான லாவண்யத்தையும், முத்துவரிசை போன்ற புன்முறுவலையுடைய திருவதரத்தையும், முத்துமாலையணிந்த திருமார்பையு முடையனான ஸ்ரீரங்கநாதனென்கிற ஒரு பரஞ்சோதியை அடிபணிந்து கண்ணுங் கண்ணீருமாய் நிற்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே என் நெஞ்சானது அநந்யப்ரயோஜநமாய் ஆட்பட்டு நில்லா நின்றதென்கிறார்.

நற்கதிர் என்பதை முத்துக்கு அடைமொழியாக்கி, 'நல்ல ஒளிபொருந்திய' என்றுரைத்தலு மொன்று. "கண்ணீர்களால்" என்றவிடத்து, ஆல் - அசை. (எ)

---

மாலையுற்றகடல்கிடந்தவன் வண்டுகிண்டுநறுந்துழாய்
மாலையுற்ற வரைப்பெருந்திருமார்வனை மலர்க்கண்ணனை
மாலையுற்றெழுந்தாடிப்பாடித் திரிந்து அரங்கனேம்மானுக்கே
மாலையுற்றிநிம்தோண்டர்வாழ்வுக்கு மாலையுற்றது என்னேஞ்சமே. (அ)

பதவுரை.

மாலை உற்ற கடல்—(தன் திருமேனி ஸ்பர்சத்தாலே) அலை பெறுகிற (திருப்பாற் கடலில்
கிடந்தவன்—பள்ளி கொள்பவனும்
வண்டு கிண்டு நறு துழாய் மாலை உற்ற—(தேனுக்காக) வண்டுகள் குடையா நின்றுள்ள திருத்துழாய் மாலை அணிந்த
வரை பெரு திரு மார்பனை—மலைபோற் பெருமை தங்கிய திருமார்பை யுடையவனும்
மலர் கண்ணனை—செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களை யுடையவனுமான ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில்.
மாலை உற்று—வ்யாமோஹத்தை அடைந்து
எழுந்து ஆடி—(இருந்தவிடத்தி லிராமல்) எழுந்து கூத்தாடி
பாடி—(வாயாரப்) பாடி
திரிந்து—(திவ்ய தேசங்கள்தோறும்) ஸஞ்சரித்து
அரங்கன் எம்மானுக்கே—எமக்கு ஸ்வாமியான ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலேயே
மாலை உற்றிடும்—பித்தேறித் திரிகின்ற
தொண்டர்—ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய
வாழ்வுக்கு—ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷ்மிக்கு
என் நெஞ்சம் மாலை உற்றது—என்மனம் மயங்கிக் கிடக்கின்றது. (அ)

கருத்துரை.—திருப்பாற்கடலில் பள்ளிகொள்பவனும் நறுந்தேன் மிக்க செவ்வித்துழாய்மாலையணிந்த பெருந் திருமார்பையுடையவனும் புண்டரீகாக்ஷனுமாகிய ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலே மையல்கொண்டு இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே எழுந்து ஆடுவது பாடுவதாய் விகாரப்படுகின்ற ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய அந்த ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷ்மிக்கே என் நெஞ்சு பித்தேறு நின்றதென்கிறார். அப்படிப்பட்ட நிலைமை நமக்கு வாய்க்குமா? என்று அலமாவா நின்றதென்றபடி.

இரண்டாமடியில் மாத்திரம் மாலை என்பது மாலா என்ற வடசொல் விகாரம். மற்ற மூன்றடிகளிலுள்ள மாலை - மோஹம் என்னும் பொருளதான மால் என்னுஞ் சொல் இரண்டாம் வேற்றுமை யுருபேற்றது. (௮)

---

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்ப ஏங்கியிளைத்துநின்று
எய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்து ஆடிப்பாடியிறைஞ்சி என்
அத்தனச்சனரங்கனுக்கு அடியார்களாகி அவனுக்கே
பித்தராமவர்பித்தரல்லர்கள் மற்றையார்முற்றும்பித்தரே. (௯)

பதவுரை.

கண் பனி—ஆநந்த பாஷ்பமானது
மொய்த்து சோர—இடை விடாமல் சொரியவும்
மெய்கள்—சரீரம்
சிலிர்ப்ப—மயிர்க் கூச்செறியவும்
ஏங்கி இளைத்து நின்று—நெஞ்சு தளர்ந்து சுளைத்துப்போய்
எய்த்து—நிலைதளர்ந்து
கும்பிடு நட்டம் இட்டு—மஹாகோலாஹலத்தோடு கூடிய நர்த்தனத்தைப் பண்ணி
எழுந்து ஆடி பாடி இறைஞ்சி—நின்றவிடத்து நில்லாமல் (பலவித) ஆட்டங்களாடிப் பாட்டுக்கள் பாடி வணங்கி,

என் அத்தன்—எனக்குத் தந்தையாய்
அச்சன்—ஸ்வாமியான
அரங்கனுக்கு—ஸ்ரீரங்கநாதனுக்கு
அடியார்கள் ஆகி—அடியவர்களாய்
அவனுக்கே — அந்த ரங்கநாதன் விஷயத்திலேயே
பித்தர் ஆமவர்—பித்தேறித் திரிகிறவர்கள்
பித்தர் அல்லர்கள்-பைத்தியக்காரர்களல்லர்;
மற்றையார் முற்றும்—(பக்திகார்யமான இந்த வ்யாமோஹமில்லாத) மற்ற பேர்களெல்லாம்
பித்தரே—பைத்தியக்காரர்கள் தான். (௯)

கருத்துரை:—ஆழ்வாரை நோக்கிச் சிலர் 'ஓய்! பைத்தியக்காரர்கள் விஷயத்திலேயா உமக்குப் பைத்தியம் பிடித்தது? என்று கேட்க; ஸ்வரூபத்துக்கு அநுரூபமான விஷயத்தில் பித்தேறுமவர்கள் பைத்தியக்காரரல்லர் என்கிறார்.

"[மற்றையார் முற்றும் பித்தரே.] இந்த பக்திகார்யமான பித்து இல்லாதவர்களடையப் பித்தர். அக்கலக்கமில்லாதே தெளிந்திருக்குமவர் ஸநகாதிகளேயாகிலும் அவர்கள் பித்தர்" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி நோக்குக.

கும்பிடு நட்டமிட்டு - தலைகீழாகக் கூத்தாடி, என்க. (௯)

---

அல்லிமாமலர்மங்கைநாதன் அரங்கன்மெய்யடியார்கள்தம்
எல்லையிலடிமைத்திறத்தினில் என்றுமேவுமனத்தனும்
கொல்லிகாவலன்கூடல்நாயகன் கோழிக்கோன்குலசேகரன்
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர் தொண்டர்தொண்டர்களாவரே. (௧௦)

பதவுரை.

அல்லி மா மலர் மங்கை நாதன் } அகவிதழ்களையுடைய சிறந்த (தாமரை) மலரில் பிறந்த பிராட்டிக்குக் கணவனை
அரங்கன்—ஸ்ரீரங்கநாதனுடைய
மெய் அடியார்கள் தம் } உண்மையான பக்தர்களுடைய
எல்லையில் அடிமை திறத்தினில் } எல்லையிலே உள்ள சேஷவ்ருத்தியிலே
என்றும் மேவு மனத்தன் ஆம் } எப்போதும் பொருந்திய திருவுள்ளத்தை யுடையவரும்
கொல்லி காவலன்—கொல்லிநகர்க்கு அரசரும்
கூடல் நாயகன்—மதுரைக்கு அரசரும்
கோழி கோன்—உறையூருக்கு அரசருமான
குலசேகரன்—குலசேகராழ்வாருடைய
சொல்லின்—ஸ்ரீஸூக்திகளாலே அமைந்த
இன் தமிழ் மாலை வல்லவர் } இனிய தமிழ்ப் பாசுரங்களை ஓதவல்லவர்கள்
தொண்டர் தொண்டர்கள் ஆவர் } தாஸாநுதாஸராகப் பெறுவர். (கo)

கருத்துரை:—திருமால் விஷயத்திலே அநந்யப்ரயோஜநராகத் தொண்டு பட்டிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய சரமாவதி தாஸ்யத்திலே பொருந்தின திருவுள்ளத்தையுடையரான ஸ்ரீ குலசேகராழ்வார் அருளிச்செய்த பரம போக்யமான இத்திருமொழியை ஓதவல்லவர்கள் பாகவத சேஷத்வமாகிற புருஷார்த்தத்தைப் பெறுவர்கள் என்று பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு.

எல்லையி லடிமைத்திறமாவது - "அடியா ரடியார்தம் மடியா ரடியார்தமக் கடியா ரடியார்தம் அடியா ரடியோங்களே" என்றும், "த்வத்ப்ருத்யப்ருத்ய பரிசாரகப்ருத்யப்ருத்ய ப்ருத்யஸ்யப்ருத்ய இதிமாம் ஸ்மர லோகநாத" என்று மருளிச்செய்தபடியே ஸர்வவைலக்ஷண்யமான சேஷத்வ காஷ்டை.

இப்படிப்பட்ட சேஷத்வ காஷ்டையிலே ஊன்றி னவிவர் அஹங்கார ஹேதுவான "கொல்லிகாவலன்" இத்யாதி விசேஷணங்களை ஆதரித்துக் கூறுவானேன்? எனில், கீழ்த் திருமொழியில் ஈற்றுப்பாசுரத்தின் உரையைக் காண்க. (கo)

அடிவரவு:—தேட்டு தோடேறு தோய்த்த பொய் ஆதி காரினம் மாலை மொய்த்து அல்லி மெய்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

இரண்டாந்திருமொழி உரை

முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# மூன்றாந்திருமொழி - மெய்யில் வாழ்க்கை.

எம்பெருமானிடத்து உண்டான ப்ராவண்யமானது அவனளவிலே நிற்க மாட்டாமல் அவனடியாரளவுஞ் சென்று கரைபுரண்டபடியை அருளிச்செய்தார் - கீழ்த் திருமொழியில். அப்படி பாகவதப்ராவண்யம் அளவிறந்து விளைந்தவாறே ஸாம்ஸாரிகர் படியில் மிக்க வெறுப்பு உண்டாகி, அவர்களைக் காண்பதும் அவர்களோடு ஸஹவாஸஞ் செய்வதும் அஸஹ்யமாம்படி ஒரு தசாவிசேஷம் பிறக்குமே; அந்த நிலைமை தமக்குப் பிறந்தபடியை அருளிச் செய்கிறார் - இத்திருமொழியில்.

மெய்யில்வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும் இவ்
வையந்தன்னொடும் கூடுவதில்லையான்
ஐயனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்
மையல்கொண்டொழிந்தேன் என்றன்மாலுக்கே. (க)

பதவுரை.

மெய்யில் வாழ்க்கையை — ப்ராக்ருதி ப்ராக்ருதங்களோடு பொருந்தி வாழ்வதையே
மெய் என கொள்ளும் — பாரமார்த்திகமாகக் கருதுகின்ற
இ வையம் தன்னொடும் — இவ்வுலகத்தாரோடு
யான் கூடுவது இல்லை — (இனி) நான் சேர்வதில்லை;
ஐயனே — 'ஸ்வாமீ'
அரங்கா — ஸ்ரீரங்கநாதனே!'
என்று அழைக்கின்றேன் — என்று (பகவந்நாமங்களைச் சொல்லி) அழையாநின்றேன்;
என் தன் மாலுக்கே — என்னிடத்தில் வாத்ஸல்யமுடைய எம்பெருமான் பக்கலிலேயே
மையல் கொண்டொழிந்தேன் — வ்யாமோஹமடைந்திட்டேன்.

கருத்துரை:— அவரவர்கள் படைத்திருக்கும் நச்வரமான சரீரத்தின் ஸம்பந்தமடியாக இஹலோகத்தில் நிகழ்கின்ற ப்ராக்ருதபோகங்கள் யாவும் மின்னல் போல் மிளிர்ந்து மறையக்கூடியவையே யன்றி நித்தியமாகச் செல்லக்கூடியவையல்ல; உண்மை இங்ஙனமிருந்தும் அநித்யமானவற்றை நித்யமாக மயங்கி ஐஹிக போகங்களுக்கே உழன்று திரிகின்ற இந்த ப்ராக்ருத மநுஷ்யர்களின் ப்ரக்ரியை எனக்கு ஈஷத்தும் ஸஹிக்க முடியாதிருப்பதால் இவர்களுடன் நான் கூடியிருக்க மாட்டேன்; என்று சொன்ன ஆழ்வாரை நோக்கிச் சிலர் "எங்களைக் காட்டிலும் உமக்கு என்ன வைலக்ஷண்ய முண்டாகிவிட்டது?" என்று கேட்க; அதற்கு உத்தர முரைக்கின்றார் பின்னடிகளால். ஓ ஸம்ஸாரிகளே! உமக்கும் நமக்கும் உள்ளவாசி வாக்கிலே தெரியவில்லையா? நீங்கள் எப்போதும், 'சோறு, காசு துணி, தப்பு' என்று வாய் பிதற்றுகிறாப்போலவோ நான் வாய்பிதற்றுவது, எப்போதும் நான் பகவந்நாமங்களையே வாய் வெருவிக்கொண்டிருப்பதை நீங்கள் காணவில்லையா? அன்றியும், 'கொண்ட பெண்டிர், மக்கள், உற்றார், சுற்றத்தவர்' என்று நீங்கள் ஆபாஸபந்துக்களின் பேரைச்சொல்லி அவர்கள் திறத்து மோஹித்

துக் கிடப்பதுபோலவா நான் மோஹித்துக் கிடக்கிறேன்? எப்போதும் நான் பகவத்விஷயத்திலேயே பித்தேறிக்கிடப்பதை நீங்கள் காணவில்லையா? இதுவே உமக்கும் நமக்கும் உள்ளவாசி என்கிறார்.

மெய்யில் வாழ்க்கை=மெய் இல் என்று பிரித்து, 'பொய்யாகிய வாழ்வை' என்று உரைத்தலுமாம். அன்றி, மெய்யில் என்பதை ஏழாம் வேற்றுமையாகக் கொண்டு, மங்களவாரமென்று பேர்பெற்ற அமங்களவாரம்போல் மெய்யென்று [விபரீத லக்ஷணைப்] பெயரைப் பெற்றுள்ள பொய்ந்நிலத்திலே பொருந்தி வாழ்தலை என்றுமாம்.

வையம் என்ற பூமிப்பெயர் இங்கு, பூமியிலுள்ளாரைக் கூறுதலால் இடவாகு பெயர். மையல் என்றும், மயல் என்றும் மோஹத்துக்குப் பெயர். "[என்றன் மாலுக்கே] அவன் எனக்குப் பித்தேறினபடி கண்டு நானும் அவனுக்குப் பித்தனானேன்" என்ற வ்யாக்யாநஸூக்தி நோக்குக. (க)

---

நூலினேரிடையார்திறத்தே நிற்கும்
ஞாலந்தன்னொடும் கூடுவதில்லையான்
ஆலியா அழையா அரங்கா! என்று
மாலெழுந்தொழிந்தேன் என்றன்மாலுக்கே. (௨)

பதவுரை.

நூலின் நேர் இடையார் திறத்து நிற்கும் } நூல் போன்று (ஸூக்ஷ்மமான) இடையையுடைய பெண்டிர் விஷயத்திலேயே பொருந்தியிருக்கிற

ஞாலம் தன்னொடும்—(இந்த) ப்ராக்ருத மனிதரோடு

யான் கூடுவது இல்லை—;

ஆலியா — (காதலுக்குப் போக்கு வீடாகக்) கூத்தாடி

அரங்கா என்று—'ஸ்ரீரங்கநாதனே!' என்று

அழையா—கூப்பிட்டு

என் தன் மாலுக்கே—என்மேல் வ்யாமோஹமுடையனான எம்பெருமான் திறத்திலேயே

மால் எழுந்தொழிந்தேன்-மோஹமுற்றேன்.

கருத்துரை:—எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற வடிவழகிலே ஈடுபடாமல் மின்னிடை மடவாராகிற கொடியவலையுள் பட்டு 'இவர்களுடைய இடையழகிருந்தபடி யென்! முலையழகிருந்தபடி யென்! தலையழகிருந்தபடி யென்!' என்று காபேயமாக வருணித்துக்கொண்டு அலைகின்ற நீசரோடு எனக்குப் பொருந்தாது. தகாத விஷயத்திலே இப்பாவிகள் படும் பாடெல்லாம் வகுத்த விஷயத்திலே நான் படுவதால் இவர்களிற் காட்டில் நான் பரமவிலக்ஷணனல்லேனோ? ஆனபின்பு இவர்களோடுறவு எனக்குப் பொருந்தாது என்கிறார்.

ஆலியா, அழையா='செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; ஆலித்து அழைத்து என்றபடி. (௨)

---

மாரனார்வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்யும்
பாரினாரொடும் கூடுவதில்லையான்
ஆரமார்வன் அரங்கன் அனந்தன், நல்
நாரணன் நரகாந்தகன்பித்தனே. (௩)

பதவுரை.

மாரனார்—மன்மதனுடைய [லுக்கு
வரி வெம் சிலைக்கு—அழகிய கொடிய வில்
ஆள் செய்யும்—ஆட்பட்டு (விஷய ப்ரவண ராய்த்) திரிகிற
பாரினாரொடும்—(இப்) பூமியிலுள்ள ப்ராக்ருதர்களோடு
யான் கூடுவது இல்லை—;
ஆரம் மார்பன்—முக்தாஹாரத்தைத் திருமார்பிலே அணிந்துள்ளவனாய்
அநந்தன்—அளவிடமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களையுடையனாய்
நல் காரணன்—ஸர்வ ஸ்வாமியாய்
நரக அந்தகன்—அடியவர்களை நரகத்தில் சேராதபடி காத்தருள்பவனான
அரங்கன்—ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலே
பித்தன்—மோஹமுடையனாயிராநின்றேன்.

கருத்துரை:—எம்பெருமானுடைய சார்ங்கமென்னும் வில்லுக்குத் தோற்றுப் பணிசெய்கிற என்படியின்றி, மன்மதனுடைய வில்லுக்குத் தோற்று இந்திரிய கைங்கர்யம் பண்ணித்திரிகிற இவ்வுலகத்தாரோடு எனக்கு என்ன உறவு? என்கிறார். "பாரினாரொடும்" என்று ஒருசொல்லாகக்கொண்டு, 'இப்பூமியிலுள்ளாரோடு' என்று உரைக்கப்பட்டது: அன்றி "பாரிலாரொடும்" என்று பாடமாய், 'பாரில் ஆரொடும்' என்று பிரித்து, மன்மதனுடைய வில்லுக்குப் பணிசெய்கின்ற இப்பூமியில் எந்த மனிதரோடும் நான் கூடமாட்டேன் என்பதாக உரைத்தலுமாம்.

நரகாந்தகன்—நரகாஸுரனைக் கொன்றவன் என்றுமாம். (௩)

---

உண்டியே உடையே உகந்தோடும், இம்
மண்டலத்தோடும் கூடுவதில்லையான்
அண்டவாணன் அரங்கன் வன்பேய்முலை
உண்டவாயன்தன் உன்மத்தன்காண்மினே. (௪)

பதவுரை.

உண்டி—ஆஹாரத்தையும்
உடை—வஸ்திரத்தையும்
உகந்து ஓடும்—விரும்பி (க்கண்டவிட மெங்கும்) ஓடித்திரிகிற
இ மண்டலத்தொடும்—இந்த பூமண்டலத்திலுள்ள பிராகிருதர்களோடு
யான் கூடுவது இல்லை—;
அண்டம் வாழ்நன்—பரமபதத்திலே வாழ்பவனும்
வல் பேய் முலை உண்ட வாயன்—கல்நெஞ்சையுடைய பூதனையின் முலையை அமுது செய்த வாயையுடையனுமான
அரங்கன் தன்—ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில்
உன்மத்தன்—பைத்தியம் பிடித்தவனாயிராநின்றேன்;
(காண்மின் - அசை.)

கருத்துரை:—'ஸ்ரீராமாயணம் எங்கு உபந்யஸிக்கிறார்கள்? ஸ்ரீ பாகவதம் எங்கு உபந்யஸிக்கிறார்கள்? பகவத்ஸேவை எங்கே கிடைக்கும்? பாகவதஸேவை எங்கே கிடைக்கும்?' என்று காதும் கண்ணும் தினவெடுத்து ஓடிக் களிக்கவேண்டியது ஸ்வரூபமாயிருக்க, அஃது தொழிந்து 'சோறுகொடுப்பது எங்கே? கூறை கொடுப்பது எங்கே?' என்று வாய்வெருவிக்கொண்டு பறந்தோடுகின்ற இப்பாவிகளோடு எனக்குப்பொருந்தாது. விரோதிகளைப் போக்கித்தன்னை அருள்கின்ற எம்பெருமான் குணங்களையே நினைந்து நைந்து உள்கரைந்துருகுமவன் நான் என்கிறார்.

பேய்முலை யுண்ட வரலாறு :—கம்ஸன் தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீ புத்திரன் ஒளித்து வளர்தலையறிந்து அக்குழந்தையைநாடி உணர்ந்து கொல்லும் பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனை யென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே, திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கண்ணனாகிய குழந்தையை எடுத்துத் தனது விஷம்தீற்றிய முலையைக் கொடுத்துக்கொல்ல முயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளு யிரையும் உறிஞ்சி அவளைப்பேரிரைச்சலிட்டுக் கதறும்படியும் உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படியும் செய்தனன் என்பதாம். (௪)

---

தீதில்நன்னெறிநிற்க அல்லாதுசெய்
நீதியாரோடும் கூடுவதில்லையான்
ஆதி ஆயன் அரங்கன் அந்தாமரைப்
பேதைமாமணவாளன்தன் பித்தனே. (௫)

பதவுரை.

தீது இல் நல் நெறி நிற்க — குற்றமற்ற நல்வழி இருக்கச் செய்தே (அவ்வழியில் போகாமல்)
அல்லாது செய் நீதியாரோடும் — நல்வழிக்கு எதிர்த்தட்டானவற்றைச் செய்வதை வ்ரதமாகக் கொண்டுள்ள பிராகிருதர்களோடு
யான் கூடுவது இல்லை —;
ஆதி—(உலகங்கட்கு) முதல்வனாய்
ஆயன்—ஸ்ரீகிருஷ்ணனாய் அவதரித்து ஸர்வஸுலபனாய்
அம் தாமரை பேதை மா மணவாளன் — அழகிய தாமரைப்பூவில் அவதரித்த பிராட்டியின் வல்லபனான
அரங்கன் தன்—ஸ்ரீரங்கநாதன் திறத்தில்
பித்தன்—மோஹங்கொண்டிரா நின்றேன்.

கருத்துரை :—‘ஆழ்வீர்! எம்பெருமானுக்கு அடிமைப்படாதவர்களோடு தானே உமக்குப் பொருந்தமுடியாது; எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்களோடு பொருந்தத் தடையில்லையே?’ என்று சிலர் கேட்க; ‘ஆம், அதில் தடையில்லை’ என்று ஆழ்வார் விடைகூற, ‘ஐச்வரியத்துக்காகவும் ஆத்மப்ராப்தி [கைவல்யத்து]க் காகவும் எம்பெருமான் கைபார்த்திருக்கும் அதிகாரிகள் சிலர் உளர்; அவர்கள் எம்பெருமானுக்கு அடிமைப் பட்டவர்கள்தானே; அவர்களோடு உமக்குப் பொருந்தத் தடையில்லையே?’ என்று கேட்க; ஸம்ஸாரிகளோடு பொருந்தினாலும் ஒருகால் பொருந்துவேன்; அவர்களோடு நான் ஒருநாளும் பொருந்தமாட்டேன் என்கிறார்.

தேவதாந்தரங்களைப் பற்றுகை, தீயநெறி; எம்பெருமானை ஸ்வயம் ப்ரயோஜநமாகப் பற்றுகை, நல்ல நெறி; ஐச்வரியம் முதலிய க்ஷுத்ரபுருஷார்த்தங்களை விரும்பி அவற்றுக்காக எம்பெருமானைப் பற்றுகை, தீமையோடு கலசிய நல்ல நெறி - என்று கண்டுகொள்க. அநந்ய ப்ரயோஜநமாக எம்பெருமானைப் பற்றுகையாகிற பரமஸாத்தமார்க்கத்தை விட்டிட்டு, இரவிலே நாயகனோடு ஸம்ஶ்லேஷித்து, பொழுது விடிந்தவாறே அதற்குக் கூலி கேட்கும் பத்தினியைப்போலே ஸ்வரூப விருத்தமாக ஒழுகுகின்றவர்களோடு எனக்குப் பொருந்த மாட்டாதென்கிறார். (௫)

எம்பரத்தரல்லாரோடும் கூடலன்
உம்பர்வாழ்வை ஒன்றாகக்கருதலன்
தம்பிரான் அமரர்க்கு அரங்கநகர்
எம்பிரானுக்கு எழுமையும்பித்தனே. (௬)

பதவுரை.

எம் பரத்தர் அல்லாரோடும் — என்னைப்போலே அநந்ய ப்ரயோஜநரா யிராதவர்களோடு
கூடலன்—(நான்) கூடமாட்டேன்;
உம்பர் வாழ்வை—தேவதைகளின் ஸ்வர்கம் முதலிய போகங்களை
ஒன்று ஆக—ஒரு புருஷார்த்தமாக
கருதலன்—எண்ணமாட்டேன்;
அமரர்க்கு—நித்யஸூரிகளுக்கு,
தம்பிரான்—ஸ்வாமியாய்
அரங்கம் நகர் — கோயிலிலே எழுந்தருளியிருக்கிற
எம் பிரானுக்கு—பெரிய பெருமாள் விஷயத்தில்
எழுமையும்—எப்போதும்
பித்தன்—பித்தனாகா நின்றேன்.

கருத்துரை :—"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மையினியாமுறாமை" என்று ஹேயஸம்பந்தம் கழிவதற்கும், "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்" என்று நித்ய ஸம்பத்தாகிய கைங்கரிய ஸ்ரீயைப் பெறுவதற்கும் பாரித்திருக்கின்ற என்போலன்றி, இந்த ஊன்மல்குமோடு பருக்கவேணுமென்றும், விஷயாந்தரங்களையும் க்ஷுத்ர புருஷார்த்தங்களையும் அநுபவிக்கவேணுமென்றும் பாரித்து நாக்கை நீட்டிக்கொண்டிருக்கின்றவர்களோடு எனக்குப் பொருந்தாது. ஸம்ஸாரத்தில் வெறுப்பும் கைங்கரியத்தில் விருப்பும் இல்லையாகில் ப்ரஹ்மாதிகளின் ஸம்பத்தேயாகிலும் அதை நான் த்ருணமாகவே நினைப்பேன்; நித்யஸூரிகளெல்லாம் அநுபவிக்குமாபோலே ஸம்ஸாரிகளும் இழவாமல் அநுபவிக்கும்படி கோயிலிலே வந்து ஸுலபராகக் கண்வளர்ந்தருளு மவருடைய இந்த நீர்மையை நினைத்து 'இது எத்திறம்!' என்று மோஹிப்பதே எனக்குத் தொழிலாயிருக்கு மென்கிறார். (௬)

---

எத்திறத்திலும் யாரோடும்கூடும், அச்
சித்தந்தன்னைத்தவிர்த்தனன் செங்கண்மால்
அத்தனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்
பித்தனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. (௭)

பதவுரை.

செம் கண் மால்—புண்டரீகாக்ஷனான எம்பெருமான்,
எத் திறத்திலும்—எந்த விஷயத்திலும்
யாரொடும்—கண்ட பேர்களோடே
கூடும் அச் சித்தம் தன்னை — சேர்ந்து கெட்டுப்போவதற்கு உறுப்பான நெஞ்சை
தவிர்த்தனன்—நீக்கி யருளினான்; (ஆதலால்,)
அத்தனே—'ஸ்வாமியே!
அரங்கா—ஸ்ரீரங்கநாதனே!'
என்று அழைக்கின்றேன்—என்று கூவா நின்றேன்;
எம்பிரானுக்கே பித்தனாய் ஒழிந்தேன்—.

கருத்துரை :—'ஆழ்வீர்! அயலாரோடு பொருந்தாமைக்கடியான நன்மை உமக்கு வந்தபடி என்?' என்று சிலர் கேட்க; இது நானே ஸம்பாதித்துக்

கொண்டதல்ல; ஸர்வேச்வரனது அருளடியாகக் கிடைத்ததென்கிறார். ‘ஒரு அவைஷ்ணவனோடு பேசினால் ஸகல புருஷார்த்தங்களும் கொள்ளை கொள்ளையாகக் கிடைக்கும்’ என்று ஒரு ஆப்தன் சொன்னபோதிலும் அப்போதும் அவர்களை த்ருணமாகக் கருதி, ‘ஸ்ரீரங்கநாதா! ஸ்ரீரங்கநாதா!’ என்றே எப்போதும் வாய் வெருவிக்கொண்டிருக்குமாறு எம்பெருமான் எனக்கு அருள்புரிந்த பாக்கியம் மற்றையோர்க்குக் கிடைக்குமோ என்கிறார். எம்பெருமான் என்னை ஒருதடவை குளிரக் கடாக்ஷித்த மாத்திரத்தில்தானே இந்த பாக்கியம் எனக்கு வாய்த்தது என்பார் “செங்கண்மால்”. என்கிறார். “கண்ணாலே குளிரநோக்கித் தன் வ்யாமோஹத்தைக் காட்டிப் பிறரோடு ஸஹவாஸம் பொருந்ாதபடி பண்ணினான்” என்ற வியாக்கியான ஸூக்தி காண்க. (எ)

---

பேயரே எனக்குயாவரும்யானும் ஓர்
பேயனே எவர்க்கும் இதுபேசியேன்?
ஆயனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்
பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. (௮)

பதவுரை.

யாவரும்—இவ்வுலகத்தாரடங்கலும்
எனக்கு—என்வரைக்கும்
பேயரே—பைத்தியக்காரர்கள்தான்;
யானும்—(அவர்களிற் காட்டில் விலக்ஷணனை) நானும்
ஓர் பேயனே—ஒரு பைத்தியக்காரன்தான்;
இது—இவ்விஷயத்தை
பேசி—(விரிவாகச்) சொல்வதனால்
என்—என்னப்ரயோஜநமுண்டு?
ஆயனே—‘ஸ்ரீக்ருஷ்ணனே!
அரங்கா—ஸ்ரீரங்கநாதனே!’
என்று அழைக்கின்றேன்—என்று (பகவந்நாமங்களைச் சொல்லி) கூவாநின்றேன்;
எம்பிரானுக்கே பேயனாய் ஒழிந்தேன்—.

கருத்துரை:— “நிரம்பாஜே தேசே ஹாஸ்ய: கௌபீநவாந் நர:” [கோமணம் கட்டாத ஊரில் கோமணம் கட்டுவானொருவன் பைத்தியக்காரன் போல் பரிஹஸிக்கத்தக்கவனாவன்] என்ற பழமொழியின்படி - லோகவிஜாதீயரான நீர் பைத்தியக்காரர்என்று எல்லாராலும் இகழக்கூடியவரா யிருக்கின்றீரே! என்று ஆழ்வாரை நோக்கிச் சிலர் கூற, அவர்களுக்கு விடை கூறுகின்றார்.

‘நிலைநின்ற மஹாபுருஷார்த்தத்தை விட்டு அஸ்திரமாய் அற்பமான ப்ராக்ருத போகங்களை விரும்புகிறார்களே இவர்கள்’ என்று உலகத்தவர்களைப் பேயராக நான் நினைக்கிறேன்; ‘கண்ணால் காண்பது தவிர வேறே ஒன்று உண்டென்று இவ்வாழ்வார் மயங்கிக் கிடக்கிறாரே! இவர் பேயராயிராநின்றார்’ என்று அவர்கள் என்னைப் பைத்தியக்காரனாக நினைக்கின்றார்கள். இதைப்பற்றி விரிவாகச் சொல்ல எனக்கு இஷ்டமில்லை. சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ளவை யாவும் மெய்தானென்று கண்டறியும்படி க்ருஷ்ணனாய் வந்தவதரித்துத் தன்படிகளை யெல்லாம் எனக்குக் காட்டித் தந்தவனும், அவதாரங்களில் இழந்தவர்கள் அவ்விழவோடு முடியாதபடி கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளி அனைவர்க்கும் போக்யமாக ஸேவை ஸாதித்தருள்பவனுமாயிராநின்ற எம்பெருமானது திருநாமங்களைச் சொல்லிக் கதறாநின்ற நான் பைத்தியக்காரனாகவே யாகுக; இது காரணமாக என்னை உபேக்ஷிப்பவர்கள் தாராளமாக உபேக்ஷிக்கலாமென்கிறார். (௮)

அங்கையாழி அரங்கனடியிணை
தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனும்
கோங்கர்கோன் குலசேகரன்சொன்னசொல்
இங்குவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. (௰)

பதவுரை.

அம் கை ஆழி—அழகிய திருக்கையிலே திருவாழியாழ்வானை ஏந்தியுள்ள
அரங்கன்—ஸ்ரீரங்கநாதனுடைய
அடி இணை—திருவடிகளில்
தங்குசிந்தை-பொருந்தியமனமுடையவராய்
தனி பெரு பித்தன் ஆம்—லோக விலக்ஷணரான பெரிய பித்தராய்
கோங்கர் கோன்—சேரதேசத்தவர்களுக்குத் தலைவரான
குலசேகரன்—குலசேகராழ்வார்
சொன்ன—அருளிச்செய்த
சொல்—இப்பாசுரங்களை
இங்கு—இவ்விபூதியிலே
வல்லவர்க்கு—ஓதவல்லவர்களுக்கு
ஏதம் ஒன்று இல்லை—(பகவதநுபவத்திற்கு) ஒருவிதமான இடையூறும் உண்டாகமாட்டாது.

கருத்துரை:—இத் திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக் கட்டுகிறார். பெருமாள் திருவடிகளுக்குப் புறம்பு போக்கிடமில்லாமையால் அத்திருவடிகளிலேயே தங்கிய சிந்தையையுடையராய், "பகவத்விஷயத்தில் பித்தேறின முதலாழ்வார்களும் நம்மாழ்வாருங்கூட இவர்க்கு ஒவ்வார்" என்னும்படி அத்விதீயமான பகவந்மோஹத்தை யுடையரான ஸ்ரீ குலசேகரப்பெருமாளருளிச்செய்த இப்பாசுரங்களை ஓதவல்லவர்களுக்கு அவைஷ்ணவ ஸம்ஸர்க்கத்தால் வரும் துக்கமாதல், பகவத்ப்ராவண்யத்தில் குறையால் வரும் துக்கமாதல் ஒன்றும் நேராதென்கிறார். (௰)

அடிவரவு:—மெய் நூல் மாரன் உண்டி தீதில் எம்பரத்தர் எத்திறம் பேயர் அங்கை ஊன்.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:

## பெருமாள் திருமொழி - நான்காந்திருமொழி:

## ஊனேறு செல்வம்.

கீழ் மூன்று திருமொழிகளால் திருவரங்கம் பெரிய கோயிலில் தமக்குள்ள அளவிறந்த அபிநிவேசத்தை வெளியிட்டருளின ஆழ்வார், இத்திருமொழியால் திருவேங்கட மலையில் தமக்குள்ள ஆதராதிசயத்தை வெளியிடுகிறார். திருமலையோடு ஸம்பந்தமுடையதொரு பிறப்பைத்தாம் வேண்டுகிறார் இதில்.

---

ஊனேறுசெல்வத்து உடற்பிறவியான்வேண்டேன்
ஆனேறேழ்வென்றான் அடிமைத்திறமல்லால்
கூனேறுசங்கமிடத்தான்தன் வேங்கடத்துக்
கோனேரிவாழும் குருகாய்ப்பிறப்பேனே. (க)

ஆன் ஏறு ஏழ் வென்றான் — (நப்பின்னைப் பிராட்டிக்காக) எழு எருதுகளை ஜயித்தவனான எம்பெருமானுக்கு
அடிமை திறம் அல்லால் — கைங்கரியம் செய்வதையே யான் வேண்டுவதல்லாமல்
ஊன் ஏறு செல்வத்து உடல் பிறவி — (நாளுக்கு நாள்) மாம்ஸம் வளர்ந்து தடிப்பதாகிற செல்வத்தை யுடைய இம்மனித வுடம்பெடுத்துப் பிறத்தலை
யான் வேண்டேன் — (விவேகம் பெற்ற) நான் (இனி) விரும்பமாட்டேன்; (அன்றியும்,)
கூன் ஏறு சங்கம் — வளைந்திருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
இடத்தான் தன் — இடத்திருக்கையிலே யுடையனான எம்பெருமானுடைய
வேங்கடத்து — திருவேங்கட மலையில்
கோனேரி வாழும் — 'திருக்கோனேரி' என்கிற ஸ்வாமி புஷ்கரிணியில் வாழ்கிற
குருகு ஆய் பிறப்பேன் — நாரையாக வாவது பிறக்கக்கடவேன்

கருத்துரை:—'திருவேங்கடமலையில் வாழ்ச்சி கிடைக்கப்பெற்றால், விவேகமற்றதொரு திர்யக்ஜாதியாகப் பிறப்பதும் அடியேனுக்குப் பரமோத்தேஶ்யமாகும். அத்திருமலை வாழ்ச்சிக்கு விரோதியான இம்மானிட வுடற்பிறவி எனக்கு ஒருநாளும் வேண்டா' என்கிறார்.

மானிடப் பிறவியைத் தாம் வேண்டாமைக்குக் காரணங்கூறுவார் கருத்தோடு கூடிய அடைமொழி கொடுக்கின்றார் - ஊனேறு செல்வத்து என்று. 'க்ஷணந்தோறும் மாம்ஸம் வளருமியல்பினதாயும் நிலையற்ற செல்வத்தோடு கூடியதுமான' என்றும் இதற்குப் பொருளாகலாம். மாம்ஸம் வளர்வதனால் "ஊன்மல்கு மோடு பருப்பார்" என்றபடி உடல் தடித்து உயிரின்விவேகத்தைக் குலைக்கின்றதென்று மானிட ஜன்மத்தின் குற்றமும், ராஜ்யஸம்பத்து முதலியவை ஐஹிக ஸுகங்களில் ஆசையையூட்டி ஆமுஷ்மிக ஸுகத்தைப்பற்றிய சிந்தனைக்கும் முயற்சிக்கும் ப்ரதிபந்தகமாய் வீணான தாஹங்காரத்தை உண்டாக்கி ஆத்மோஜ்ஜீவநத்திற்கு மாறுகின்றன வென்று அச்செல்வம் நிரம்பிய அரசப்பிறப்பின் குற்றமும் சொல்லப்பட்டதாகிறது.

ஆனேறேழ்வென்ற வரலாறு :—கண்ணபிரான், தன்மீது மிக்க காதல்கொண்டிருந்த நப்பின்னை யென்பவளை விவாஹம் செய்துகொள்ளுதற்காக, அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி, ஒருவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற எழெருதுகளையும் எழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவினன் என்பதாம்.

இந்த இவ்வரலாற்றைக் கூறியது, எம்பெருமான் தன்பக்கல் அன்பு கொண்டவர்களைத் தானே இடையூறுபோக்கி அடிமையாக்கிக்கொள்ளும் இயல்பையும் அதற்கேற்ற சக்தியையு முடையவன் என்பது விளங்க.

அடிமைத்திறமாவது - திருவடி திருவனந்தாழ்வான் இளையபெருமாள் முதலானவர்கள் போலப் பலபடியாலும் ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்யும் வகை.

சிலர் "கூனேறு சங்கமிடற்றான்" எனப் பாடங்கொண்டு 'சங்குபோன்ற திருக்கழுத்தையுடையன்' என வுரைப்பது வியாக்கியானத்தோடு பொருத்தமற்றதாம்.

கோன் ஏரி=ஸ்வாமி புஷ்கரிணி. இப்பெயர் ஸர்வலோக நிர்வாஹகனான எம்பெருமானுக்கு மிகவும் பிரியமான தடாகமெனப் பொருள்படும். அன்றி, எல்லாத் தீர்த்தங்களினும் தலைமைபெற்ற தீர்த்தமென்றும் பொருளாகலாம். இந்த ஸ்வாமி புஷ்கரிணியின் சிறப்பு, வராஹ புராணம் முதலியவற்றில் பரக்கக் காணத்தக்கது. திருமலையில் ஸந்நிதிக்கு அருகிலுள்ள பிரதானமான திவ்ய தீர்த்தம் இது.

"உடல்பிறவி யான் வேண்டேன்" என்று பிறவியை இகழ்ந்தவர்தாமே "குருகாய்ப் பிறப்பேனே" என்று பிறவியை விரும்பினமையால், அங்கே பிறப்பது பிறப்பன்று; அது விரஜாநதியைச் சார்ந்து வைகுண்டத்தில் வாழ்வதொக்குமென்று கருதினர் என்பது விளங்கும்.

வெளுத்த நிறத்தால் ஸத்வகுணத்திற்கு அறிகுறியா யிருப்பதும், அலையெறிவுக்குச் சலியாமல் காரியமே கருத்துங் கண்ணுமாயிருந்து அதனைச் சமயமறிந்து தப்பாமல் முடித்துக்கொள்ளுந் திறமும், எப்பொழுதும் நீர்மையுள்ள இடத்தைச் சார்ந்தே வாழ்தலும் முதலியன நாரையினிடமுள்ள குணவிசேஷங்கள். ஆகவே, இது 'ஊனேறு செல்வத்துடல்பிறவி யான் வேண்டேன்' என்ற குலசேகரர் முதலில் விரும்பக்கூடிய பிறப்பாயிற்று.

ஊன், ஆன், கோன் என்பவற்றில், ன் - சாரியை. குருகு என்ற சொல் - அன்னம் க்ரௌஞ்சம் என்ற நீர்வாழ்பறவைகளைக் குறிப்பதாகவும் பறவைப் பொதுப் பெயராகவும் வழங்குகின்றது. (க)

---

ஆனாதசெல்வத்து அரம்பையர்கள்தற்சூழ
வானாளும்செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன்
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில்
மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே. (உ)

பதவுரை.

ஆனத செல்வத்து—அழியாத (யௌவநமாகிய) ஸம்பத்தையுடைய
அரம்பையர்கள்—அப்ஸரஸ் ஸ்த்ரீகள்
தன் சூழ—தன்னைச் சூழ்ந்து நிற்க
வான் ஆளும் — மேலுலகத்தை அரசாளுகின்ற
செல்வமும்—ஐச்வர்யத்தையும்
மண் அரசும்—இப்பூலோகத்தை அரசாளும் ஆட்சியையும்
யான் வேண்டேன்—(வருத்தமின்றிக் கிடைப்பதாயினும்) யான் விரும்ப மாட்டேன்;
தேன் ஆர் பூ சோலை—தேன்மிக்க மலர்களுள்ள சோலைகளையுடைய
திரு வேங்கடம்—திருவேங்கட மலையிலிருக்கின்ற
சுனையில்—சுனைகளிலே
மீன் ஆய் பிறக்கும்—ஒருமீனாகப் பிறக்கத்தக்க
விதி—பாக்கியத்தை
உடையேன் ஆவேன்—உடையவனாகக் கடவேன்.

கருத்துரை :—கீழ்ப்பாட்டில் ஐஹிகமான ராஜ்யஸம்பத்தை இவர் வெறுத்ததனால், இதைக்காட்டிலும் நிலைநின்ற இன்பமயமான ஸ்வர்க்கம் முதலிய மேலுலகங்களிற் போகம் கிடைத்தால் இவர் ஒருகால் விரும்பக்கூடுமென்று சங்கை பிறக்குமே; 'அந்த இந்திரன் முதலிய தேவாதி தேவர்களின் பதவிகளும் இவ்வுலகத்து அரசாட்சியுமாகிய இரண்டும் ஒருங்கு கிடைத்தாலும் வேண்டா' என்று இப்பாட்டில் விலக்குகின்றார்.

அரம்பையர்கள் - ரம்பை முதலியோர். இரண்டாமடியிலுள்ள சொற்போக்கினால், இவை எனக்கு ஏககாலத்திலே கிடைத்தாலும் வேண்டா வென்பதும், இவற்றை யான் வேண்டாமைக்குக் காரணம் இவை கிடையாமையன்று, இவற்றில் எனக்கு விருப்பமில்லாமையே என்பதும் தோன்றும். முக்தியின் மஹாநந்தத்தை நோக்குங்கால் இவ்விரண்டும் சிற்றின்பமே யாதலும், சாச்வதமான அந்த ஸ்தாநத்தை நோக்குங்கால் இவை அழிவுள்ளனவே யாதலும், ஆத்மாவைக் கரும பந்தங்களினின்று விடுவிக்கின்ற அவ்வீட்டு நிலைபோலவன்றி இவை பந்தங்களை உறுதிப் படுத்துதலில் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலத் தம்முள் ஒப்பனவே யாதலும் கருததத்தக்கன.

தேன் ஆர் - வண்டுகள் ஆரவாரிக்கின்ற என்றுமாம். சுனை - மலையில் நீரூற்றுள்ள குளம்.

கீழ்ப்பாட்டில், திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணியில் குருகாய்ப் பிறக்க விரும்பிய ஆழ்வார், அது கிடைக்காவிடினும் திருமலையிலுள்ள ஏதாவதொரு சுனையில் பிறவி வாய்க்தாற்போது மென்கிறார் இதில்.

"குருகாய்ப் பிறப்பேனே" என்றவர், அதற்கு இறகுகள் இருப்பதால் அது அத்திருமலையை விட்டுப் பறந்து வேற்றிடத்திற்குச் சென்றிடக்கூடுமெனக் கருதி, அங்ஙனமன்றி அத்திருமலையிலேயே பிறப்பு வாழ்ச்சி இறப்புகளையுடைய மீனாய்ப் பிறப்பேனாகவென்று இப்பாட்டில் வேண்டுகின்றார். குருகாய்ப் பிறத்தலோடு அதற்கு இரையாகின்ற மீனாய்ப் பிறத்தலோடு இவர்க்கு வாசியில்லை; திருமலையில் ஏதேனும் ஒரு ஜன்மத்தையே அபேக்ஷிப்பவராதலால் : "எம்பெருமான் பொன் மலைமேல் ஏதேனு மாவேனே" என்பர் பின்னும். எம்பெருமான் திருவுள்ளமுகந்துகொண்ட பல அவதாரங்களுள் முதலவதாரமாயிருத்தலும், நீர்மையுள்ள

விடத்தே செழித்து வாழ்தலும், ஆதாரமான இடத்தைவிட்டுப் பிரிந்தால் உயிர் தரியாமையும் முதலியன மீனினிடமுள்ள குணவிசேஷங்கள். இப்பொழுதே அங்கு யான் மீனாய்ப் பிறந்திடாவிடினும், ஏதேனும் ஒரு நல்வினையால் அங்கு அப்பிறப்பு இனி என்றைக்கேனும் எனக்கு வருமென்ற நிச்சயமுண்டானாலும் போது மென்பார், "மீனாய்ப் பிறக்தும் விதியுடையே னாவேனே" என்றனர் என்க.

ஆனேத= ஆன்-பகுதி. அரம்பை - ரம்ஹா என்ற வடசொல் விகாரம் விதி-வியி.

---

பின்னிட்டசடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப்புகலரிய வைகுந்தநீள்வாசல்
மின்வட்டச்சுடராழி வேங்கடக்கோன்தானுமிழும்
பொன்வட்டில்பிடித்து உடனேபுகப்பெறுவேனாவேனே. (ரு)

பதவுரை.

பின்னிட்ட சடையானும்—திரித்துவிட்ட ஜடையையுடையவனான சிவனும்
பிரமனும்—சதுர்முகனும்
இந்திரனும்—தேவேந்திரனும்
துன்னிட்டு-நெருங்கி [மல்லாமலிருக்கின்ற
புகல் அரிய—உள்ளே புகுவதற்கு ஸாத்ய
வைகுந்தம் நீள் வாசல் } பூலோக வைகுண்டமாகிய திருமலையிலுள்ள திருக்கோயிலின் நீண்ட திருவாசலிலே,
மின் வட்டம் சுடர் ஆழி } மின்னலை வளைத்தாற்போலச் சோதிமயமாய் விளங்குகின்ற வட்ட வடிவமான சக்ராயுதத்தையுடைய
வேங்கடம் கோன் தான் } திருவேங்கட முடையான்
உமிழும்—வாய்நீருமிழ்கின்ற
பொன் வட்டில்—தங்க வட்டிலை
பிடித்து—கையிலேந்திக்கொண்டு
உடனே புக பெறுவேன் ஆவேனே } அந்தரங்க பரிஜநங்களுடனே நானும் உள்ளே புகும்பாக்கியத்தைப் பெறக்கடவேன்.

கருத்துரை:—கீழிரண்டு பாட்டுக்களில் "குருகாய்ப் பிறப்பேனே" என்றும் "மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனாவேனே" என்றும் அருளிச்செய்ததனால், நால்வகைக் கதிகளுள் விலங்குகதி வேண்டுமென்பது வேண்டற்பாடன்று; எம்பெருமானுக்கு அந்தரங்க கைங்கரியம் செய்யப் பெறுவதுண்டானால் மநுஷ்ய ஜன்மமேயாகிலும் அமையும் என வேண்டுகின்றார். பிரமன் சிவன் இந்திரன் முதலிய தலைமைத்தேவர்கள் திருவேங்கடமுடையானைச் சேவித்தலில் விருப்பத்தால் அங்குவந்து அக்கருத்தினாலேயே மிகுதியாகக் கூடியுள்ள அடியார்களின் பெருங்கூட்டத்தின் நடுவில் சிக்கி நெருக்குண்டு உள்ளேபுகமுடியாமல் தடுமாறப்பெற்ற அத்திருமலையின் கோயில்வாயிலில் யான் அப்பெருமானுக்கு அந்தரங்க கிங்கரனாய் அவன் வாய்நீருமிழும் பொற்காளாஞ்சியை ஏந்திக்கொண்டு செல்லுமளவில், "இவர் அந்தரங்க கைங்கரியபரர்" என்று அனைவரும் விலகி வழிவிட, அர்ச்சக பரிசாரகர்களுடனே யானும் தடையின்றி எளிதில் இனிது உள்ளே புக்கு கர்ப்பக்ருஹத்திற் சேர்ந்து அருகில் நின்று கைங்கரியம்பண்ணப் பெறுவேனாக வென்று பிரார்த்திக்கின்றார்.

பின்னிட்ட - பின்னிய; இடு - துணைவினை. பின் இட்ட என்று பிரித்து, பின்னே தொங்கவிட்ட சடையையுடையவன் என்றலுமாம். இங்ஙனம் 'பின்

னிட்ட' என்றதைச் சடைக்கு விசேஷணமாக்காமல் சடையானுக்கு விசேஷண மாக்கி, தந்தையான நான்முகன் முன்னேபோகப் பின்னே செல்கின்றவன் புத்திரனான ருத்திரன் என்று உரைத்தலு முண்டு.

"தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே, வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்றபடி திருமலை எல்லார்க்கும் பொதுவாதலால் அங்குப் பெருந்திரள் கூடும். அப்படி கூடுமிடத்து ஒவ்வொருவரும் தாம்தாம் முன்பு புக வேண்டுமென்னும் ஆவலுடையாராதலால் ஒருவரோ டொருவர் நெருக்கி, பலரும் புகுவதற்கு அருமைப்படுவர்; ஆவலோடு கூடும் பெருந்திரளின் இயல்பு இது.

வைகுண்டம் என்ற வடசொல்லின் விகாரமாகிய வைகுந்தமென்ற சொல் இங்கு இலக்கணையாய் அத்திருநாடுபோன்ற மஹிமையுடைய இத்திருப்பதிக்கு வழங்கப்பட்டது. அன்றியும் இத்திருமலையை ஸ்வேதவராஹரூபியான எம்பெருமானது கட்டளைப்படி ஸ்ரீவைகுண்டத்தினின்று பெரிய திருவடியாற் கொணர்ந்து பூலோகத்தில் நாட்டப்பட்ட திருமாலின் க்ரீடாபர்வதமென்று புராணங்கள் கூறும்.

"மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேன்" என்றவர், மீனானது நீர்நிலையைப் பற்றியே உயிர்தரிக்கவேண்டிய ஜந்துவாதலால், ஒருகால் நீர்வற்றிப்போனால் அல்பாயுஸ்ஸாய் முடியவேண்டிவருமே யென்று ஒரு கைங்கரியபரனாகப் பிறக்க வேணுமென்று அபேக்ஷித்தார்.

துன்னிட்டு=இடு - துணைவினை. வாசல் - வாயில் என்பதன் மரூஉ. வட்டம் - வ்ருத்தமென்ற வடசொல்லின் சிதைவு. வட்டில் - இங்கே, படிக்கம். உடனே - சீக்கிரமாக எனினுமாம். 'வாசல் புகப்பெறுவேன்' என்று அந்வயம். (௩)

---

ஒண்பவளவேலையுலவு தண்பாற்கடலுள்
கண்துயிலும்மாயோன் கழலிணைகள்காண்பதற்குப்
பண்பகரும்வண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்துச்
செண்பகமாய்நிற்கும் திருவுடையேனாவேனே. (௪)

பதவுரை.

ஒண் பவளம் வேலை உலவு — ஒளியுள்ள பவழக்கொடிகளைக் கரையிலே கொணர்ந்து கொழித்து (அலைகளால்) உலாவுகிற
தண் பாற்கடலுள் — குளிர்ந்த திருப்பாற்கடலிலே
கண் துயிலும் — யோகநித்திரை செய்தருள்கின்ற
மாயோன் — ஆச்சரிய சக்தியுக்தனான எம்பெருமானுடைய
கழல் இணைகள் — இரண்டு திருவடிகளை
காண்பதற்கு — ஸேவிக்கும்படியாக,
பண் பகரும் வண்டு இனங்கள் — இசையையே பேசுகின்ற வண்டுகளின் கூட்டங்கள்
பண் பாடும் வேங்கடத்து — பண்ணிசை பாடப்பெற்ற திருமலையிலே
செண்பகம் ஆய் நிற்கும் திரு உடையேன் ஆவேன் — சண்பக மரமாய் நிற்கும் பாக்கிய முடையவனாகக் கடவேன்.

கருத்துரை:—ஜங்கமமானதொரு பிறப்பேவேண்டு மென்பதில்லை; திருவேங்கட மலையில் இருப்பு நேரும்படியாக அங்கு நிற்பதொரு ஸ்தாவரமாகவாயினும்

நான் ஆகவேண்டுமென்று அபேக்ஷிக்கின்றார். "வானவர் வானவர்கோனொடுஞ் சிந்து பூமகிழும் திருவேங்கடம்" என்றபடி பரமபதத்திலுள்ளார் புஷ்பவர்ஷம் வர்ஷிக்கின்ற இடமாதல்பற்றிப் புஷ்பமண்டப மெனப்படுகின்ற திருமலையிலே எம்பெருமானுக்குப் புஷ்ப கைங்கரியஞ்செய்வது விசேஷமாதலால் அக்கைங்கரியத்துக்கு உபயோகப்படுவதொரு மரமாதலை வேண்டினரென்க. பலவகைப் புஷ்பங்களுள்ளும் சண்பகமலர் எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மிகவும் உகப்பாதலைப் பெரியாழ்வார் பூச்சூட்டல் திருமொழியில் "தேனிலினிய பிரானே! செண்பகப் பூச்சூட்டவாராய்" என்று இதனை முதலிற்கூறியதனாலும் உணர்க. இது உதயகால புஷ்பமாதலாலுஞ் சிறக்கும்.

காண்பதற்குச் செண்பகமாய் நிற்கும் என அந்வயம். திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருள்கின்றவனுடைய திருவடிகளை, அங்குச் சென்று கிட்டிக்காணவொண்ணாத அருமைதீர இங்குக் காணும்படியாக என்க.

"பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேனாவேன்" என்றவர், ஒரு கைங்கர்ய பானுகுமளவில், அறிந்து மறியாதும் நிகழ்கின்ற குற்றங்காரணமாக தேவஸ்தாந தர்மகர்த்தாக்கள் சினங்கொண்டு 'இன்ன குற்றத்திற்காக உன்னைக் கைங்கரியத்தினின்றும் விலக்கிவிட்டோம்' என்று கடிந்து விலக்கிவிடக்கூடும்; தவிரவும் வட்டிலைக் களவுசெய்ய ஆசைதோன்றி(த் தொண்டரடிப்பொடி யாழ்வாரைப்போலே) சிறையிருக்க நேரிடும் என்றித்யாதிகளை நினைத்து இக்குறைகளுக்கு விஷயமல்லாததொரு சண்பக மரமாய்ப் பிறக்கவேணுமென்று அபேக்ஷித்தபடி. (௪)

---

கம்பமதயானைக் கழுத்தகத்தின்மேலிருந்து
இன்பமரும்செல்வமும் இவ்வரசும்யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்வேங்கடமலைமேல்
தம்பகமாய்நிற்கும் தவமுடையேனாவேனே. (௫)

பதவுரை.

கம்பம்—(தன்னைக் கண்டவர்கட்கு அச்சத்தால்) நடுக்கத்தை விளைக்கின்ற
மதம் யானை—மதங்கொண்ட யானையினது
கழுத்து அகத்தின் மேல் இருந்து } கழுத்தின்மீது வீற்றிருந்து
இன்பு அமரும்—நாநாவித ஸுகங்களைப் பொருந்தி அநுபவிக்கும்படியான
செல்வமும்—ஐச்வரியத்தையும்
இ அரசும்—(அதற்குக் காரணமான) இந்த அரசாட்சியையும்
யான் வேண்டேன்—நான் விரும்ப மாட்டேன்;
எம் பெருமான்—எமது தலைவனும்
ஈசன்—(எல்லா வுலகுக்குந்) தலைவனுமான பெருமானுடைய
எழில் வேங்கடம் மலை மேல் } அழகிய திருமலையிலே
தம்பகம் ஆய் நிற்கும் } புதராய் நிற்கும்படியான
தவம்—பாக்கியத்தை
உடையேன் ஆவேன்—உடையவனாகக் கடவேன்.

கருத்துரை:—சண்பகம் நல்ல பரிமளமுடையதாதலால் அதனைப் பலரும் பாராட்டுவர்களென்று அந்தச்சிறப்புப் பெறுவதற்காக அதுவாகப் பிறப்பதை வேண்டுகின்றாரிவர் என்று வேறாக நினைக்கப்போகிறார்களே யென்றஞ்சி, அவ்வகைச் சிறப்பொன்று மின்றி வீணே தோன்றிவளர்ந்து தீந்துபோவதொரு

பூசாரகவாயினும் அத்திருமலையில் எனக்குப் பிறப்பு வாய்க்குமாகிற் போது மென்கிறார்.

அன்றியும், செண்பகமரமாய்ப் பிறந்தால் திருமலைக்கு வருகிற மஹாப்ர புக்கள் யாராவது இதனை விரும்பித்தம் வீட்டிற்கொண்டுபோய் நாட்டக் கருதிப் பெயர்த்துக்கொண்டு போகக்கூடும்; அப்படி உண்டோவெனில்; "கற்பகக்காவு கருதிய காதலிக்கு. இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில், நிற்பனசெய்து நிலாத்திகழ் முற்றத்துள், உய்த்தவன்" என்றபடி - ஸத்யபாமைப் பிராட்டியின் விருப்பத்திற் கிணங்கிய கண்ணபிரான், ஸ்வர்க்கலோகத்தில் இந்திரனது நந்த வனத்திலிருந்த கற்பகத்தருவை ஸத்யபாமையினது மாளிகைத் திருமுற்றத்திலே கொணர்ந்து நட்டானிறே. அவ்வாறு யாரேனுமொருவர் சண்பகமாத்தையும் பெயர்த்துக்கொண்டு போனால் திருமலையில் வாழ்ச்சி இழந்ததாமே என்று கருதி, அங்ஙனம் மஹாப்ரபுக்களின் விருப்பத்திற்குக் காரணமாகக் கூடாததொரு தம்பக மாய் நிற்க விரும்புகிறார் என்க.

கம்பம் - வடசொல்; கம்பஃ - நடுக்கம். கம்பமதயானை - (கண்டாரனைவரும்) நடுங்கும்படி மதங்கொண்ட யானை. அன்றி, மதங்கொண்டதாதலால் வெளியே விட வொண்ணாதபடி கம்பத்திலேயே கட்டப்பட்டு நிற்கின்ற யானை யென்றும், அசையுமியல்பையுடைய மதயானை என்றும் பொருளாம்.

தம்பகமாய்=புல் கோரை செடி கொடி முதலிவற்றின் புதர் - ஸ்தம்பம் [ஸ்தம்பஃ] எனப்படும். அது கப்ரத்யயம் பெற்று ஸ்தம்பகம் என நிற்கும். அவ்வடசொல் தம்பகம் என விகாரப்பட்டது. இனி. தம்பகமாவது-இலை காய் கனி நிழல் ஒன்றுக்கு முதவாததொரு வம்ஶவ்ருக்ஷ மென்பாருமுளர்.

இன்பு அமருஞ் செல்வமும், நிற்கும் தவம் என்ற விடங்களில், அமரும், நிற்கும் என்னும் பெயரெச்சங்கள் காரியப் பொருளன: ஆகவே, அமர்தற்குக் காரணமான செல்வம், நிற்பதற்குக் காரணமான தவம் என்க. (௫)

---

மின்னனையநுண்ணிடையார் உருப்பசியும்மேனகையும்
அன்னவர்தம்பாடலொடும் ஆடலவை ஆதரியேன்
தென்னவெனவண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்துள்
அன்னனையபொற்குவடாம் அருந்தவத்தனாவேனே. (௬)

பதவுரை.

மின் அனைய நுண் இடையார் } மின்னல்போல் ஸூக்ஷ்மமான இடையை உடையவர்களாகிய

உருப்பசியும் மேனகையும் அன்னவர் தம் } ஊர்வசியும் மேனகையும் போலழகிய வர்களான ஸ்த்ரீகளின்

பாடலொடும் ஆடல் அவை } பாட்டும் ஆட்டமுமாகிய அவற்றை

ஆதரியேன்—யான் விரும்பவில்லை;

வண்டு இனங்கள்—வண்டுகளின் கூட்டங்கள்

தென்ன என பண்பாடும் } 'தென தென' என்று ஆளத்தி வைத்து இசைபாடப் பெற்ற

வேங்கடத்துள்—திருமலையிலே

அன்னனைய பொன் குவடு ஆம் } அப்படிப்பட்ட பொன்மயமான சிகரமாவதற்கு உரிய

அரு தவத்தன் ஆவேன்—அருமையான தவத்தையுடையவனாகக் கடவேன்.

கருத்துரை :—“ தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேன்” என்றவர் சிறிது யோசித்த வளவில், அரசாங்கத்தார், மலையிலுள்ள செடி செட்டுக்களை அடிக்கடி சோதிப்பவராதலால் திடீரென்று அவர்கள் தம்பகத்தைக் களைந்தெறிந்திடக்கூடு மெனவும், அதுதானே விரைவில் நிந்தொழியக்கூடுமெனவும் நினைத்து, அங்ஙனன்றி என்றும் ஒருபடியா யிருக்கும்படி அத்திருமலையில் ஒருபாகமாகக் கடவேனென்று அபேக்ஷிக்கின்றார்.

முன்னிரண்டடிகளால் தேவலோக போகத்தில் தமக்கு எள்ளளவும் நசையில்லாமையை வெளியிட்டார்.

தென்ன என்றது - இசைக்குறிப்பு. அன்னனைய=அப்படிப்பட்ட என்னும் பொருளை உணர்த்துகின்ற அன்ன அனைய என்னு மிரண்டு சொற்களும் வியப்புத் தோன்ற அடுக்கிநின்றன என்க. அன்றி, அன்னதனைய என்பது அன்னனைய வெனத் தொக்கதாகக் கொண்டு,(வேறு ஒப்புமையில்லாமையால்) அதனை அதுவே ஒக்கின்ற என்று பொருள் கொள்வாரு முளர். (சு)

---

வானாளும்மாமதிபோல் வெண்குடைக்கீழ்மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்து கோண்டாடும்செல்வறியேன்
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல்
கானாறாய்ப்பாயும் கருத்துடையேனாவேனே. (எ)

பதவுரை.

வான் ஆளும் மா மதி போல் } ஆகாயத்தைத் தனக்குஇடமாகக்கொண்டு விளங்குகின்ற பூரணசந்திரன் போன்ற
வெண் குடை கீழ்—ஒற்றை வெண்கொற்றக் குடையின் கீழ்
மன்னவர் தம் கோன் ஆகி வீற்றிருந்து } ராஜாதி ராஜனாய்ப் பெருமை தோன்ற இருந்து
கொண்டாடும்—(அனைவராலும்) கொண்டாடப்படுதற்குக் காரணமான
செல்வு—செல்வத்தை
அறியேன்—(யான் ஒருபொருளாக) மதிக்க மாட்டேன்;
தேன் ஆர் பூ சோலை திரு வேங்கடம் மலை மேல் } தேன் மிக்க மலர்களுள்ள சோலைகளையுடைய திருமலையின் மேல்
கான் ஆறு ஆய்பாயும் } ஒரு கானாறாய்ப் பெருகும்படியான
கருத்து—கருத்தை
உடையேன் ஆவேன்—உடையவனாகின்றேன்.

கருத்துரை:—கீழ்ப் பாட்டில், பொற்குவடாக வேணுமென்று பாரித்தவர் சிறிது யோசித்தவாறே, அது தன்னிலும் ஓர் அநுபபத்தி தோன்றிற்று: அதாவது - புதிதாகத் தேவாலயங்கள் கட்டுமவர்கள் சிலாமயமாக மூலவிக்ரஹம் எறியருளப் பண்ணுவதற்காக மலை முகடுகளினின்று பெரும் பெரும் பாறைகளை உடைத்துக்கொண்டு போகிற வழக்கமுளதாதலால் அதுவும் ஏற்றதல்ல வென்று தோன்றிற்று. தோன்றவே, அங்ஙனமன்றி, ஒருவராலும் பெயர்த்துக்கொண்டு போகக்கூடாததான கானாறாகப் பிறக்கவேணு மென்று அபேக்ஷிக்கிறார் இதில்.

திருமலையில் ஒரு சிகரமானால் அது ஏறவல்லவர்க்குமாத்திரம் பயன் பட்டு மற்றையோர்க்குப் பயன் படாததாம்; அங்ஙனமன்றி எல்லார்க்கும் பயன் படத்தக்கதான ஒரு காட்டாறாகக்கடவேன் யான், அங்கு என்று அபேக்ஷிக்கின்றார்

என்று சிலர் அவதாரிகை கூறுவர். அது அத்தனை பொருத்தமுடைத்தன்று; திருமலையில் தம்முடைய பிறவி பிறரொருவர்க்குப் பயன்பட வேணுமென்பது இவருடைய திருவுள்ள மல்ல; அப்பன் ஸேவை கிடைக்குமாறு அத்திருமலையில் ஏதாவதொரு மூலையில் தமக்கு ஸத்தை கிடைத்தாற் போருமென்பதே இவருடைய ஆசை என்றுணர்க.

வட்ட வடிவிலும் வெண்ணிறத்திலும் ஒளியிலும் குளிர்ச்சி தருதலிலும் குடைக்குச் சந்திரமண்டலம் உவமையாகும். "வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம் கோனாகி வீற்றிருந்து" என்றது - ஆகாயப்பரப்பு முழுவதும் சந்திர னொருவனுடைய கிரணத்திலே விளங்குவது போல, பூலோகம் முழுவதும் தனது குடைநிழலிலே ஒதுங்கும்படியும், நக்ஷத்ர தாராகணங்க ளெல்லாம் சந்திரனுக்குக் கீழ்ப்படிந்திருப்பது போல அரசர்களெல்லாரும் தனக்குக் கீழ்ப்படிந்திருக்கும்படியும் ராஜாதி ராஜனாய் வீற்றிருந்து என்றபடியாம்.

வெண்குடை - நீதிதவறாத அரசாட்சி. மன்னவர்தம் கோன் - சக்ரவர்த்தி. வீற்றிருத்தலாவது - வேறொருவர்க்கில்லாத மிக்க சிறப்புடன் இருத்தல். செல்வு-செல்வமென்பதன் விகாரம். பாயும் கருத்து - பாய்தற்குக் காரணமான கருத்து; பாயவேணு மென்கிற கருத்து. (எ)

---

பிறையேறுசடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாயபெருவேள்விக் குறைமுடிப்பான்மறையானன்
வெறியார்தண்சோலைத் திருவேங்கடமலைமேல்
நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே. (அ)

பதவுரை.

பிறை ஏறு சடையானும் - இளஞ் சந்திரன் ஏறியிரா நின்ற ஜடையையுடைய சிவனும்
பிரமனும் — ப்ரஹ்மாவும்
இந்திரனும் — தேவேந்திரனும்
முறை ஆய — தம்தமது யோக்யதைக்குத் தக்கபடி செய்கின்ற
பெரு வேள்வி — பெரிய யாகங்களின் பயனாக
குறை முடிப்பான் — (அவர்களது) குறையைத் தீர்த்து அவர்கள் கோரிக்கையைத் தலைக் கட்டுவிப்பவனும்
மறை ஆனன் — வேதங்களிற் பரம்பொருளாகக் கூறப்படுபவனுமான எம்பெருமானுடைய
வெறி ஆர் தண் சோலை - பரிமளம் மிக்க குளிர்ந்த சோலைகளையுடைய
திரு வேங்கடம் மலை மேல் — ;
நெறி ஆய் கிடக்கும் — (போகிற) வழியாய்க் கிடக்கின்ற
நிலை — நிலைமையை
உடையேன் ஆவேன் — உடையவனாகக் கடவேன்.

கருத்துரை:—கீழ்ப் பாட்டில் "கானாறாய்ப்பாயுங் கருத்துடையேனாவேனே" என்று பாரித்தவர் சற்று ஆராய்ந்ததில் அது தன்னிலும் ஓர் குறை யுணர்ந்தார்; ஆறு எப்போதும் ப்ரவஹிக்கக் கூடியதல்ல; சில காலங்களில் வற்றிப்போம்; அப்போது திருமலை வாழ்ச்சி இழந்ததாம் என நினைத்தார். அங்ஙனமன்றி எப்போதும் ஒரு தன்மையாகத் திருவேங்கட முடையானை ஸேவிக்க வருகின்ற பாகவதர்களின் ஸ்ரீ பாததூளி படும்படி வழியாய்க் கிடக்கும் நிலைமை தமக்கு வாய்க்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்றார் இதில். "ஆடிப்பாடி யரங்க ஓ! என்றழைக்

கும் தொண்டரடிப்பொடியாட நாம் பெறில், கங்கை நீர் குடைந்தாடும் வேட்கை என்னுவதே" என்றார் மூன்றும்.

பிறையேறு சடை என்றதன் விவரம் :—சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அச்விநி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் மணஞ் செய்துகொண்டு அவர்களுள் ரோஹிணி என்பவளிடத்து மிகவுங் காதல்கொண்டு அவளுடனே எப்பொழுதுங் கூடி வாழ்ந்திருக்க, மற்றை மகளிரின் வருத்தத்தை நோக்கி முனிவன் அச்சந்திரனை "க்ஷயமடைவாயாக" என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்து கலைகளுங் குறைந்து மற்றைக் கலை யொன்றையும் இழப்பதற்கு முன்னம் சிவபிரானைச் சரணம்புக, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக் கலையைத் தன் தலையில் அணிந்து மீண்டும் கலைகள் வளர்ந்து வரும்படி அநுக்ரஹித்தனன் என்பர். திருப்பாற்கடல் கடைகையில் அதனின்று உண்டான பல பொருள்களுடனே விஷமும் சந்திரனும் தோன்ற, திருமால் அவற்றில் விஷத்தைச் சிவபிரானுக்குக் கொடுத்து உண்ணச்சொல்லி அதனால் அவனுக்கு வெப்பமுண்டாகாமல் தணிந்திருக்கும் பொருட்டு உடனே சந்திரனையுங் கொடுக்க, அதனை அச்சிவன் சிரமேற் கொண்டனனென்றும் வரலாறு கூறப்படும்.

தேவர்கள் தங்கள் தங்கள் சக்திக்கு ஏற்றபடி எம்பெருமானை ஆராதிக்க, அதனால் திருவுள்ள முகந்த எம்பெருமான் அவர்களுக்கு அதிகார பதவிகளைக் கொடுப்பான் என்பதும், இவ்வர்த்தம் வேதங்களிற் கூறப்பட்டுள தென்பதும் முன்னடிகளின் கருத்தாம்.

துறைமுடிப்பான் - இது இரட்டுற மொழிதலாய், குறையைத் தீர்ப்பவன், வேண்டுகோளைப் பூர்த்தி செய்பவன் எனப் பொருள் தரும். அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் செய்பவன். (அ)

---

சேடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின்வாசல்
அடியாரும்வானவரும் அரம்பையரும்கிடந்தியங்கும்
படியாய்க்கிடந்து உன்பவளவாய்காண்பேனே. (௯)

பதவுரை.

செடி ஆய்—செடிபோல் அடர்ந்துள்ள
வல் வினைகள்—கொடிய கருமங்களை
தீர்க்கும்—(ஆச்ரிதர்க்குப்) போக்கியருள்கிற
திரு மாலே—ச்ரிய:பதியான பெருமானே!
நெடியானே—பெரியோனே!
வேங்கடவா—திருவேங்கட முடையானே!
நின் கோயிலின் வாசல் — உனது ஸந்நிதியின் உள் வாசலிலே,
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும் படி ஆய் கிடந்து — பாகவதர்களும் மற்றைத் தேவர்களும் அப்ஸரஸ்ஸ்த்ரீகளும் இடைவிடாது ஸஞ்சரிக்கப்பெற்ற படியாய்ப் பொருந்தி
உன் பவளம் வாய் காண்பேன் — உனது பவழம்போன்ற திருவதரத்தைக் காணப் பெறுகக் கடவேன்.

கருத்துரை:—கீழ்ப்பாட்டில் "நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேனாவேனே" என்று திருமலைக்கு வழியாகத் தானாக வேணுமென்று அபேக்ஷித்தவர் சிறிது ஆராய்ந்ததில் அது தன்னிலும் ஓர் குறை கண்டார்; வழியென்பது அவரவர்களுடைய ஸௌகரியத்துக்குத் தக்கபடி மாறுபடும். கீழ்த் திருப்பதியிலிருது திரு

மலைக்குப் போகும்வழி மிக வருத்தமா யிருக்கிறதென்று யாத்திரிகள் சந்த்ரகிரி வழியாகப் போகக்கூடும்; ஓரிடத்திற்கு ஒன்றுதான் வழியென்று சொல்ல முடியாதாகையாலும், வழியானது விலகி நிற்பதாகையாலும்; வழியாக வேணுமென்று விரும்புவதிற் காட்டிலும் எம்பெருமானது திருவருள்நோக்கம் பதியுமாறு அவன கண்முகப்பிலே மெய்யடியாரோடு பிறரோடு வாசியற எல்லாரும் இடைவிடாது ஸஞ்சரிக்கும்படியான ஓர் அசேதநப்பொருளாகி, அதிலே உன்பவளவாய் காணும்படியானதொரு சைதந்யத்தையும் பெறக்கடவே னென்று தமது விசேஷமான விருப்பத்தை விண்ணப்பஞ் செய்கிறார் இதில்.

இப்பாசுரத்தை அடியொற்றியே விஷ்ணுவாலயங்களிற் கோயிலினுள் வாசற்படி 'குலசேகரப்படி' என்று இவர் பெயரையிட்டு வழங்கப்படும் என்பது ஸம்ப்ரதாயம்.

செடி - புதர். ஆய - உவமவுருபு. 'கிடந்தியங்கும்' என்ற பாடம் சிறக்கும்; வியாக்கியானத்தோடும் பொருந்தும். அடியார் - பகவதநுபவமல்லது வேறொரு பயனைக் கணிசியாதவர். வானவர் - "பேணலமில்லாவரக்கர்" (திருவிருத்தம்- என்ற பாசுரத்திற்படி வேறு வேறு பலன்களைப் பிரார்த்திப்பவர். அரம்பையர் - அப்ஸரஸ். (௯)

---

உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற்கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்
செம்பவளவாயான் திருவேங்கடமென்னும்
எம்பெருமான்பொன்மலைமேல் ஏதேனுமாவேனே. (௧௦)

பதவுரை.

உம்பர் உலகு—மேலுலகங்களை யெல்லாம்
ஒரு குடை கீழ்—ஒரு கொற்றக்குடையின் நிழலிலே
ஆண்டு—அரசாண்டு
உருப்பசி தன்—ஊர்வசியினுடைய
அம்—அழகிய
பொன் கலை அல்குல்—பீதாம்பர மணிந்த அல்குலை
பெற்றாலும்—அடையப் பெறினும்
ஆதரியேன்—(அதனை) விரும்பமாட்டேன்
செம் பவளம் வாயான்—சிவந்த பவழம்போன்ற வாயை யுடையனான
எம்பெருமான்—எமது அப்பனுடைய
திரு வேங்கடம் என்னும் பொன் மலை மேல்—திருவேங்கட மென்ற பெயரையுடைய அழகிய திருமலையின் மேல்
ஏதேனும் ஆவேன்—ஏதேனுமொரு பதார்த்தமாகப் பிறக்கக் கடவேன்

கருத்துரை:—கீழ்ப் பாட்டில் படியாகக் கிடக்கவேணுமென்று பிரார்த்தித்தது எம்பெருமானுடைய பவளவாய் காண்பதற்காக; அப்புருஷார்த்தம் கிடையாதொழியினு மொழியும்; ஏனெனில்; திருமலையில் ஸந்நிதிக்குள் கருங்கல் படியிருப்பது திருவேங்கட முடையானுடைய செல்வத்திற்குத் தகாது என்று மஹாப்ரபுக்கள் வந்து அப்படியை ஸ்வர்ணகவசத்தால் ஆவரிக்கக்கூடும். அப்போது நாம் அப்பன் திருமுக மண்டலஸேவையை இழந்தோமாவோம்; ஆகையால் படியாய்க் கிடப்பதும் பாங்கல்ல என்று அறுதியிட்டார். பின்னை எந்தப்பிறவியைப் பிரார்த்திக்கலா மென்று யோசித்தார்; கீழ் நிகழ்ந்தமாதிரி ஒவ்வொரு பிறப்பிலும் ஒவ்வொரு அநுபபத்தி தோன்றிக்கொண்டே யிருந்தது. கடைசியாக ஒரு பிறவி

யையும் தாமாக வேண்டிக்கொள்ள விரும்பாதவராய் "எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனு மாவேனே" என்கிறார்.

இவ்விடத்தில் வியாக்யான ஸ்ரீஸூக்தி:— "[ஏதேனுமாவேனே.] அனந்தாழ்வான், இவ்விடத்துக்கு 'திருவேங்கட முடையான் தானாகவுமமையும்' என்னும்' அதுக்கு ஹ்ருதயமென்னென்னில்; சேஷபூதர்திறளுக்குப் புறம்பான சேஷியாகிலுமமையுமென்கை. அங்ஙனன்றிக்கே, பட்டர் அருளிச் செய்யும்படி-'நானுமறியவேண்டா, திருவேங்கடமுடையானுமறியவேண்டா; திருமலையிலேயுள்ளதொருபதார்த்தமாகவமையும்' என்பர்."

உருப்பசி - ஊர்வஸீ என்ற வடசொல்லின் சிதைவு. அப்பெயர் - தொடையினின்று பிறந்தவள் என்று பொருள்படும்; ஊரு - தொடை. குருசிஷ்யக்ரமத்தை உலகத்தார்க்கு உணர்த்துதற் பொருட்டு விஷ்ணுவின் அம்ஸமாய்க் குருவும் சிஷ்யனுமாய்த் திருவவதரித்த நாராயணன் நரன் என்ற முனிவர்கள் பதரிகாஸ்ரமத்தில் தவஞ் செய்துகொண்டிருக்கையில் இந்திரனுடைய ஏவலால் அப்ஸரஸ்ஸ்த்ரீகள் பலர் அங்குவந்து தங்களுடைய மேனி மினுக்கினாலும் ஆடல் பாடலாதி விநோதங்களாலும் அவர்களுடைய தபஸ்ஸுக்கு இடையூறு செய்யத் தொடங்க, அதனாற்சிறிதுங் கலங்காத அவர்களுள் நாராயண முனிவர் அம்மகளிரை அவமானப்படுத்தக் கருதித் தமது தொடையினின்று ஒரு கட்டழகியை ஸங்கல்பத்தால் உண்டாக்க, அவளது ஒப்புயர்வற்ற அழகைநோக்கி அத்தேவமாதர்கள் மிக வெள்கி அவளையே தங்கட்குத் தலைவியாகக் கொண்டு அவளுடன் தமது உலகத்துக்குச் சென்றனர் என்பது வரலாறு; அவளே ஊர்வசி. (க0)

---

மன்னியதண்சாரல் வடவேங்கடத்தான்தன்
பொன்னியலும்சேவடிகள்காண்பான் புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலும்கூர்வேல் குலசேகரன்சொன்ன
பன்னியநூல்தமிழ்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

பதவுரை.

கொல் நவிலும்—(பகைவர்களைக்) கொல்லுதலைப் பயின்ற
கூர் வேல்—கூர்மையான வேலாயுதத்தையுடைய
குலசேகரன்—குலசேகராழ்வார்
மன்னிய தண் சாரல் வட வேங்கடத்தான் தன்—நிலைபெற்ற குளிர்ச்சியுள்ள சாரல்களையுடைய வடவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிற பெருமானது
பொன் இயலும் சே அடிகள்—பொன்போற் சிறந்த சிவந்த திருவடிகளை
காண்பான்—ஸேவிப்பதற்கு
புரிந்து—ஆசைப்பட்டு
இறைஞ்சி—வணங்கி
சொன்ன—அருளிச்செய்த
பன்னிய நூல் தமிழ்—ஆராய்ந்த நூல்களிற் கூறிய இலக்கணத்துக்கு இசைந்த தமிழ்ப்பதிகத்தை
வல்லார்—கற்று வல்லவர்
பாங்கு ஆய பத்தர்கள்—(அப்பெருமான் திருவுள்ளத்துக்கு) இனியபக்தர்களாவர்.

கருத்துரை:— திருவேங்கடமுடையானுடைய திருவடிகளை ஸேவிப்பதிற் பெருங்காதல் கொண்ட குலசேகரர் அருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள் (தம்மைப்போல், மீனாய்ப்பிறக்கலாமா குருகாய்ப் பிறக்கலாமா என்று பல

வாறாகத் தடுமாறாதே) எம்பெருமானுடைய நித்ய ஸேவைக்கு இட்டுப் பிறந்த அந்தரங்க பரிசாரகராகப் பெறுவர் என்று பலஞ் சொல்லி நிகமித்தாராயிற்று.

சாரல் - தாழ்வரை; மலையைச்சார்ந்ததாகிய பக்கத்துக்குத் தொழிலாகு பெயர். தமிழ் நாட்டுக்கு வடக்கெல்லை திருவேங்கட மலை. இயலும் - உவமவுருபு. பொன்னியலும்-பொன்னுபரணம் பொருந்திய எனினுமாம்; அப்போது, பொன்-கருவியாகு பெயர். காண்பான் - காண்பதற்காக. பான் விகுதிபெற்ற எதிர்கால வினை யெச்ச மென்றாவது தொழிற்பெயரென்றாவது கொள்க. கோல்-முதனிலைத் தொழிற்பெயர். தமிழ் - தமிழிலாகிய பதிகத்துக்கு ஆகு பெயர். பத்தர் - ஐதூர்.

இத்திருமொழியை அடியொற்றி,

"மாடாகநிழற்று செழுமாணுகத் தவச்சிறிய
பூடாகக்குழைத்த நவம்புதலாக வழிப்படுமோ
ரோடாகப் பெறுவமெனிலுயிர்காள்! நற்கதிபெறலாம்
வீடாகத்திருநெறிமால் வீற்றிருக்கும் வேங்கடத்தே."

என்று திருவேங்கடக் கலம்பகத்திற் கூறியது காண்க.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காந் திருமொழி உரை முற்றிற்று.

அடிவரவு:—ஊன் ஆனாத பின் ஒண் கம்பம் மின்வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு.



ஸ்ரீ:

பெருமாள் திருமொழி - ஐந்தாந் திருமொழி,

# தருதுயரம் தடாயேல்.

இவ்வழ்வார் அஹங்காரமமகாரங்களுக்கு உரிய ராஜகுலத்திலே பிறந்திருந்தும் தமது செல்வத்தையும் அதிகாரத்தையும் வெறுத்துப் பரமஸாத்விகராய் நிர்ஹேதுக பகவத்கருணையினாலும் ஆசார்யோபதேசத்தாலும் பகவத்பாகவத விஷயங்களில் அன்பும் ஆதரமும் அளவற வளரப்பெற்று, ஜீவாத்மா - பரமாத்மாவுக்கு ஸகலவிதத்திலும் அடிமைப்பட்டதென்பதையும், அந்த ஜீவாத்மாவை வாழ்விப்பதற்கு எவ்விதத்திலும் கடமைப்பட்டவன் ஸர்வேஶ்வரனே. என்பதையும் நன்கு அறிந்தவராகையாலே அந்த ஸ்ரீமந்நாராயணனை யன்றித் தமக்கு வேறு சரணமில்லாமையை அநேக த்ருஷ்டாந்த பூர்வகமாகத் திருவித்துவக் கோட்டம்மான் முன்னிலையில் விண்ணப்பஞ் செய்கிறார். ... ... *

---

தருதுயரம்தடாயேல் உன்சரணல்லால்சரணில்லை
விரைகுழுவும்மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே!
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும்மற்றவள்தன்
அருள்நினைந்தேயழும் குழவியதுவேபோன்றிருந்தேனே. (க)

பதவுரை.

விரை குழுவும்—பரிமளம் விஞ்சிய
மலர்—புஷ்பங்களையுடைய
பொழில் சூழ்—சோலைகளாலே சூழப்பட்ட
வித்துவக்கோடு—திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியிருக்கிற
அம்மானே—ஸ்வாமியே!
தரு துயரம்—(நீயே எனக்குத்) தந்த பிறவித் துன்பத்தை
தடாய் எல்—(நீயே) களைந்திடாவிட்டாலும்
உன் சரண் அல்லால் சரண் இல்லை—உனது திருவடிகளே யன்றி (எனக்கு) வேறு புகலில்லை;
ஈன்ற தாய்—பெற்ற தாயானவள்
அரி சினத்தால் — மிக்க கோபங்கொண்டு அதனால்
அகற்றிடினும்—(தனது குழந்தையை) வெறுத்துத் தள்ளினாலும்
மற்று—பின்பும்
அவள் தன் அருளே நினைந்து அழும்—அத்தாயினுடைய கருணையையே கருதி அழுகின்ற
குழவியதுவே—இளங்குழந்தையையே
போன்று இருந்தேன்—ஒத்திரா நின்றேன்.

கருத்துரை:—ஆளவந்தார், ஆழ்வான், பட்டர் முதலிய பூர்வாசார்யர்கள் வடமொழியில் இயற்றியருளிய ஸ்தோத்ரங்களில் பலபல ஶ்லோகங்கள் திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களின் கருத்துகளை உட்கொண்டே அவதரித்திருக்கின்றனவென்பதை யாம் ஆங்காங்குக் காட்டிவருகின்றோம். ஆளவந்தார் அருளிச்செய்த ஸ்தோத்ர ரத்நத்தில்,

“ நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே
மஹேஶ ஹாதும் தவ பாதபங்கஜம் ।
ருஷா நிரஸ்தோபி ஶிஶு: ஸ்தநந்தய:
ந ஜாது மாது: சரணௌ ஜிஹாஸதி ॥”

என்கிற ஶ்லோகம் இப்பாட்டின் கருத்தைப் பூர்ணமாக உட்கொண்டுள்ளதென்பது அறியத்தக்கது. தாயானவள் குழந்தையின்மீது கடுங்கோபங்கொண்டு அதை அடித்துதைத்துத் தள்ளினாலும் அக்குழந்தையானது தாயொழிய வேறு கதியில்லையென்றறிந்து, பின்னையும் அவளுடைய காலையே கட்டிக்கொண்டு அழுவதுபோல, எம்பெருமானே! என்னை நீ மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்கும்படி செய்து உன்னடிப்போதுகானுகாவகை செய்து உபேக்ஷித்துப் போனாலும் எனக்கு உன்னையொழிய வேறுகதியில்லாமையால் உனது திருவடிகளை விட்டு விலககில்லேனென்றவாறு “களைவாய் துன்பங்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்” என்றார் நம்மாழ்வாரும். உபமானத்தில் “அகற்றிடினும்” என்றதற்கேற்ப, உபமேயத்திலும் “தடாயேலும்” என உம்மை விரித்துரைக்க; அது செய்யுள் விகாரத்தால் தொக்கதென்க. இங்குத் தாய்க்குழவி த்ருஷ்டாந்தம் கூறினது - குழந்தையை அணைக்கவும் அடிக்கவும் பெற்றதாய்க்கு உரிமையிருப்பதுபோல, அடியேனை ரக்ஷிப்பதற்கும் உபேக்ஷிப்பதற்கும் உனக்கு உரிமையுண்டு என்ற கருத்துத் தோன்ற.

[தருதுயரம்=] அவரவர்கள் தாம்தாம் செய்த கருமங்களின் பயனாகவே இன்பத்தையோ துன்பத்தையோ அடைகின்றார்களென்று சாஸ்திரங்கள் முறையிடாநிற்க, இவர் “தருதுயரம்” என்று எம்பெருமானே தமக்குத் துன்பம் தந்ததாகச் சொல்வது எதுகொண்டு? என்று சங்கை பிறக்கக்கூடும்; தாமும் தாம் செய்த கருமமும் அதன் பலனும் முதலிய யாவும் எம்பெருமானுக்குப் பாதந்திரமானவை என்ற ஸாரம்ஶத்தை இவர் நன்கு உணர்ந்தவராதலால் அங்ஙனங் கூறியது பொருத்தமுடைத்தேயாமென்க. அன்றியும் ‘யான் செய்த கருமத்தாலே எனக்குத் துன்பம் நேர்ந்தது’ என்று தாம் சொன்னால் ‘தானே கர்மம் பண்ணினவன் தானே தகுந்த ஸாதநாநுஷ்டாநம் செய்து தவிர்த்துக்கொள்ளுகிறான்’ என்று பழியிட்டுத் தம்மை எம்பெருமான் உபேக்ஷித்திடுவனோ என்கிற ஶங்கையால் அங்ஙனங் கூறாமல் ‘நீ தந்த துன்பத்தை நீயே களைந்திடாய்’ என்கிறார். [“மம மாயா துரத்யயா” “மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே”] (கீதை) ‘நம்முடைய மாயை ஒருவரால் கடக்க வொண்ணாதது காண்’ என்றும், ‘இதுகடக்க விரும்புமவன் நம்மையே பற்றிக் கழித்துக் கொள்ளவேணும்’ என்றும் எம்பெருமான் தானே கூறியுள்ளதனால் இங்ஙனமருளிச்செய்வதே தகுதியாம். எம்பெருமானுடைய மாயையாலாகிய கட்டு மற்றொருவரால் விடுவிக்க முடியாதாதலால் “தருதுயரம் தடாயேல்” என்றார். “ஒரு குருவி பிணைத்த பிணையல் ஒருவரால் அவிழ்க்கப்போகிறதில்லை; ஒரு ஸர்வஶக்தி பிணைத்த பிணையை ‡ எலியெலும்பனானவிவன் அவிழ்க்கவென்றால் முடி

‡ எலியெலும்பன் - ஒன்றுக்கும் சக்தனல்லாத துர்ப்பலன்.

யுமோ? அவன்றன்னையே கால்கட்டிப் போக்குமித்தனையிறே" என்று பிள்ளை திருநறையூரரையர் பலகாலு மருளிச்செய்வராம்.

கிட்டுதற்கு அரிதான பரமபதத்திற்போலன்றி அனைவரும் எளிதில் வந்து அடையும்படி இந்த எழுந்தருளியுள்ளவ னென்பதும், குழந்தையைப் பாது காக்குந் தாய் குழந்தைபடுக்குந் தொட்டிலின் கீழே தானும் படுத்துக்கொள்ளுதல் போல இவ்வுலகத்து உயிர்களை உஜ்ஜீவிப்பிப்பதற்காக இங்கேவந்து தங்கியுள்ள வன் என்பதும் தோன்ற 'வித்துவக் கோட்டம்மானே!' என்று விளித்தார்.

வித்துவக்கோடு என்பதற்கு - வித்வான்கள் கூடிய இடம் என்று காரணப் பொருள் கூறுவர். பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி யில் "திருவிற்றுவக்கோடு சேர்ந்தார் பிறவி, கருவிற்றுவக் கோடுங்காண்" என் றிருப்பதனால், வித்துவக்கோடு அல்ல; விற்றுவக்கோடு என்பர் சிலர்: அவ்விடத் திலும் "திருவித்துவக்கோடு" என்றே பாடமென்பர் பெரியோர்; இவ்வளவால் எதுகையின்பம் குன்றுது. இத்திருமொழியின் ஈற்றுப்பாசுரத்திலும் இங்ஙனமே பாடமாம். இத்திவ்யதேசம் மலைநாட்டில் "திருமிற்றக்கோடு" என வழங்கப் படுகின்றது.

அரிசினம் - அரிந்துபோடக் கருதும் கோபம்: வினைத்தொகை. குழந்தைகள் செய்யும் ஹிம்ஸையானது 'இதை அரிந்துபோட்டுவிட்டால் தொல்லை தீரும்' என்று அவ்வளவு கடூரமாக நினைக்கும்படி தாய்க்குக் கோபத்தை மூட்டுமன்றோ.

"ஈன்ற தாய் என்கையாலே, பெறுகைக்கு நோன்பு நோற்கையும் பத்து மாஸம் சுமக்கையும் ப்ரஸவவேதனை படுகையுமென்ற இவையெல்லா முடையவ ளென்கை" என்ற வியாக்கியான வாக்கியம் நோக்கத்தக்கது.

மற்று - அசையும், வினைமாற்றுமாம்; பின்பு எனினுமாம். [குழவி.] குழ - இளமை; (உரிச்சொல்.) அதனையுடையது குழவி: இ - பெயர் விகுதி. 'அது' - பகுதிப் பொருள்விகுதி. தடாய் - முன்னிலையொருமை எதிர்மறை முற்று: தடு - பகுதி. நினைந்தே என்ற விடத்துள்ள ஏகாரம் அருள் என்பதோடு கூட்டியுரைக் கப்பட்டது. (க)

---

கண்டாரிகழ்வனவே காதலன்தான்செய்திடினும்
கொண்டானையல்லால் அறியாக்குலமகள்போல்
விண்டோய்மதிள்புடைசூழ் வித்துவக்கோட்டம்மா! நீ
கொண்டாளாயாகிலும் உன்குரைகழலேகூறுவனே. (உ)

பதவுரை.

விண் தோய் மதிள் — ஆகாயத்தை அளாவிய மதில்கள்
புடை சூழ் — எப்புறத்தும் சூழப்பெற்ற
வித்துவக்கோடு அம்மா — திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியிருக் கிற ஸ்வாமீ!
காதலன் தான் — கணவனானவன்
கண்டார் இகழ்வனவே செய்திடினும் — பார்ப்பவர்களனைவரும் இகழத்தக்க செயல்களையே செய்தாலும்
கொண்டானை அல்லால் அறியா — (தன்னை) மணஞ்செய்துகொண்டவனை அக்கணவனையே யன்றி வேறொரு புருஷனை நினைப்பதுஞ் செய்யாத
குலம் மகள் போல் — உயர்ந்த குலத்துப் பிறந்த கற்புடைய மகள்போல
நீ கொண்டு ஆளாய் ஆகிலும் — என்னை அடிமை கொண்டவனை நீ குறையும் தீர்க்காமல் உபேக்ஷித்தாயாகிலும்
உன் குரை கழலே — ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய உனது திருவடிகளையே
கூறுவன் — சரணமாகக் குறிக்கொள்வேன்.

கருத்துரை:—நற்குலப் பிறப்பும் நன்னடை யொழுக்கமுமற்ற தீய பெண்டிர்கள், தங்களுக்குக் கணவன் எவ்வளவு இனிமையான காரியங்களையே செய்து போந்தாலும் அவனை ஒரு புருஷனாக மதியாமல் வெறுத்து, க்ஷுத்ர ஸுகத்தை நாடி அயற் புருஷனைத் தேடியோடுவர்கள்: நற்குலத்திற் பிறந்த நல்ல பெண்ணோவெனில், தனக்குக் கணவன் ஜுகுப்ஸாவஹமான எவ்வளவு ஹிம்ஸைகளைப் பண்ணினபோதிலும் எதிரில் வாய்கூடத் திறவாமலும் வேறுகதியை நாடாமலும் முன்பு அவன் செய்த உபகாரத்தையே நினைத்து மற்றும் அவனால் உதவியைப் பெறநாடி அவன் காலண்டையே விழுந்துகிடப்பள். அப்படிபோலப் பற்பலபேர் உனது நிர்ஹேதுக ஸ்வீகாரத்தையும் உதவித் தள்ளிவிட்டு க்ஷுத்ரபலன்களை விரும்பி க்ஷுத்ர தேவதாந்தரங்களை நாடியோடினாலும் நீ என்பக்கல் நிர்ஹேதுக நிக்ரஹம் பண்ணினாலும் உன்னையல்லது வேறொரு புகலிடமறியே னென்கிறார். தாம் சிறந்த ப்ரபந்ந ஸந்தாநத்திலே தோன்றி *மறந்தும் புறந்தொழாதவராதலால்' கொண்டானை யல்லாலறியாக் குலமகளைத் தமக்கு உவமை கூறிக்கொண்டார்.

இகழ்வன - இரண்டாம் வேற்றுமைத் தொகை. காதலன் - வடமொழியில் கணவனுக்கு ப்ரியஃ என்று பெயராதல்போல. விண்தோய்மதிள் - மதிளின் மிக்க உயர்ச்சியை விளக்கும் அதிசயோக்தி. குரைகழல் - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (௨)

---

மீன்நோக்கும்நீள்வயல்சூழ் வித்துவக்கோட்டம்மா! என்
பால்நோக்காயாகிலும் உன்பற்றல்லால்பற்றிலேன்
தான்நோக்காது எத்துயரம்செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கிவாழும் குடிபோன்றிருந்தேனே. (௩)

பதவுரை.

மீன் நோக்கும் — மீன்களெல்லாம் (தாம் வஸிப்பதற்கு மிகவுந் தகுதியான இடமென்று) ஆசையோடு பார்க்கிற [—நீர்வளம் மிக்க]
நீள் வயல் சூழ்—விசாலமான கழனிகள் சூழ்ந்த
வித்துவக் கோடு—திருவித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள
அம்மா—பெருமானே!
என்பால்—அடியேன்மீது
நோக்காய் ஆகிலும்—(நீ) அருள் நோக்கம் செய்யாதிருந்தாலும்
உன் பற்று அல்லால் பற்று இலேன் } உன்னைச் சரணமாகப் பற்றுதலை விட்டு வேறொருவரைச் சரணம் புகமாட்டேன்;
தார் வேந்தன்—(குடிகளைக் காப்பதற்கென்று) மாலையணிந்துள்ள அரசன்
தான் நோக்காது—(அதற்கு ஏற்றபடி) தான் கவனித்துப் பாதுகாவாமல்
எத் துயரம் செய்திடினும் } எப்படிப்பட்ட துன்பங்களைச் செய்தாலும்
கோல் நோக்கி வாழும்—(அவனுடைய) செங்கோலையே எதிர்பார்த்து வாழ்கிற
குடி—ப்ரஜைகளை
போன்று இருந்தேன்—ஒத்திருக்கின்றேன்.

கருத்துரை:—ப்ரஜைகளைப் பாதுகாப்பதற்கென்றே தனிமாலை யிட்டிருக்கும் வல்லவனான தலைவன் தன் கடமையைச் செய்யாதபொழுது அடிமைகள் செய்யக்கூடியது அவனுடைய அருள் எப்படியாவது தங்கள்மீது ப்ரஸரிக்கும்படி வேண்டிக்கொள்ளுதலேயன்றி வேறெதுவும் செய்யலாவதில்லை; அவ்வாறே என்போலியர்களைக் கடாக்ஷித்தற் கென்றே பரமபதத்தை விட்டு வித்துவக்கோட்டிலே

வந்து தங்கியிருக்கிற நீ அவ்வருகையின் பயனைப் பெறுவிடினும் 'இவன் கடாக்ஷி யானுகில் வேறொருவனைப் பார்ப்போம்' என்று வ்யபிசரிப்பவனல்லேன் நான் என்கிறார். உபமாநத்தில் "நோக்காது எத்துயரம் செய்திடினும்" என்றதற்கு ஏற்ப, உபமேயத்தில், நோக்காமையையே துயரஞ்செய்தலாகக் குறித்தனர்: எம்பெருமானது கடாக்ஷ வீக்ஷணம் தங்கள்மேல் பதியாமைக்கு மேற்பட வேறொரு துயரமும் வேணுமோ பக்தர்கட்கு. "வான்நோக்கி வாழுமுலகெல்லாம், மன்னவன்கோல்நோக்கி வாழுங்குடி" என்ற குறளும், "கோல்நோக்கி வாழுங் குடியெல்லாம் தாய் முலையின், பால்நோக்கி வாழுங் குழவிகள் - வானத், துளி நோக்கி வாழுமுலகம்" என்ற நான்மணிக் கடிகையும் இங்கு அறியத்தக்கன.

மீன்நோக்கும் என்ற விடத்து. "கடலில் மத்ஸ்யம். கடல் வற்றினல் நமக்குப் புகலிடமென்று நினைத்திருக்கும் தேசமாய்த்து" என்ற வ்யாக்யாந ஸ்ரீஸூக்தி நோக்கத்தக்கது. இதனல் அவ்விடத்து நீர்வளம் ஒப்புயர்வற்றதென்றதாம். இந்த விசேஷணமிட்டதின் குறிப்பால் பரமபதத்திலுள்ளாரும் அதனைவிட்டு வந்துசேரக் கருதும் திவ்யதேசமென்ற சிறப்பு விளங்குமென்று கொள்வது ஸம்ப்ரதாயம்.

"தார்வேந்தன்" என ஒருமையான பாடமே பழைய வியாக்கியானத்துக்கு ஒத்தது; "வேந்தர்" என்ற பன்மையான பாடம் புதியது. (௩)

---

வாளால் அறுத்துச்சுடினும் மருத்துவன்பால்
மாளாதகாதல் நோயாளன்போல் மாயத்தால்
மீளாத்துயர்தரினும் வித்துவக்கோட்டம்மா! நீ
ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே. (௪)

பதவுரை.

வித்துவக்கோடு அம்மா!—;
வாளால் அறுத்து சுடினும் } (வைத்தியன்) கத்தியைக்கொண்டு அறுத்தலும், (ஊசியைக்காய்ச்சிச்) சூடுபோடுதலுஞ் செய்தாலும்
மருத்துவன் பால் மாளாத காதல் } அவ்வைத்தியனிடத்து நீங்காத அன்புடைய
நோயாளன் போல்—நோயாளியைப்போல்
மாயத்தால்—(உன்) மாயையினுல்
நீ மீளா துயர் தரினும் } நீ நீங்காத துன்பத்தை(எனக்கு) விளைத்தாலும்
அடியேன்—உனது அடியவனுன நான்
ஆள் ஆ(க)—அவ்வடிமை விஞ்சிப்பதற்காக
உனது அருளே பார்ப்பன் } உன்னுடைய கருணையையே நோக்கியிரா நின்றேன்.

கருத்துரை:—நீயே எனக்கு ஸர்வவிதரக்ஷகன் என்று நான் துணிந்த பின்பு. நீ எனக்கு எவ்வளவு துன்பங்களை இவ்விபூதியிலே தந்தருளினுலும் அவற்றையெல்லாம் நான் நன்மையாகவே கருதி மிக்க நன்றியறிவு பாராட்டி மேன்மேலும் அன்பு செய்து வருவேனேயன்றி உன்னைச் சிறிதும் குறைகூறமாட்டேன் என்பதை உபமாநத்தால் விளக்கினர்.

ஸம்ஸாரமாகிய கொடிய நோயைத் தொலைப்பதற்கு ஏற்ற வைத்தியன் ஸ்ரீமந்நாராயணனே என்ற நூற்கொள்கைக்கு ஏற்ப அவனுக்கு வைத்யனை உவமை கூறினர். "வைத்யோ நாராயணோ ஹரி:" "மருத்துவனாய் நின்ற

மாமணிவண்ணு" என்றவை அறிக. அறுத்தலும் சுடுதலும் நோய்தீர்க்கும் உபாயமாவதுபோல, துயரங்களை அநுபவிப்பித்தலும் கருமத்தைப் போக்கும் உபாயமாமென்ற நிஷ்கர்ஷம் இங்கு உணரத்தக்கது. "ஆரப்பெருந்துயரே செய்திடினு மன்பர்கள் பால், வேரிச்சரோருகைகோன் மெய்ந்நலமாம் - தேரில், பொறுத்தற் கரிதெனிலும் மைந்தனுடற் புண்ணை, அறுத்தற்கிசை தாதை யற்று" (உக) என்ற ஞானஸாரப் பாசுரமும், "ஸ்ரிய: பதியானவன் தன்பக்கல் பக்தரானவர்களுக்கு அதிமாத்ரங்களான து:க்கங்களைச் செய்யினும் அது அவர்கள் பக்கல் ஸ்நேஹ கார்ய மென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்" என்ற அவ்விடத்துப் பெரிய ஜீயருரை அவத்ாரிகையும், "ஹரிஷ-ஃவாநி ஹத்தெெஹ்யா ஹிதவாஜூ்யா கரோதிவெ । ஶஸ்த்ரக்ஷாராக்நி கர்மாணி (ஸ்வ புத்ராய யதாபிதா) ரோகாய ஹிஷஹ்யா ॥" என்று உதாஹரித்தருளிய புராணஸ்லோகமும் நோக்கத்தக்கன.

மருத்துவன் - மருந்து தருபவன்; காரணக்குறி. பால் - ஏழனுருபு. மாயா என்ற வடசொல் மாய மெனத்திரிந்தது. ஆளா என்ற பாடமே வியாக்கியானத்துக்கு ஏற்றது: ஆள் ஆ=ஆக என்பதன் ஈறு கெட்டு ஆ என நிற்கிறது. ஆள் - ஸ்வரூபாநுரூபமான சேஷவ்ருத்தியானது, ஆக - ஸித்திக்கும்படி என்கை. இனி, ஆளாய் என்ற பாடத்திற்கு ஆய் என்பதை ஆக என எச்சத்திரிபாக்கி இப்பொருள் கொள்ளக்கூடும்; அன்றி, ஆள் ஆய் - உனக்கே நான் தொண்டு பூண்டு, உனது அருளே பார்ப்பன் என்றலு மொன்று. ஆளாய் - நீ என்னை ஆட்கொண்டு காத்தருளவேணும் என்றுமாம். (௪)

---

வெங்கட்டிண்களிறடர்த்தாய்! வித்துவக்கோட்டம்மானே!
எங்குப்போய் உய்கேன்? உன்னிணையடியே அடையலல்லால்
எங்கும்போய்க்கரைகாணது எறிகடல்வாய்மீண்டேயும்
வங்கத்தின்கூம்பேறும் மாப்பறவைபோன்றேனே. (ரு)

பதவுரை.

வெம் கண்—பயங்கரமான கண்களையுடைய
திண் களிறு—வலிய (குவலயாபீட மென்னும்) யானையை
அடர்த்தாய்—கொன்றவனே!
வித்துவக்கோடு அம்மானே!—;
உன் இணை அடியே அடையல் அல்லால் } உனது உபய பாதங்களையே (நான்) சரண மடைவதல்லாமல்
எங்கு போய் உய்கேன் } வேறு யாரிடத்திற் போய் உஜ்ஜீவிப்பேன்?

எறி—அலை யெறிகிற
கடல் வாய்—கடலினிடையிலே
எங்கும் போய் கரை காணாது } நான்கு திக்கிலும் போய்ப் பார்த்து எங்கும் கரை[யைக் காணமல்
மீண்டு—திரும்பிவந்து
ஏயும்—(தான் முன்பு) பொருந்திய
வங்கத்தின்—மரக்கலத்தினுடைய
கூம்பு ஏறும்—பாய்மரத்தின்மீது சேர்கிற
மா பறவை போன்றேன்—பெரியதொரு பக்ஷியை ஒத்திரா நின்றேன்.

கருத்துரை:—பிரபலமான பகையையும் எளிதில் அழிக்கவல்ல உனக்கு என்னுடைய துயர்களை நீக்குதல் அருமையன்று என்பார், "வெங்கட்டிண்களிறடர்த்தாய்" என்கிறார். கடலின் நடுவிலே செல்வதொரு மரக்கலத்தின் [கப்பல்]

பாய்மரத்து உச்சியிலேதங்கிய பறவை அதனை விட்டு வேறொரு போக்கிடந் தேடித் தனது தேஹவலிவைக்கொண்டு நாலுபக்கத்திலும் விரைவாகப் பறந்து சென்று பார்த்தாலும் எங்கும் கரைகாணக் கிடையாமையாலே மீண்டும் அம்மரக் கலத்தின் பாய்மரத்து உச்சியிலேயே கால்பாவி நிற்பதுபோல, உன்னை விட்டுச் சென்றாலும் வேறு சரணமில்லாமையாலே மீண்டும் உன்னையே அடைதற்கு உரியேன் யான் என்பது கருத்து. அபாரமாய் அலையெறிந்துகொண்டு அச்சந் தருகிற கடல் - ("ஸம்ஸாரஸாகரம் கோரமநந்தக்லேசபாஜநம்" என்றபடி) வரம்பில்லாத பயங்கரமான பிறவித் துன்பத்துக்கும். அக்கடலைக் கடத்தற்கு உரிய கருவியாகிய கப்பல் - "புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே" என்றபடி பிறவிப் பெருங்கடலைக் கடத்தற் கருவியாகிய எம்பெருமானுக்கும். அந்தக் கப்பலில் பற்றுதற்கு உரிய இடமாகிய பாய்மரம் - பற்றுதற்கு உரிய அவனது திருவடிக்கும், அப்பாய்மரத்தையன்றி வேறு பற்றுக்கோட்டைப் பெறாத பறவை - "கழல்களன்றி மற்றோர் களைகணிலம்" என்றபடி அத்திருவடியையேயன்றி வேறு தஞ்சத்தைப்பெறாத ஆழ்வார்க்கும் உவமையெனக் காண்க. "எங்குப் போய் உய்கேன்" என்றது - எங்குப்போனாலும் உஜ்ஜீவநத்திற்கு ப்ரஸக்தியில்லை; ஸ்வரூபஹாநியே பலிக்கும் என்றவாறு. தேவாதி தேவனை விட்டு க்ஷுத்ர தெய்வங்களைப் பற்றுகை அழிவுக்கே ஹேதுவாம்.

குவலயாபீடம் கொன்ற வரலாறு:—தநுர்யாகம் என்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீ க்ருஷ்ண பலராமர்கள் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனைவாசல் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை தம்மைக் கொல்லும் பொருட்டுக் கோபித்துவர, அந்த யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்க ளிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு அடித்து அந்தயானையை உயிர் தொலைத்து உள்ளேபோயினர் என்பதாம். (௫)

---

சேந்தழலேவந்து அழலைச்செய்திடினும் செங்கமலம்
அந்தரம்சேர்வெங்கதிரோற்கல்லால் அலராவால்
வெந்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா! உன்
அந்தமில்சீர்க்கல்லால் அகங்குழையமாட்டேனே. (௬)

பதவுரை.

வித்துவக்கோடு அம்மா!—;
செம் தழலே வந்து—செந்நிறமுடைய நெருப்பு (தானாக) அருகில்வந்து
அழலை செய்திடினும்—வெப்பத்தைச் செய்தாலும்
செம் கமலம்—செந்தாமரைகள்
அந்தரம் சேர் வெம் கதிரோர்க்கு அல்லால்—வானத்தில் தோன்றுகிற வெவ்விய கிரணங்களையுடைய ஸூர்யனுக்கு மலருமேயல்லது,
அலரா—(நெருப்புக்கு) மலரமாட்டா;
வெம் துயர்—(அநுபவித்தே தீரவேண்டியவையான) கொடிய (என்) பாவங்களை
வீட்டா விடினும்—நீ தீர்த்தருளா தொழிந்தாலும்
உன் அந்தம் இல் சீர்க்கு அல்லால்—உனது எல்லையில்லாத உத்தம குணங்களுக்கேயல்லாமல்
அகம் குழைய மாட்டேன்—(வேறொன்றுக்கு நான்) நெஞ்சுருகமாட்டேன்.

கருத்துரை :—தாமரை மலர்வது ஸூர்யனுடைய வெவ்விய கிரணங்களினால் என்றுணர்ந்த ஒருவன், உஷ்ணமான கிரணங்கள் தாமரை மலர்வதற்குக் காரணமென்று கொண்டு செந்நிறமுள்ள நெருப்பைக் கொணர்ந்து அதனுடைய வெவ்விய கிரணங்கள் தாமரையின்மேல் உறைக்கும்படி எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் அத்தாமரையானது தன்னை மலர்த்தும் இயல்வுள்ள உஷ்ணகிரணனான சூரியனுடைய ஆயிரங் கிரணங்களைக்கண்ட வளவில் மலருமேயன்றி அக்நியின் வெப்பத்துக்கு மலராதன்றோ; அதுபோலவே எனது ஹ்ருதய கமலத்தை மலரச்செய்வதற்கு உரிய குணநிலயங்களையுடையனான நீ எனது தாபத்ரயத்தை உடனே ஒழித்தருளாமல் உபேக்ஷித்தாலும் அந்த ஹ்ருதயகமலமானது உனது அநந்த கல்யாண குணங்களுக்கு மலருமேயன்றி மற்றொரு தெய்வம் தானாக வலியவந்து சிறந்த குணத்தை வெளிக்காட்டி நின்றாலும் அதற்கு நெகிழாது என்றபடி. உபமாந வாக்கியமும் உபமேய வாக்கியமும் தனியே நின்று உவமவுருபு பெறுமையால் எடுத்துக் காட்டுவமையணி; த்ருஷ்டாந்தாலங்காரம்.

"வெந்தழலைச் செய்திடினும்" என்றபாடம் வியாக்கியானத்திற்குப் பொருந்தாது: "தாஹகமான அக்நிகிட்டி உஷ்ணத்தைப் பண்ணினாலும்" என்பது வியாக்கியானம்.

கமலம் என்ற பால்பகா அஃறிணைப்பெயர், அலரா என்ற பலவின்பால் முற்றைக் கொண்டமையால், பன்மைப் பொருளது. [வீட்டாவிடினும்] வீட்டுதல் - விடுவித்தல்; விடு என்பதன் விகாரமான வீடு என்ற பகுதி, தன்னொற்று இரட்டிப் பிறவினையாயிற்று. இனி, "வீழ்த்தாவிடினும்" என்பது இங்ஙனே மருவிற்று என்பாருமுளர். (கூ)

---

எத்தனையும் வான்வறந்தகாலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்தமாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்
மெய்த்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா! என்
சித்தமிக உன்பாலேவைப்பன் அடியேனே. (எ)

பதவுரை.

வித்துவக்கோடு அம்மா !—;
வான்—மேகமானது
எத்தனையும் வறந்த காலத்தும் — எவ்வளவுகாலம் மழைபெய்யாமல் உபேக்ஷித்தாலும்
பைங் கூழ்கள்—பசுமை தங்கிய பயிர்கள்
மைத்து எழுந்த மாமுகிலே பார்த்து இருக்கும் — கரு நிறங்கொண்டு கிளம்புகின்ற பெரிய மேகங்களையே எதிர்பார்த்திருக்கும்;
அவை போல்—அப்பயிர்கள் போல,
மெய் துயர் வீட்டா விடினும் — தவறாது அநுபவிக்கப்படுகிற என் துன்பங்களை நீ போக்காமல் உபேக்ஷித்தாலும்
அடியேன்—உனக்கு தாஸனாகிய நான்
என் சித்தம் உன் பாலே மிக வைப்பன் — என் மநஸ்ஸை உன்னிடத்திலேயே மிகவும் செலுத்துவேன்.

கருத்துரை :—தாபத்தைத் தணித்துப் பயிரைக் காப்பதற்கு உரிய மேகமானது மழைபொழியாமல் எவ்வளவு உபேக்ஷித்தபோதிலும் பசும் பயிரானது அந்த மேகந்தன்னையே மேன்மேலும் ஆவலோடு எதிர்பார்க்குமேயன்றி மற்றொ

ன்றை நோக்காது; அப்படிபோல, ஸம்ஸாரதாபங்களை ஆற்றி என்னை அடிமை கொள்வதற்கு உரிய நீ தண்ணளிசெய்யாது உபேக்ஷிக்க உபேக்ஷிக்க, என்மனம் உன்பக்கலிலே ஒருகாலைக் கொருகால் மிகவும் அன்புகொண்டு ஆழ்கின்றது என்கிறார். பயிர் இங்ஙனம் இருப்பதற்குக்காரணம் வேறொரு நீர்நிலத்தைத்தேடிப் போகமாட்டாமை போலவே ஆழ்வார் இங்ஙனமாவதற்குக் காரணம் வேறொரு புகலிடத்தைப் பெறாமை என்க.

வான் - ஆகாயம்: அதில் எழும் மேகத்துக்கு இடவாகு பெயர். "வான் மறந்த காலத்தும்" என்ற பாட்டிலும் பொருள் ஒக்கும். கூழ் என்ற உணவின் பெயர் அதற்குக் காரணமான பயிரைக் குறித்தது, காரியவாகு பெயர். சித்தம் - வடசொல். (எ)

---

தோக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித்தோடுகடலே
புக்கன்றிப்புறம்நிற்கமாட்டாத மற்றவைபோல்
மிக்கிலங்குமுகில்நிறத்தாய்! வித்துவக்கோட்டம்மா! உன்
புக்கிலங்குசீரல்லால் புக்கிலன்காண்புண்ணியனே! (அ)

பதவுரை.

மிக்கு இலங்கு—மிகுதியாய் விளங்குகிற
முகில்—காளமேகம் போன்ற
நிறத்தாய்—கரிய திருநிறமுடையவனே!
வித்துவக்கோடு அம்மா!—; [வனே!
புண்ணியனே — புண்ய ஸ்வரூபியாயுள்ள
தொக்கு இலங்கு யாறு எல்லாம் } (ஜலப்ரவாஹம்) திரண்டு விளங்குகிற நதிகளெல்லாம்
பார்ந்து ஓடி—(கண்டவிடமெங்கும்) பரவியோடி (முடிவில்)

தொடு கடலே புக்கு அன்றி புறம் நிற்க மாட்டாத } ஆழ்ந்த கடலிலே சென்று சேர்தல்லது மற்றோரிடத்தே புகுந்து நிற்கமாட்டா;
அவை போல்—அவ்வாறுகள் போல,
புக்கு இலங்கு—(என் நெஞ்சினுள்ளே) புகுந்து விளங்குகிற
சீர் அல்லால்—(உனது) கல்யாண குணங்கள் தவிர (மற்றோரிடத்தில்)
புக்கிலன்—ஆழ்ந்திடேன்.

கருத்துரை:—ஆறுகளானவை நாடெங்கும் பரந்து பெருகிச் சென்றாலும் முடிவில் தான் சென்று சேர்தற்குத் தகுந்த இடமாகிய கம்பீரமான கடலையே அடைதல்போல, நான் உலக வியாபாரங்களில் எவ்வளவு அலைந்தாலும் முடிவாகப் பரமகதியான உன்னையே அடைந்திடுவேன் என்கிறார்.

"வஷுஷ்லிஜொாஸிவாஜ்யுள
ஸம்ஷந்யூாத் ஸ்வாத்வூரு ஸ:" (ஸ்ரீரங்கராஜஸ்தவம்.)

என்றாற்போல, ஆறு புகுந்தால் கடலுக்கு ஒரு நிறைவும் புகாவிடில் கடலுக்கு ஒரு குறைவும் இல்லையேயாகிலும் அதுதான் தன் இயல்பால் புறம்பே நின்று தரிக்கமாட்டாமல் அளவிறந்த கடலிற் புகுதல்போல, யான் உன்னை யடைந்தால் உனக்கு ஒரு நிறைவும் அடையாவிடில் உனக்கு ஒரு குறைவும் இல்லையேயாகிலும் யானே என் இயல்பால் வேறிடத்தே நிற்கமாட்டாமல் உனது அநந்த கல்யாண குணத்தில் ஆழ்வேன் என்றபடி. கடலினுட் புகுந்த ஆறு அதிலேயே லயப்பட்டு

அதில் நின்றும் மீண்டும் வெளிப்படாதாப்போலே, உன் குணக்கடலிலே இறங்கிய நான் அதிலேயே ஈடுபட்டு ஆழ்ந்திடுவனேயன்றி மீளமாட்டேன் என்பது உவமையாற் புலப்படும். புண்ணியன் - புண்யமே ஒரு வடிவெடுத்தாற் போன்றவன் : "நாசௌவிஷ்ணு ஹவாநுயஜ்ஞ:" "க்ருஷ்ணம் யஜ்ஞம் ஸநாதநம்" என்பன காண்க. யான் இங்ஙன மாதற்குக் காரணம் உனது பேரியல்பே என்பார் புண்ணியனே! என விளித்தார் என்க.

புக்கு அன்றி - புகுந்தாலன்றி. இலங்கு+யாறு, இலங்கியாறு : "யவ்வரின் இய்யாம்" என்பது நன்னூல். 'ஆறு' என வழங்குவது யாறு என்பதன்போலி. 'இலங்கி ஆறு' எனப்பிரித்து வினையெச்சமாக வுரைப்பினும் அமையும். தொடு கடல்-வினைத்தொகை : (ஸகரபுத்ரர்களால்) தோண்டப்பட்ட கடல். "புக்கிலங்கு" என்றதில், புக்கு என்பதைப் புக என்னும் செயவெனெச்சத்தின் திரிபாகக் கொண்டு, 'உட்சென்று நோக்கநோக்க மேன்மேல் மிகுதியாய் விளங்குகிற' என்றுரைத்தலு மொன்று. (அ)

---

நின்னையேதான்வேண்டி நீள்செல்வம்வேண்டாதான்
தன்னையேதான்வேண்டும் செல்வம்போல், மாயத்தால்
மின்னையேசேர்திகிரி வித்துவக்கோட்டம்மா!
நின்னையேதான்வேண்டிநிற்பன் அடியேனே. (கூ)

பதவுரை.

மின்னையே சேர்—மிக்க ஒளியையே கொண்டுள்ள
திகிரி—சக்கராயுதத்தை யுடைய
வித்துவக்கோடு அம்மானே!—;
நின்னையே வேண்டி—உன்னையே விரும்பி
நீள் செல்வம் வேண்டா } மிக்க ஸம்பத்தை
தான் தன்னையே } விரும்பாதவனையே
தான் வேண்டும் — தானாகவே வந்துசேரவிரும்புகிற
செல்வம் போல்—அந்த ஐச்வரியம்போல,
மாயத்தால்—(உன்) மாயையினால்
(நீ என்னை உபேக்ஷித்தாயாகிலும்.)
அடியேன்—உனது அடியவனான நான்
நின்னையே வேண்டி } உன்னையே அடைய
நிற்பன் } விரும்பி நிற்பேன்.
(மூன்றிடத்தும், தான் - அசைநிலை)

கருத்துரை:—யாவனொருவன் எம்பெருமானிடத்திலே அன்பைச் செலுத்தி அதனால் ஐஶ்வர்யத்தை உபேக்ஷிக்கிறானோ, அவன் உபேக்ஷிக்க உபேக்ஷிக்க அவனது நல்வினைப்பயனால் அச்செல்வம் அவனை விடாது விரும்பி வலியத் தொடர்ந்து சேர்தல் இயல்பு. (அபேக்ஷிப்பவனுக்குக் கிடையாதொழிதலும், அபேக்ஷியாதவனுக்கு வலிவிலே கிடைத்தலும் பகவத்ஸங்கல்ப மஹிமையென்பது இங்கு அறியத்தக்கது.) அதுபோலவே, நீ உன் உடைமையாகிய என்னை உபேக்ஷிக்க உபேக்ஷிக்க நான் உன்னையே விடாது நிற்பேன் என்றவாறு. என்போன்ற அடியார்களுக்கு நேரும் துன்பங்களைப்போக்கி எங்களைக் காப்பதற்காகவே கையுந் திருவாழியுமாக இங்கே வந்துள்ளாய் நீ என்பது மூன்றாமடியின் உட்கருத்து.

இப்பாட்டு விஷயத்தில் வேதாந்த தேசிகனுடைய கருத்து :— செல்வத்தை வெறுத்து எம்பெருமானையே வேண்டி நிற்பவனுக்கு அச்செல்வம் தானே வந்து

சேர்தல் "யஸ்யாநுக்ரஹமிச்சாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்" என்ற பகவத் வாக்யத்திற்குப் பொருந்தாததலால், இப்பாட்டில் அங்ஙனம் கூறியுள்ளதை, முன்பு நெடுங்காலம் ஐஶ்வர்யத்துக்காக உபாஸனைபண்ணி அது பெறுமல் அதனை வெறுத்து எம்பெருமான் பக்கல் அன்புபூண்ட ஒரு அதிகாரி விஶேஷ விஷயமாகக் கொள்ளுதல் நலம் என்பதாம். செல்வம் என்பதற்கு 'மோக்ஷலக்ஷ்மி' என்றுரைப்பாரும் உளர். (௯)

---

வித்துவக்கோட்டம்மா! நீவேண்டாயேயாயிடினும்
மற்றாரும்பற்றிலேனென்று அவனைத்தாள்நயந்த
கொற்றவேல்தானைக் குலசேகரன்சொன்ன
நற்றமிழ்ப்பத்தும்வல்லார் நண்ணார்நரகமே. (௧௦)

பதவுரை.

'வித்துவக்கோடு அம்மா!—;
நீ வேண்டாயே ஆயிடினும் } நீ (என்னை) உபேக்ஷித்தாயாகிலும்
மற்று ஆரும் பற்றிலேன் } வேறு எவரையும் நான் சரணமடைய மாட்டேன்'
என்று—என்ற (அத்யவஸாயத்தை வெளியிட்டு)
அவனை தாள் நயந்து } அவ்வெம்பெருமானது திருவடிகளிலேயே ஆசை கொண்டு
கொற்றம் வேல் தானை குலசேகரன் சொன்ன } வெற்றியைத் தரும் வேலாயுதத்தையும் சேனையையுமுடையவரான குலசேகரர் அருளிச்செய்த
நல் தமிழ் பத்தும்—நல்ல தமிழ்ப்பாடல்கள் பத்தையும்
வல்லார்—ஓதவல்லவர்கள்
நரகம் நண்ணார்—(கொடிய பாவங்கள் செய்திருந்தாலும்) நரகத்திற் சேரமாட்டார்கள்.

கருத்துரை:—திருவித்துவக் கோட்டம்மான் திருவடிவாரத்திலே சென்று 'நீ என்னை உபேக்ஷித்தபோதிலும் உன்னையன்றி மற்றொருவரையுங் கதியாகத் தேடிப்போகமாட்டேன்; கதியாவதற்கு உரியவர்களும் கிடையாது' என்ற தமது த்ருடாத்யவஸாயத்தை வெளியிட்டு எம்பெருமான் திருவடிகளில் நிகரற்ற அன்பு தோன்ற விண்ணப்பஞ்செய்த இத்திருமொழியைக் கற்றுவல்லார் பெரும் பாவிகளா யிருந்தாலும் இத்திருமொழியின் அநுஸந்தாந மஹிமையினால் ஸகல பாபங்களும் நீங்கப் பெறுவர்களென்று பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு.

"அவனைத் தாள்நயந்து கொற்றவேல்தானைக் குலசேகரன்" என்று எம்பெருமான் திருவடிகளை விரும்புதலை ஆயுதத்தோடும் சேனையோடும் வைத்துக் கூறியதனால் பாஹ்யஶத்ருக்களை யொழித்து ஜயம் பெறுதற்குக் கருவியாக ஆயுதத்தையும் சேனையையும் வைத்துக்கொண்டிருப்பதுபோல ஆந்தர ஶத்ருவாகிய இந்த்ரிய ஸ்வாதந்திரியத்தை யொழித்துப் பேறு பெறுவதற்குக் கருவியாகப் பகவத் பக்தியையுடையவர் ஆழ்வார் என்பது விளங்குமென்ப. அன்றியும் அவ்விஶேஷணம், அஹங்காரத்துக்குக் காரணமான ராஜ்ய ஸம்பத்தை உடையராயிருந்தும் செருக்கின்றி எம்பெருமான் திருவடிக்கு அடிமைபூண்டொழுகின அருமையையுங் காட்டும்.

நயந்த என்றும் பாடம்; தாள் நயந்த குலசேகரன் என்க. நயந்து என்ற பாடத்தில் 'நயந்து சொன்ன' என இயையும். "நரகம் நண்ணார்" என்றது - நரகப்ராப்திக்குக் காரணமான பாவங்கள் தலைப்பெறுவர் என்றபடி. நரக வேதனைக்குச் சமானமான பிறவித்துயரத்தை அடையார் என்றபடியுமாம்; முக்தி பெறுவர் என்பது கருத்து.

"அவனைத் தாள்" = அவன் தாளை என உருபு பிரித்துக்கூட்டுக. அன்றி, அவனை என்பதை, இரண்டனுருபு ஆறனுருபின் பொருளில் வந்த உருபுமயக்க மெனினும் அமையும். கோற்றம் - பகைவரைக்கொன்று அடைவது என்ற காரணத்தினல் ஜயத்துக்கு வாசகமாயிற்றென்க. வேல் - வெல்லுங்கருவி; இதுவும் காரணக்குறி. ... ... ... ...

அடிவரவு:— தருக் கண்டார் மீனேக்கு வாளால் வெங்கட்டிண் செந்தழல் எத்தனை தொக்கு நின்னை வித்துவர்.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

---

## இத்திருமொழியின் உள்ளுறை.

௧. தருதுயரம். தாயினுடைய ஸ்தானத்தில் எம்பெருமானையும், குழந்தையினுடைய ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கு முள்ள ஸம்பந்தம் தாய்க்கும் குழந்தைக்கு முள்ள உறவுமுறை போன்றதென விளங்கும். அதாவது பிராணிவர்க்கங்களை யெல்லாம் படைத்துக் காப்பவன் எம்பெருமானே என்பது.

௨. கண்டாரிகழ்வன. கணவன் ஸ்தானத்தில் எம்பெருமானையும் மனைவி ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கு முள்ள ஸம்பந்தம் கணவனுக்கும் மனைவிக்கு முள்ள தொடர்பு போன்றதெனத் தோன்றும்; அதாவது பரமாத்மாவினது தலைமையும் ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்கே உரியதா யிருக்கையும், ஜீவாத்மா பரமாத்மாவின் ஸம்ஶ்லேஷத்தால் இன்பத்தையும் விஶ்லேஷத்தால் துன்பத்தையும் அடைதலும், பரமாத்மாவையே ஜீவாத்மா காணுங்க ளெல்லாவற்றுலும் அநுபவித்து ஆநந்தித்தலும் முதலியன.

௩. மீனேக்கு நீள்வயல். எம்பெருமானை அரசன் ஸ்தானத்திலும் தம்மைக் குடிகள் ஸ்தானத்திலும் வைத்துக் கூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கு முள்ள ஸம்பந்தம் அரசனுக்கும் ப்ரஜைகளுக்கு முள்ள ஸம்பந்தம் போன்றதென விளங்கும்- அதாவது - ரக்ஷ்ய ரக்ஷகபாவம்; அவன் காப்பவனாகவும் இவன் காக்கப்படுமவனாகவு மிருத்தல்.

ச. வாளாலறுத்து. வைத்தியன் ஸ்தானத்தில் எம்பெருமானையும் நோயாளியின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மா ஜீவாத்மாவுக்கு ஹிதஞ்செய்வதிலேயே ஊன்றியவனாதலும், ஜீவாத்மா பரமாத்மாவினிடத்து நம்பிக்கை கொள்ளவேண்டியவனாதலும் தெளிவாம்.

ரு. வெங்கண்திண்களிறு. மரக்கலத்தின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் பறவையின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக்கூறியதனால், ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவையின்றி அமையாதென்பதும் பரமாத்மா ஜீவாத்மாவுக்கு ஆதாரமாதலும் வெளியாம்.

சு. செந்தழலேவந்து. ஸூர்யன் ஸ்தானத்தில் எம்பெருமானையும் தாமரையின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மா இன்பந் தருபவனென்பதும் ஜீவாத்மா இன்ப மநுபவிப்பவனென்பதும் விளங்கும். இதில், இரண்டாவது பாசுரத்திற் காட்டியது போன்ற நாயக நாயகீ பாவம் தொனிக்கும்.

எ. எத்தனையும் வான். காளமேகத்தின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் பயிரின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், உலகத்து உயிர்கட்கெல்லாம் ஜீவநாதாரம் பரமாத்மாவே என்று அறியலாம்.

அ. தொக்கிலங்கியாறு. கடலின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் நதியின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால் பரமாத்மாவினது பெருமையும் ஜீவாத்மாவினது சிறுமையும், முடிவில் ஜீவாத்மா பரமாத்மாவை அடைதலும் புலனாம். இதிலும் நாயக நாயகிபாவம் தொனிக்கும்.

கூ. நின்னையேதான் வேண்டி. செல்வத்துக்கு உரியவனுடைய ஸ்தானத்தில் எம்பெருமானையும் செல்வத்தின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால் 'ஜீவாத்மா பரமாத்மாவின் உடைமை' என்பது புலப்படும் [ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தம்.]

க0. வித்துவக்கோட்டம்மா. இங்ஙனம் ஆழ்வார் தமது குறையை எம்பெருமான் பக்கலிலே ஒருமுறைக்கு ஒன்பதுமுறை விண்ணபஞ் செய்ததனால் அவனுக்கு ஆழ்வாரிடம் உண்டான கருணையின் பெருக்கு அவ்வாழ்வாரது அருளிச்செயல்களில் ஆழ்பவரளவும் செல்லுமென்பது இப்பாசுரத்தில் அமையும்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறும் திருமொழி - ஏர்மலர்ப்பூங்குழல்.



கீழ் - திருவரங்கத் திருப்பதி விஷயமாக முதல் மூன்று திருமொழியும், திருவேங்கடமுடையான் விஷயமாக நான்காந் திருமொழியும், மலைநாட்டில் திருவித்துவக்கோடு விஷயமாக ஐந்தாந் திருமொழியும் அருளிச்செய்து இப்படி அர்ச்சாவதாரங்களிலே அவகாஹித்து நின்ற ஆழ்வார், அவற்றிற்போலவே விபவாவதாரங்களுள்ளும் இராமாவதாரத்திலும் க்ருஷ்ணாவதாரத்திலும் மிக்க ஈடுபாடுடையாதலால் அவற்றில் திருவுள்ளத்தைச் செலுத்தி, அவற்றுள்ளும் தமக்குச் சிலகாலமே முந்தினதாதலால் சமீபத்ததான க்ருஷ்ணாவதாரத்தை நினைத்து அதில் அப்பெருமானைத் தாம் அநுபவிக்கப் பெறுமற்போனமைக்கு இரங்கி, அவ்விரக்கத்தை அவ்வவதாரத்திலே ஆய்ப்பெண்கள் கண்ணபிரானோடு ஊடல்கொண்டு உரைத்த பேச்சுக்களால் அருளிச்செய்வது இத்திருமொழி.

திருவாய்மொழியில் "மின்னிடை மடவார்கள்" என்ற திருவாய்மொழியும், பெரிய திருமொழியில் "காதில் கடிப்பு" என்ற திருமொழியும் ஒக்கும் இத்திருமொழி.

"நம்மாழ்வார் பகவத்விஷயத்தில் நின்ற ஊற்றமெல்லாம்தோற்ற வன்மையுடைத்தாயிருக்கும் * மின்னிடை மடவார்; திருமங்கையாழ்வார் தம் ஊடலை மெல்லாந்தோற்ற மென்மையுடைத்தா யிருக்கும் * காதில் கடிப்பு; இவர் தம்முடைய ராஜகுலமெல்லாம் தோற்றவிருக்கும் இத்திருமொழி. க்ருஷ்ணாவதாரம் தோள் தீண்டியாகையாலே 'ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப் பெற்றிலோம், பல்லிலே பட்டுத்தெறித்தது!" என்று - பஞ்சலக்ஷங் குடியிற் பெண்களுக்கு க்ருஷ்ணன் பக்கலுள்ள விடாயெல்லாம் தமக்கொருவர்க்கு முண்டாகையாலே திருவாய்ப்பாடியிற் பெண்கள் பேச்சாலே பேசுகிறார்" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி இங்கு போக்யமாக ஸேவிக்கத்தக்கது. ... ... *

---

ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதர் எனைப்பலருள்ள இவ்வூரில் உன்றன்
மார்வுதழுவுதற்கு ஆசையின்மை அறிந்தறிந்தே உன்றன்பொய்யைக்கேட்டுக்
கூர்மழைபோல்பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கியமுனையாற்றில்
வார்மணற்குன்றில்புலரநின்றேன் வாசுதேவா! உன்வரவுபார்த்தே. (க)

பதவுரை.

வாசுதேவா—கண்ணபிரானே!

ஏர் மலர் பூ குழல் ஆயர் மாதர்—அழகிய புஷ்பங்களை அணிந்த பரிமளம்மிக்க கூந்தலையுடைய இடைப்பெண்கள்

எனை பலர் உள்ள—எத்தனையோ பேர்களிருக்கப்பெற்ற

இ ஊரில்—இந்தத் திருவாய்ப்பாடியில்,

உன்தன் மார்வு தழுவுதற்கு—உன்னுடைய மார்வோடு அணைவதற்கு

ஆசை இன்மை அறிந்து அறிந்தே—ஆசை யில்லாமையை நன்றாக அறிந்துவைத்[தும்]

உன்தன்—உன்னுடைய

பொய்யை கேட்டு—பொய்யான வார்த்தைகளைக் கேட்டு

(அவற்றை மெய்யென மயங்கி)

கூர் மழை போல் பனிக்கு ஊதல் எய்தி—மிக்க மழைபோல் பெய்கிற பனியாலுண்டான குளிரிலே அகப்பட்டு

கூசி—(யார் பார்த்துவிடுகிறார்களோ வென்று) கூச்சமடைந்து

நடுங்கி—நடுங்கிக்கொண்டு

யமுனை ஆற்றில்—யமுநாநதியில்

வார் மணல் குன்றில்—பெரியதொரு மணற்குன்றிலே

உன் வரவு பார்த்து—உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு

புலர நின்றேன்—போது விடியுமளவும் (அங்கேயே) காத்துநின்றேன்.

கருத்துரை—கண்ணபிரான் ஒரு பெண்பிள்ளையை நோக்கி 'நீ யமுனை யாற்றின் மணற்குன்றிலே போய் நில்லு, நான் அங்கேவருகிறேன்' என்று சொல்லிவிட, அப்படியே அவள் அங்கேபோய் விடியுமளவும் நின்று அவன் வரக்காணமல் வருத்தத்தோடு மீண்டுவந்து, மற்றொருநாள் அவனைக் கண்டபோது ப்ரணயரோஷந் தோற்றச் சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது இப்பாட்டு. அநியாயமாய் உன் பொய்யைக்கேட்டு மோசம்போனே னென்கிறாள். இத்திருவாய்ப்பாடியில் நான் ஒருத்தியேயா யிருக்கும்பக்ஷத்தில் 'இவனுக்கு நாமொழிய வேறொருத்தியும் புகலில்லை' என்று நான் நினைக்க இடமுண்டாம்: "தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்" என்றபடி உனக்குப் பத்தினியாகப் போரும் பெருமைவாய்ந்த அழகிற் சிறந்த ஆய்ப்பெண்கள் இவ்வூரில் [-இத்திருவாய்ப்பாடியில்] லக்ஷக்கணக்காக இருக்கிறார்க ளென்பதையும், அவர்களிருக்கும்போது நான் உன்னை அணைக்க ஆசைப்படுதல் வீண் என்பதையும் நான் நெடுநாளாக நன்றாய்த் தெரிந்துகொண்டிருந்தும், "ஐயோ! எனக்கு நீ தவிர வேறு புகல் உண்டோ? உன்னைத் தவிர நானறிவேனோ?" என்றாற்போலத் தாழ்ச்சி தோன்ற நீ சொன்ன வஞ்சகப் பேச்சுக்களை மெய்யென மயங்கி நம்பி, மிக்க மழைபோலே பெய்கிற பனியாலுண்டாகிய குளிரிலே அகப்பட்டு "ஆர் நம்மைப் பார்த்துவிடுகிறார்களோ?" என்று கூசி, அச்சத்தினாலும் குளிரினாலும் நடுங்கி, கண்டவர்களும் வரக்கூடிய இடமாகிய யமுனையாற்றின் மணற்குன்றிலே பொழுது விடியுந்தனையும் காத்துநின்று பரிபவப்பட்டே னென்கிறாள்.

[வாசுதேவா!] கனவிலும் பொய்சொல்லியறியாத வஸுதேவர் வயிற்றிற் பிறந்த நீயும் தந்தையை ஒத்திருப்பாயென்று நம்பிக் கெட்டேன்காண்! என்ற குறிப்பு.

புலர்தல்—பொழுது விடிதல். ... ... ... (க)

---

சேண்டையோண்கண்மடவாளொருத்தி சீழையகத்துத்தயிர்கடையக்
கண்டொல்லைநானும்கடைவனென்று கள்ளவிழியைவிழித்துப்புக்கு
வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவ வாண்முகம்வேர்ப்பச்செவ்வாய்துடிப்பத்
தண்டயிர்நீகடைந்திட்டவண்ணம் தாமோதரா! மெய்யறிவன்நானே. (உ)

பதவுரை.

தாமோதரா—கண்ணபிரானே!
சீழை அகத்து—(என்வீட்டுக்குக்) கீழண்டை வீட்டில்
சேண்டை ஒண் கண்—கயல் போன்று அழகிய கண்களை யுடையளான
மடவாள் ஒருத்தி—ஒருபெண்ணானவள்
தயிர் கடைய கண்டு—(தனியே) தயிர்கடையா நிற்பதைக்கண்டு (இவளை வசப்படுத்துதற்கு இதுவே ஸமயமென்று நிச்சயித்துக் கொண்டு)
நானும்—'நானும் (உன்னோடுகூட)
ஒல்லை கடைவன் என்று — சீக்கிரமாக (இத்தயிரைக்) கடைவேன்' என்று (வாயாற் சொல்லி)
கள்ளம் விழியை விழித்து — திருட்டுப் பார்வை பார்த்து
புக்கு—(அவளருகே) சென்று சேர்ந்து
வண்டு அமர் பூ குழல்—வண்டுகள் படிந்த புஷ்பங்களை அணிந்த மயிர்முடியானது
தாழ்ந்து உலாவ—அவிழ்ந்து அசையும்படியாகவும்
வாள் முகம் வேர்ப்ப—ஒளிபொருந்திய முகமானது வேர்க்கும்படியாகவும்
செம் வாய் துடிப்ப—சிவந்த அதரமானது துடிக்கும்படியாகவும்
தண் தயிர்—குளிர்ந்த தயிரை
நீ கடைந்திட்ட வண்ணம் — நீ கடைந்தபடியை
நான் மெய் அறிவன்—நான் மெய்யே அறிவேன்.

கருத்துரை :—வேறொரு ஆய்ச்சியின் வார்த்தை இது. என் அகத்திற்குக் கீழண்டை அகத்திலிருப்பாளொரு பெண்பிள்ளையானவள் தனியேயிருந்து தயிர் கடையாநிற்கையில் அதுகண்ட நீ "ஸௌஹார்தம் பெற்றேன்" என உகந்து அவளருகில் ஓடிச்சென்று புகுந்து "அம்மா! நீதனியாகத் தயிர்கடைந்தால் ஒருகாலும் வெண்ணெய் புறப்படமாட்டாது; நானும் ஒருதலைபற்றிக் கடைந்தால் தான் விரைவில் வெண்ணெய் காணும்" என்று வாயாற் சொல்லி, உள்ளே வேற்றுநினைவு இருக்கும்படி தோன்றத் திருட்டுவிழி விழித்து, மயிர்முடி அவிழ்ந்து அலையும்படியாகவும், தாமரையிலே முத்துப் படிந்தாற்போலே ஒளிபொருந்திய முகம்வேர்க்கும்படியாகவும், அதரம் துடிக்கும்படியாகவும் அவளோடேகூடி நீ தயிர்கடைந்த வரலாறு எனக்குத் தெரியுமப்பா! என்கிறாள். 'இன்னமும் அங்கேயே தயிர்கடையப் போ; இங்கே உனக்கென்ன பணி?' என்ற ஊடல் உள்ளுறை.

"சேண்டை யொண்கண்" என்று தொடங்கித் "தண்டயிர் நீ கடைந்திட்டவண்ணம்" என்னுமளவும் இவள் சொன்னவுடனே, கண்ணன், 'ஏது? யார் சொன்னது? இப்படிப்பட்ட ஸங்கதிகள் என்பக்கல் ஒன்றுங்கிடையாது; முழுப்பொய்' என்ன; தாமோதரா! என்கிறாள்—உன் உடம்பில் தழும்பை மறைக்கலாமாகிலன்றோ உன் செயல்களை மறைக்கலாவது என்ற கருத்துத்தோன்ற. (உ)

---

கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைகணித்துஆங்கேஒருத்திதன்பால்
மருவிமனம்வைத்துமற்றொருத்திக்குரைத்து ஒருபேதைக்குப்போய்குறித்துப்

புரிகுழல்மங்கையொருத்திதன்னைப் புணர்திஅவளுக்கும்மெய்யனல்லை
மருதிறுத்தாய்! உன்வளர்த்தியோடே வளர்கின்றதால்உன்றன்மாயைதானே. (௩)

பதவுரை.

மலர்—புஷ்பங்களை அணிந்துள்ள
கரு கூந்தல்—கறுத்தமயிர் முடியை யுடையளான
ஒருத்தி தன்னை—ஒரு பெண்பிள்ளையை
கடைக்கணித்து—கடைக்கண்ணால் பார்த்து விட்டு
ஆங்கே—அப்படியிருக்கச் செய்தே,
ஒருத்திதன் பால்—வேறொரு பெண்பிள்ளையிடத்தில்
மனம்—மனதை
மருவி வைத்து—பொருந்தச் செய்து, (அவளையும் விட்டு)
மற்று ஒருத்திக்கு—வேறொரு பெண்ணிடத்தில்
உரைத்து—('உனக்கு நான் அடியேன்') என்று சொல்லிவைத்து,
ஒரு பேதைக்கு—வேறொரு பெண்ணுக்கு
பொய் குறித்து—(ஸம்ச்லேஷத்துக்காகப்) பொய்யாகவே (ஒரு ஏகாந்த ஸ்தலத்தைக்) குறிப்பிட்டு வைத்து, (ஆக இத்தனை பேரையும் ஏமாத்திவிட்டு)
புரி குழல் மங்கை ஒருத்தி தன்னை—சடைகுழன்று சுருண்ட கூந்தலையுடையளான ஒரு இளம்பெண்ணோடு
புணர்தி—கலவி செய்யாநின்றாய்;
அவளுக்கும்—அந்தப் பெண்ணுக்கும்
மெய்யன் அல்லை—பொய்யனாயிராநின்றாய்;
மருது இறுத்தாய்—இரட்டை மருதமரங்களை முறித்துத் தள்ளினவனே!
உன் வளர்த்தியோடே—நீ வளர்வதோடு கூடவே
உன்தன் மாயை—உன்னுடைய கள்ளங் கவடும்
வளர்கின்றது—வளர்ந்து வாராநின்றது;
ஆல்—அந்தோ!.

கருத்துரை:—வேறொரு ஆய்ச்சியின் பேச்சு இது. நெய்த்து இருண்டு பூவணிந்த மயிர்முடியை யுடையாளொரு பெண்பிள்ளையை அவளுடைய மயிர் முடியிலே தான் தோற்றமை தோற்ற ஸாகூதமாக நோக்கி, இப்படி இவளிடத்தே கண் செல்லாநிற்க வேறொருத்தி பக்கலிலே நெஞ்சைச் செல்லவைத்து, இப்படி மனஸ்ஸு அவள் பக்கலிலே இருக்க, அவளையும்விட்டு வேறொருத்திக்கு "உனக்கு நான் அடியேன்" என்று சொல்லி, பின்னை அவளையும் விட்டு மற்றொருத்திக்கு "நீ இன்னவிடத்திலே போய் நில்லு; நான் அங்கே வருகிறேன்" என்று ஒரு பொய் பேசி, ஆக இந்நால்வரும் உன்னை நம்பி மோசம்போகும்படி அவர்களை வஞ்சித்துத் துடிக்கவிட்டு வேறொரு பெண்பக்கல் போய் ஸம்ச்லேஷித்தாய்; அதுவாகிலும் மெய்தானோ வென்று பார்த்தால் [அவளுக்கும் மெய்யனல்லை] அந்தரங்கமாக அல்லாமல் புறம்பே தழுவினபத்தனை. நீ பிராயம் புகுந்து வளரவளர உன் மாயையும் கூடவே வளர்ந்து வாராநின்றதே!

அவர்கள் பட்டபாடு நானும் படவேண்டா; இதுவரையில் உன்மாயைக்கு நான் இலக்கானது போதும்; அப்பால் போவாயாக, என்பது உள்ளுறை.

மருதிறுத்த வாலாறு:—கண்ணன் குழந்தையா யிருக்குங்காலத்தில் துன்ப விளையாடல்கள் பலவற்றைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினாற்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளிய பொழுது, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்ட படியினாலே அம்

மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னும் குபேரபுத்திரர்களிருவரும் சாபந்தீர்ந்து சென்றனரென்பதாம். இங்கே "மருதிறுத்தாய்!" எனவிளித்ததனால். நீ பருவம் நிரம்புவதற்கு முன்னமே தீண்டினரைக் கொன்றவனாதலால் உன்னைத் தீண்ட நான் அஞ்சாநின்றேன் காண் என்று குறிப்பிட்டவாறுமென்ப. ௩

---

தாய்முலைப்பாலில்அமுதிருக்கத் தவழ்ந்துதளர்நடையிட்டுச்சென்று
பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டு பித்தனென்றேபிறரேசநின்றாய்
ஆய்மிகுகாதலோடியானிருப்ப யான்விடவந்தஎன்தூதியோடே
நீமிகுபோகத்தைநன்குகந்தாய் அதுவுமுன்கோரம்புக்கேற்குமன்றே. (ச)

பதவுரை.

தாய்—தாயாகிய யசோதைப் பிராட்டியினுடைய
முலையில்—முலைகளில்
பால் அமுது இருக்க—போக்யமான பால் இருக்கச் செய்தேயும். (அதனை விரும்பாமல்)
தவழ்ந்து—தவழ்ந்துகொண்டு
தளர் நடை இட்டு சென்று—தட்டுத்தமொறி நடந்து சென்று
பேய்—பூதனையினுடைய
முலை—முலையிலே
வாய் வைத்து—வாயை வைத்து
நஞ்சை உண்டு—(அம்முலைமீது தடவிக்கிடந்த) விஷத்தை உறிஞ்சி அமுதுசெய்து
பித்தன் என்று—(இப்படி செய்தது காரணமாகப்) 'பைத்தியக்காரன்' என்று
பிறர்—அயலாரெல்லாரும்
ஏச நின்றாய்—பரிஹஸிக்கும்படி நின்ற பிரானே!.
யான்—நான்
ஆய் மிகு காதலோடு இருப்ப—மிகவும் அதிகமான ஆசையோடு எதிர்பார்த்திருக்கையில்,
நீ — நீ,
யான் விட வந்த என் தூதியோடே—என்னால் தூதனுப்பப்பட்டு (உன்னிடம்) வந்த என்வேலைக்காரியோடே
மிகு போகத்தை—நல்ல போகங்களை
நன்கு உகந்தாய்—நன்றாக அநுபவித்தாய்
அதுவும்—அந்தச் செய்கையும்;
உன் கோரம்புக்கு—உனது தீம்புக்கு
ஏற்கும் அன்றே—தகுந்திருக்குமாய்த்து.

கருத்துரை:—வேறொரு ஆய்ச்சியின் பேச்சு இது. பூர்ணமான பரிவையுடைய தாயாகிய யசோதையின் முலையிலே போக்யமான பாலமுது இருக்கச் செய்தேயும் அதனை உபேக்ஷித்து, ஒரு பேய்ச்சி விஷம் தடவிவந்த முலையிலே வாயைவைத்த பைத்தியக்காரப் பயல் இவன்! என்று பலரும் ஏசும்படியாக விவேகமற்ற காரியத்தைச் செய்தவனே!

உன்னை அணைக்கவேணுமென்று நான் அளவற்ற ஆசையோடு காத்திருக்க நான் உன்னிடமனுப்பிய ஒருவேலைக்காரியிடத்திலே நீ ஹோமரஸத்தை உகந்தாயே! உன் அவிவேகத்தை என்னசொல்வேன்? என்றவாறு. தாயைவிட்டுப் பேயைப்பற்றினது போல் இதுவும் ஒரு அவிவேகமே என்பது தோன்ற முன்னடிகளில் விளித்தபடி.

[தாய் முலைப் பாலில்] 'பாலில்' என்றவிடத்துள்ள ஏழனுருபு பிரித்து முலையோடு கூட்டப்பட்டது. தளர்நடை=தரையிலே காலூன்றி நடக்கும் பருவமன்றாதலால் தட்டுத்தடுமாறி நடத்தல்.

“நஞ்சை உண்ட” என்ற பாடமுஞ் சிறக்கும். தூதி—தூதீ என்றவடசொல் விகாரம். போகம்—ஹோமம். ஆய்—மிகுதியைக் கூறும் ஓர் இடைச்சொல் என்பர்சிலர். அன்றி, ஆய் என்று வருத்தத்திற்கும் பெயராதலால், வருத்தம் மிகுந்தகாதலோடு என்றுரைத்தலுமாம். இவ்விடத்து வியாக்கியான பங்க்தி அச்சுப்பிழை யுடைத்தென்ப. (௪)

---

மின்னொத்தநுண்ணிடையாளைக்கொண்டு வீங்கிருள்வாயென்றன்வீதியூடே
பொன்னொத்தவாடைகுக்கூடலிட்டுப் போகின்றபோதுநான்கண்டுநின்றேன்
கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக் கைவிளிக்கின்றதுங்கண்டேநின்றேன்
என்னுக்குஅவளைவிட்டிங்குவந்தாய்? இன்னமங்கேநடநம்பி! நீயே. (௫)

பதவுரை.

மின் ஒத்த—மின்னல்போன்று
நுண் இடையாளை—ஸூக்ஷ்மமான இடையையுடைய ஒருபெண்ணை
கொண்டு—அணைத்துக்கொண்டு
வீங்கு இருள் வாய்—நிபிடமான (மிக்க) இருள்வேளையிலே
பொன் ஒத்த ஆடை—பீதாம்பரத்தாலே
குக்கூடல் இட்டு-முட்டாக்கிட்டுக்கொண்டு
என்தன் வீதி ஊடே—என் வீதி வழியே
போகின்ற போது—(அவளும் நீயுமாகப்) போகும்போது
நான் கண்டு நின்றேன்—நான் பார்த்துக் கொண்டிருந்தேன்;
(அன்றியும்;)
நீ—;
கண்ணுற்றவளை—கண்ணில் தென்பட்ட வேறொருத்தியை
கண்ணால் இட்டு—(உனக்கே அற்றுத் தீரும்படி) கடாக்ஷித்து
கை விளிக்கின்றதும்—(இன்னவிடத்தே வாவென்று) கையாலே அழைத்து ஸம்ஜ்ஞை பண்ணினதையும்
கண்டே நின்றேன்—பார்த்துக் கொண்டுதானிருந்தேன்;
அவளை விட்டு—அந்தப் பெண்மணியை விட்டு
இங்கு—என்னிடத்திற்கு
என்னுக்கு வந்தாய்—எதுக்காக வந்தாய்?
நம்பி—என் நாயனே!
நீ—;
இன்னம்—இனிமேலும்
அங்கே நட—அவர்களிடத்திற்கே நடப்பாயாக.

கருத்துரை:—வேறொருத்தியின் பாசுரம் இது. மின்னல்போலே நுண்ணிய இடையையுடையாளொருத்தியை அவ்விடை நுடங்காதபடி அணைத்துக்கொண்டு நள்ளிருளில் பீதாம்பரத்தாலே தன்னை மறைத்துக்கொள்வான் போல முட்டாக்கிட்டுக்கொண்டு என்வீதிவழியே அவளும் நீயுமாகப் போகும் போக்கை நான் பாராமற் போகவில்லை; நன்றாய்ப் பார்த்துக்கொண்டேயிருந்தேன். பின்னை அவளொருத்தியளவிலேதான் மனம்பொருந்தி நின்றாயோ; அவளை அணைத்துக்கொண்டு போகையில் மற்றொருத்தி தென்பட்டவாறே அவள் உனக்கே அற்றுத்தீரும்படி அவளைக் கடைக்கணித்து ஒரு கையாலே அவளை இன்னவிடத்தே வாவென்று ஸங்கேதம் பண்ணினபடியையும் பார்த்தேனப்பா!; அப்பாவி உன்ஸ்வரூப மறியாதவளாகையாலே மெய்யென்றிருக்கிறாள்; ஐயோ! பாவம்!! அவள் வெறுக்கும்படி அவளைவிட்டு இங்கே எதுக்கு வந்தாய்? என்றவாறே, அவன் “அந்தோ! அங்ஙனே சில உண்டோ எனக்கு? உன்னையன்றி மற்றொருத்தியை நான் அறி

வேனோ ?" என்று அவன் சொல்ல, ஸ்வாமிந் ! குறைவாளரைப் போலே சிலவார்த்தைகள் சொல்லக்கடவீரோ ? நீர் பூர்ணரல்லீரோ ? அங்கே நடவீர் என்கிருள்.

நள்ளிருளில் ஒருவர்க்குந் தெரியாமல் போகவேணுமென்று போகிறவன் இருளன்னமாமேனியைத் திறந்து கொண்டே போகலாம்; அல்லது கறுத்ததோர் ஆடையைப் போர்த்துக்கொண்டு போகலாம். நீயோ இருளை அகற்றிப் பளபளவென்று ப்ரகாசிக்கும்படியான பீதாம்பரத்தை முட்டாக்கிட்டுக் கொண்டு போனுய் ; போவது தானும் வேறுவழியாயோ ? நான் கண்டு வயிறெரியவேணுமென்றே என் தெருவழியே போனுய், என்ற கருத்துக்களை விரித்துக்கொள்க.

துக்கூடல்—முட்டாக்கு. (௫)

---

மற்பொருதோளுடைவாசுதேவா ! வல்வினையேன்துயில்கொண்டவாறே
இற்றையிரவிடையேமத்து என்னை இன்னணைமேலிட்டகன்றுநீபோய்
அற்றையிரவுமோர்பிற்றைநாளும் அரிவையரோடுமணைந்துவந்தாய்
எற்றுக்குநீஎன்மருங்கில்வந்தாய் ? எம்பெருமான் ! நீயெழுந்தருளே. (௬)

பதவுரை.

மல் பொரு—மல்லரோடு போர்செய்த
தோள் உடை வாசுதேவா—தோள்களையுடைய கண்ணபிரானே !
வல் வினையேன்—மஹாபாவியான நான்
துயில் கொண்டவாறே—தூங்குவதற்கு ஆரம்பித்தவுடனே
இற்றை இரவு இடை ஏமத்து—அன்றிரவு நடுச்சாமத்திலே
இன் அணைமேல்—இனிய படுக்கையிலே
என்னை இட்டு—என்னைப் படுக்கவிட்டு
நீ அகன்று போய்—நீ விலகிப்போய்
அற்றை இரவும்—(அகன்றுபோன) அன்றிரவும்
ஓர் பிற்றை நாளும்—அதற்கு மறுநாளும்
அரிவையரோடும் — (எல்லாப்) பெண்களோடும்
அணைந்து வந்தாய்—கலவிசெய்து வந்தாய் ;
நீ—இப்படிப்பட்ட நீ,
என் மருங்கில்—என்னருகில்
எற்றுக்கு வந்தாய்—எதுக்காக வந்தாய் ?
எம் பெருமான்—என்நாயனே !
நீ எழுந்தருள்—நீ (அவர்களிடமே) போகக்கடவை

கருத்துரை.—வேறொரு பெண்மணியின் பேச்சு இது. மல்லர்களோடு யுத்தஞ்செய்யக் கற்றாயேயன்றி என்னோடு ஶ்ருங்கார ரஸாநுபவம்பண்ணக் கற்றிலை காண் ! என்ற உபாலம்பம் தோன்ற "மற்பொரு தோளுடை வாசுதேவா !" என விளிக்கின்றனள்.

அன்றொருநாளிரவில் நீ என்னோடு ரமிப்பதாக வந்து நான் படுக்கையில் சாய்ந்தவாறே என்னை உறங்கவிட்டு நடுச்சாமத்திலே மெதுவாய் நெகிழ்ந்து போய் அன்றிரவும் மறுநாளிரவும் மற்றுள்ள பெண்களெல்லாரோடும் ஸம்ச்லேஷித்து இன்று இங்குவந்தாய் என்று இவள் சொன்னவாறே "இப்போது இவளைக் கட்டியணைத்தால் இவளது சீற்றம் ஆறிவிடும்" என்று நினைத்துக் கண்ணபிரான் நெருங்கிவர, நீ யார்யாரைத் தீண்டிவந்தாயென்றது தெரியாது, என்னைத்தீண்டாதே கடக்க நில் என்கிருள். [எம்பெருமான் ! நீ எழுந்தருளே.] பூர்வ வாஸனையாலே

'வந்தாய்' என்று வாய்தவறிச் சொல்லிவிட்டேன்; அத்தை க்ஷமித்தருளவே ணும்; தேவரீர்கள் பெரியமுதலிகள்; அப்பால் எழுந்தருளவேணும் என்கிறாள்.

மல்லரோடு பொருதவரலாறு:—கம்ஸனால் வலிய அழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் அவனது ஸபையிற் செல்லுகையில் இவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர் செய்ய, அவர்களையெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனர் என்பதாம். அன்றி, கண்ணன் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ் சென்றபொழுது துரியோதனன் ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப் பெரிய நிலவறை யொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த இரத்தினாசனமொன்றை அமைத்து அவ்வாசனத்திற் கண்ணனை வீற்றிருக்கச்சொல்ல, அங்ஙனமே ஸ்ரீகிருஷ்ணன் அதன்மேல் ஏறினமாத்திரத்திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆசனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் அப்பெருமான் மிகப்பெரிதாக விசுவரூப மெடுத்துப் பல கைகளையும் கால்களையுங்கொண்டு எதிர்க்கவே, அப்பிலவறையிலிருந்த மல்லர்கள் அழிந்தனரென்ற கதையையும் கொள்ளலாம்.

வல்வினையேன்=நீ என்னை ஒருத்தியையே விரும்பி மற்றையோரைக் கண்ணெடுத்துப் பாராமலிருப்பதற் குறுப்பான பாக்கியமற்ற நான், என்பது கருத்து.

இரண்டாமடியில், "இற்றையிரவிடை" என்றே உலகெங்கும் பாடம் நிகழினும் "அற்றை யிரவிடை" என்ற பாடமே வியாக்கியானத்திற்கும் பொருட்சேர்த்திக்கும் தகும் என்பர் பெரியோர். மோனையின்பத்தின் மிகுதியைக்கருதி இற்றை யென மாற்றினர்போலும் பின்புள்ளார். அற்றை என்ற பாடத்திலும் மோனைக்குக் குறையில்லை யென்க; 'அகன்று' என்ற சீரை நோக்குக. இன்று+இரவு, இற்றை யிரவு. அரிவை - சிறுபெண்; அர் - பலர்பால்விகுதி. (௬)

---

பையரவின்னணைப்பள்ளியினாய்! பண்டையோமல்லோம்நாம்நீயுகக்கும்
மையரியொண்கண்ணினாருமல்லோம் வைகிஎம்சேரிவரவொழிநீ
செய்யவுடையும்திருமுகமும் செங்கனிவாயும்குழலும்கண்டு
பொய்யொருநாள்பட்டதேயமையும் புள்ளுவம்பேசாதேபோகுநம்பீ! (எ)

பதவுரை.

பை அரவு இன் அணை பள்ளியினாய் — படங்களை யுடைய இனிய சேஷசயனத்திலே பள்ளிகொள்பவனே!
நம்பீ—பூர்ணனானவனே!
நாம்—நாங்கள்
பண்டையோம் அல்லோம் — (உன் மாயப் பேச்சு வலையில் அகப்படுகைக்கு) பழையபடி ஏமாந்தவர்களல்ல;
நீ உகக்கும்—நீ விரும்பத்தக்கவர்களாய்
மை—மையணிந்த
அரி ஒண்—மான் போலழகிய
கண்ணினாரும் அல்லோம்—கண்படைத்த பெண்களுமல்லோம்;
வைகி—காலவிளம்பஞ் செய்து
எம் சேரி—எமது அகத்துக்கு
வரவு ஒழி நீ—வருவதை இனி நீ விட்டிடு;

செய்ய உடையும்—அழகிய பீதாம்பரத்தையும்
திரு முகமும்— திருமுகமண்டலத்தையும்
செம் கனி வாயும்—சிவந்த கொவ்வைக்கனி போன்ற அதரத்தையும்
குழலும்—கூந்தல் முடியையும்
கண்டு—பார்த்து (அவற்றில் ஈடுபட்டு)

பொய்—உன் பொய்வார்த்தைகளில்
ஒரு நாள் பட்டதே அமையும் } ஒருநாள் பட்டபாடு போதுமே;
புள்ளுவம்—க்ருத்ரிமமான வார்த்தைகளை
பேசாதே—(மறுபடியும்) சொல்லாமல்
போகு — (உன்தேவிமார்களிடத்தே) போய்ச்சேர்.

கருத்துரை :—மற்றொரு பெண்ணின் பாசுரம் இது. கண்ணபிரான் இவளிடத்தே மிக்க மயல்கொண்டவன் போலச் சில்வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வந்தவாறே, அப்பா! உன் ஸங்கதி எனக்குத் தெரியும்; பாம்புடனே நீ நெருங்கின ஸஹவாஸம்பண்ணி அதுபோலவே நீயும் இரண்டு நாக்குப்படைத்தாய் என்பதை நான் நன்கு அறிவேன்; கீழுள்ள காலமெல்லாம் உன்மாயமந்திரப் பேச்சுக்களில் மயங்கி மோசம் போனதுபோல் இனிமேலும் மோசம் போகும்படி அத்தனை அறிவுகெட்டவளாக இப்போதும் நானிருக்கவில்லை; ஆதலால் "இவள் இன்னும் பழையபடியே யிருக்கிறாள், இவளை ஏமாத்திவிடலாம்" என்று நினைக்காதேகொள் என்று இவள் சொல்ல; அதற்குக் கண்ணபிரான் "நீ பழையவளல்லையாகிலும் நான் பழையவனாகையாலே உன்னை உகப்பேன்" என்ன; அதற்கு இவள் 'ஓ! நீ ப்ரமித்துவந்தாற் போலிருக்கிறது; நீ உகக்கிற அழகிகள் நாங்களல்லோம்; அவர்கள் வேறேயிருக்கிறார்கள், அவர்களிருப்பிடந் தேடி யோடுவாயாக; எங்களிருப்பிடத்தில் வாராதேகொள் என்றாள்.

வைகி என்றதன்கருத்துயாதெனில்;—'உங்களிருப்பிடத்திற்கு மற்றும் எத்தனையோ பேர் வருகிறாப்போலே நானுமொருவன் வந்தாலென்? என்னையேன் போகச் சொல்லுகிறாய்?' என்று கண்ணபிரான் கேட்க; 'எல்லாரும் வரும்போதில் உன்னை நான் வரவேண்டாவென்று சொல்லவில்லை; பிறர்க்கு அதிசங்கை உண்டாம்படி அகாலத்திலே வருவதைத் தான் மறுக்கிறேன்' என்கிறாள் என்க. பிறகு கண்ணபிரான் "நங்காய்! இதற்குமுன் சொல்லாத வார்த்தைகளை இன்று புதிதாகச் சொல்லுகிறாயே! என்னை வேற்றுமனிசனாக நினைத்துவிட்டாயே!" என்ன; உன் கள்ளச்செயல்களையும் க்ருத்ரிமபாஷணங்களையும் முன்பு நம்பிப் பட்டதுபோதும்; இனி வேண்டா என்கிறாள். புள்ளுவம்—வஞ்சகம். (எ)

---

என்னைவருகவெனக்குறித்திட்டு இனமலர்முல்லையின்பந்தர்நீழல்
மன்னிஅவளைப்புணரப்புக்கு மற்றென்னைக்கண்டுஊழறுநெகிழ்ந்தாய்
பொன்னிறவாடையைக்கையில்தாங்கிப் பொய்யச்சம்காட்டிநீபோதியேலும்
இன்னம்என்கையகத்துஈங்கொருநாள் வருதியேல்என்சினம்தீர்வன்நானே. (அ)

பதவுரை.

என்னை—என்னை
வருக என-(இன்னவிடத்திற்கு)வாவென்று
குறித்திட்டு—ஸங்கேதம் பண்ணிவைத்துவிட்டு,

இனம் மலர் முல்லையின் பந்தர் நீழல் } நிறைந்த மலர்களையுடைய முல்லைப் பந்தலின் நிழலிலே

மன்னியவளை— (வெகுகாலமாய்ப்) பதங்கி நின்ற ஒருத்தியை
புணர புக்கு— ஸம்ச்லேஷிக்கப்போய்
மற்று என்னை கண்டு—பிறகுஎன்னைப் [பார்த்து
உழறு—கலங்கி
நெகிழ்ந்தாய்—அப்பாலே நழுவினாய் ;
பொன் நிறம் ஆடையை—பீதாம்பரத்தை
கையில் தாங்கி—கையிலே தாங்கிக்கொண்டு
பொய்—பொய்யாக
அச்சம் காட்டி—நீ எனக்கு அஞ்சினதாக நான் பாவிக்கும்படி செய்து கொண்டு

நீ போதி ஏலும்—நீ (என்கைக்கு அகப்படாமல்) ஓடிப்போன போதிலும்
இன்னம்—இனி
ஈங்கு—இங்கே
என் கை அகத்து—என்னிடத்திற்கு
ஒரு நாள் வருதி ஏல்—ஒருநாளாகிலும் வருவாயாகில்
(அப்போது)
நான் என் சினம் தீர்வன் } நான் என்கோபத்தைத் தீர்த்துக்கொள்வேன்.

கருத்துரை :—மற்றொரு பேதையின்பேச்சு இது. எனக்கு முன்னமே ஒருத்தியை ஒரு முல்லைப் பந்தலிலேவந்து நிற்கும்படி ஸங்கேதம் செய்துவிட்டுப் பிறகு தாக்ஷிண்யத்திற்காக என்னையும் ஓரிடத்தே வருமாறு குறிப்பிட்டு வைத்தாய் ; அவள் அங்கே குடில்கட்டி நெடும்போதாகக் காத்திருந்தாள், அவளோடே அணைவதற்காக நீ போனவாறே உன்னை அடியொற்றிப் பின்னேவந்த என்னைக் கண்டு கலங்கி யெழுந்து, மேலே போட்டிருந்த பீதகவாடையையும் கையிலே எடுத்துக்கொண்டு என்னிடத்தில் அஞ்சினவன்போல நடித்து ஓடிப்போனாய். இச்சமயம் தப்பிக்கொண்டு போனாலும் மற்றொருசமயம் நீ என்கையில் அகப்படாமற்போகாய், அப்போது நான் என் கோபத்தைத் தணித்துக்கொள்ளும் வழி தேடுவேன் கிடாய் என்கிறாள்.

[என்சினம் தீர்வன் நானே] என்கிறவிடத்தைக் கோயிலில் திருவத்யயநோத்ஸவத்தில் 'உய்ந்த பிள்ளை' என்பாரொரு அரையர் அபிநயிக்கும்போது, கையாலே அடிப்பதும் காலாலே துவைப்பதுமாய் அபிநயித்தார் ; அதாவது - மறுபடியும் நீ என்கையில் அகப்படும்போது உன்னை நான் கையாலடித்தும் காலால் துகைத்தும் என் கோபத்தைத் தணித்துக்கொள்வேன் என்பதாகக் கருத்தை விரித்தார். அப்போது கோஷ்டியி லெழுந்தருளியிருந்த எம்பார் இங்ஙனே அரையர் காட்டிய அபிநயத்தைக் கடாக்ஷித்து அரையர்க்கு ரஸிக்யம் போராதென்று திருவுள்ளம் பற்றி, 'கெடுவாய்! அப்படி அவள் செய்தாளாகில் "ஊலிராவிஷூநம மொவிகாதாவநம" என்றிருக்கிற கண்ணனுக்கு அது வருத்தமோ? வேப்பிலை யுருண்டையோ? இது அவனுக்கு ஸுஹாவமாகுமன்றோ. ஆகையால் அதுவன்று கருத்து ; முகங்கொடுக்காமல் முகத்தை மாறவைத்து என் கோபத்தைத் தணித்துக்கொள்வேன் என்னுங் கருத்துத்தோன்ற, கையிட்டு முகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டவேணுமென்று தாம் அவ்வாறாக அபிநயித்துக் காட்டினார் என்று ப்ரஸித்தம். (அ)

---

மங்கலநல்வனமாலைமார்விலிலங்க மயில்தழைப்பீலிசூடிப்
பொங்கிளவாடை அரையில்சாத்திப் பூங்கோத்துக்காதில்புணரப்பெய்து
கொங்குநறுங்குழலார்களோடு குழைந்துகுழலினிதூதிவந்தாய்
எங்களுக்கே ஒருநாள்வந்தூத உன்குழலின்னிசைபோதராதே. (கூ)

மங்கலம்—மங்களகரமாய்
நல்—விலக்ஷணமான
வனமாலை—வனமாலையானது
மார்பில்—மார்விலே
இலங்க—ப்ரகாசிக்க,
மயில் தழைப் பீலி—மயிலிறகுகளை
சூடி—சூடிக்கொண்டும்
பொங்கு இள ஆடை—பளபளவென்ற மெல்லிய ஆடையை
அரையில் சாத்தி — அரையிலே சாத்திக்கொண்டும்.
பூ கொத்து—பூங்கொத்துக்களை
காதில்—காதிலே
புணரப் பெய்து—மிகவும் பொருந்த அணிந்து கொண்டும்,
கொங்கு நறு குழலார்களோடு } தேன்மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்களோடு
குழைந்து—ஸம்ச்லேஷித்து (அத்தாலுண்டான ஸந்தோஷத்துக்குப் போக்குவீடாக)
குழல்—புல்லாங்குழலை
இனிது ஊதி வந்தாய்—போக்யமாக ஊதிக்கொண்டு வந்தாய்;
ஒரு நாள்—ஒரு நாளாகிலும்
எங்களுக்கே—எங்களுக்காக
வந்து ஊத—வந்து ஊதும்படி
உன் குழலின் இசை — உனது குழலின் இசையானது
போதாது—வரமாட்டாதுகாண்.

கருத்துரை :—வேறொரு ஆய்ச்சியின்பேச்சு இது. கண்ணபிரானே! உனது திருமேனிக்கு இயற்கையான அழகே போதுமாயிருக்க அதற்குமேல் செயற்கையான அழகையும் அமைத்துக்கொண்டு அவ்வழகினால் பல பெண்களைத் தோற்பித்து அவர்களுடன் கலவிசெய்து அக்கலவியாலுண்டான களிப்புக்குப் போக்குவீடாகவும், அந்த ஸந்தோஷத்தை எனக்குக் காட்டி என் வயிற்றெரிச்சலைக் கிளப்புவதற்காகவும் புல்லாங்குழலை ஊதிக்கொண்டு இங்ஙனே வாராநின்றாய்; இப்படி அவர்களுக்கென்று ஊதுகிற குழலின் ஓசை எனக்காக ஒருநாளாகிலும் உண்டாகுமோ! என்று நானும் நெடுநாளாகப் பாரித்துக்கொண்டிருக்கிறேன்; அது மாத்திரம் கிடையாது என்று தன் வருத்தந் தோற்றச்சொல்லுகிறாள்.

இங்கே வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"குழலோசை யென்றும் ஸம்ச்லேஷமென்றும் பர்யாயமிறே; எங்களோடு ஸம்ஶ்லேஷம் உனக்குப் பொருந்ாதென்கிறார்கள்." (கூ)

---

அல்லிமலர்த்திருமங்கைகேள்வன் தன்னைநயந்து இளவாய்ச்சிமார்கள்
எல்லிப்பொழுதினில் ஏமத்தூடி எள்கியுரைத்த உரையதனைக்
கொல்லிநகர்க்கிறைகூடற்கோமான் குலசேகரன் இன்னிசையில்மேவிச்
சொல்லிய இன்தமிழ்மாலைபத்தும் சொல்லவல்லார்க்கு இல்லைதுன்பந்தானே. (க0)

பதவுரை.

இள ஆய்ச்சிமார்கள் — இளமை தங்கிய இடைப்பெண்கள்
அல்லி மலர் திரு மங்கை கேள்வன் தன்னை நயந்து } தாமரைப்பூவில் பிறந்த பிராட்டிக்குக் கொழுநனான கண்ணபிரானை ஆசைப்பட்டு,
எல்லி ஏமப் பொழுதினில் } ராத்ரியின் நடுச்சாமத்திலே
ஊடி—ப்ரணய கலஹம்பண்ணி
எள்கி—ஈடுபட்டு
உரைத்த—சொன்ன
உரை அதனை—பாசுரங்களை (உட்கொண்டு)
கொல்லி நகர்க்கு இறை } கொல்லி என்னும் நகரத்துக்குத் தலைவரும்
கூடல் கோமான்—மதுரைக்கு அரசருமான
குலசேகரன்—குலசேகராழ்வார்

இன் இசையில் மேவி — இனிய பண்ணிலே பொருந்த
சொல்லிய—அருளிச்செய்த
இன் தமிழ்—பரம போக்யமான தமிழாலா [கிய
மாலை—மாலாரூபமான
பத்தும்—இப்பத்துப்பாட்டையும்
சொல்ல வல்லார்க்கு—ஓத வல்லவர்களுக்கு
துன்பம் இல்லை—ஸம்ஸார துக்கம் அணுகாது.

கருத்துரை :—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது இப்பாசுரம். திருவாய்ப்பாடியிலுள்ள இளம்பெண்கள் ஸ்ரியபதியான கண்ணபிரானை ஆசைப்பட்டு அவ்வாசைக்கிணங்க மநோரதம் நிறைவேறப்பெறுமையாலே ப்ரணயரோஷம் தலையெடுத்துச் சொன்ன சொற்களைக் குலசேகராழ்வார் தம் பாசுரமாக அருளிச்செய்த இத்திருமொழியைக் கற்பவர்கள் விச்சேதமற்ற பகவதநுபவத்தைப் பெற்று மகிழ்வார் என்றபடி. ... ... ... *

---

அடிவரவு :—ஏர் செண்டை கரு தாய் மின் மற்பொரு பையரவின் என்னை பங்கல அல்லி ஆலை.

ஆறாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாந்திருமொழி - ஆலைநீள் கரும்பு.



திருவாய்ப்பாடியில் இடைப்பெண்கள் கண்ணபிரானோடு ஊடல்கொண்டு உரைத்த பேச்சுக்களால் நிகழ்ந்தது கீழ்த்திருமொழி; கண்ணபிரானுடைய குழந்தைத் திருவிளையாடல்களை யசோதை கண்டு களித்தாற்போலத் தான் கண்டு களிக்கப்பெறாமல் இழந்த தேவகியார் பின்பு கண்ணனைக் கண்டபொழுது கழிவிரக்கத்தோடு பேசின பேச்சுக்களாற் செல்லுகிறது, இத்திருமொழி. *

---

ஆலைநீள்கரும்பன்னவன்தாலோ அம்புயத்தடங்கண்ணினன்தாலோ
வேலைநீர்நிறத்தன்னவன்தாலோ வேழப்போதகமன்னவன்தாலோ
ஏலவார்குழலென்மகன்தாலோ என்றென்று உன்னை என்வாயிடைநிறையத்
தாலோலித்திடும்திருவினையில்லாத் தாயரில்கடையாயினதாயே. (க)

பதவுரை.

அலை நீள் கரும்பு அன்னவன் — ஆலையிலிட்டு ஆடத்தகுந்த நீண்ட கரும்பு போன்ற கண்ணனே!
தாலோ—(உனக்குத்) தாலாட்டு;
அம்புயம்—தாமரைபோன்று
தட கண்ணினன்—விசாலமான திருக்கண்களை யுடையவனே!
தாலோ—தாலேலோ;
வேலை நீர் நிறத்து அன்னவன் — கடலின் நிறம்போன்ற நிறத்தையுடையவனே!
தாலோ—தாலேலோ;
வேழம் போதகம் அன்னவன் — யானைக்குட்டி போன்றவனே!
தாலோ—தாலேலோ;
ஏலம் வார் குழல் — பரிமளம் மிக்கு நீண்ட திருக்குழலையுடைய
என் மகன்—என் மகனே!
தாலோ—தாலேலோ;
என்று என்று—இப்படி பலகாலுஞ் சொல்லி
என் வாயிடை நிறைய—என் வாய் த்ருப்தியடையும்படி
உன்னை—உன்னை
தால் ஒலித்திடும் திருவினை இல்லா தாயரில் — தாலாட்டுகையாகிற ஸம்பத்து இல்லாத தாய்மார்களில்
கடை ஆயின தாய்—கடையான தாயாயினேன் நான் (என்கிறள் தேவகி.)

கருத்துரை:—பன்னிரண்டு மாதம் உன்னை வயிற்றிற் சுமந்து பெற்ற நான் உடனே திருவாய்ப்பாடிக்குப் போக்கிவிட்டேனாதலால், உன்னைத் தொட்டிலிட்டுத் தாலாட்டுதல் முதலிய ஆநந்தாநுபவங்களை யசோதை பெற்றாளே யன்றி, நான் பெறுதொழிந்தேன், பாவியே னிழந்தேன், பிள்ளையைப் பெற்று ஆநந்தாநுபவம் பண்ணப்பெறாத துரத்ருஷ்டசாலிநிகளான தாய்மாரில் அந்தோ! நான் கடைகெட்ட தாயாகிவிட்டேனே! என்று தேவகி தன் வயிற்றெரிச்சலைக் கண்ணபிரானை நோக்கிக் கூறுகின்றன ளென்க.

"ஆலைநீள் கரும்பன்னவன்" என்று தொடங்கி "ஏலவார் குழலென்மகன்" என்றளவுமுள்ள ஐந்து விளிகளும் அண்மை விளி. குழந்தையைத் தொட்டிலிட்டுத் தாலாட்டும்போது தாய்மார் முதலியோர் பாராட்டிச் சொல்லும் பாசுரம் இவை. ஆலையிலிட்டு ஆடத்தகுந்த கரும்பு என்றது - நன்றாக முற்றி ரஸம் நிரம்பிய கரும்பு என்றவாறு; அதுபோன்றவனே! என்றது - "ரஸோ வை ஸ:" என்று உபநிஷத்தில் ஓதியுள்ளபடி - இன்சுவையே உருவெடுத்து வந்தாற்போலுள்ளவனே! என்றபடி: "கனியைக் கரும்பினின் சாற்றை" "அமுதம்பொதி இன்சுவைக் கரும்பினை" என்றார் மாறனும் கலியனும்.

அம்புயம் = அம்புஜ மென்ற வடசொல் திரிபு; தண்ணீரில் தோன்றுவது என்பது பொருள்; இச்சொல் யோகரூடியால் தாமரையை யுணர்த்தும்.

வேழப்போதகம்="போதகந் துடியடி க்கயமுனிகன்றும்" என்ற திவாகர நிகண்டின்படி போதகம் என்ற சொல்தானே யானைக்குட்டியை உணர்த்தவற்றாயிருக்க, "வேழப்போதகம்" என்றது - "கரிகலப:" என்னும் வடநூலார் வ்யவஹாரத்தை அடியொற்றியதாமென்ப: அன்றி, "போத: பாக: ஸிசு: ஸாவ:" ... (அமரம்) என்ற நிகண்டின்படி குட்டியின் பொதுப்பெயராகிய போத மென்ற வடசொல் சுப்ரத்யயமேற்றுப் போதக மென்றாய் வேழத்தின் குட்டி என்று பொருள்தருகின்ற தென்றலும் சேரும்

தாலோ=தால் - நாக்கு ; குழந்தைகளை உறங்கப்பண்ணுவதற்காகப் பெண்கள் நாவை அசைத்துச் சொல்லும் சொலவு.

திருவினை=திரு இன் ஐ=திரு - பாக்கியம் ; இன் - சாரியை ; ஐ - இரண்டனுருபு. அன்றி, திரு வினை, என்று பிரித்தும் ஸுக்ருதமென்று பொருள் கொள்ளலாம்

"[தாயரில் கடையாயினதாயே.] பெறுகைக்கு நோன்பு நோற்றுப் பெற்று வைத்து அநுபவத்தில் குறைய நிற்கையாலே, பிள்ளைகளைப் பெற்று அநுபவிக்கும் தாய்மாரெல்லாரிலும் கடையானேனிறே நான்" என்ற வியாக்கியான ஸூக்தி அறியத்தக்கது. (க)

---

வடிக்கோளஞ்சனமெழுதுசெம்மலர்க்கண் மருவிமேலினிதொன்றினைநோக்கி
முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள் பொலியும்நீர்முகிற்குழவியேபோல
அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்தும் அங்கையோடு அணைந்து ஆனையிற்கிடந்த
கிடக்கைகண்டிடப்பெற்றிலேன்அந்தோ! கேசவா! கெடுவேன் கெடுவேனே. (உ)

பதவுரை.

வடிக்கொள்—கூர்மையை யுடைத்தாய்
அஞ்சனம் எழுது—மையிடப் பெற்றதாய்
செம் மலர்-செந்தாமரை மலரை ஒத்ததான
கண்—கண்களாலே
மேல் ஒன்றினை—மேற்கட்டியிலே தொங்கவிட்டிருக்கும் கிளி முதலியவற்றில் ஒரு வஸ்துவை
இனிது—இனிதாக
மருவி நோக்கி—பொருந்திப் பார்த்துக்கொண்டும்,
கரு தாள்—கறுத்த புறந்தாளை யுடையதும்
மலர்—செந்தாமரை மலரையொத்து
சிறு—சிறுத்த
சே அடி-சிவந்த அகவாயை உடையதுமான திருவடிகளை
முடக்கி—முடக்கிக்கொண்டும்,
நீர் பொலியும்—(கழுத்தளவும் பருகின) நீர் விளங்கப்பெற்ற
முகில் குழவி போல—மேகக்குட்டி போல,
செம் சிறு விரல் அனைத்தும்—அழகிய சிறுத்த திருவிரல்களெல்லாவற்றையும்
அம் கையோடு—உள்ளங்கையிலே
அடக்கி ஆர—அடங்கும்படி
அணைந்து—முடக்கிப் பிடித்துக்கொண்டும்
ஆனையின் கிடந்த கிடக்கை—ஆனை கிடக்குமாபோலே பள்ளிகொண்டருளு மழகை
கண்டிடப் பெற்றிலேன்—கண்டு அநுபவிக்கப் பெறாத பாவியானேன் ;
அந்தோ—ஐயோ !
கேசவா—கண்ணபிரானே !
கெடுவேன் கெடுவேன்—ஒன்று மநுபவிக்கப் பெறாத பெரும்பாவியானேன்.

கருத்துரை :—தாயாயிருந்து தாலாட்டும் பாக்கியத்தை மாத்திரமேயோ நானிழந்தது? நீ தொட்டிலிற் சாய்ந்திருக்கு மழகை ஊர்ப்பெண்களெல்லாருந் திரண்டு வந்து கண்டு களித்துப்போவர்களே ; அவர்களில் ஒருத்தியா யிருந்தாகிலும் நான் அவ்வழகைக் காணப்பெற்றேனோ? அக்கேடு மில்லையே! ஐயோ! என்கிறாள்.

குழந்தைகள் தொட்டிலில் கிடக்கும்போது இருக்கக்கூடிய இயல்வைச் சொல்வன மூவடிகளும். குழந்தைகள் தொட்டிலில் அண்ணாந்து பார்த்துக் கொண்டு கிடக்குமாதலால் வேறு நினைவின்றி மேலே உற்றுநோக்குதற்காகத் தொட்டிலின்மீது கிளிச்சட்டம் தொங்கவிட்டு வைப்பர்கள் ; அதில் மிக அழகான

ஒரு வஸ்துவை உற்றுநோக்கிக்கொண்டு களித்திருத்தல் குழந்தைகளின் இயல்வு; அதனைக்கூறுவது முதலடி. கூர்மைபொருந்தியதாயும் மையிடப் பெற்றதாயும் செந்தாமரை போன்றதாயுமுள்ள கண்ணாலே மேற்கட்டியிலுள்ளதொரு வஸ்துவை இனிதாகப் பார்த்துக்கொண்டு என்க

தொட்டிலில் கிடக்கும் விதம் சொல்லுகிறது மேல். மேற்புறம் கறுத்து உட்புறம் சிவந்துள்ள திருவடிகளை முடக்கிக்கொண்டும், கைவிரல்களை முடக்கிக் கொண்டும், 'மேகக்குட்டி கிடக்கிறதோ! ஆனைக்குட்டி கிடக்கிறதோ!' என்று விகற்பிக்கலாம் படியாக நீ தொட்டிலில் சாய்ந்திருக்கும் போதை யழகை அநுபவிக்கப் பெறாது இழந்தேனே!

"முன்பு மலடுநின்று இழந்தேன், பின்பு பெற்றுவைத்தே அநுபவிக்கப் பெறாதே இழந்தேன், இரண்டாலும் மஹாபாபியிறே நான்" என்ற வியாக்கியான ஸூக்தி நோக்கத்தக்கது.

"வடிக்கொளஞ்சனம்" என்ற விடத்திற்கு, திருக்கண்ணுக் கீடாக வடிக்கப்பட்ட அஞ்சனமென்றும் பொருள் கூறுப. அஞ்சனம் - வடசொல். கண் - மூன்றும் வேற்றுமைத் தொகை. இனி தோன்றினை - அழகான ஒரு வஸ்துவை என்றுமுரைக்கலாம். ஆனைபிற்கிடந்த=இன் - உவமவுருபு; ஆனை போல. (௨)

---

முந்தைநன்முறையன்புடைமகளிர் முறைமுறைதந்தம்குறங்கிடையிருத்தி
எந்தையே! என்தன்குலப்பெருஞ்சுடரே! எழுமுகில்கணத்தெழில்கவரேறே!
உந்தையாவனென்றுரைப்ப நின்செங்கேழ் விரலினும்கடைக்கண்ணினும்காட்ட
நந்தன்பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன்வசுதேவன்பெற்றிலனே. (௩)

பதவுரை.

அன்பு உடை—ப்ரீதியை யுடையவர்களான
முந்தை நல் முறை மகளிர்—பரம்பரையாக வருகிற நல்ல உறவு முறையையுடைய பெண்கள்
தம் தம் குறங்கிடை—தங்கள் தங்கள் துடைகளிலே
முறை முறை—க்ரமம் க்ரமமாக
இருத்தி—வைத்துக்கொண்டு
எந்தையே—"என் அப்பனே!
என்தன் குலம் பெரு சுடரே—எங்கள் குலத்துக்குப் பெருத்ததொரு விளக்கானவனே!
எழு முகில் கணத்து—(கடலில் நீரை முகந்துகொண்டு) மேலெழுகின்ற மேகஸமூஹத்தினுடைய
எழில் கவர்—அழகைக் கவர்ந்துகொண்ட
ஏறே—காளை போன்றவனே!" (என்றிப்படி பலவாறாகத் துதித்து)
உந்தை யாவன் என்று உரைப்ப—'உன் தகப்பனார் யார்? காட்டு,' என்றவளவிலே
நின்—உன்னுடைய
செம் கேழ் விரலினும்—சிவந்து சிறந்த விரலினாலும்
கடை கண்ணினும்—கடைக் கண்ணாலும்
காட்ட—(இன்னார் என் தகப்பனார் என்று) காட்ட,
(அந்தப் பாக்கியத்தை)
நந்தன் பெற்றனன்—நந்தகோபர் பெற்றார்;
நல் வினை இல்லா நங்கள் கோன்—பாக்யஹீநையான என்னுடைய பர்த்தாவான
வசுதேவன்—வஸுதேவர்
பெற்றிலன்—(நந்தகோபர் பெற்ற பாக்கியத்தைப்) பெறவில்லை

கருத்துரை:—ஒரு வீட்டில் ஒரு குழந்தை பிறந்ததென்றால் ஸம்பந்தமுடைத்தா ரெல்லாரும் வரிசை வரிசையாக வந்து குழந்தையை எடுத்துத் தம் தம்

துடைமீது இட்டுக்கொண்டு 'என் நாயனே! என் குலவிளக்கே! என் கண்மணியே!' என்றிப்படி பலவாறாகப் புகழ்ந்து கூறி, 'என் செல்வமே! உன் தகப்பன் யார்? காட்டு பார்ப்போம்' என்று கேட்குமளவில் குழந்தை தன் விரலாலும் கடைக்கண்ணாலும் தன் தந்தையைக் காட்டுவது வழக்கம்; அவ்வாறு ஸ்ரீ க்ருஷ்ண ஶிஶுவைக் கேட்கும்போது, பெற்ற தகப்பனாகிய வஸுதேவனைக் காட்ட வேண்டியது ப்ராப்தமாயிருக்கவும் பிறந்தது முதலாக நந்தகோபர் மாளிகையிலேயே வளர்ந்ததுபற்றி அந்த நந்தகோபரை யன்றி வேறொருவரைத் தந்தையென்றறியாமையால் அவரையே தனக்குத் தந்தையாகக் காட்டி னாக வடுக்கும் என்றெண்ணிய தேவகி, அந்தோ! பரமபாக்யஶாலினியான யசோதையைக் கைப்பிடித்த பாக்யத்தாலே "இவன் என் தகப்பன்" என்று விரலாலும் கண்ணாலும் காட்டும்படியான அத்ருஷ்டத்தை நந்தகோபன் பெற்றான்; பெரும் பாவியான என்னைக் கைப்பிடித்த கொடுமையாலே வஸுதேவன் இழந்தான்! என்று சொல்லி வயிறெரிகிறாள்.

முந்தை நல்முறை - அநாதி பரம்பரையாக வருகிற உறவு முறை. முறை முறை - ஒவ்வொருத்தியாக என்றபடி. குறங்கு - துடை. எந்தை, உந்தை - என் தந்தை, உன் தந்தை; மரூஉ மொழி. எழுமுகில் - ஏழு வகைப்பட்ட மேகம் என்று முரைக்கலாம்; ஏழு மேகவகையின் பெயர் - "புட்கலாவர்த்தம் - சங்காரித்தம், ஆவர்த்தம், சம் - வர்த்தம் துரோணம், காளமுகியோடு நீலவருணமென, ஏழு முகிலின் பெயராகும்மே" என்ற திவாகரத்தாலறிக. (௩)

---

களிநிலாவெழில்மதிபுரைமுகமும் கண்ணனே! திண்கைமார்வும்திண்தோளும்
தளிர்மலர்க்கருங்குழல்பிறையதுவும் தடங்கொள்தாமரைக்கண்களும்பொலிந்த
இளமையின்பத்தை இன்று என்தன்கண்ணால் பருகுவேற்கு இவள்தாயெனநினைந்த
அளவில்பிள்ளைமையின்பத்தையிழந்த பாவியேனெனதாவிநில்லாதே. (௪)

பதவுரை.

கண்ணனே—ஸ்ரீ க்ருஷ்ணனே!
களி நிலா—ஆநந்தத்தை விளைக்கும் நிலாவையுடைய
எழில் மதி புரை—பூர்ண சந்திரனை ஒத்த
முகமும்—திருமுகமும்
திண் கை—திண்ணிதான திருக்கைகளும்
மார்வும்—திருமார்பும்
திண் தோளும்—வலிமை பொருந்திய திருத்தோள்களும்
தளிர் மலர் கரு குழல்—தளிரையும் மலரையு முடைத்தாய்க் கறுத்த திருக்குழற் கற்றையும்
பிறை அதுவும்—அஷ்டமீ சந்திரன் போன்ற திருநெற்றியும்,
தடங் கொள்—விசாலமான
தாமரை கண்களும்—தாமரைபோன்ற திருக்கண்களும் (ஆகிய இவை)
பொலிந்த இளமை இன்பத்தை—அழகுபெற்று விளங்கும்படியான யௌவனாவஸ்தையின் போக்யதையை
இன்று—இப்போது
என் தன் கண்ணால்—என்னுடைய கண்ணாலே
பருகுவேற்கு—(நான்) அநுபவியா நின்றாலும்
இவள் தாய் என நினைந்த—'இவன் என்னுடைய) தாய்' என்று நினைப்பதற்குத் தகுதியான
பிள்ளைமை—சைசவப் பருவத்திலுண்டான
அளவு இல் இன்பத்தை—அளவில்லாத ஆநந்தத்தை
இழந்த—அநுபவிக்கப் பெறாமல் இழந்த
பாவியேன் எனது—பாவியான என்னுடைய
ஆவி—உயிரானது
நில்லாது=தரித்து நிற்க வழியில்லையே!

கருத்துரை :—கண்ணபிரானே! செறிந்த நிலாவையுடைய பூர்ண சந்திரன் போன்ற திருமுகமும் திண்ணிதான திருக்கையும் திருமார்வும் திருத்தோளும் திருக்குழலும் திருநெற்றியும் திருக்கண்களுமாகிய இவ்வவயவங்களின் சோபைகளால் விளங்கா நின்றுள்ள உனது யௌவந பருவத்திலழகை இப்போது நான் கண்ணாரக் கண்டநுபவியா நின்றேனாகிலும், தாயாரொருத்தியையே யன்றி வேறொருத்தரையு மறியாத இளம்பருவ [ஶைஶவ]த்தை அநுபவிக்கப் பெறாமற்போனேனே! என்கிற அநுதாபமே என் நெஞ்சைக் கொள்ளை கொண்டிருப்பதனால் இப்போது அநுபவிக்கப் பெற்றது ஒரு பொருளாகத் தோன்றாமல் கழிவிரக்கமே என்னைப் புண்படுத்தா நின்றதென்கிறாள்.

மதிபுரை=புரை - உவமவுருபு. இளமையின்பம் - யௌவந ரஸம். கண்ணபிரான் யௌவநபருவ மடைந்த பின்பு தேவகியின் கண்ணுக்கு விஷயமாக, அப்போது அவனை நோக்கித் தேவகி தன் அநுதாபத்தைக் கூறும் பாசுரம் இத்திருமொழி - என்பது இப்பாட்டினால் நன்கு வெளியா மென்க. (௪)

---

மருவும்நின்திருநெற்றியில்சுட்டியசைதர மணிவாயிடைமுத்தம்
தருதலும் உன்தன்தாதையைப்போலும் வடிவுகண்டுகொண்டு உள்ளம் உள்குளிர
விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்து வெகுளியாய்நின்றுரைக்கும் அவ்வுரையும்
திருவிலேன் ஒன்றும்பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கையசோதைபெற்றாளே. (௫)

பதவுரை.

நின் திருநெற்றியில்—உன்னுடைய திருநெற்றியிலே
மருவ—பொருந்தி யிருக்கிற
சுட்டி-சுட்டியானது
அசைதர—அசையும்படி
மணி வாயிடை—அழகிய வாயிலுண்டான
முத்தம் தருதலும்—முத்தத்தைக் கொடுப்பதென்ன,
உன்தன் தாதையை போலும்—உன்னுடைய தகப்பனைப் போன்ற
வடிவு—(உன்) வடிவழகை
கண்டுகொண்டு—(நான்) பார்த்து
உள்ளம் உள் குளிர—(என்) மனஸ்ஸானது உள்ளே குளிரும்படி
செம் சிறு வாயிடை—சிவந்த சிறிய திருவாயிலே
விரலை சேர்த்து—விரல்களை வைத்துக்கொண்டு
வெகுளியாய் நின்று உரைக்கும் அ உரையும்—(நீ) சிற்றத்தோடே சொல்லுகிற மழலைச் சொற்களென்ன (ஆகிய இவற்றிலே)
ஒன்றும்—ஒன்றையும்
திரு இலேன்—பாக்யமற்றவளான நான்
பெற்றிலேன்—அநுபவிக்கப் பெறவில்லை;
தெய்வ நங்கை எசோதை—'தெய்வமாது' என்று சொல்லலாம் படியான யசோதைப் பிராட்டி
எல்லாம் பெற்றாளே—(அந்த பால்யசேஷ்டிதங்கள்) எல்லாவற்றையும் அநுபவிக்கப் பெற்றாளே!.

கருத்துரை :—திருநெற்றியிலே கூடப் பிறந்தாற்போல அமைந்து விளங்கும் சுட்டியானது அசையும்படி நீ முத்தங்கொடுப்பதையும் இழந்தேன்; "நம் குழந்தையின் முகம் தகப்பனுடைய முகம்போலவே யிருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டு உனது முகத்தைச் சந்தோஷமாகப் பார்த்து நிற்கும்போது. நீ விரல்களை வாயினுள்ளே வைத்துக்கொண்டு பால்யோசிதமாகச் சீற்றம் தோற்றச் சொல்லும் மழலைச் சொற்களையும் நான் கேட்கப்பெறாமல் இழந்தேன்; இழப்பதற்கு

நாளொருத்தி ஏற்பட்டாற்போலே அநுபவிப்பதற்கு யசோதைப் பிராட்டி யென்பாளொருத்தி ஏற்பட்டாள், உன் லீலா ரஸங்களெல்லாவற்றையும் அவளே பெற்றனள் என்கிறாள்.

"முத்தம் தருதலும், உரைக்கு மவ்வுரையும் ஒன்றும் பெற்றிலேன்" என்று அந்வயம். வெளியாய் நின்று - சிறுபாறென்று பேசுதல் குழந்தைகளின் இயல்வாம். யசோதை ஒருவித நோன்பும் நோற்காதே யாத்ருச்சிகமாகவே கண்ணபிரானுடைய அதிமாநுஷ ஸீலவ்ருத்த வேஷங்களனைத்தையுங் காணப்பெற்றமை பற்றித் தெய்வநங்கை எனப்பட்டாள். "குழலினிதியாழினிதென்பர் தம்மக்கள், மழலைச் சொற்கேளாதவர்." (குறள்.) (நு)

---

தண்ணந்தாமரைக்கண்ணனே! கண்ணா! தவழ்ந்தெழுந்துதளர்ந்ததோர்நடையால்
மண்ணில்செம்பொடியாடிவந்து என்தன் மார்வில்மன்னிடப்பெற்றிலேன் அந்தோ!
வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்ட அடிசிலின்மிச்சில்
உண்ணப்பெற்றிலேன் ஓ! கொடுவினையேன் என்னைஎன்செய்யப்பெற்றது எம்மோயே!

பதவுரை.

தண் அம் தாமரை கண்ணனே — குளிர்ந்த அழகிய தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனே!
கண்ணா — கண்ணபிரானே!
தவழ்ந்து — (நீ) தவழ்ந்துகொண்டு
எழுந்து — எழுந்திருந்து
தளர்ந்தது ஓர் நடையால் — தட்டுத் தடுமாறி நடப்பதாகிற ஒரு நடையினால்
செம் மண் பொடியில் — சிவந்த புழுதி மண்ணிலே
ஆடி — விளையாடி
வந்து — (அக்கோலத்தோடே) வந்து
என் தன் மார்வில் — என்னுடைய மார்விலே
மன்னிட பெற்றிலேன் — நீ அணையும்படியான பாக்கியத்தைப் பெற்றிலேன்
அந்தோ — இஃது என்ன தௌர்ப்பாக்கியம்!
வண்ணம் செம் சிறு — அழகு பெற்றுச் சிவந்து சிறிதான
கை விரல் அனைத்தும் — கைவிரல்களெல்லாவற்றாலும் [வற்றாலும்]
வாரி — வாரிக்கொண்டு
வாய்க்கொண்ட — அமுது செய்த
அடிசிலின் — ப்ராஸாதத்தினுடைய
மிச்சல் — சேஷத்தை
உண்ண பெற்றிலேன் — (நான்) உண்ணப் பெறவில்லை;
கொடு வினையேன் — (இவற்றை யெல்லாம் நான் இழக்கும்படியாக) மஹா பாபத்தைப் பண்ணினேன்;
ஓ — ஐயோ!
எம் மோய் — என் தாயானவள்
என்னை — என்னை
என் செய்ய — எதுக்காக
பெற்றது — பெற்றாளோ!.

கருத்துரை:—குளிர்ந்த அழகிய தாமரைப்பூப்போலே அலர்ந்த திருக்கண்களையுடைய கண்ணபிரானே! நீ செம்மண்ணிலே புழுதியளைந்து விளையாடும்போது தவழ்ந்து செல்வதனையும் தட்டுத் தடுமாறித் தரையில் காலூன்றியூன்றியும் நடப்பதனையும் புழுதி மண்ணை அளைந்த அக்கோலத்தோடே வந்து என் மார்விலே கட்டிக்கொண்டு கிடக்கப்பெற்றிலேனே! எல்லாத் திருவிரல்களாலும் ப்ரஸாதத்தை வாரி அமுது செய்யும்போது வாயது கையதாக மிகுந்த ப்ரஸாதத்தையு முண்ணப் பெற்றிலேனே! ஆட்டின் கழுத்தில் முலைபோலே என்னை என் தாய் வீணாகவேயன்றோ பெற்றாளென்கிறாள்.

"செம்மண் பொடியில் தவழ்ந்து ஆடி, எழுந்து தளர்ந்ததோர் நடையால் வந்து என்றன் மார்வில் மன்னிடப் பெற்றிலேன்" என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுதல் சாலச் சிறக்கும். இப்பாட்டின் முன்னடிகட்கு

"மக்கண் மெய்தீண்டலுடற்கின்பம்" என்னுங் குறளையும், பின்னடிகட்கு
"அமிழ்தினு மாற்ற வினிதே தம் மக்கள் சிறுகை யளாவிய கூழ்"
என்னுங் குறளையும் நினைக்க. (௬)

---

குழகனே! என்தன்கோமளப்பிள்ளாய்! கோவிந்தா! என்குடங்கையில்மன்னி
ஒழுகுபேரெழிலிளஞ்சிறுதளிர்போல் ஒருகையால் ஒருமுலைமுகம்நெருடா
மழலைமென்னகையிடையிடையருளா வாயிலேமுலையிருக்க என்முகத்தே
எழில்கொள்நின்திருக்கண்ணிணை நோக்கந்தன்னையும் இழந்தேன் இழந்தேனே. (௭)

பதவுரை.

குழகனே—எல்லாரோடும் கலக்கும் ஸ்வபாவமுடையவனே!
என் தன் கோமளம் பிள்ளாய்—என் வயிற்றில் பிறந்த அழகிய குமாரனே!
கோவிந்தா—கோவிந்தனே!
என்—என்னுடைய
குடங்கையில் மன்னி—குடங்கையிலே பொருந்தி யிருந்து
ஒழுகு பேர் எழில்-வெள்ளமிடாநின்ற மிக்க அழகையுடைத்தாயும்
இள சிறு தளிர் போல்—மிகவும் இளசான தளிர்போன்றதுமான
ஒரு கையால்—ஒரு திருக்கையாலே
ஒரு முலை முகம்—(என்னுடைய) ஒரு முலைக் காம்பை
நெருடா—நெருடிக்கொண்டு,
முலை—மற்றொரு முலையானது
வாயிலே இருக்க—(உன்) வாயில் இருக்க
இடை இடை—நடு நடுவே,
என் முகத்தே—என் முகத்தை நோக்கி
மழலை மெல் நகை அருளா—புன்சிரிப்பைச் செய்துகொண்டு
எழில் கொள்—அழகிய
நின் திரு கண் இணை நோக்கம் தன்னையும்—உன் இரண்டு கண்களாலும் பார்க்கிற பார்வையையும்
இழந்தேன் இழந்தேன் — ஐயோ! இழந்தேனே!

கருத்துரை:—"ஒரு முலையை வாய்மடுத்து ஒரு முலையை நெருடிக்கொண்டு, இருமுலையும் முறை முறையா எங்கி யேங்கி யிருந்துணுயே" (பெரியாழ்வார் திருமொழி, உ - உ - அ) என்று யசோதை கண்ணனை வேண்டிக்கொண்டு அவ்வாறே பெற்றனள் என்பதை அறிந்த தேவகி, அப்பாக்கியம் தனக்கு நேராமற் போனது பற்றி வருந்துகின்றாள். நீ என் குடங்கையில் சாய்ந்துகொண்டு ஒரு கையாலே (எனது) ஒரு முலைக்காம்பை நெருடிக்கொண்டும் மற்றொரு கையாலே இன்னொரு முலையைப்பிடித்து வாயில் வைத்துக்கொண்டும் நடு நடுவே என்னை இனிதாக நோக்கும் நோக்கத்தை அநியாயமாய் இழந்தொழிந்தேனே! என்கிறாள்.

குழகன் - எல்லாரோடும் கலந்து பரிமாறுவதையே இயல்வாக வுடையவன். கோமளம் - ஸுகுமாரம். குடங்கை என்பதற்கு 'உள்ளங்கை' என்று சிலர் பொருள் கூறுவர்; அப்பொருள் உண்டாயினும் இவ்விடத்திற்கு அது பொருளல்ல; பெண்பிள்ளைகள் குழந்தைகட்கு முலை கொடுக்கும்போது தமது முழங்கையிலே குழந்தையை வைத்துக்கொண்டு முலை கொடுப்பது வழக்கமாதலால் இங்குக் குடங்கை என்பதற்கு 'முழங்கை' என்று பொருள் கொள்ளுதல் தகுதி;

"எட்டனைப்போது என் குடங்காலிருக்க கில்லாள்" இத்யாதி இடங்களில் குடங்கால் என்பதற்கு 'முழங்கால்' என்று பொருள் கொள்ளவேண்டுமாறறிக; "குடங்கையில் மண்கொண்டளந்து" இத்யாதி ஸ்தலங்களில் 'உள்ளங்கை' என்ற பொருட்குப் பாதகமில்லையென்க.

நெருடா, அருளா - 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; 'நெருடி' அருளி என்றபடி. (எ)

---

முழுதுட்வெண்ணெயளைந்துதொட்டுண்ணும் முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும்
எழில்கொள்தாம்புகொண்டடிப்பதற்கு எள்குநிலையும் வெண்தயிர்தோய்ந்தசெவ்வாயும்
அழுகையும் அஞ்சிநோக்கும் அந்நோக்கும் அணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும்
தொழுகையும் இவைகண்ட அசோதை தொல்லையின்பத்திறுதிகண்டாளே. (அ)

பதவுரை.

வெண்ணெய்—வெண்ணெயை
முழுதும்—குடத்திலுள்ளவளவும்
அளைந்து—(கையையிட்டு) அளைந்து
தொட்டு உண்ணும்—எடுத்து உண்கிற
இள முகிழ் தாமரை சிறு கையும் — இளந்தளிரையும் தாமரையையும் போன்ற சிறிய திருக்கைகளும்
எழில்கொள் தாம்பு கொண்டு—அழகியதாம்பாலே
அடிப்பதற்கு—அடிக்க (அதற்கு)
எள்கு நிலையும்—அஞ்சிநிற்கும் நிலையும்,
வெண் தயிர் தோய்ந்த செம் வாயும் — வெளுத்த தயிர் பூசிய சிவந்த வாயும்,
அழுகையும்—அழுவதும்,
அஞ்சி நோக்கும் அ நோக்கும் — பயந்து பார்க்கிற அப்பார்வையும்
அணி கொள் செம் சிறு வாய் நெளிப்பதுவும் — அழகிய சிவந்த சிறியவாய் துடிப்பதும்
தொழுகையும் — அஞ்ஜலி பண்ணுகையும் (ஆகிற)
இவை—இவற்றையெல்லாம்
கண்ட—நேரில் கண்ணாற்கண்டு அநுபவித்த
அசோதை—யசோதையானவள்
தொல்லை இன்பத்து—பரமாநந்தத்தினுடைய
இறுதி—எல்லையை
கண்டாள்—காணப்பெற்றாள்.

கருத்துரை:—"தாரார் தடந்தோள்களுள்ள ளவுங்கை நீட்டி, ஆராத வெண்ணெய் விழுங்கி" என்றபடி - வெண்ணெயி லுண்டான ஆதராதிசயத்தாலே கை முழுதும் வெண்ணெய்க் குடத்திலே புகவிட்டு அளைவனாதலால் "ஆழவ முக்கி முகக்கினு மாழ்கடல்நீர், நாழிமுகவாது நானாழி" என்கிற ஸாமாந்யமான செய்தியையும் அறியாதே அவிவேகந் தோற்றச்செய்த காரியங்களைக் காணப்பெற்றிலேன், என்கிறாள் முதலடியில்.

"ஹ த-ிசௌகசௌஜெ விநிஹி தகாஃ ஸொடி-ஜெஹய்ஂஹவீநஂ
ஷ்ரூஷா ஷாஸிரூ ஹணவடிசூஂ ஊதாஂ ஜாதரொஷாஂ।
வாயாஹீஷ்கூ ஷஜி தவஷொ நாவஹஹு நதிஷ்கு
ஷிஷ்யாமொவஹூவஷி நயநெ ஜீஷயது விஷூமொவூா॥"

[கோபாலவிம்ஶதி - தேசிகன்]

என்னும்படியான நிலையைக் காணப்பெற்றிலேனே யென்கிறாள் - இரண்டா மடியின் முற்பகுதியில். "அடிப்பதற்கு"=அடிப்ப, அதற்கு எனப் பிரித்துரைத் தலுமாம்; தொகுத்தல்.

கண்ணன் தயிரைக் களவாடி உண்ணும்போது யசோதை கண்டு தடியும் தாம்பு மெடுத்தவாறே "தாயெடுத்த சிறு கோலுக் குளைந்தோடித், தயிருண்ட வாய் துடைத்த மைந்தன்" என்றபடி அந்தத் தயிரை மறைப்பதாகத் துடைத்துக்கொள்ள ஆரம்பித்து வாய்நிறையைச் சுற்றிலும் பூசிக்கொள்வன்; பிறகு யசோதையால் அடிபட்டு அழுவன், அஞ்சினாற்போல் நோக்குவன், வாய் துடிக்கும்படி விக்கி விக்கி அழுவன், கடைசியாக அஞ்ஜலி பண்ணுவன்; ஆக இக்கோலங்களை யெல்லாம் கண்டு ஆநந்தத்தின் எல்லையிலே நிற்கும்படியான பாக்கியம் யசோதைக்குக் கிடைத்ததே யன்றிச் சுமந்து பெற்ற எனக்குக் கிடைக்காமற் போயிற்றே! என்று வருந்துகின்றாள்.

[தொல்லையின்பத்திறுதி கண்டாளே.] "ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்" என்ற உபநிஷத்தின்படி - தொல்லையின்பம் என்று எம்பெருமானாகிய கண்ணனையே சொல்லிற்றாய், அபரிச்சிந்நனான அவனை யசோதை பரிச்சிந்நனாக்கி விட்டாளே! என்றுரைப்பது மொன்று: அழுகையும் தொழுகையும் பரிச்சிந்நர்களுடைய க்ருத்யமிறே. [பரிச்சிந்நர் - அளவு பட்டவர்.] (அ)

---

குன்றினால்குடைகவித்ததும் கோலக்குரவைகோத்ததும் குடமாட்டும்
கன்றினால்விளவெறிந்ததும் காலால் காளியன்தலைமிதித்ததும்முதலா
வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டமனைத்திலும் அங்கு என்னுள்ளம் உள்குளிர
ஒன்றும்கண்டிடப் பெற்றிலேனடியேன் காணுமாறினி உண்டேனிலருளே. (கூ)

பதவுரை.

குன்றினால்—கோவர்த்தன மலையை
குடை கவித்ததும்—குடையாகத் தாங்கி நின்றதும்
கோலம்—அழகாக
குரவை கோத்ததும்—ராஸக்ரீடை செய்ததும்
கன்றினால்—கன்றாய் வந்த ஒரு அசுரனைக் கொண்டு
விளா எறிந்ததும்—(அஸுராவேசமுடைய) விளங்காய்களை உதிர்த்ததும்
காலால்—திருவடிகளாலே
காளியன் தலை—காளிய நாகத்தின் தலையை
மிதித்ததும் முதலா—மர்த்தித்ததும் (ஆகிய இவை) முதலாகவுள்ள
வென்றி சேர்—வெற்றி பொருந்திய
நல் பிள்ளை விளையாட்டம் அனைத்திலும்—விலக்ஷணமான பால்ய சேஷ்டிதங்க ளெல்லாவற்றினுள்ளும்
ஒன்றும்—ஒரு சேஷ்டிதத்தையும்
என் உள்ளம் உள் குளிர—என் நெஞ்சு குளிரும்படி
அடியேன்—நான்
அங்கு கண்டிட பெற்றிலேன்—அச்சேஷ்டிதங்களை நீ செய்த விடத்தில் கண்ணாரக் கண்டு களிக்கப்பெற்றிலேன்;
இனி—இப்போது
காணும் ஆறு—(அவற்றை நான்) காணத்தக்க உபாயம்
உண்டு எனில்—இருக்குமாகில்
அருள்—க்ருபை செய்தருளவேணும்.

கருத்துரை:—இடையர்கள் தேவேந்திரனுக்கென்று சமைத்த சோற்றைக் கண்ணபிரான் கோவர்த்தன மலைக்கு இடுவித்தவாறே இந்திரன் பசியின் கொடுமை

யால் எழுநாள் விடாமழை பெய்வித்துப் பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் இடையர்க்கும் பெருங் கஷ்டத்தை விளைப்பதாகத் தொடங்கினவளவில் கோவர்த்தந கிரியைக் குடையாக எடுத்துத் தாங்கி நின்று ஒருவர் மேல் ஒருதுளி மழை விழாத படி காத்தருளிய அற்புத சேஷ்டிதத்தையும், "அங்கநாமங்கநாமந்தரே மாதவ:" என்றபடி ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனைப் பல்லாயிரம் ரூபங்களெடுத்து நின்று செய்த ராஸக்ரீடையையும், தலையிலே அடுக்குக் குடமிருக்க, இருதோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலும் குடங்களை ஏந்தி ஆகாசத்திலே எறிந்து ஆடுவதொரு கூத்தாகிய குடக்கூத்து ஆடினபடியையும், "கன்றினை வாலோலை கட்டிக் கனிகளுதிர வெறிந்து" என்றபடி வத்ஸாஸுரனைக் கொண்டு கபித்தாஸுரனை முடித்த திவ்யசேஷ்டிதத்தையும், "நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு, அஞ்சப்பணத்தின்மேற் பாய்ந்திட்டருள் செய்த" என்றபடி பொய்கை கலங்கக் காளியநாகத்தின்மேற் பாய்ந்திட்டு அவன் நீண்முடியைந்திலும் நின்று நடஞ்செய்தவாற்றையும், இவைபோல்வன மற்றும் பல விஜய சேஷ்டைகளையும் யசோதைக்குக் காட்டினையே யன்றிப் பாவியேன் கண்ணுக்கு நீ ஒன்றையுங் காட்டவில்லை; கீழ் நடந்தவற்றை யெல்லாம் எனக்காக மறுபடியும் ஒருதடவை செய்து காட்டக்கூடுமா என் அப்பனே! என்கிறாள். (௯)

---

வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சி வரண்டுநார்நரம்பெழக்கரிந்துக்க
நஞ்சமார்தருசுழிமுலை அந்தோ! சுவைத்துநீ அருள்செய்துவளர்ந்தாய்
கஞ்சன்நாள்கவர்கருமுகிலெந்தாய்! கடைப்பட்டேன்வெறிதேமுலைசுமந்து
தஞ்சமேலொன்றிலேன் உய்ந்திருந்தேன் தக்கதேநல்லதாயைப்பெற்றாயே. (௧௦)

பதவுரை.

வஞ்சம் மேவிய—வஞ்சனை பொருந்திய
நெஞ்சு உடை—நெஞ்சையுடையளான
பேய்ச்சி—பூதனையானவள்
வரண்டு—உடம்பு சோஷித்து
எழ—(உள்ளுள்ள ரக்தமாம்ஸங்கள்) வெளியிற் கொழிக்கும்படியாகவும்
நார் நரம்பு கரிந்து உக்க—நார்போன்ற நரம்புகள் கருகி உதிரும்படியாகவும் (அவளுடைய)
நஞ்சம் ஆர்தரு சுழி முலை—விஷந் தீற்றிய கள்ள முலையை
நீ சுவைத்து—நீ ஆஸ்வாதநம் பண்ணியும்
அருள் செய்து—(என்மேல்) கிருபையினாலே
வளர்ந்தாய்—உயிருடன் வளரப்பெற்றாய்;
அந்தோ—ஆச்சரியம்!
கஞ்சன் நாள் கவர்—கம்ஸனுடைய ஆயுஸ்ஸை அபஹரித்த
கரு முகில் எந்தாய்—காளமேகம் போன்ற நாயனே!
முலையை வெறிதே சுமந்து—(நான்) முலையை வியர்த்தமாகச் சுமந்து
கடைப்பட்டேன் — கெட்டவரிலும் கடைகெட்டவளானேன்;
தஞ்சம் ஒன்று இலேன்—(உன்னை யொழிய வேறு) புகலற்றிரா நின்றேன்;
உய்ந்திருந்தேன் — (என்றைக்காகிலு முன்னைக் கண்ணால் காண்போ மென்று) பிராணனைப் பிடித்துக்கொண்டு ஜீவித்திருக்கிறேன்;
தக்கது—உனக்குத் தகுதியான
நல்ல தாயை—நல்ல தாயாரை
பெற்றாய்—ஸம்பாதித்துக்கொண்டாய்.
(ஏல் - அசை.)

கருத்துரை:—தேவகிக்கு உடன்பிறந்தவனும் கண்ணனுக்கு மாமனுமாகிய கம்ஸன், தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்து வளர்தலை அறிந்து

அக்குழந்தையை நாடி யுணர்ந்து கொல்லும் பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனை யென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கண்ணனாகிய குழந்தையை எடுத்துத் தனது விஷம்தடவிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, பகவானான குழந்தை அந்த ராக்ஷஸியின் தனங்களைக் கைகளால் இறுகப் பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்ற வரலாறு அறியத்தக்கது.

[கடைப்பட்டேன் வெறிதே முலைசுமந்து.] முலை நெறித்தபோது பாலுண்பதற்கு உன்னைப் பிள்ளையாகப் பெற்றுவைத்தும் நீ வேறு முலையைத் தேடி ஓடினமையால் என் முலை பயனற்றொழிகையாலே இம்முலை எனக்குப் புரைகுழல்போலே வீணான சுமையாயிற்றென்கிறாள்.

[தஞ்சமேல் இத்யாதி.] நான் முன்னமே உயிர் துறந்திருக்க வேண்டுமாயினும் எப்போதாயினும் உன்னைக் காணப்பெறவேணு மென்னுமாசையால் பிராணனை வலியப்பிடித்து வைத்துக்கொண்டிருக்கிறே னென்று கருத்து. [தக்கதே இத்யாதி.] உனக்கு முலைப்பால் வேண்டும்போது என்னையும் விட்டு யசோதையையும் விட்டுப் பூதனையைப் பற்றினையே! இதுவோ தகுதி? என்றவாறு. (௧௦)

---

மல்லைமாநகர்க்கிறையவன்தன்னை வான்செலுத்திவந்தீங்கணைமாயத்து
எல்லையில்பிள்ளைசெய்வனகாணாத் தெய்வத்தேவகிபுலம்பியபுலம்பல்
கொல்லிகாவலன்மாலடிமுடிமேல் கோலமாம்குலசேகரன்சொன்ன
நல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள் நண்ணுவார் ஒல்லைநாரணனுலகே. (௧௧)

பதவுரை.

மல்லை—செல்வம் நிரம்பிய
மா நகர்க்கு—பெரிய நகரமாகிய வடமது[ரைக்கு
இறையவன் தன்னை — தலைவனா யிருந்த கம்ஸனை
வான் செலுத்தி-வீரஸ்வர்க்கத்திற்கு அனுப்பி
ஈங்கு வந்து அணை — (தேவகீ ஸமீபமாகிய) இங்கே வந்து சேர்ந்த
பிள்ளை — கண்ணபிரானுடைய
மாயத்து எல்லை இல் செய்வன—எல்லை யில்லாத திவ்ய சேஷ்டிதங்களை
காணா—(நடந்தபோது) காணப்பெறாத
தெய்வத் தேவகி—தெய்வத்தன்மை பொருந்திய தேவகியானவள்
புலம்பிய புலம்பல் — புலம்பிக் கொண்டு சொன்ன பாசுரங்களை (உட்கொண்டு)

கொல்லி காவலன்—கொல்லி நகர்க்கு அரசராய்
மால் அடி முடிமேல் கோலம் ஆம் — ஸர்வேச்வரனுடைய திருவடிகளைத் தம் திருமுடிக்கு அலங்காரமாக வுடையரான
குல சேகரன்—குலசேகராழ்வார்
சொன்ன—அருளிச்செய்த
நல் இசை—நல்ல இசையையுடைய
தமிழ்—தமிழினாலாகிய
மாலை—சொல் மாலையை
வல்லார்கள்—ஓத வல்லவர்கள்
ஒல்லை—விரைவாக
நாரணன் உலகு—ஸ்ரீ வைகுண்டத்தை
நண்ணுவார்—சேரப் பெறுவர்.

கருத்துரை :—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது இப்பாட்டு.

போர்க்களத்திலே மரணமடைபவனுக்கு வீரஸ்வர்க்கம் கிடைப்பதாக நூற்கொள்கையாதலால், வான்சேலுத்தி என்றார். "ஈங்ஙன மாயத்து" என்ற அத்யாபக பாடத்திற்கு ஆதாரமறியோம். தெய்வத்தேவகி : கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களை அநுபவிக்கப் பெறாதொழியினும் அவனைப் பிள்ளையாகப் பெற்ற பாக்கியமுடைய ளாதலால் தெய்வத்தேவகி எனப்பட்டாள். (கக)

அடிவரவு :—ஆலை வடி முந்தை களி மருவு தண்ணம் குழகன் முழுது குன்று வஞ்சம் மல்லை மன்னு.

ஏழாந்திருமொழி உரை முற்றுப் பெற்றது.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# எட்டாந் திருமொழி - மன்னுபுகழ்.

கீழ் இரண்டு திருமொழிகளில் கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபட்ட ஆழ்வார், உடனே ஸ்ரீ ராமாவதாரத்தில் மனஞ்செல்லப் பெற்றவராய், அவ்வவதாரத்தில் கௌஸல்யை பெற்ற பேற்றைக் கருதி, அவள் அவ்விராமபிரானைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக் கூறின முகத்தால் இத்திருமொழி அருளிச் செய்கிறார்.

இவ்வநுபவம் இவர்க்குத் திருக்கண்ணபுரத் தெம்பெருமான் விஷயத்திலே செல்லுகிறது.

---

மன்னுபுகழ்க்கௌசலைதன் மணிவயிறுவாய்த்தவனே!
தென்னிலங்கைக்கோன்முடிகள் சிந்துவித்தாய்! செம்போன்சேர்
கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்கருமணியே!
என்னுடைய இன்னமுதே! இராகவனே! தாலேலோ. (க)

பதவுரை.

மன்னு புகழ்—நிலைநின்ற புகழையுடைய
கௌசலைதன்—கௌஸல்யையினுடைய
மணி வயிறு—அழகிய வயிற்றிலே
வாய்த்தவனே—பிள்ளையாகத் திருவவதரித்தவனே!

தென் இலங்கை கோன்—தென்னிலங்கைக்கு இறைவனான ராவணனுடைய
முடிகள்—பத்துத் தலைகளையும்
சிந்துவித்தாய்—சிதறப் பண்ணினவனே!

செம் பொன் சேர்—செவ்விய பொன்னாலே செய்யப்பட்டதாய்
கன்னி—அழிவில்லாததாய்
நல்—விலக்ஷணமாய்
மா—பெரிதான
மதிள்—திருமதிளாலே
புடை சூழ்—நாற்புரமும் சூழப்பட்ட
கணபுரத்து — திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற
என் கரு மணியே—நீலரத்நம் போன்ற எம்பெருமானே!
என்னுடைய இன் அமுதே } எனக்கு போக்யமான அம்ருதமா யிருப்பவனே!
இராகவனே!—ஸ்ரீராமனே!
தாலேலோ—(உனக்குத்) தாலாட்டு.

கருத்துரை :— "ஸர்வேச்வரனைப் பிள்ளையாகப் பெற்றாள்" என்ற நிலைநின்ற புகழையுடையளான கௌஸல்யையின் திருவயிற்றில் தோன்றினவனே! இலங்கைக் கிறைவனான இராவணனுடைய முடிகள் பத்தும் சிதறும்படி செய்தருளினவனே! சாச்வதமாய் விலக்ஷணமான மதிள்களாலே சூழப்பெற்ற திருக்கண்ணபுரத்தில் என் நெஞ்சைக் கவரும்படியான வடிவழகுடன் எழுந்தருளியிருப்பவனே! தேவர்களுடைய அம்ருதம்போலே உப்புச்சாறா யிருக்கை யன்றியே எனக்குப் பரமபோக்யமான அம்ருதமா யிருப்பவனே! ரகுகுல திலகனே! தாலேலோ.

இதில், முதலடியால் அவதாரமும், இரண்டா மடியால் அவதார ப்ரயோஜநமும் சொல்லப்பட்டன வென்க. "ஸஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: । அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந: ॥"

கணபுரம் - கண்ணபுரம் என்பதன் தொகுத்தல்; திருக்கண்ணபுரம் என்னும் இத் திவ்யதேசம் சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் ஒன்று: இத்தலத்தில் சௌரிராஜப்பெருமாள் மிகவும் வரப்ரஸாதி என்பது ப்ரஸித்தம். நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார் - ஆகிய ஐவர்களால் மங்களாசாஸநஞ் செய்யப்பெற்ற சிறந்த திவ்யதேசம் இது.

தாலே லோ=வளர்பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்திக் கண்வளரப் பண்ணுகைக்காகச் சீராட்டித் தாலாட்டுதல்; தால் - நாக்கு: தமிழில் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகிய பிள்ளைத் தமிழில் இத்தாலாட்டை எட்டாம் மாதத்திற் கூறுவது, கவிமரபு. (க)

---

புண்டரிகமலரதன்மேல் புவனியெல்லாம்படைத்தவனே!
திண்டிறலாள்தாடகைதன் உரமுருவச்சிலைவளைத்தாய்!
கண்டவர்தம்மனம்வழங்கும் கணபுரத்தென்கருமணியே!
எண்டிசையும் ஆளுடையாய்! இராகவனே! தாலேலோ. (உ)

பதவுரை.

புண்டரிகம் மலர் அதன் மேல் } (திருநாபியில் அலர்ந்த) தாமரைப் பூவின்மேல் (பிரமனைத் தோற்றுவித்து அவன் முகமாக)
புவனி எல்லாம் படைத்தவனே } உலகங்களெல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தவனே!
திண் திறலாள் தாடகைதன் } த்ருடமான பலத்தையுடையளான தாடகையினுடைய

உரம் உருவ—மார்வைத் துளைக்கும்படியாக
சிலை வளைத்தாய்—வில்லை வளைத்து அம்புகளை எய்தவனே!
கண்டவர்—ஸேவித்தவர்கள்
தம் மனம் வழங்கும்–தங்கள் மனதைத் தாங்களே இசைந்து கொடுப்பதற்குத் தகுந்த
கணபுரத்து என் கருமணியே!—;
எண் திசையும் — எட்டுத் திக்கிலுள்ளவர்களையும்
ஆள் உடையாய்—அடிமை கொண்டருளுமவனே!
இராகவனே! தாலேலோ—.

கருத்துரை:—திருநாபிக் கமலத்திலே உலகத்தை யெல்லாம் ஸ்ருஷ்டித்தவனே! என்றது - "உய்ய வுலகுபடைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை" என்றபடி.

தாடகை - ஸுகேது வென்னும் யக்ஷனது மகள்; ஸுந்த னென்பவனது மனைவி; ஆயிரம் யானை வலிமை கொண்டவள். கணவன் அகஸ்த்ய மஹாமுனியின் கோபாக்நிக்கு இலக்காகிச் சாம்பரானதை அறிந்த இவள் தன். புத்திரர்களாகிய ஸுபாஹு மாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச் சென்றபொழுது அவனிட்ட சாபத்தால் தன் மக்களோடு இராக்கதத்தன்மை யடைந்தனள்; பின்பு முனிவர்களுடைய யாகாதிகளைக் கெடுக்கின்ற இவர்களை அழித்துத் தன் வேள்வியைக் காக்கும்பொருட்டு விச்வாமித்ர முனிவன் தசரத சக்ரவர்த்தியினிடம் அநுமதி பெற்று இளம்பிராயமுடைய இராமபிரானை லக்ஷ்மணனோடு அழைத்துக் கொண்டுபோன பொழுது அம்முனிவ னாச்ரமத்துக்குச் செல்லும் வழியிடையே வந்து எதிர்த்த தாடகையை ஸ்ரீராமன் முனிவனது கட்டளைப்படி பெண்ணென்று பாராமற் போர்செய்து கொன்றனன்.

ஸேவிப்பவர்க ளனைவரும் தமது நெஞ்சைத் தாங்களே இசைந்து ஸமர்ப்பிக்க வேண்டும்படியான ஒப்புயர்வற்ற அழகுடையவன் ஸௌரிராஜன் என்பது மூன்றாமடியின் கருத்து.

புண்டரிகம் - வடசொல் விகாரம். புவனி - ஐுவநம். தாடகை - தாடகா. உரம் - உரஸ். திசை - திஸா. இராகவன் - ராவவன்; ரகு மஹாராஜனது வம்சத்தில் அவதரித்தவன் என்று பொருள்: வடமொழித் தத்திதாந்தநாமம். அந்த ரகுமஹாராஜன் மிக்க வீரமும் கொடையு முடையவனாதலால் இராமபிரானை அவன் ஸம்பந்தமான பெயராற் குறித்தாரென்க. திலீபன், ரகு, அஜன், தசரதன், இராமன் - எனப் பரம்பரை அறிக. (உ)

---

கொங்குமலிகருங்குழலாள் கௌசலைதன்குலமதலாய்!
தங்குபெரும்புகழ்ச்சனகன் திருமருகா! தாசரதீ!
கங்கையிலும்தீர்த்தமலி கணபுரத்தென் கருமணியே!
எங்கள்குலத்தின்னமுதே! இராகவனே! தாலேலோ. (௩)

பதவுரை.

கொங்கு மலி—பரிமளம் மிகுந்த
கரு குழலாள்—கறுத்த கூந்தலையுடையளான
கௌசலை தன்—கௌஸல்யையி னுடைய
குலம் மதலாய்—சிறந்த பிள்ளையானவனே!
தங்கு பெரு புகழ்—பொருந்திய மஹாகீர்த்
திியை யுடைய
சனகன்—ஜநக மஹாராஜனுக்கு
திரு மருகா—மாப்பிள்ளை யானவனே!
தாசரதீ—சக்ரவர்த்தி திருமகனே!
கங்கையிலும்—கங்கா நதியிற் காட்டிலும்
மலி தீர்த்தம்—சிறப்பு மிக்க தீர்த்தங்களை
யுடைய
கண புரத்து—திருக்கண்ண புரத்தி லெழுந்
தருளி யிருக்கிற
என் கருமணியே!—;
எங்கள் குலம்—எங்கள் ராஜவம்சத்துக் கெல்
லாம்
இன் அமுதே—போக்யமான அமுதம் போ
ன்றவனே!
இராகவனே! தாலேலோ—.

கருத்துரை:—கௌசலை - கௌஸல்யா; கோஸல தேசத்து அரசனது மக ளென்று பொருள்படும்: வடமொழித் தத்திதாந்தநாமம்; [தத்திதாந்த நாம மாவது - ஒரு வடசொல் சிறிது மாறித் தன்னோடு ஸம்பந்தமுடைய பொருளை யாவது தன் பொருளையேயாவது உணர்த்துவது.] உத்தர கோஸலம் தக்ஷிண கோஸலம் என்ற இரண்டில், தக்ஷிண கோஸலத்து அரசன்மகள் இவள். (உத்தர கோஸலம் - தசரதன் இருக்குமிடம்.) இப்பாட்டில் "கோசலைதன்" என்றும் பாடமாம். குலம் - சிறப்பு. மதலாய் - 'மதலை' என்பதன் ஈறுதிரிந்தவிளி: பிள்ளாய் என்பது போல.

[தங்குபெரும் புகழ்ச்சனகன்.] மிதிலாநகரத்தரசனான ஜநக மஹாராஜன் யாஜ்ஞவல்க்யரிடம் வேதாந்த ஸ்ரவணம் செய்துகொண்டு போருங்காலத்தில் யாஜ்ஞவல்க்யர் ஜனகர்மீது மிக்க கௌரவபுத்தி பாராட்டியிருந்ததில் பொறாமை கொண்ட பலபேர்களுக்கு ஜனகருடைய வைபவத்தை நன்கு விளக்குதற் பொருட்டுத் தமது அந்தரங்க ஸிஷ்யரொருவர்க்கு ஏதோ ஒரு ரஹஸ்யஞ் சொல்லி அவ் வாறு செய்யும்படி கட்டளையிட, ஜனகரும் மற்றும் பல முனிவர்களும் வேதாந்த ச்ரவணஞ் செய்துகொண்டிருக்கையில், முற்கூறிய ஸிஷ்யர் தமது குருவின் கட்டளையை அநுஸரித்து 'மிதிலாபுரி தீப்பற்றி யெரிந்து போகின்றது' என்று கூச்ச லிட, அவ்விட மிருந்தவர்களனைவரும் பயப்ராந்தி கொண்டவர்களாய் உபதேஸ ஸ்ரவணத்தை விட்டுச் சிதறிப்போக, ஜனகர் மாத்திரம் சிறிதும் மனஞ்சலிக்காமல் நிலை தளும்பாமல் ஒரு விகாரமின்றியே பண்டுபோல் வீற்றிருக்க, யாஜ்ஞவல்கியர் உபதேசத்தை நிறுத்துகையில், ஜநகர், ["𑌮𑌿𑌥𑌿𑌲𑌾𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑍍𑌤𑌾𑌯𑌾𑌂 𑌨𑌮𑍇 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌪𑍍𑌰𑌦𑌹𑍍𑌯𑌤𑍇"] 'மிதிலைபற்றி யெரிந்தால் எனக்கென்ன நஷ்டம்? அந்நகரத்திற்கு இதுவரையில் எத்தனையோ பிரபுக்களாயினர்; அவர்களில் நானொருவன்; என் மனோபுத்திகளுக்கு ஹாநி உண்டாயினன்றோ எனக்குச் சிந்தை உண்டாகவேண்டும்; நிராடங்கமாய் வேதாந்தத்தைப் போதியுங்கள்' என்று சொல்லி உபதேஸங் கேட்டுக்கொண்டிருந்தார் - என்ற இதிஹாஸத்தினால் ஜநகர்க்குப் பரவிய பெரும்புகழை இங்கு அநுஸந்திக்கலாம்.

மருகன்:—மருமகன். ஜநகமஹாராஜன் தனது குலத்துப் பூர்விகராஜனான தேவராதனிடம் சிவபிரானால் வைக்கப்பட்டிருந்ததொரு பெரிய வலிய வில்லை எடுத்து வளைத்தவனுக்கே தன்மகளான ஸீதையை விவாஹஞ்செய்து கொடுப்ப

தென்று கந்யாசுல்கம் வைத்திருக்க, வேள்வி முடித்த விச்வாமித்ரனுடன் மிதிலைக்குச் சென்ற இராமபிரான் அவ்வில்லையெடுத்து வளைக்கத் தொடங்குகையில், முன்னமே ஹரிஹரயுத்தத்திற் சிறிது முறிபட்டிருந்த அவ்வில் இரண்டு துண்டாக நன்றாய் முறிந்து விழுந்திட, பிறகு ஸீதையை மணம்புணர்ந்து ஜநகஜாமாதாவாயினன் என்பது ப்ரஸித்தம்.

தாசரதி:— வடமொழித் தத்திதாந்தநாமம்: [கங்கையிலும் இத்யாதி.] "ஹைமைநஹந்லஸஜீவதஜ்ஜமாம விஷ்ணுவஸ்துஙாதுஜவாரம்" (ஸ்ரீரங்கராஜஸ்தவம்) என்றாற்போல, ஏதோ ஒரு ஸமயத்தில் மாத்திரமே கங்கைக்கு விஷ்ணுபாத ஸம்பந்தமுண்டாகையால் அக்கங்கையிற்காட்டிலும் நித்யம் விஷ்ணு ஸம்பந்தம் பெற்ற தீர்த்தங்கள் சிறக்குமென்க. கங்கையில்-ஐந்தாம் வேற்றுமை. தீர்த்தம் - வடசொல்.

எங்கள் குலத்து இன்னமுதே=ஸ்ரீராமன் ராஜவம்ஶத்திற் பிறந்தாற்போல இக்குலசேகராழ்வாரும் ராஜவம்ஶத்திற் பிறந்தவராதலால் இங்ஙனமருளிச் செய்தாரென்க (௫)

---

தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே! தயாதன்தன்
மாமதலாய்! மைதிலிதன்மணவாளா! வண்டினங்கள்
காமரங்களிசைபாடும் கணபுரத்து என்கருமணியே!
ஏமருவும்சிலைவலவா! இராகவனே! தாலேலோ. (௬)

பதவுரை.

தாமரை மேல்—(திருநாபிக்) கமலத்திலே
அயன் அவனை—பிரமனை
படைத்தவனே — உண்டாக்கினவனே!
தயாதன் தன்—தசரதனுடைய
மா மதலாய்—மூத்த குமாரனே!
மைதிலி தன் மணவாளா—பிராட்டிக்கு வல்லபனே!
வண்டு இனங்கள்—வண்டுகளின் கூட்டங்கள்
காமரங்கள் இசை பாடும் } காமர மென்னும் இசையைப் பாடப்பெற்ற
கணபுரத்து — திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளி யிருக்கிற
என் கருமணியே!—;
ஏ மருவும் சிலை வலவா } அம்புகள் பொருந்திய (ஸ்ரீசார்ங்கமென்னும் வில்லை ஆளவல்லவனே!
இராகவனே! தாலே லோ—.

கருத்துரை:—"தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே!" என்று சொல்லி, "தயரதன்றன் மாமதலாய்!" என்று சொன்னவிது—ஸகல விபூதிக்கும் பிதாவாகிய நீ, அவ்விபூதியில் ஒரு பிபீலிகாப்ராயனான தசரதனைப் பிதாவாகக் கொண்டு 'அவனுடைய பிள்ளை' என்னும்படியாகப் பிறந்த அதிசயம் என் கொல்! என வியந்தவாறும். அயன்—அஜன்; அ—விஷ்ணு; (அவனிடத்தில் நின்றும்) ஜன்—தோன்றியவன். "அயனவன்" என்றவிடத்து, அவன்—முதல் வேற்றுமைச் சொல்லுருபு.

தயரதன்:—தஶரதஃ; [தஶஸுதிக்ஷு அப்ரதிஹதகதிஃ ரதஃயஸ்யஸஃ] பத்துத்திக்கிலும் தடையின்றிச் செல்லுந் தேரையுடையவன் என்று பொருள்; இதனால், எங்கும் தடையின்றிச் செல்லவல்லவன் என்றதாயிற்று: இத்தன்மை. இந்திரனை வலியழித்த ஶம்பராஸுரனை வதைசெய்யும்பொருட்டு அவன் மாயையி

ளூற் சென்ற இடமெல்லாம் விடாது தொடர்ந்து சென்றதனால் விளங்கியது. மைதிலி - ஜெயிஜீ; மிதிலைபரசன் மகள்.

"ஏமருவுஞ்சிலை"=ஏ—எய்கையிலே, மருவும்—மூட்டாநின்ற, சிலை—வில், என்றும் பொருளாகலாம்: ஆரேனும் பிடிக்கிலும் எய்கையிலே மூட்டும் வில் என்பது கருத்து: வெகு சாதுரியமாய் அடக்கி ஆளத்தக்க வில்—என்றவாறு: இக்கருத்துத் தோன்றவே பெரியாழ்வாரும் "சார்ங்கமென்னும் வில் ஆண்டான் றன்னை" என்றருளிச் செய்தாரென்க. (ச)

---

பாராளும்படர்செல்வம் பரதநம்பிக்கேயருளி
ஆராவன்பிளையவனோடு அருங்கானம் அடைந்தவனே!
சீராளும்வரைமார்பா! திருக்கண்ணபுரத்தரசே!
தாராளும்நீண்முடி என்தாசரதீ! தாலேலோ. (ரு)

பதவுரை.

பார் ஆளும் படர் செல்வம் } பூமி முழுவதையும் ஆட்சி புரிகையாகிற பெரிய ராஜ்ய ஸம்பத்தை
பரதன் நம்பிக்கே—ஸ்ரீ பரதாழ்வானுக்கே
அருளி—நியமித்து விட்டு
ஆரா அன்பு இளையவனோடு } பரிபூர்ணமான பக்திப் பெருங்காதலையுடைய இளைய பெருமாளுடன் கூட
அரு கானம் அடைந்தவனே } (புகுவதற்கு) அருமையான காட்டைக் குறித்து எழுந்தருளினவனே!
சீர் ஆளும் வரை மார்பா } வீரலக்ஷ்மிக்கு இருப்பிடமாய் மலை போன்ற திருமார்பை யுடையவனே!
திருக் கண்ணபுரத்து அரசே!—;
தார் ஆளும் நீள் முடி } மாலையோடு கூடின சிறந்த திருமுடியை யுடையவனே!
என் தாசரதீ! தாலேலோ—.

கருத்துரை:—இராமபிரான் வநவாஸயாத்திரை புறப்படும்போது பரதாழ்வான் அயோத்தியில் இல்லாமையாலும், அவனிடத்தில் இராமன் ராஜ்யஸம்பத்தை அப்போது அருளாமையாலும் "பரதநம்பிக்கேயருளி அருங்கானமடைந்தவனே!" என்று எங்ஙனே சொல்லக்கூடும்? என்று சிலர் சங்கிப்பர்; கைகேயியின் இரண்டு வரங்களை நிறைவேற்றுதற்காகவே இராமபிரான் வநவாஸயாத்திரை புறப்பட்டனனாதலால், அவ்விரண்டு வரங்களுள் முதல்வரம் 'பரதனுக்கு அரசாட்சிச் செல்வமளித்தல்' என்பதாதலால், அவ்வாறே பரதன் அரசனாவதை இராமபிரான் அநுமதி பண்ணியே வநவாஸஞ் சென்றனனாதலால் "பாராளும் படர் செல்வம் பரதநம்பிக்கேயருளி......அருங்கானமடைந்தவனே!" என்னக் குறையில்லை என்க.

பரதன் என்ற பெயர் ராஜ்ய பாரத்தை நிர்வஹிக்க வல்லவனென்று உறுப்புப் பொருள்படும்; இராமன் வநவாஸஞ்செல்ல, தசரதன் சுவர்க்கம் புக, அரசனில்லாததாகும் ராஜ்யத்தை இவன் பாதுகாக்கும்படி நேரிடுவதை முன்னமே ஞானக் கண்ணினாலறிந்து வஸிஷ்டமுனிவர் இவனுக்கு இத்திருநாமமிட்டனர் என்றுணர்க. நற்குண நற்செய்கைகளில் இவன் மிகச் சிறந்தவனாதலால் 'பரதநம்பி' என்றார். அத்தன்மையை, "ஆயிரமிராமர் நின்கேளாவரோ அறியிலம்மா" (கம்பர்) என்று குலசேகரப்பெருமாள் பரதனைக் கொண்டாடியது கொண்டு உணரலாம்.

வநவாஸஞ் செல்லும்போது இராமபிரான் இளையபெருமாளை நோக்கி, 'இளையோய்! நான் போகிறேன்; நீ இங்கேயிருப்பாயாக' என்றபோது; அவர் தமது கைங்கரிய ருசியையும் பிரியில் தரியாமையையும் பரக்கப்பேசித் தம்மையுங் கூட்டிக்கொண்டு போகும்படி செய்தனராதலால் "ஆராவன்பிளையவனோடு" என்றார். [அருங்கானம்."] "கல் நிரைந்து தீந்து கழையுடைந்து கால் சுழன்று, பின்னுந் திரைவயிற்றுப்பேயே திரிந்துலவாக், கொன்னவிலும் வெங்கானம்" [பெரிய திருமடல்] என்றார் கலியனும். (ரு)

---

சுற்றமெல்லாம்பின்தொடரத் தோல்கானமடைந்தவனே!
அற்றவர்கட்கு அருமருந்தே! அயோத்திநகர்க்கு அதிபதியே!
கற்றவர்கள்தாம்வாழும் கணபுரத்து என்கருமணியே!
சிற்றவைதன்சொற்கொண்ட சீராமா! தாலேலோ. (சு)

பதவுரை.

சுற்றம் எல்லாம் பின் தொடர } எல்லா உறவினரும் பின்னே தொடர்ந்து வர,
தொல் கானம் அடைந்தவனே } புராதநமான தண்டகாரண்யத்துக் கெழுந்தருளினவனே!
அற்றவர்கட்கு—உனக்கே அற்றுத்தீர்ந்த பரம பக்தர்களுக்கு
அரு மருந்தே—(ஸம்ஸார ரோகத்தைத் தணிக்க) அருமையான மருந்து போன்றவனே!
அயோத்தி நகர்க்கு அதிபதியே } அயோத்யா நகரத்திற்கு அரசனே!
கற்றவர்கள் தாம் வாழும் கணபுரத்து } ஞானிகள் வாழ்தற்கு இடமான திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளி யிருக்கிற
என் கரு மணியே—நீலமணிபோ லழகிய எம்பெருமானே!
சிற்றவை தன்—சிறிய தாயாராகிய கைகேயியினுடைய
சொல் கொண்ட சீராமா } சொல்லை ஏற்றுக்கொண்ட ஸ்ரீராமனே! தாலேலோ—.

கருத்துரை:—இராமபிரான் காட்டுக்குப் புறப்படும்போது பிரிவாற்றமாட்டாத ப்ரஜைகளெல்லாம் கூடவே புறப்பட்டு, இராமன் எவ்வளவு தகைந்த போதிலும் நில்லாமல் பின்தொடர்ந்து சென்று தமஸாநதிக்கரையில் இராத்தங்கி உறங்குகையில், இராமன் அப் பௌரஜனங்களை வஞ்சித்துவிட்டுத் தேரை ஓட்டிக்கொண்டு சென்றபிறகு, பிரஜைகள் கண்விழித்து இராமனைக்காணாமல் பின்தொடர்ந்துபோக வழிதெரியாமல் அழுது அலமந்து மீண்டும் அயோத்திக்கே சென்று சேர்ந்தனர் என்று ஸ்ரீராமாயணத்திற் கூறுகிற்க. இங்கு, "சுற்றமெல்லாம் பின் தொடரத் தொல்கான மடைந்தவனே!" என்றருளிச்செய்தது சேர்வதெங்ஙனே? என்று எம்பெருமானார் திருவோலக்கத்தில் ப்ரஸ்தாவம் நிகழ, அதற்கு எம்பெருமானார் அருளிச் செய்தது—"'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்று சொன்ன எல்லாவடிமையும் செய்யு மிளையபெருமாள் கூடப்போகையாலே எல்லா பந்துக்களும் கூடப்போனார்களாய்த்திறே" என்றும்; இது ச்லோக்தியாக அருளிச்செய்தபடி; வஸ்துதஸ்து=சுற்றமெல்லாம் பின்தொடரப் பெருமாள் புறப்பட்ட வ்ருத்தாந்தமே இப்பாட்டில் கூறப்பட்டிருக்கின்றதென்பர் சிலர்.

அற்றவர்கள்:— "ஸாயம்வ்யாஹண ஹ்ரியிஷா வா நவ்யஸ்ஹணோ உஹாநு । தஹாயொ: நாயவஜ்ராஃ! ஙாக்ஷ ஸெஹ ந்ய தஹ்ய ஶ்ராஃ ॥ வஹி வஶ்யஶீராணி ஃ நீநாஹாவி தா நா । ஹ தா நாஙாக்ஷ ஸெ வெ

ஸௌமித்ரே நாம்ஸஹாயவநே ॥" [ஸ்ரீராமா - ஆர - எ - கரு] என்று சரபங்காச்ரமத்தில் வந்து கதறின தண்டகாரண்ய வாஸிகளான முனிவரைச் சொல்லுகிறது. அங்ஙனம் வந்து வேண்டிக்கொண்ட முனிவர்களைநோக்கி "அப்படியே நான் உங்கள் விரோதிவர்க்கங்களை வேரறத் தொலைத்து விடுகிறேன், அஞ்சேல்மின்" என்று உறுதிமொழி கூறிய இராமபிரான் அந்தப் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுதற்பொருட்டு தண்டகாரணியத்திற்குப் புறப்படுங்கால், பிராட்டி பெருமானை நோக்கி, 'ஆரியரே! தாபஸவ்ருத்தியை அவலம்பித்து வந்து சேர்ந்தவிடத்தில் க்ஷத்ரியவ்ருத்தியைப் பாராட்டக் கருதுவது உமக்குத் தகுதியல்ல; உமது விஷயத்தில் ஒரு குற்றமுஞ் செய்யாத பிராணிகளை நீர் கொல்ல முயல்வது அநியாயமாகும், என்று பலவாறாக உணர்த்த; அது கேட்ட இராமபிரான், "ஸீதே! நான் பிராணனை விட்டாலும் விடுவேன்; லக்ஷ்மணனையும் உன்னையும் விட்டாலும் விடுவேன்; யாருக்காவது பிரதிஜ்ஞை செய்து கொடுத்து அதிலும் பிரமஞானிகளுக்குப் பிரதிஜ்ஞைசெய்து கொடுத்து அதை மாத்திரம் நிறைவேற்றாது விடவேமாட்டேன்; ரிஷிகள் தாம் என்னிடம்வந்து முறையிடாமற் போனாலுங்கூட அவர்களை ஸம்ரக்ஷிப்பது எனது கடமை; பிரதிஜ்ஞையும் பண்ணிக் கொடுத்துவிட்ட பின்னர் இனி நான் தவறக்கூடுமோ?" என்று சரக்கற வார்த்தை சொல்லி அம்முனிவர்களைக் காத்தருளினவாறு கூறும் "அருமருந்தே!" என்னும் விளி.

பெற்ற தாயான கௌஸல்யை 'என் நாயனே! உன்னைப்பிரியில் தரியேன்' என்று பின்தொடர்ந்து புலம்பச்செய்தேயும் மாற்றுத்தாயான கைகேயியின் சொல்லையே சிரமேற்கொண்டு வனஞ்சென்ற குணத்தைக் குலாவுவார் "சிற்றவை தன் சொற்கொண்ட சீராமா!" என்கிறார். சிறு—அவ்வை; சிறிய தயார். (சு)

---

ஆலினிலைப்பாலகனாய் அன்று உலகமுண்டவனே!
வாலியைக்கொன்று அரசு இளையவானரத்துக்கு அளித்தவனே!
காலின்மணிகரையலைக்கும் கணபுரத்து என்கருமணியே!
ஆலிநகர்க்கு அதிபதியே! அயோத்திமனே! தாலேலோ. (எ)

பதவுரை.

அன்று—முன்பு மஹாப்ரளயம் வந்தபோது
ஆலின் இலை—ஓர் ஆலந்தளிரிலே
பாலகன் ஆய்—குழந்தை வடிவாய்க்கொண்டு
உலகம்—லோகங்களை யெல்லாம்
உண்டவனே—திருவயிற்றில் வைத்து நோக்கினவனே!
வாலியை கொன்று—வாலியைக் கொலைசெய்து
இளைய வானரத்துக்கு—அவனது தம்பியான ஸுக்ரீவனுக்கு
அரசு அளித்தவனே—ராஜ்யத்தைக் கொடுத்தவனே!
காலில் மணி—கால்வாய்களிலுள்ள ரத்நங்களை
கரை அலைக்கும்—கரையிலே கொண்டு கொழிக்கப்பெற்ற
கணபுரத்து—திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற
என் கரு மணியே!—;
ஆலி நகர்க்கு—திருவாலி திருநகரிக்கு
அதிபதியே—தலைவனே!
அயோத்தி மனே—அயோத்தி நகர்க்கு அரசனே!
தாலேலோ—.

கருத்துரை:—இராமபிரான் பதினான்கு வருஷகாலம் வநவாஸஞ் செய்வதாக உடன்பட்டிருக்கின்றமையால் கிஷ்கிந்தா பட்டணத்தினுள்ளே தான் புகாது

இளையபெருமாளை நோக்கி 'நீ கிஷ்கிந்தையிற்சென்று ஸுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வா' என்று நியமிக்க, அங்ஙனமே லக்ஷ்மணன் போய்ப்பட்டாபிஷேகஞ் செய்திருக்க, இங்கு, "இளையவானரத்துக்கு அரசு அளித்தவனே!" என்று பெருமாளை நோக்கிக் கூறுதல் பொருந்துமாறென்? எனில்; இராமன் ஏவுதற்கருத்தா [ப்ரயோஜக கர்த்தாவும்,] லக்ஷ்மணன் இயற்றுதற்கருத்தா [ப்ரயோஜ்யகர்த்தாவும்] ஆதலால் இதிற் குறையொன்றுமில்லை யென்க. சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தது இளையபெருமாளாயிருக்க, "கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்" என்றும், "சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு, அவளார்க்க அரிந்தான்" என்றும், "தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரிந்து" என்றும் இராமபிரானே அது செய்ததாக அருளிச்செய்துள்ள இடங்களில் பூருவர்கள் அருளிச் செய்யும் யோஜனை நினைக்கத்தக்கது: ["ராகவஸ்ய ஈக்ஷிணோவா ஹ:" இத்யாதி]

"காலின் மணிகரையலைக்கும்" = உள்ளுக்கிடக்கிற ரத்நங்களைக் காற்றாலே கரையிற் கொழிக்குமென்னுதல்: அன்றி, கால் என்று கால்வாய்களைச் சொல்லிற்றாய், கால்வாய்களில் மணிகளைக் கொண்டுவந்து கரையிலே ஏறிடுமென்னுதல்.

"ஆலிநகர்க் கதிபதியே!" என்றவிடத்தில், "ஒரு வாலியைக்கொன்று ஒரு வாலிதன்னைத் துணையாகக் கொள்ளப்பெற்றதே!" என்று சாடுக்தி அருளிச் செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. (எ)

---

மலையதனால் அணைகட்டி மதிளிலங்கையழித்தவனே!
அலைகடலைக்கடைந்து அமரர்க்கு அமுதருளிச்செய்தவனே!
கலைவலவர்தாம்வாழும் கணபுரத்து என்கருமணியே!
சிலைவலவா! சேவகனே! சீராமா! தாலேலோ. (அ)

பதவுரை.

மலை அதனால் அணை கட்டி } மலைகளைக்கொண்டு ஸேதுபந்தனம் பண்ணி
மதிள் இலங்கை அழித்தவனே } அரணையுடைத்தான லங்கா புரியைப் பாழ்படுத்தினவனே!
அலை கடலை கடைந்து } அலையெறிகின்ற திருப்பாற்கடலைக்கடைந்து
அமரர்க்கு—தேவர்களுக்கு
அமுது—அம்ருதத்தை
அருளிச் செய்தவனே—கொடுத்தருளினவனே!
கலை வலவர் தாம் வாழும் கணபுரத்து } ஸகல சாஸ்த்ரங்களையும் நன்கு அறிந்தவர்கள் வாழ்கிற திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற
என் கரு மணியே!—;
சிலை வலவா—(ஸ்ரீ சார்ங்கமென்னும்) வில்லைச் செலுத்தவல்லவனே!
சேவகனே—வீரனே!
சீராமா! தாலேலோ—.

கருத்துரை:—வாநர ஸேனையுடனே கடற்கரையை யடைந்த இராமபிரான், கடலைக் கடக்க உபாயஞ் சொல்லவேண்டுமென்று கடலரசனாகிய வருணனை வேண்டித் தர்ப்பசயநத்தில் படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது பெருமையை மதியாமல் உபேக்ஷைபரயிருந்துவிடவே ஸ்ரீராமன் அது கண்டு கோபங்கொண்டு அனைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச்செய்வேனென்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத்

தொடங்க, அவ்வளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரண மடைந்து, கடல் வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கி நிற்க, வாநரப்படையைத் துணையாகக் கொண்டு ஸேதுபந்தஞ் செய்து கடலைக் கடந்து இலங்கை பாழாளாகப் படைபொருத வரலாறு அறியத்தக்கது.

ராமாவதார திவ்ய சேஷ்டிதங்களை அநுபவித்து வாரா நின்ற இவ்வாழ்வார் "அலைகடலைக் கடைந்து அமரர்க் கமுதருளிச் செய்தவனே!" என்று வேறோரவதாரத்தின் செயலை ஊடே உரைப்பானேன்? எனில்; கடலை அணைசெய்தது திருமாமகளைப் பெறுதற்கானுப்போலவே கடலைக் கடைந்ததும் திருமாமகளைப் பெறுதற்கானமையால் இச்சேர்த்தியழகையிட்டு ஸமுத்ர மதந வ்ருத்தாந்தத்தையும் இங்கே அநுபவிக்கின்றார் போலும்: "அண்ணல் செய்து அலைகடல் கடைந்து அதனுள் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே!, விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே!" என்ற பெரிய திருமொழியை அநுஸந்திக்க.

சேவகனே! = சேவகம் என்று பராக்கிரமத்துக்குப் பெயராதலால், மஹாவீரனே! என்றபடி. "சிலைவலவா! சேவகனே!" என்ற சேர்த்தியால், சார்ங்கமும் மிகை என்னும்படியான வீரப்பாடுடையவன் என்பது போதரும். (௮)

---

தளையவிழும்நறுங்குஞ்சித் தயரதன்தன்குலமதலாய்!
வளைய ஒருசிலையதனால் மதிளிலங்கையழித்தவனே!
களைகழுநீர்மருங்கலரும் கணபுரத்து என்கருமணியே!
இளையவர்கட்கு அருளுடையாய்! இராகவனே தாலேலோ. (௯)

பதவுரை.

தளை அவிழும் நறு குஞ்சி — கட்டு அவிழும்படியான நறு நாற்றமுடைய மயிர்முடியை யுடையனை
தயரதன் தன் — தசரத சக்ரவர்த்தியினுடைய
குலம் மதலாய் — சிறந்த திருக்குமாரனே!
ஒரு சிலை வளைய — ஒப்பற்ற வில்லானது வளைய
அதனால் — அந்த வில்லாலே
மதிள் இலங்கை அழித்தவனே!—;
களை கழுநீர் — களையாகப் பறிக்கப்பட்ட செங்கழுநீர்கள்
மருங்கு அலரும் கணபுரத்து — சுற்றிலும் மலரப் பெற்ற திருக்கண்ணபுரத்திலெழுந்தருளி யிருக்கிற
என் கரு மணியே!—;
இளையவர்கட்கு — இளையவர்கள் விஷயத்திலே
அருள் உடையாய் — கருணை பொருந்தியவனே!
இராகவனே! தாலேலோ—.

கருத்துரை:—"தளை யவிழும்" என்றதனால் குழலின் பரிமளத்தின் மிகுதி கூறப்பட்டதாம்: பரிமளம் மிஞ்சினால் கட்டு அவிழுமென்க. மதலாய் = 'மதலை' என்பதன் விளி.

"[வளைய வொருசிலை இத்யாதி.] ப்ரஹ்மாஸ்த்ராதிகளில் வாய்மடியும் ஊரை மநுஷ்யத்வத்துக்கு ஏகாந்தமான வில்லாலே அழியச் செய்தவனே!" என்று வியாக்கியான வாக்கியம் அச்சுப் பிரதிகளில் காண்கிறது; "ப்ரஹ்மாஸ்த்ராதிகளில்" என்பதை, '......களும்' என்று திருத்துவர் பெரியோர்: லங்கையை அழியச் செய்யவேணுமென்று ப்ரஹ்மாஸ்த்ராதிகளைப் பிரயோகித்தாலும் அந்த

அஸ்த்ரங்களின் முனை மொக்கையாகுமே யன்றி இலங்கைக்கு ஒரு சேதமும் விளையாதென்பது கருத்து. (வாய் - முனையானது, மடியும் - மொக்கையாவதற்குக் காரணமான, ஊரை - இலங்கையை.)

களைகழுநீர் இத்யாதி. களையாகப் பறித்துக் கரையிலே பொகடப்பட்ட செங்கழுநீர் மலர்கள், பொகட்ட இடங்களிலே கிடந்து தன்நிலத்திற்போலே செவ்வி பெற்று அலரும் நிலவளம் பொருந்திய திருக்கண்ணபுரம்.

இளையவர்கட்கு அருளுடையாய் !=வாலியை வதைத்து இளையவனான ஸுக்ரீவனுக்கு அருள்புரிந்தான் ; இராவணனை வதைத்து இளையவனான விபீஷணனுக்கு அருள்புரிந்தான் என்றிறே பெருமாளுக்கு ப்ரஸித்தி. துர்ப்பலர்களாய் இளைத்திருப்பவர்கள் திறத்தில் அருள்செய்பவன் என்றுமாம். (கூ)

---

தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே !
யாவரும்வந்து அடிவணங்க அரங்கநகர்த்துயின்றவனே !
காவிரிநல்நதிபாயும் கணபுரத்து என்கருமணியே !
ஏவரிவெஞ்சிலைவலவா ! இராகவனே ! தாலேலோ. (கo)

பதவுரை.

தேவரையும்—தேவதைகளையும்
அசுரரையும்—அஸுரர்களையும்
திசைகளையும் — திக்குக்களையும் [அதாவது - எல்லா ப்ரதேசங்களையும்]
படைத்தவனே—ஸ்ருஷ்டித்தவனே !
யாவரும் வந்து அடி வணங்க } ஸகல சேதநரும் வந்து திருவடிகளில் ஸேவிக்கும்படியாக
அரங்கம் நகர்—ஸ்ரீரங்கத்திலே
துயின்றவனே—பள்ளிகொண்டிருப்பவனே !
காவிரி நல் நதி—காவேரி யென்கிற சிறந்த நதியானது
பாயும்—ப்ரவஹிக்கப் பெற்ற
கணபுரத்து-திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற
என் கரு மணியே !—;
ஏ வரி வெம் சிலை வலவா } அம்புகள் தொடுக்கப் பெற்று அழகியதாய் (ச் சத்துருக்களுக்கு) க் கொடிதாயிருந்துள்ள வில்லை ஆளவல்லவனே !
இராகவனே ! தாலேலோ—.

கருத்துரை :—ஸஹஜ ஶத்ருக்களான தேவாஸுரர்களையும், அவர்களுக்குத் தங்குமிடங்களையும் ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் நிறைவேறும்படி திருவரங்கம் பெரிய கோயிலில் திருக்கண் வளர்ந்தருளுமவனே ! ஒருவர் ஏற்றிப் பாய்ச்ச வேண்டாதபடி தானே வந்து எங்கும் பாக்கும் காவேரியையுடைய திருக்கண்ணபுரத்திலே ஸுலபனானவனே ! சார்ங்கமென்னும் வில்லைத் தன் கருத்திலே நடத்த வல்லவனே ! தாலேலோ. (கo)

---

கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்து என்காகுத்தன்
தன்னடிமேல் தாலேலோவென்றுரைத்த தமிழ்மாலை
கொல்நவிலும்வேல்வலவன் குடைக்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்பத்தும்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

பதவுரை.

| | |
|---|---|
| என் காகுத்தன் தன் அடி மேல் | என்ஸ்வாமியான இராமபிரான் விஷயமாக |
| தாலேலோ என்று உரைத்த | (கௌஸல்யை) தாலாட்டிச் சொன்ன பாசுரங்களை, (உட்கொண்டு) |
| கொல் நவிலும் வேல் வலவன் குடை குலசேகரன் | கொலைத் தொழில் புரிகின்ற வேலாயுதத்தைச் செலுத்த வல்லவரும் குடையை யுடையவருமான குலசேகராழ்வார் |
| கன்னி நல் மா மதிள் புடைசூழ் கணபுரத்து | சாச்வதமான சிறந்த அழகிய [மதில்கள் நாற்புறமும் சூழப்பெற்ற திருக்கண்ணபுரத்திலே |
| சொன்ன | அருளிச்செய்த |
| பன்னிய | பரம்பிய தாய் |
| நூல் | லக்ஷணமாய் |
| தமிழ் மாலை | தமிழ்ப்பாமாலையாகிய |
| பத்தும் | இப்பத்துப்பாசுரங்களையும் |
| வல்லார் | அதிகரிக்க வல்லவர்கள் |
| பாங்கு ஆய பத்தர்கள் | அமைந்த பக்திமான்களாகப் பெறுவர். |

கருத்துரை :—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது இப்பாட்டு. உரைத்த என்பதைத் தமிழ்மாலைக்கு விசேஷணமாகக் கொள்ளாமல், பலவின்பால் வினையாலணையும் பெயராகக்கொண்டு, "உரைத்தவற்றை" என உரைக்கப்பட்டது. "திருக்கண்ணபுரத்திலே நின்றருளின க்ருஷ்ணனைப் பன்றியிலே சக்ரவர்த்தி திருமகனையாய்த்துக் கவிபாடிற்று" என்ற வியாக்கியான ஸூக்திக்கிணங்க, பாட்டினடைவே அநுவயித்து உரைப்பினுமாம்.

பாங்காய பத்தர்கள்=கௌஸல்யை திருத்தாயாராயிருந்து அநுபவித்தாற்போலவும், இவ்வாழ்வார் பக்தராயிருந்து அநுபவித்தாற் போலவும் பகவதநுபவத்தைப் பெறுவார்களென்க. ... ... ... (கக)

அடிவரவு :—மன்னு புண்டரிக கொங்கு தாமரை பார் சுற்றம் ஆலின் மலை தனை தேவர் கன்னி வந்தாள்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.





ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஒன்பதாந் திருமொழி - வன்றாளினிணை.

ஸ்ரீராமாவதாரத்திற் கௌஸல்யை பெற்ற பேற்றைக்கருதி, அவள் அவ்விராமபிரானைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக்கூறின முகத்தால் கீழ்த்திருமொழி அருளிச்செய்தார்: தாம் அக்காலத்தில் அவ்விராமபிரானை அநுபவிக்கப் பெறாமல் இழந்தது - மைந்தனை அப்பெருமானைப் பாலப்பிராயத்திலெல்லாம் அநுபவித்து யௌவந பருவத்தில் அநுபவிக்கப்பெறாதே இழந்த தந்தையான தசரதசக்கரவர்த்தியின் தன்மைபோலுதலால், இராமன் வநவாஸம் புகுமளவில் அச்சக்கரவர்த்தி அப்பிரிவை ஆற்றமாட்டாது புலம்பிய புலம்பல் முகமாக இத்திருமொழி அருளிச்செய்கிறார். செல்வச்செருக்காலும் அதிகாரத்தாலும் அஹங்காரமமகாரங்களை அடைதற்கு உரிய ராஜகுலத்திற் பிறந்திருந்தும் எம்பெருமானது இன்னருளாலும் ஸதாசார்ய ஸேவையாலும் அந்தத்துரபிமானங்கள் சிறிதுமில்லாதொழியப் பகவானிடத்திற் பக்தியையும் பாகவதர்களிடத்திற் ப்ரதிபத்தியையுமே மிகுதியாகப் பெற்றவரான இவ்வாழ்வார், "கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ" என்றபடி இராமாவதார வைபவத்தில் மிகவுமீடுபட்டு எப்பொழுதும் அதனையே அநுஸந்திப்பவராய் அத்திவ்ய சரித்திரத்தினிடத்தில் தமக்குள்ள அளவிறந்த ப்ரீதி விசேஷத்தால், வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அச்சரித்திரத்தை அப்பொழுதுதான் நடக்கிறதாக நினைத்து அதற்கு ஏற்ற செய்கைகளை ஏற்றுக்கொள்ளும் இயல்பினராதலால், அவ்வவதாரத்திலே பால்ய நிலையிற் சிறிது காலமே அவ்விராமபிரானை அநுபவித்துப் பின்பு நெடுங்காலம் யௌவந நிலையிலெல்லாம் அநுபவிக்கப் பெறாமலே இழந்த தசரதசக்கரவர்த்தியின் தன்மையைத் தாமடைந்து அச்சக்கரவர்த்தி இராமனைப் பிரிந்தவளவிலே இரங்கிப் பேசின பேச்சுக்களின் வடிவமாக இத்திருமொழி அருளிச்செய்கின்றாரென்றுங்காண்க.

---

‡‡வன்தாளினிணைவணங்கிவளநகரம் தொழுதேத்த மன்னனாவான்
நின்றாயை அரியணைமேலிருந்தாயை நெடுங்கானம்படரப்போகு
என்றாள் எம்இராமாவோ! உனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு
நன்றாகநானிலத்தையாள்வித்தேன் நன்மகனே! உன்னைநானே. (௧)

பதவுரை.

எம் இராமாவோ—ஓ எமது இராமனே!
வளம் நகரம்—அழகிய அயோத்திமாநகரத்துப் பிரஜைகளனைவரும்
வல் தாளின் இணை வணங்கி தொழுது எத்த } (சரணமடைந்தவர்களை எப்பொழுதும் விடாமற்பாதுகாக்கும்) வலிமையையுடைய (உனது) இரண்டு திருவடிகளிலும் (விழுந்து) நமஸ்கரித்து (எழுந்து) கைகூப்பி நின்று துதிக்க,

மன்னன் ஆவான் நின்றாயை — அரசனாகப் பட்டாபிஷேகஞ் செய்து கொள்ளுதற்கு வசித்தனாய் நின்றவனும்
அரி அணை மேல் இருந்தாயை — சிங்காசனத்தின் மீது வீற்றிருக்க வசித்தனாயிருந்தவனுமான உன்னை
நெடுங் கானம் படர போகு என்றாள் — 'பெரியகாட்டிற்செல்லுதற்கு (இந்நகர் விட்டு நீங்கிப்) போ' என்று (கைகேயி) கூறினாள் ;

நல் மகனே—நல்ல குமாரனே !
நான்—நான்
உனை பயந்த கைகேசி தன் சொல் கேட்டு — உன்னைப் பெற்று வளர்த்த தாயான [கைகேயியின் வார்த்தையைக்கேட்டு
நன்றாக உன்னை நானிலத்தை ஆள்வித்தேன் — நன்றாக உன்னை நிலவுலகத்தை ஆளும்படி செய்தேன் ?

கருத்துரை :—தண்டகாரணியத்தில் வைஜயந்தமென்ற பட்டணத்தில் வஸிப்பவனும் திமித்வஜன் என்று மறுபெயருள்ளவனும் இந்திரனை வென்றவனுமான சம்பராஸுரனை இந்திரனது வேண்டுகோளின்படி வெல்லுதற்பொருட்டுக்கைகேயியுடன் சென்ற தசரத சக்ரவர்த்தி அவ்வசுரனை எதிர்த்துச் செய்த பெரும் போரில் அவனால் விரணப்பட்டு மூர்ச்சையடைந்த பொழுது, அச்சக்கரவர்த்தியை அசுரர்கள் வதை செய்யாதபடி கைகேயி போர்க்களத்திலிருந்து எடுத்துச் சென்று பாதுகாக்க, மூர்ச்சை தெளிந்தவுடன் தசரதன் தனக்குக் கைகேயி செய்த உயிருதவிக்காக மிக மகிழ்ந்து தான் அவட்கு அவள் வேண்டும் இரண்டு வரங்கள் கொடுப்பதாக வாக்கு அளிக்க, அவள் அவற்றைப் பின்பு தனக்கு வேண்டும்பொழுது கேட்டுப் பெற்றுக்கொள்வதாகச் சொல்லியிருந்தாள் ; ஸீதாகல்யாணத்தின் பிறகு தசாதர் இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய யத்தனிக்கையில் மந்தரை சூழ்ச்சியால் மனங்கலக்கப்பட்ட அக்கைகேயி தசரதரை நோக்கி முன்பு அவர் தனக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களுக்குப் பயனாகத் தன்மகனை பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌஸல்யை மகனை இராமனைப்பதினான்கு வருஷம் வனஞ்செலுத்தவும் வேண்டுமென்று சொல்லி வற்புறுத்த, அது கேட்டு வருந்தின தசரதர் ஸத்யவாதியாகையால் முன்பு அவட்கு வரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமலும் இராமனிடத்து உள்ள மிக்க அன்பினால் அவ்வரத்தை நிறைவேற்றுமாறு சொல்லவும் மாட்டாமலும் கலங்கி வாய்திறக்க மாட்டாதிருக்கிற ஸமயத்திலே கைகேயி இராமனை வரவழைத்து 'பிள்ளாய்! உங்கள் தந்தை பரதனுக்கு நாடு கொடுத்துப் பதினான்கு வருடம் உன்னைக் காடேறப் போகச்சொல்லுகிறார்' என்று சொல்ல, அச் சொல்லைத் தலைமேற்கொண்டு இந்த மாற்றாந்தாயின் வார்த்தையையும் அவட்குத் தனது தந்தை கொடுத்திருந்த வரங்களையும் தவறாது நிறைவேற்றி மாத்ரு பித்ரு வாக்கிய பரிபாலனஞ் செய்தலினிமித்தம் இராமபிரான் தன்னைப்பிரியமாட்டாது தொடர்ந்த இலக்குமணனோடும் ஸீதையோடும் அயோத்தியை விட்டு நீங்கி வனவாசம் புக்கனன்—என்பது வரலாறு.

வன்தாள் = "வண்புகழ் நாரணன் திண்கழல்" என்றார் நம்மாழ்வாரும். "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது ; திண்கழலாயிருக்கும்" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியுங் காண்க. "ஜநநீக்ருணீயம் ஹி வரண க்ருஹணம் ॥"

தசரதர் நீதிதவறாமல் சக்ரவர்த்தியாய் உலகமுழுவதும் அரசாண்டுகொண்டிருக்கையிலும், ஸ்ரீராமபட்டாபிஷேக மென்ற செய்தியைச் செவியுற்ற மாத்திரத்திலே ஸகலப்ரஜைகளும் நற்குண நற்செய்கைகளிற் சிறந்த அவ்விராமபிரான் பக்கல் தம் தமக்குஉள்ள அன்புமிகுதியால் வரம்புகடந்த களிப்புக்கொண்டு அவன் திருவடிகளை வணங்கி வழிபட்டுத் துதித்தனராதலால், "வன் தாளினிணை வணங்கி வளநகரம் தொழுதேத்த" என்றார்.

வளநகரம்=ஸ்ரீராமபட்டாபிஷேகத்தின்பொருட்டு அற்புதமாக அலங்கரிக்கப்பட்ட திருநகரி யென்றபடி. முடிசூட்டுதற்கு முன்பு அநுஷ்டிக்கவேண்டிய விரதங்களையெல்லாம் நடத்தி முடித்துத் திருவபிஷேகத்தின் பொருட்டுக் காப்பு நாண் கட்டப்பெற்று நிற்கின்றனனாதலால், மன்னனாவான் நின்றாயை எனப்பட்டது.

"அரியணைமேல் இருப்பாயை" என்று எதிர்காலந்தோற்றச் சொல்லவேண்டுமிடத்து 'இருந்தாயை' என்று (இறந்தகாலமாகச்) சொன்னது விரைவுந் தெளிவும்பற்றி வந்த காலவழுவமைதி: "விரைவினு மிகையினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி" என்பது நன்னூல். சிங்காசனத்திலே ஏறியாய்விட்டதென்று சொல்லும்படி தோன்ற ஸித்தனாயிருந்த உன்னை என்றபடி. அரியணை—சிங்கத்தின் வடிவந்தோன்றச் சித்திரித்துச் செய்யப்பட்ட பீடம்: ஸிம்ஹாஸநம். அரி—சிங்கம்.

"நெடுங்கானம் படரப்போகு என்றாள்" என்றது—'இந்நகரினின்றும் புறப்பட்டு வழியேபோய்க் காட்டிலே புகுவது' என்று முறையே சொல்லாமல் முதலிலேயே 'நெடிய காட்டிலேறப் போ' என்று சிறிதுங் கண்ணோட்டமின்றிச் சொன்ன கொடுமையைக் காட்டும். எம்மிராமாவோ=நற்குண நற்செய்கைகளினாலும் வடிவழகினாலும் எங்களையெல்லாம் ரமிப்பிக்கவல்லவனே! என்றபடி: அஸமஞ்ஜஸன் போலக் குணக்கேடும் ஒழுக்கக் கேடுமுடையனானவனைப் போகச் சொல்வது உசிதம்; அங்ஙனஞ் சிறிதுமின்றி, நினைக்கவும் சொல்லவும் காணவும் தாபம் போம்படியான உன்னையன்றோ போகச்சொன்னாள் என்க.

' கூனியாகிய மந்தரை கலஹஞ்செய்வதற்கு முன்பு கைகேயி இராமனிடத்துத் தன்மகனிடத்திற்போலவே மிக்க அன்பை இயல்பிலே வைத்திருந்தனளாகலால் "உன்னைப் பயந்த கைகேசி" என்றார். பயந்த—பெற்ற. மெய் நொந்துபெற்ற தாயைப்போல மிக்க பரிவுடையளாயிருந்த - என்றதாயிற்று. ஸ்ரீராமபட்டாபிஷேகமென்ற செய்தியை மந்தரை சொல்லுவதற்கு முன்பு கைகேயி அவளிடம், "பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும், உராவருந்துயரை விட்டுறுதி காண்பரால், விராவரும் புவிக்கெலாம் வேதமேயென, இராமனைப் பயந்த வெற்கு இடருண்டோ?" [கம்பராமாயணம், அயோ-உ-சஎ.] என்றதனையும், அச்செய்தியை அவள் கூறக்கேட்டவுடனே அவட்குச் சிறந்ததோர் ரத்நஹாரத்தைப் பரிசு கொடுத்ததையுங்காண்க. அங்குக் கம்பர் 'மாற்றமஃதுரைசெய மங்கையுள்ளமும், அற்றல் சால் கோசலையறிவு மொத்தவால், வேற்றுமையுற்றிலள்" (ருக) என்றதும் நோக்கத்தக்கது. இனி, "உன்னைப்பயந்த கைகேசி" என்பதற்கு, 'உன்

ளைக்குறித்து அச்சங்கொண்ட கைகேயி' என்றுரைத்து, இராமன் அரசுபெற்றால் தனக்கும் தன்மகனான பாதனுக்கும் தன் தந்தைக்கும் பெருந்தீங்குகளுண்டாமென்று மந்தரை சூழ்ச்சியாற் கைகேயி மனங்கலங்கினமையைத் தெரிவிக்கும் இந்த அடைமொழி என்பர் சிலர்; இவ்வர்த்தம் மிகவும் அஸ்வாஸம்; பயந்த என்னும் பதத்திற்கு 'அஞ்சின' என்று பொருளாமிடத்து அப்பதம் வடமொழியில் [வீ] என்கிற தாது வடியாகப் பிறந்ததொரு பெயரெச்சமாக இருத்தல் வேண்டும் இத்தகைய சொல் வ்யவஹாரத்தில் பெரும்பான்மையாக வழங்கப்படினும் ஆழ்வாரருளிச்செயல்களிலும் மற்றும் உத்தம கவிகளின் பிரபந்தங்களிலும் வரக் கண்டிலோம்.

"நன்றாக உன்னை நானிலத்தை ஆள்வித்தேன்" என்றது—'கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்தாய்' என்பது போன்ற விபரீதலக்ஷணை. இப்படி நான் உன் பக்கல் பெருந்தீங்கு செய்தவிடத்திலும் நீ சிறிதும் குணங் குறைந்தாயில்லை; உன்குணம் மேன்மேல் மிக்கு விளங்கப்பெற்றாய்; நானே குணக்கேடுடையனாய் நின்றேன் என்பான் "நன்மகனே!" என்று விளித்தான்: புத்ரலக்ஷணங்களைப் பூர்த்தியாகவுடையவன் என்றபடி: தன் சொல் தவறாது நடக்குமவனான மகனென்க. ஏற்றடி இரக்கத்தை நன்கு விளக்கும்.

போகு—என்றாள் = போகென்றாள் என்று புணரத்தக்கது, சிறுபான்மை உயிர்வரக் குற்றியலுகரம் கெடாது பொது விதியால் வகரவுடம்படு மெய் எற்று போகுவென்றாள் என்று நின்றது: இவ்விடத்து இது செய்யுளோசை நோக்கியது.

இராமாவோ:—ஓகாரம் மிக்கது, புலம்பல் விளியாகலின்; "புலம்பின் ஓவும் ஆகும்" என்றார் நன்னூலாரும்.

"உன்னை நானிலத்தை ஆள்வித்தேன்" இரண்டு செயப்படு பொருள் வந்தவினை; த்விகர்மகதாதுப்ரயோகமென்பர் வடநூலார். நானிலம்—நால் நிலம்: நால்வகை நிலங்களையுடையது என்று பொருள்படும்: பூமியின் காரணக்குறி; பண்புத்தொகையன்மொழி. நால்வகை நிலங்களாவன - முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்தல் என்பன. காடும் காடுசார்ந்த இடமும் - முல்லை; மலையும் நாடு சார்ந்த இடமும் - மருதம்; கடலும் கடல்சார்ந்த இடமும் - நெய்தல். நீரும் நிழலுமில்லாததான பாலைநிலம் பிராணி ஸஞ்சாரத்துக்கு உரியதன்றாதலால் விலக்கப்பட்டது. அன்றியும், பாலைக்குத்தனியே நிலமில்லை யென்றும், மற்றை நான்கு நிலங்களும் தம் இயல்பு திரிந்தவிடத்தே பாலையாமென்றுங்கொள்கையுண்டு. (க)

---

வெவ்வாயேன்வெவ்வுரைகேட்டு இருநிலத்தை வேண்டாதேவிரைந்துவென்றி
மைவாயகளிறொழிந்துதேரொழிந்து மாவொழிந்து வனமேமேவி
நெய்வாயவேல்நெடுங்கண்நேரிழையும் இளங்கோவும்பின்புபோக
எவ்வாறுநடந்தனை? எம்மிராமாவோ! எம்பெருமான்! என்செய்கேனே! (உ)

பதவுரை.

எம் இராமாவோ !—;

வெவ் வாயேன் வெவ் உரை கேட்டு — கொடிய வாயையுடையேனுன வென்னுடைய கடுஞ்சொற்களைக் கேட்டு

இரு நிலத்தை வேண்டாதே — பெரிய நிலவுலகத்து அரசாட்சியை விரும்பாமலே விட்டிட்டு

விரைந்த—சீக்கிரமாக.

வென்றி மை வாய களிறு ஒழிந்து தேர் ஒழிந்து மா ஒழிந்து — வெற்றியை விளைப்பதான மைம்மலை [போன்ற வடிவத்தையுடைய யானையும் தேரும் குதிரையுமாகிய வாஹநங்களை யொழிய விட்டு

வனமே மேவி—காட்டையே சேர்ந்து

நெய் வாய வேல் நெடும் கண் நேரிழையும் — நெய்பூசிய நுனியையுடைய வேலாயுதம் போன்ற நீண்ட கண்களையும் தகுதியான ஆபரணங்களையுமுடையளான பிராட்டியும்

இளங் கோவும்—இளைய பெருமாளும்

பின்பு போக—உடன்தொடர்ந்துவர

எ ஆறு நடந்தனை—எங்ஙனம் நடந்து சென்றாயோ ?

எம் பெருமான்—எமது ஐயனே !

என் செய்கேன்—நான் என் செய்வேன் ?

கருத்துரை :—'ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்குச்செல்' என்று நெருப்புப்போன்ற கொடுமையான சொல்லைச் சொல்வதற்கு ஏற்ற தீயவாயையுடையேன் என்று தன்னைத்தான் வெறுத்துக்கொள்வான் "வெவ்வாயேன் வெவ்வுரை" என்றான். 'நாட்டைவிட்டுக் காட்டுக்குச் செல்' என்ற வார்த்தையைத் தன் வாயால் தான் சொல்லாவிட்டாலும் அங்ஙனம் கைகேயி சொல்ல இடங்கொடுத்து அதனை மறுக்காமல் மௌனமாயிருந்ததே "அப்ரதிஷித்³த⁴ம் அநுமதம் ப⁴வதி" [—'தடைசெய்யாதது தானுடன்பட்டதாம்'] என்னும் நியாயப்படி - ஸம்மதித்துச்சொன்னதனோடொக்குமாதலாலும், அவ்வார்த்தையைக் கைகேயி சொல்லுமிடத்து "ஆழி சூழுலகமெல்லாம் பரதனேயாள நீ போய்த், தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந்தவமேற்கொண்டு, பூழி வெங்கான நண்ணிப் புண்ணியத்துறைகளாடி, ஏழிரண்டாண்டின் வாவென்றியம்பினனரசன்" (கம்பர்) என்று தசரதன் வார்த்தையாக அநுவதித்துக்கூறியதனுலும் "வெவ்வாயேன் வெவ்வுரை கேட்டிரு நிலத்தை வேண்டாதே" எனப்பட்டது.

'உன்னைப்பிரிந்தால் இறந்திடுவோம் என்று வந்து சூழ்ந்து கிடக்கிற ப்ரஜைகளையெல்லாம் ஒளித்து வஞ்சித்து அவர்களைக் கைவிட்டுப்போனமையும் "இரு நிலத்தைவேண்டாதே" என்றதில் தோன்றும். இருநிலம் - பெரியநிலம் ; நிலத்தார்க்குப் பெருமை - இவனைப் பிரியில் தரியாமை.

வேறு எந்தக்காரணத்தினுலேனுஞ் சிறிது விளம்பித்தாலும் 'ராஜ்யத்தில் விருப்பத்தால் மயங்கி நிற்கின்றான்" என்று கைகேயி நினைப்பளெனக்கருதி மிக்க விரைவு கொண்டனனாதலால், விரைந்து எனப்பட்டது ; கைகேயி வார்த்தையைக் கேட்டவுடனே இராமன், "இப்பணி தலைமேற்கொண்டேன், மின்னொளிர் கானமின்னே போகின்றேன் விடையுங்கொண்டேன்" என்றுசொல்லி உடனே புறப்பட்டமை காண்க.

"வென்றிமைவாயகளிறு" என்றது - ஶத்ருஞ்ஜயம் என்னும் பட்டத்துயானையை. ஶத்ருஞ்ஜயமென்ற வடமொழிப்பெயரின் பொருள் - பகைவர்களை ஜயிப்

பது என்பதாதலால் அது, வென்றிக்களிறு எனப்பட்டது. இந்நாட்டை விட்டாலும் வேறொரு காட்டிற்குச் செல்லலாமே; அங்ஙனஞ் செல்லாமல் வனத்துக்கே புக்கதனைக்குறித்து "வனமேமேவி" என்றார்; ஏகாரம் - பிரிநிலையோடு, இழிவு சிறப்பு. புதுமைக்குத் தகாதவர்களையும் உடன்கொண்டு புக்கதனைக்காட்டும் மூன்றுமடி.

எவ்வாறு நடந்தனை = கால்நடை நடக்க உரியனல்லாத நீ எங்ஙனம் நடந்து சென்றாயோ! என்று பரிதபிக்கிறபடி. கைகேயி வார்த்தைக்குக் குறுக்குச் சொல்லமுடியாமல் இவ்வாறு உன்னைப் பிரியவிட்டு அகதிகனான எனக்கு இனி மரணமே கதியென்பான் "என்செய்கேன்" என்றான். எம்பெருமான்!—ஆண்மை விளியாதலின் இயல்பு. (உ)

---

கொல்லணைவேல்வரிநெடுங்கண் கௌசலைதன் குலமதலாய்! குனிவில்லேந்தும்
மல்லணைந்தவரைத்தோளா! வல்வினையேன் மனமுருக்கும்வகையேகற்றாய்
மெல்லணைமேல்முன்துயின்றாய் இன்றுஇனிப்போய்வியன்கானமரத்தின்நீழல்
கல்லணைமேல்கண்துயிலக்கற்றனையோ? காகுத்தா! கரியகோவே! (ரு)

பதவுரை.

கொல் அணை—கொலைத்தொழில் பொருந்தின
வேல்—வேலாயுதம்போன்ற
வரி நெடுங் கண்—செவ்வரி பரந்த நீண்ட கண்களையுடைய
கௌசலை தன்—கௌஸல்யையினது
குலம்—குலத்தில் தோன்றிய
மதலாய்—குமாரனே!
குனி வில் ஏந்தும்—வளைந்தவில்லைத்தரித்த
மல் அணைந்த வரை தோளா—வலிமை பொருந்திய மலைகள் போன்ற தோள்களையுடையவனே!
வல் வினையேன்—மஹாபாபியான என்னுடைய
மனம் உருக்கும் வகையே கற்றாய்—மனதை உருகச்செய்வதற்கே வல்லவனே!
காகுத்தா—ககுத்ஸ்தனென்னும் அரசனது குலத்தில் தோன்றியவனே!
கரிய கோவே—கருநிறமுடைய ஐயனே!
மெல் அணை மேல் முன் துயின்றாய்—மென்மையான பஞ்சணை மெத்தையின்மேல் முன்பெல்லாம் படுத்து உறங்கிப் பழகினவனான நீ
இனி இன்று போய்—இனிமேற் புதிதாக இன்றைக்குச்சென்று
வியன் கானம் மரத்தின் நீழல்—பெரிய காட்டிலுள்ள மரத்தின் நிழலிலே
கல் அணைமேல் கண் துயில கற்றனையோ—கருங்கற் பாறைகளையே படுக்கையாகக்கொண்டு அதன்மேற் படுத்துத் துயிலப்பழகுகின்றாயோ?

கருத்துரை :—இன்றளவும் ராஜார்ஹமான ஸுகுமாரசயநங்களிலே ஸுகமே கிடந்து கண்வளர்ந்த உனக்கு இனி *கொடுங்கதிரோன் துன்னுவெயில் வறுத்த வெம்பரல்மேல் படுக்க நேர்ந்ததே! இஃதென்ன கொடுமை! என்று வயிறெரிகிறபடி. "கௌசலை தன் குலமதலாய்" என்பதற்கு - 'ஸ்ரீ கௌஸல்யாருடைய குலத்துக்கு உத்தாரகனானவனே!' என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்; மதலை என்ற சொல்லுக்கு - தூண் என்றும் ஒரு பொருள் உள்ளதனால் மேல்நிலையைத் தூண்தாங்குவது போல அக்குலத்துக்கு ஆதாரமாய் நின்று அதனைத்தாங்குபவன் என்றவாறு. "சிதலை தினப்பட்ட ஆலமரத்தை, மதலையாய் மற்றதன் வீழ் ஊன்றியாங்குக், குதலைமை தந்தைகட்டோன்றின் தான் பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும்" என்பது காண்க. "குனிவில்லேந்தும்

மல்லணைந்தவரைத்தோளா!" என்பதற்கு - 'வீரர்கள் வில் ஒருகால் நாணி இறங்கிடாமையாலே வளைந்தபடியே இருக்குமிறே; அந்தவில் தானும் மிகையென்னும்படி மலைபோல் பெரிய மிடுக்கையுடைய தோளையுமுடையவனே!' என்பதுவியாக்கியானம்.

வல்வினையேன் என்றது :—"குடையுஞ்செருப்புங்கொடாதே தாமோதரனை நான், உடையுங்கடியனவூன்று வெம்பரற்களுடைக், கடிய வெங்கானிடைக் காலடிநோவக் கன்றின்பின், கொடியேனென்பிள்ளையைப் போக்கினேன் எல்லே பாவமே?" என்றாற்போல, பெருமானுடைய திருமேனி ஸௌகுமார்யத்தை நோக்காமல் வெவ்விய காட்டில் அவனைப்போகவிட்ட கொடுமையையுடைய தன்னைத்தானே வெறுத்துக்கூறியது.

மனமுருக்கும் என்றவிடத்து, மனம் முருக்கும் என்றும் பதம்பிரிக்கலாம்; முருக்குதல் - அழித்தல் : முருங்கு என்பதன் பிறவினை. வியன் - உரிச்சொல்; வியல் என்பதன் விகாரமுமாம். நீழல் - நிழல் என்பதன் நீட்டல். (௩)

---

வாபோகுவாஇன்னும்வந்து ஒருகால்கண்டுபோ, மலராள்கூந்தல்
வேய்போலுமெழில்தோளிதன்பொருட்டா விடையோன்தன்வில்லைச்செற்றாய்!
மாபோகுநெடுங்கானம் வல்வினையேன் மனமுருக்கும்மகனே! இன்று
நீபோகஎன்னெஞ்சம் இருபிளவாய்ப் போகாதேநிற்குமாறே! (௪)

பதவுரை.

வா—(சற்று இங்கே) வா;
போகு—இனிச்செல்வாய்;
வா—மறுபடியும் இங்குவா;
இன்னம் வந்து ஒருகால் கண்டுபோ—(போம்போது) பின்னையும் ஒருதரம் வந்து என்னைப்) பார்த்துவிட்டுப்போ;
மலர் ஆள் கூந்தல்—பூக்களை எப்பொழுதும் தரிக்கிற மயிர்முடியையுடையளும்
வேய்போலும் எழில் தோளிதன் பொருட்டு ஆ—மூங்கில் போன்ற அழகியதோள்களையுடையளுமான பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக
விடையோன் தன் வில்லை—சிவனுடைய வில்லை
செற்றாய்—முறித்தவனே!
வல்வினையேன் மனம் உருக்கும் மகனே—மஹாபாபியான எனது மனதை உருகச்செய்கிற மைந்தனே!
இன்று—இப்பொழுது
நீ—நீ
மா போகு நெடுங் கானம் போக—யானைகள் ஸஞ்சரிக்கிற பெரிய காட்டுக்குப் போக,
என் நெஞ்சம்—எனது மனமானது
இரு பிளவு ஆய் போகாதே நிற்கும் ஆறே—இரண்டு பிளப்பாகப் பிளந்து போகாமலே வலியதாய் நிற்குந் தன்மை என்னே?

கருத்துரை :—தசரதன் ஸ்ரீராமனை க்ஷணகாலம் காணவிட்டால் உடனே காண்கைக்காக ஸுமந்த்ரனையிட்டு வரும்படி அழைப்பிப்பன்; பின்பு அவ்விராமனது பின்னழகையும் நடையழகையும் காண்கைக்காக 'போ' என்பன்; பின்னையும் கண்மறையப் போனவாறே ஆற்றாமையால் 'வா' என்பன், மீண்டும் வந்தவாறே 'இன்னம் போம்போது ஒரு கால் கண்டுபோ' என்பன்; இப்படி மகனிடத்து அன்பினாலும் அவனது பிரிவை ஆற்றமாட்டாமையாலாகிய மனச்சுழற்சியாலும் பலமுறை 'வா' என்றும் 'போ' என்றும் மாறிமாறிச் சொல்லிவந்தனனென்க.

விடையோன்றன் வில்லைச் செற்றாய்=ஜநகமஹாராஜன் தனது குலத்துப் பூர்விகராஜனான தேவராதனிடம் சிவபிரானால் வைக்கப்பட்டிருந்ததொரு பெரிய வலிய வில்லையெடுத்து வளைத்தவனுக்கே தன்மகளான ஸீதையைக் கலியாணஞ் செய்து கொடுப்பதென்று கந்யாசுல்கம் வைத்திருக்க, வேள்விமுடித்த விச்வாமித்ரனுடன் மிதிலைக்குச் சென்ற ஸ்ரீராமன் அவ்வில்லையெடுத்து வளைக்கத் தொடங்குகையில் அது முறிந்திட, அதனால் ஜநகன் இராமனது பெருமிடுக்கைக்கண்டு மகிழ்ந்து ஸீதையை இராமனுக்கு மணஞ்செய்யலாயினனென்ற கதை அறிக. [மாபோது.] மா என்ற விலங்கின் பொதுப்பெயர், சிறப்பாய் இங்கு யானையைக் குறித்தது.

பொருட்டா:—பொருட்டாக. ஈற்றில் ஆறு என்பதன்பின் வியப்பை விளக்குகிற ஏகாரத்தின் கருத்து, வாக்கியத்துக்கு முடிக்குஞ் சொல்லாயிற்று.

“வா போகு வா வின்னம் வந்தொருகால் கண்டுபோ” என்பது - தசரதன் அறிவு கெட்டுப் புலம்புகிற ஸமயத்தில் வார்த்தையாதலால் அநந்விதமாய் நிற்கின்றதென்ப. ச

---

பொருந்தார்கைவேல்நுதிபோல் பரல்பாய மெல்லடிக்கள் குருதிசோர
விரும்பாதகான்விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய்கூர இன்று
பெரும்பாவியேன்மகனே! போகின்றாய் கேகயர்கோன்மகளாய்ப்பெற்ற
அரும்பாவிசொற்கேட்ட அருவினையேன் என்செய்கேன்? அந்தோ! யானே. (ரு)

பதவுரை.

பொருந்தார் கை வேல் நுதி போல் — பகைவர்கள் கையிலேந்தும் கூர்மையான வேலாயுதத்தின் நுனி போன்ற
பரல்—பருக்கைக் கற்கள்
பாய—(காலில்) தைத்து அழுந்தவும்
மெல் அடிக்கள் குருதி சோர — மென்மையான (உனது) பாதங்களினின்று ரக்தம் பெருகவும்
வெயில் உறைப்ப — (மேலே) வெயிலுறைக்கவும்
வெம் பசி நோய் கூர-(வேண்டியபோது உணவு கிடையாமையாலே) வெவ்விய பசியாகிய நோய் மிகவும்,
பெரும் பாவியேன் மகனே — மஹாபாபியான எனது மைந்தனே!
இன்று—இப்பொழுது
விரும்பாத கான் விரும்பி போகின்றாய் — (எவரும்) விரும்பாத காட்டை (நான் போகச்சொன்னேனென்பதனாலே) விரும்பி (அவ்விடத்துக்குச்) செல்கின்றாய்;
கேகயர் கோன் மகள் ஆய் பெற்ற அரும் பாவி — கேகயராஜன் பெற்ற மகளான கொடிய பாவியாகிய கைகேயியினுடைய
சொல் கேட்ட அரு வினையேன் யான் — வார்த்தையைக் கேட்ட கொடியேனாகிய நான்
அந்தோ என் செய்கேன் — ஐயோ! என்ன செய்வேன்!

கருத்துரை:—எப்படிப்பட்ட கல்நெஞ்சினரும் செய்யமாட்டாத ஒரு மஹாபாபத்தைச் செய்பவளான ஒரு பாபமூர்த்தியைக் கேகயராஜன் பெண்ணாய்ப் பெற்றான்; அவள் வார்த்தையிலே அகப்பட்டுக்கொண்டு நான் பரிஹாரமில்லாததொரு செயலைச் செய்துவிட்டேன்; இனி இதற்கு நான் செய்யக்கூடிய பரிஹாரம் ஒன்றுமில்லையே! என்று பச்சாத்தாபத்தோடு கூறுகிறபடி. மஹாபாபி

யான எனக்கு மகனாய்ப் பிறந்தமையாலன்றோ ஸுகுமாரனான நீ இங்ஙனம் மஹாவநத்துக்குச்செல்ல நேர்ந்தது என்பான், 'பெரும்பாவியேன் மகனே!' என்றான்.

வெம்பசி நோய் கூர=கூர - மிகுதி யுணர்த்தும் கூர் என்ற உரிச்சொற்பகுதியினடியாப் பிறந்த செயவெனெச்சம். கேகயர் - கேகய தேசத்திலுள்ளவர்கள். ரு

---

அம்மாவென்றுகந்தழைக்கும் ஆர்வச்சொல்கேளாதே அணிசேர்மார்வம்
என்மார்வத்திடையழுந்தத் தழுவாதே முழுசாதேமோவாதுச்சி
கைம்மாவின்நடையன்னமென்னடையும் கமலம்போல்முகமும்காணாது
எம்மானை என்மகனையிழந்திட்ட இழிதகையேன் இருக்கின்றேனே. (சு)

பதவுரை.

அம்மா என்று உகந்து அழைக்கும் — 'ஐயா!' என்று மகிழ்ச்சிகொண்டு (என்னை) அழைக்கின்ற
ஆர்வம் சொல்—ப்ரீதி விளங்குஞ் சொல்லை
கேளாதே—(நான்) கேட்கப்பெறாமலும்
அணி சேர் மார்வம்—ஆபரணங்கள் பொருந்திய (என் மகனது) மார்பு
என் மார்வத்திடை அழுந்த — என் மார்பிலே அழுந்தும்படி
தழுவாதே—(நான் அவனை) இறுக அணைத்துக் கொள்ளாமலும்
முழுசாதே—(அந்த ஆலிங்கந போகக்கடலில்) முழுகாமலும்
உச்சி மோவாது—உச்சியை மோந்திடாமலும்
கைம்மாவின் நடை அன்ன மெல் நடையும் — யானையினது நடைபோன்ற [கம்பீரமான] (அம்மகனது) மென்மையான நடையின் அழகையும்
கமலம் போல் முகமும்—தாமரை மலர்போன்ற (அவனது) முகப்பொலிவையும்
காணாது—காணாமலும்
எம்மானை என் மகனை இழந்திட்ட — எமது ஐயனான என் மகனைக் (காட்டேறப்போக்கி) இழந்துவிட்ட
இழி தகையேன்—இழிவான செயலைச் செய்தவனான நான்
இருக்கின்றேனே-(இன்னமும் அழிந்திடாமல்) உயிர் வாழ்ந்திருக்கின்றேனே!

கருத்துரை:—ப்ரீதிப்ரகர்ஷம் தோன்ற ஐயா! என்று அழைக்கும் மகனது இன் சொல்லைக் கேட்கப்பெறாமலும், இயற்கை யழகோடு செயற்கை யழகு செய்யும் ஆபரணங்கள் அசைந்து விளங்குகின்ற அவனது மார்பை ஆலிங்கநஞ் செய்துகொள்ளப் பெறாமலும், ஆநந்தஸாகரத்தில் அழுந்தப்பெறாமலும், உச்சிமோரப் பெறாமலும், நடையழகு காணப்பெறாமலும், முகாரவிந்தத்தை அநுபவிக்கப் பெறாமலும் என் கண்மணியைக் காட்டுக்குத் துரத்தின படுபாவியாகிய நான் அப்போதே சாவாமல் இன்னும் பிழைத்திருக்கவும் வேணுமா! என்று பரிதபிக்கிறபடி. அம்மா வென்று=தந்தையை அப்பாவென்று அழைத்தல், உவப்புப்பற்றிய பால் வழுவமைதி: "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை இழுக்கினு மியல்பே." என்பது நன்னூல் (பொதுவியல் - உஅ)

கைம்மா - துதிக்கையையுடைய மிருகம்; எனவே யானையாயிற்று. எம்மான் - எமது மஹாந். இழிதகை - இழிந்த தன்மையென வினைத்தொகை; "இழித்தகையேன்" என்று வலிமிக்க பாடமுமுண்டு; அப்போது, இழி - இழிவு;

முதனிலைத் தொழிற்பெயர்; இழிவாகிய தன்மையென இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம். இயல்பான பாடமே சிறக்குமென்ப. கூ

---

பூமருவுநறுங்குஞ்சிபுன்சடையாப்புனைந்து பூந்துகில்சேரல்குல்
காமரேழில்விழலுடுத்துக் கலனணியாது அங்கங்கள் அழகுமாறி
ஏமருதோளென்புதல்வன் யான் இன்று செலத்தக்கவனம்தான்சேர்தல்
தூமறையீர்! இது தகவோ? சுமந்திரனே! வசிட்டனே! சொல்லீர்நீரே. (௭

பதவுரை.

தூ மறையீர்—நித்ய நிர்த்தோஷமான வேதத்தை ஓதியிருக்கிற பிராமணர்களே!

சுமந்திரனே — (ராஜ தர்மத்தை நன்கறிந்து நடத்திப் போந்த) ஸுமந்த்ரரே!

வசிட்டனே — (ராஜ தர்மங்களை உபதேசித்துப் போருகிற) வசிஷ்ட மஹர்ஷியே!

(உங்களை ஒரு விஷயம் கேட்கிறேன்;)

பூ மருவும் நறு குஞ்சி — புஷ்பம் மாறாதே யிருப்பதாய் மணம் கமழாநின்ற திருக்குழலை

புன் சடை ஆ புனைந்து — விகாரமான ஜடையாகத் திரித்து

பூ துகில் சேர் அல்குல் — நல்ல பட்டுப் பீதாம்பரங்கள் சாத்தவேண்டிய திருவரையிலே

காமர் எழில் விழல் உடுத்து — காண்கைக்கு ஆசைப்படத்தக்க அழகிய விச்வாமித்ரத்தைக் கயிறாக முறுக்கிச் சாத்தி

கலன் அணியாது—திருவாபரணங்கள் அணியாமல்

அங்கங்கள் அழகு மாறி—இயற்கை யழகுக்கு மேல் திருவாபரணங்களால் உண்டாகக்கூடிய செயற்கை யழகின்றியிலே,

ஏமரு தோள் என் புதல்வன் தான் — ஸுரக்ஷிதமான தோள்களை யுடையனான எனது குமாரனானவன்

யான் இன்று செல தக்க வனம் சேர்தல் இது தகவோ—தகுதிதானோ? — நான் இப்போது போகவேண்டிய காட்டுக்குத்தான் போவது

நீரே சொல்லீர்—(தர்மஜ்ஞரான) நீங்களே (ஆராய்ந்து) சொல்லுங்கள்.

கருத்துரை:—நல்ல புஷ்பங்களைச் சூடிப் பரிமளம் விஞ்சக்கடவதான திருக்குழலைச் சடையாகத் திரித்தும்' நான் அறுபதினாயிரமாண்டு அரசாண்டு ஸம்பாதித்து வைத்திருக்கும் பட்டுப் பீதாம்பரங்களில் நல்லவற்றைச் சாத்தக்கடவதான திருவரையில் விச்வாமித்ரத்தைக் கயிறாக முறுக்கிச் சாத்தியும், இயற்கையான அழகுக்கு மேலே செயற்கை யழகுக்காக ஆபரணங்களைச் சாத்தவேண்டிய அவயவங்களில் அவற்றைச் சாத்திக்கொள்ளாமலும் அந்தோ! என் மைந்தன் காட்டுக்குச் சென்றனனே! ஐயோ! இக்காடு இந்த வயதில் அவனுக்குச் செல்லக்கூடியதா? அறுபதினாயிரமாண்டு போகங்களை புஜித்துப் பல்விழுந்து தலை நரைத்து உடலிளைத்து உடை குலைப்பட்ட நான் இன்று போகக்கூடியதான காட்டிற்கு எனது மைந்தன் செல்கிறானே! இது என்ன அநியாயம்!! தர்மங்களை அறிந்தும் அநுஷ்டித்தும் உபதேசித்தும் போருகிற மஹாநுபாவர்களே! இது நியாயந்தானா? நீங்கள் சற்று ஆராய்ந்து சொல்லுங்கள்! என்கிறான்.

சடை - ஜடா. விழல் - ஓர் புல். விகாரமான விழலையுடுத்து என்ன வேண்டுமிடத்துக் காமரேழில் [மிகவு மழகிய] என்றது - 'நல்லபாம்பு, மங்களவாரம்' என்னுமாபோலே விபரீதலக்ஷணை யென்க. கலன் - மகர னகரப்போலி. ஏமரு தோள் = "ஏமம்தரு" என்பது 'ஏமரு' என மருவிக்கிடக்கிறது; ஏமம் - ரக்ஷை; ரக்ஷைபெற்றதோள் என்றாவது, பிறரை ரக்ஷிக்கவல்லதோள் என்றாவது

பொருள் கொள்ளலாம். "விக்கம் பண்ணினுரை அழியச்செய்து அபிஷேகம் பண்ணவல்ல என் மகன்" என்பது வியாக்கியானம். சேல-செல்ல; தொகுத்தல். சுமந்திரன் - தசாதனுக்கு மந்திரியும் ஸாரதியுமானவன். வஸிஷ்டர் - இக்ஷ்வாகு வம்ஶத்துப் புரோஹிதர். எ

---

போன்பெற்றுரேழில்வேதப்புதல்வனையும் தம்பியையும் பூவைபோலும்
மின்பற்றுநுண்மருங்குல்மெல்லியலென் மருகியையும் வனத்திற்போக்கி
நின்பற்றுநின்மகன்மேல்பழிவிளைத்திட்டு என்னையும்நீள்வானில்போக்க
என்பெற்றுய்? கைகேசீ! இருநிலத்தில் இனிதாக இருக்கின்றுயே. (அ)

பதவுரை.

கைகேசீ—கைகேயியே!

பொன் பெற்றார் எழில் வேதம் புதல்வனையும் — கல்விச்செல்வத்தைப் பெற்றவர்களான உபாத்தியாயரின் கீழேயிருந்து அழகிய வேதங்களை ஓதியிருக்கிற மூத்த மகனை இராமனையும்

தம்பியையும்—(அவனது) தம்பியான லக்ஷ்மணனையும்,

பூவை போலும்—(பேச்சின் இனிமையிற் கொஞ்சுகிற) கிளிபோன்றவளும்

மின் பற்று நுண் மருங்குல் மெல் இயல் என் மருகியையும் — மின்னலும் ஈடாகமாட்டாத நுண்ணிய இடையையும்மென்மையான தன்மையையுமுடையவளுமான என் மருமகளாகிய ஸீதையையும்

வனத்தில் போக்கி—காட்டுக்குப் போகச்செய்து

நின் பற்று ஆம் நின் மகன் மேல் பழி விளைத்திட்டு — உனது அன்புக்கு இடமான உன் மகனை பாதன் மேற் பழியுண்டாம்படி செய்து

என்னையும் நீள் வானில் போக்க — (புத்ரவிரஹத்தால்) என்னையும் தூரத்திலுள்ள மேலுலகத்திற்குச் செலுத்துதலினுல்

என் பெற்றுய்—நீ என்ன பயனடைந்தாய்? (இவ்வளவு செய்துவிட்டு நீ)

இரு நிலத்தில்—பெரிய இவ்வுலகத்தில்

இனிது ஆக—சுகமாக

இருக்கின்றுயே—வாழ்கின்றுயே!

கருத்துரை:—"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு, மாடல்ல மற்றையவை" என்றபடி கல்வி அழிவில்லாத சிறப்புடைய செல்வமாதலால் அக்கல்வியைப் பூர்ணமாகப் பெற்ற வஸிஷ்டர் முதலிய உபாத்தியாயர்களைப் பொன்பெற்றுர் என்றுர்.

பாதன் அங்காட்டிவில்லாமல் மாதாமஹனைக் காணும்பொருட்டு மாமனுடைய கேகய தேசத்துக்குச் சென்றிருக்கையில் இங்குக் கைகேயி செய்த முயற்சி பாதனுக்குத் தெரியாததும் தெரிந்தவளவில் மிக்க வருத்தத்தைத் தருவதுமாயினும் கைகேயி தன் மகனுக்காகச் செய்த முயற்சியில் அவள் மகனும் ஸம்பந்தப்பட்டவனென்று உலகந்தார் ஸந்தேஹித்து நினைப்பதற்கு இடங்கொடுத்தலால் "நின்பற்று நின்மகன்மேல் பழி விளைத்திட்டு" எனப்பட்டது. உன் மகனுக்கு அநுகூலமாக நீ செய்த காரியம் அந்த உன் காதல் மகனுக்கே சார்வதமான பெரும்பழியை விளைத்துத் தீமையாய் முடிந்ததே! என்று எடுத்துக் காட்டியபடி. தசாதன் இங்ஙனம் தனக்கும் தன் அருமை மகனை இராமனுக்கும் பெருந்தீங்கு செய்த கைகேயியின் வயிற்றிற் பிறந்தவனென்ற காரணத்தாலே பாதனிடத்துக் கொண்ட உபேக்ஷையினுல் அவனை நின்மகன் என்றுன்.

"இன்னே பலவும் பகர்வானிரங்காதானை நோக்கிச்
சொன்னேனின்றே யிவளென்தாரமல்லள் துறந்தேன்
மன்னேயாவான் வருமப்பரதன் றனையும் மகனென்
றுன்னேன் முனிவா வவனும் ஆகானுரிமைக்கென்றான்."

என்பது காண்க.

மருகி - மகன் மனைவி; (இதன் ஆண்பால் - மருகன்.) என் பெற்றாய்=இவ்வளவு கொடுமைகளை ஒருங்கே செய்தற்கு நீ என்ன திறமைபெற்றாய்! எனினுமாம். [இரு நிலத்தில் இனிதாக இருக்கின்றாயே.] "ஸம்ஸாரஸுகமாகிறது, புத்ரர்களோடும் பர்த்தாவோடும் கூடியிருக்கையாய்த்து; உனக்குப் புத்ரரான பெருமாளைக் காட்டிலேபோக்கி என்னையும் ஸ்வர்க்கத்திலே போக்குகையாலே ஸம்ஸாரஸுகம் அழகிதாக அநுபவிக்கக்கடவையிறே" என்ற வியாக்கியான ஸூக்தி காண்க. ஸ்ரீராமவிரஹத்தால் உலகமெல்லாம் வருந்திக்கிடக்கையில் நீ ஒருத்திமாத்திரம் மனமகிழ்ந்திருக்கின்றனையே, இது என்ன அழகு! என்க. "உடரெலர் முயிரிலாவெனத்தோன்று முலகத்தே யொருத்தியன்றே, இடரிலா முகத்தானை யறிந்திலையே விங்கின்றாளென்னை யீன்றாள்" என்ற பரதன் வார்த்தையையுங் காண்க. மின்பற்றா நுண்மருங்குல் - மின்னலினும் மிக நுண்ணியதாய் விளங்கும் இடையென்றபடி. கைகேசீ - ஈறுநீண்ட விளி. பூவை - நாகணவாய்ப் பறவையுமாம். அ

---

முன்னொருநாள்மழுவாளிசிலைவாங்கி அவன்தவத்தைமுற்றும்செற்றாய்
உன்னையும் உன்னருமையையும் உன்மோயின்வருத்தமும் ஒன்றாகக்கொள்ளாது
என்னையும் என்மெய்யுரையும் மெய்யாகக்கொண்டு வனம்புக்கவெந்தாய்!
நின்னையேமகனாகப்பெறப்பெறுவேன் ஏழ்பிறப்பும்நெடுந்தோள்வேந்தே! (கூ)

பதவுரை.

முன் ஒரு நாள்—முன்பு ஒரு நாளிலே
மழு ஆளி சிலை வாங்கி—பாசுராமனிடத்திலிருந்து அவன் கைவில்லை வாங்கி
அவன் தவத்தை முற்றும் செற்றாய்—அவனியற்றிய தபஸ்ஸின் பயனை முழுதும் (அம்புக்கு இலக்காக்கி) அழித்திட்டவனே!
உன்னையும்—உன்னுடைய மேன்மையையும்
உன் அருமையையும்—(நான் பெருந்தவஞ் செய்து) உன்னை அருமை மகனாகப் பெற்ற தன்மையையும்
உன் மோயின் வருத்தமும்—உனது பெற்றதாயான கௌஸல்யை (உன்னைப் பிரியில் தரியேன் என்று) உன்பின் தொடர்ந்த வருத்தத்தையும்
ஒன்று ஆக கொள்ளாது—ஒரு பொருளாகக் கொள்ளாமல்
என்னையும்—என்னையும்
என் மெய் உரையும்—எனது ஸத்யவாக்கையும்
மெய் ஆக கொண்டு—பொருளாகக் கருதி
வனம் புக்க எந்தாய்—காடேறச் சென்ற எமது ஐயனே!
நெடுந் தோள் வேந்தே—பெரிய தோள்களையுடைய அரசனே!
ஏழ் பிறப்பும்—இனி அனேக ஜன்மங்கள் பிறந்து பிறந்த ஜன்மந்தோறும்
நின்னையே மகன் ஆக பெற பெறுவேன்—நீ எனக்குப் பிள்ளையாய்ப் பிறக்கும்படி பேறு பெறக்கடவேன்.

கருத்துரை:—ஸீதாகல்யாணத்தின் பின் தசரத சக்ரவர்த்தி திருக்குமாரர்களுடனே மிதிலையினின்று அயோத்திக்கு மீண்டுவருகையில், பாசுராமன் வழியச்

சென்று எதிர்த்து 'முன்பு ஹரிஹர யுத்தத்தில் இற்றுப்போன சிவனது வில்லை முறித்த திறமையை அறிந்தேன்; இந்த ஸ்ரீ மஹாவிஷ்ணுவினது வில்லை வளை, பார்ப்போம்' என்று அலக்ஷ்யமாகச் சொல்லித் தான் கையிற்கொணர்ந்த ஒரு வில்லை இராமன் கையிற் கொடுக்க, அப்பெருமான் உடனே அதனைவாங்கி எளிதில் வளைத்து நாணேற்றிக் கணைதொடுத்து 'இவ்வம்புக்கு இலக்கு என்?' என்று கேட்க; பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்ரியவம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமா யிருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்தமாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினன் என்பது இங்கு அறிய வேண்டிய வரலாறு. முன்பு ஹரிஹர யுத்தத்தில் சிவதநுஸ் இற்றுப்போக இருத வலியவில்லை விஷ்ணு ரிசீக முனிவனிடங்கொடுத்துச் செல்ல, அது அவன் குமாரனான ஜமதக்நி யிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்ததென்றும் இந்த வில்லைக் கொண்டுதான் இராமபிரான் கரன் முதலாக அரக்கர் பலரையும் அழித்திடுவனென்றும் உணர்க. விஷ்ணுவின் ஆறும் அவதாரமான பரசுராமனும் ஏழாம் அவதாரமான ஸ்ரீராமனும் ஒருவரோடொருவர் பொருதலும் அவர்களிலொருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோவெனின்;- துஷ்டர்களாய்க் கொழுத்துத்திரிந்த அரசர்களைக் கொல்லுதற்பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தி அக்காரியம் முடிந்தபின்பு அவ்விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமனால் கவர்ந்துகொள்ளப்பட்டதாதலின் பொருந்துமென்க; இதனால். ஆவேசாவதாரத்தினும் அம்ஸாவதாரத்துக்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

மழு: ஆளி=மழுவை (ஆயுதமாக) ஆள்பவன்; இ - கருத்தாப்பொருள் விகுதி. அன்றியே, மழுவாளி - மழுவாகிய ஆயுதத்தை யுடையவன்; இ - பெயர் விகுதி. மழு வாள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மழு - கோடாலி; வ. சொ.

என் ஐயனே! உன்மீது நான் வைத்திருக்கும் அன்பின் தன்மையை மெய்யாக அறியாமல் என்னை வெறுந்தந்தை யென்றே நினைத்து அப்பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணவேண்டுமென்றும், நெடுநாளாக ஸத்யமே சொல்லி வருகிற தந்தையை நாம் தோன்றி அஸத்யவாதியாக ஆக்கவொண்ணாதென்று என் ஸத்யத்தை ஸத்யமாக்க வேணுமென்றும் நெஞ்சிலே கொண்டு வனத்திற் புகுந்த என் அருமைமகனே! என்பது மூன்றாமடியின் கருத்து. தந்தை, மகனை எந்தாய் என்றது, அன்புபற்றிய வழுவமைதி. சேற்றாய்=சேறு - பகுதி. ௯

---

தேனகுமாமலர்க்கூந்தல்கௌசலையும் சுமித்திரையும்சிந்தைநோவக்
கூனுருவின்கொடுந்தொழுத்தைசொற்கேட்ட கொடியவள்தன்சொற்கொண்டு இன்று
கானகமேமிகவிரும்பி நீதுறந்த வளநகரைத்துறந்து நானும்
வானகமேமிகவிரும்பிப்போகின்றேன் மனுகுலத்தார்தங்கள்கோவே! (௧௦)

பதவுரை.

மனு குலத்தார் தங்கள் கோவே — மநுகுலத்திற் பிறந்த அரசர்களிற் சிறந்தவனே!
தேன் நகு — தேனைப் புறப்பட விடுகிற
மா மலர் — சிறந்த மலர்களைச் சூடிய.
கூந்தல் — கூந்தலையுடைய
கௌசலையும் — கௌஸல்யையும்
சுமித்திரையும் — ஸுமித்ரையும்
சிந்தை நோவ — மனம் வருந்த,
கூன் உருவின் கொடும் தொழுத்தை சொல் கேட்ட கொடியவள் தன் சொல் கொண்டு — வக்ரமான வடிவம் போலவே மனமுங் கோணலாகப் பெற்ற வேலைக் காரியான கூனியினது வார்த்தையைக் [கேட்ட கொடியவளான கைகேயியின் சொல்லை ஏற்றுக்கொண்டு
கானகமே மிக விரும்பி இன்று நீ துறந்த — காட்டையே மிகவும் விரும்பி இப்பொழுது நீ கைவிட்ட
வளம் நகரை — (உனது பட்டாபிஷேகத்தின் பொருட்டு) அலங்கரிக்கப்பட்டிருக்கிற இந்நகரத்தை
நானும் துறந்து — நானும் விட்டிட்டு
வானகமே மிக விரும்பி போகின்றேன் — மேலுலகத்தையே மிகவும் விரும்பி (அவ்விடத்திற்குச்) செல்கின்றேன்.

கருத்துரை :— மூன்று தாய்மார்களில் இரண்டுபேர் வருந்தவும் ஒருத்தி மகிழவும் நீ அயோத்தியைத் துறந்து கானகஞ் சென்றாயாதலின், நானும் இவ்வயோத்தியைத் துறந்து மேலுலகை நோக்கிச் செல்லுகின்றேனென்கிறான்.

கூனுருவின் = இன் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருள். கொடுமை - தீமையேயன்றி வளைவுமாதலை 'கொடுங்கோல்,' 'கொடுமரம்' என்ற இடங்களிலுங் காண்க. தொழுத்தை - தொழும்பன் என்பதன் பெண்பால். மநு - ஸூர்யனது குமாரன்; வைவஸ்வதமநு. ௧0

---

ஏரார்ந்தகருநெடுமாலிராமனாய் வனம்புக்க அதனுக்கு ஆற்ரு
தாரார்ந்ததடவரைத்தோள் தயரதன்தான்புலம்பிய அப்புலம்பல்தன்னைக்
கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன் குடைக்குலசேகரன்சொற்செய்த
சீரார்ந்தமிழ்மாலை இவைவல்லார் தீநெறிக்கண்செல்லார்தாமே. (கக)

பதவுரை.

ஏர் ஆர்ந்த — அழகு நிறைந்த
கரு — கரு நிறமுடைய
நெடு மால் — மஹா விஷ்ணு
இராமன் ஆய் — ஸ்ரீராமனாகத் திருவவதரித்து
வனம் புக்க — காட்டுக்குச் சென்றதான
அதனுக்கு — அச்செயலை
ஆற்ரு — பொறுக்கமாட்டாமல்
தார் ஆர்ந்த தட வரை தோள் தயரதன் புலம்பிய — வெற்றிமாலை பொருந்திய பெரியமாலை போன்ற தோள்களை யுடைய தசரத சக்கரவர்த்தி கதறின
அப் புலம்பல் தன்னை — அக் கதறல்களை,
கூர் ஆர்ந்த — கூர்மைமிக்க [வல்லவரும்
வேல் வலவன் — வேற்படையின் தொழிலில்
கோழியர் கோன் — உறையூரிலுள்ளார்க்குத் தலைவரும்
குடை — வெண் கொற்றக்குடையை உடையவருமான
குல சேகரன் — குலசேகராழ்வார்
சொல் செய்த — அருளிச் செய்த
சீர் ஆர்ந்த — சிறப்பு மிக்க
தமிழ் மாலை இவை — தமிழ்ப் பிரபந்தரூபமான இப்பத்துப் பாசுரங்களையும்
வல்லார் — கற்கவல்லவர்கள்
தீ நெறிக்கண் — கொடிய வழி யொன்றிலும்
செல்லார் — சென்று சேரமாட்டார்கள்.

(தான், தாம் - அசைகள்.)

கருத்துரை:—இத்திருமொழியை ஓதவல்லவர்கள் எம்பெருமா னருளாற் பரமபதமடைவர் என்ற கருத்தை "தீ நெறிக்கட் செல்லார்" என்று எதிர்மறை முகத்தால் நன்கு விளக்கினர்.

அவாப்த ஸமஸ்தகாமனுப் ஸர்வாதிகனை ஸர்வேஶ்வரன் கர்மவஶ்யரோடே இதர ஸஜாதீயனுப் வந்தவதரித்து அந்தக் கர்மவஶ்யரும் போகத்தகாத காட்டிற் புகுந்தானென்ற விஷயத்தை ஸஹிக்கமாட்டாத தசரதன் புலம்பிய புலம்பலை உட்கொண்டு குலசேகராழ்வார் அருளிச்செய்த இத்திருமொழியை வல்லார் துர்மார்க்கத்திற் செல்லப்பெறுர் என்கை. ஆற்ரு - ஆற்ருது; ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம். குலசேகராழ்வார் திக்விஜயஞ் செய்தபோது சோழராஜனை வென்று கீழ்ப்படுத்தி அந்நாட்டுக்கும் தலைமைபூண்டதனுல் 'கோழியர் கோன்' என்ருர். அன்றி, கோழி - கோழிக்கூடு என்ற சோநாட்டு இராசதானியுமாம்.

தமிழ் மாலை - எம்பெருமானும் பிறரும் மேற்கொண்டு ஆதரிக்கத்தக்க இனிய பூமாலை போன்ற பாமாலை. கக

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

அடிவரவு:—வன்ருள் வெவ்வாய் கொல்லணை வாபோகு பொருந்தார் அம்மா பூப் பொன் முன் தேன் வரார் அங்கண்.

ஒன்பதாந் திருமொழி உரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாந் திருமொழி

# அங்கணெடுமதிள்.

" கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ " என்றபடி ஸ்ரீராமாவதார வைபவத்தில் மிகவும் ஈடுபட்டு எப்பொழுதும் அதனையே அநுஸந்திப்பவரான ஸ்ரீ குலசேகராழ்வார், அச்சக்கரவர்த்தி திருமகன் பிற்காலத்திலுள்ளார்க்கு ஸேவை ஸாதிக்கும்படி அர்ச்சாவிக்ரஹரூபமாக நித்யவாஸம் பண்ணுகிற திருச்சித்திரகூட மென்கிற திருப்பதியின் விஷயமாகத் திருவவதாரந் தொடங்கி அந்த ஸ்ரீராம சரித்திரத்தை ஸ்ரீ வால்மீகிபகவான் பேசி யநுபவித்தாற்போலத் தாமும் பேசி அநுபவிக்கிருர்-இத்திருமொழியில். ஆதலால் இத்திருமொழி ஸ்ரீராமாயண ஸங்க்ரஹ மெனப்படும். ... ... ... ... *

---

அங்கணெடுமதிள்புடைசூழ் அயோத்தியென்னும்
அணிநகரத்து உலகனைத்தும் விளக்கும்சோதி
வெங்கதிரோன்குலத்துக்கு ஓர்விளக்காய்த்தோன்றி
விண்முழுதும் உயக்கொண்டவீரன்தன்னைச்
செங்கணெடுங்கருமுகிலை இராமன்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
எங்கள்தனிமுதல்வனை எம்பெருமான்தன்னை
என்றுகொலோ! கண்குளிரக்காணுநாளே. (க)

பதவுரை.

*அம் கண்—அழகிய இடத்தையுடையதும்*
*நெடு மதிள்—உயர்ந்த மதில்களினால்*
*புடை சூழ்—நாற்புறமும் சூழப்பட்டதும்*
*அயோத்தி என்னும் — 'அயோத்யா' என்று ப்ரஸித்தமுமான*
*அணி நகரத்து—அழகிய நகரத்திலே,*
*உலகு அனைத்தும்—ஸகல லோகங்களையும்*
*விளக்கும் சோதி — விளங்கச் செய்கிற தனது ஒளியின் அம்சத்தாலே,*
*வெம் கதிரோன் குலத்துக்கு — ஸூர்ய வம்சத்துக்கு (விளக்க முண்டாம்படி)*
*ஓர் விளக்கு ஆய் தோன்றி — ஒப்பற்றதொரு விளக்குப் போல (அதில்) வந்து அவதரித்து*
*விண் முழுதும்—தேவர்களெல்லாரையும்*
*உயக் கொண்ட—துன்பந்தீர்ந்து வாழச்செய்த*
*வீரன் தன்னை—மஹாவீரனும்,*
*செம் கண்—சிவந்த திருக்கண்களையுடைய*
*நெடு கரு முகிலை—பெரிய காளமேகம் போன்ற வடிவமுடையவனும்*
*இராமன் தன்னை—ஸ்ரீராமனென்னும் திருநாமமுடையவனும்*
*தில்லை நகர் திருசித்ரகூடம் தன்னுள் — தில்லை நகரத்திலுள்ள திருச்சித்திரகூடத்தில் (எழுந்தருளியிருக்கிற)*
*எங்கள் தனி முதல்வனை — எமக்கு ஒப்பற்ற காரணமாகிறவனும்*
*எம்பெருமான் தன்னை—எமக்குத் தலைவனுமான பரமனை*
*கண் குளிர காணும் நாள் — கண்கள் குளிரும்படி ஸேவிக்கும் நாள்*
*என்று கொல் ஓ—எந்நாளோ?*

கருத்துரை:— திருச்சித்திரகூடத்திலெழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய வைபவத்தைப் புராண முகத்தாலும் பௌராணிகர் முகத்தாலும் உணர்ந்த ஆழ்வார், உடனே அங்குச்சென்று அப்பெருமானைக் கண்ணாரக்கண்டு களிக்கக் கருதினாராயினும் அரசாங்க காரியங்களால் உடனே அங்ஙனஞ் செல்லமாட்டாது வருந்திநிற்கிற நிலையில், 'அவனைக் காணப்பெறாதே விடாய்த்த கண்களானவை கண்டு விடாய்தீர்ந்து கண்படைத்த பயன் பெறலாவது என்றோ?' என்கிறார். இதனால், காணப்பெறும்நாள் இன்னநாள் என்று எல்லை தெரிந்தாலும் காணப்பெற்றதனோடொப்ப மகிழும்படியுள்ளது இவரது அபிநிவேசாதிசயம் என விளங்கும்.

அயோத்யா என்ற வடசொல்-போர்செய்து வெல்லமுடியாததென்று பொருள்படும். இதனால், அந்த நகரம் மிக்க அரண்களையுடைத்தென்றும், அந்நகரத்து அரசர்கள் எவராலும் வெல்லப்படாமல் யாவரையும் வெல்ல வல்லவரென்றும் விளங்கும்.

[உலகனைத்தும் விளக்குஞ்சோதி.] ஸூர்யன், சந்திரன், அக்நி என்னும் முச்சுடரின் ஒளியும் மின்மினியெனத்தக்க பெருஞ் செழுஞ்சுடர்ப் பரஞ்சோதி யென்க. "ஆதியஞ்சோதியுருவை அங்குவைத் திங்குப்பிறந்த" என்றும், "துயரில்

சுடரொளி தன்னுடைச்சோதி நின்றவண்ணம் நிற்கவே, துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காணவந்து" என்றும் அருளிச்செய்துள்ளபடி தன்னடிச் சோதியின் அம்ஶத்தால் அவதரித்ததனால் "சோதி விளக்காய்த் தோன்றி" என்றார்.

ராவணுதி ராக்ஷஸர்களின் ஹிம்ஸைகளைப் பொறுக்கமாட்டாமல் வந்து சரண மடைந்த தேவர்கள் 'துஷ்டநிக்ரஹ ஶிஷ்டபரிபாலனஞ் செய்தருளவேணும்' என்று பிரார்த்தித்தபடி திருமால் தனது அம்ஶத்தைக்கொண்டு ஸூர்ய குலத்தில் இக்ஷ்வாகு மரபில் தஶரத சக்ரவர்த்தி குமாரனாய் அவதரித்து அரக்கரை அழித்து அமரரைப் பாதுகாத்ததனால் "விண்முழுது முயக்கொண்ட வீரன்" என்றார்.

வீரன் தன்னை, முகிலை, இராமன் தன்னை, முதல்வனை, எம்பெருமான் தன்னை என்பன - ஒரு பொருளின்மேல் வந்த பலபெயர்கள்; காணும் என்னும் முடிக்குஞ் சொல்லைக் கொண்டன.

சித்ரகூடமென்பது - அழகிய சிகரமுடையதென்று பொருள்படும்; இது, எம்பெருமான் தேவர்களும் முனிவர்களுஞ் சூழக் கொலுவிருந்த ஸபை. இத் திருப்பதியுள்ள இடம் ஆதியில் பரமபதத்திலுள்ள தில்யாரண்யம்போலத் தில்லை யென்னும் மரம் அடர்ந்த காடாயிருந்து பின்பு நகரமானதனால், 'தில்லை நகர்த் திருச்சித்ரகூடம்' எனப்பட்டது: அன்றியும், வடநாட்டிலுள்ள சித்திரகூட பருவதத்தினும் வேறுபாடு விளங்க, 'தில்லைநகர்த் திருச்சித்ரகூடம்' என வேண்டிற்று. எங்கள், எம் என்ற தன்மைப் பன்மைகள் - எல்லா வுயிர்களையும் உளப்படுத்தும்.

விளக்காய்=ஆய் - உவமவுருபு. விண் - இடவாகு பெயராய்த் தேவசாதியை உணர்த்திற்று. உய - தொகுத்தல் விகாரம்; உய்ய. "உய்யக்கொண்ட" என்றே ஓதுவர்களாயினும் அப்பாடம் யாப்பிலக்கணத்திற்குச் சிறவாது. முகில் - உவமையாகு பெயர். சித்ரகூடம் - "இணைந்தியல்காலை யரலக்கிகரமும்" என்ற நன்னூல் விதிப்படி, 'சித்திரகூடம்' எனத் திரியவேண்டியது வ்ருத்தலக்ஷணப் பொருத்தம் நோக்கித் திரியாது நின்றது; "பல்லாண்டும் பரமாத்மனை" போல. மேலிற் பாட்டுக்களெல்லாவற்றிலும் 'திருச்சித்ரகூடம்' என்றே ஓதுக. இத்திருமொழியில் 'திருச்சித்திரகூடம்' என ஓதுதல் ஒவ்வாதென்றே உணர்க. க

---

வந்தெதிர்ந்ததாடகைதன் உரத்தைக்கீறி
வருகுருதிபொழிதரவன் கணையொன்றேவி
மந்திரம்கொள்மறை முனிவன்வேள்விகாத்து
வல்லரக்கருயிருண்ட மைந்தன் காண்மின்
செந்தளிர்வாய்மலர்நகைசேர் செழுந்தண்சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
அந்தணர்களொருமூவாயிரவர் ஏத்த
அணிமணியாசனத்திருந்த அம்மான்தானே. (உ)

பதவுரை.

வந்து எதிர்ந்த—செருக்கிவந்து எதிரிட்ட
தாடகை தன்—தாடகையினுடைய
உரத்தை கீறி—மார்பைப் பிளந்து
வரு குருதி பொழிதர — ரக்தம் வெளிவந்து சொரியும்படி
வல் கணை ஒன்று எவி — வலிய ஒப்பற்றதோர் அம்பைச் செலுத்தி
மந்திரம் கொள் மறை முனிவன் வேள்வி காத்து — எல்லா மந்திரங்களையும் தம்மிடத்திலே கொண்ட வேதங்களின் வழியே விச்வாமித்ர மஹாமுநி செய்தயாகத்தைப் பாதுகாத்து
வல் அரக்கர்—(அந்த யாகத்துக்கு இடையூறு செய்த ஸுபாஹு முதலிய) வலிய ராக்ஷஸர்களுடைய
உயிர் உண்ட—உயிரைக் கொள்ளை கொண்ட
மைந்தன்—மிடுக்கையுடையவன் (யாரென்னில்;)
செம் தளிர் வாய்—சிவந்த தளிர்களின் நடுவே
மலர்—மலர்ந்த புஷ்பங்களை யுடையதும்
நகை சேர்-(காண்பவர்) மகிழும்படியான அழகு பொருந்தினதும்
செழு—செழுமையை யுடையதுமான
தண்—குளிர்ந்த
சோலை—சோலைகளை யுடைய
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—;
அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் எத்த — ப்ராஹ்மணர்கள் மூவாயிரம் பேர் (திரண்டு) துதிக்க
அணி மணி ஆசனத்து இருந்த — அழகிய ரத்நஸிம்ஹாஸநத்திலே வீற்றிருந்த
அம்மான் தானே—ஸர்வேச்வரனே யாவன்;
காண்மின்—அறியுங்கள்.

கருத்துரை :—விச்வாமித்ர முனிவன் தனது வேள்வியைக் காக்கும்பொருட்டு தசரத சக்கரவர்த்தியினிடம் அநுமதிபெற்று இராமபிரானை இளையபெருமாளுடன் அழைத்துக்கொண்டு போனபொழுது அம்முனிவனுச்ரமத்திற்குச் செல்லும் வழியிடையே மிக்க செருக்குடன் வந்து எதிர்த்த தாடகையை ஸ்ரீராமன் முனிவனது கட்டளைப்படி பெண்ணென்று பாராமற் போர்செய்து கொன்றதுமன்றி, பின்பு முனிவன் செய்த யாகத்தில் தீங்குவிளைக்கவந்த ஸுபாஹு முதலிய பல அரக்கர்களையுங் கொன்று மாரீசனை வாயவ்யாஸ்திரத்தினாற் கடலிலே தள்ளிவிட்டு யாகத்தை நிறைவேற்றுவித்தனன் என வரலாறு அறிக.

விச்வாமித்ரர் = ப்ரஹ்மபுத்ரனை குசனென்னும் அரசனுடைய புத்திரர் நால்வருள் குசநாபனது மகனாகிய காதியின் குமாரர்; கௌசிகனென்னும் பெயருடையவர். க்ஷத்ரிய ஜாதியராய் அரசாட்சி செய்துகொண்டிருந்த இவர் வஸிஷ்ட மஹாமுனிவரது தவவலிமையையும் அதன்முன் தமது பலபராக்ரமங்கள் பழுதுபட்டதையும் அறிந்து, தமது க்ஷத்ரியத்தன்மையை வெறுத்துப் பெருந்தவஞ் செய்யத்தொடங்கி அதற்கு இடையே நேர்ந்த தடைகள் பலவற்றையும் அரிதிற் போக்கி அத்தவத்தை முடித்து ப்ரஹ்மர்ஷி பட்டத்தைப் பெற்ற பெருஞ் சிறப்புடையராதல் தோன்ற "மந்திரங்கொள் மறைமுனிவன்" எனப்பட்டது என்னலாம்.

மாரீசனை உயிரோடு விட்டதையுஞ் சேர்த்து "வல்லரக்கருயிருண்ட" என்றது - பின்பு அவன் பிழைத்திருந்த இருப்பு இறந்தது போன்றதே என்ற கருத்தினாலென்ப. "மாரீசன் பட்டானோ வென்னில்; பின்னையிருந்த இருப்பு ம்ருதப்ராயமென்று கருத்து" என்பது வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி.

[அந்தணர்கள் ஒரு மூவாயிரவர்.] "நாங்கை நாலாயிரம், தில்லை மூவாயிரம்" என்ற ப்ரஸித்தி காண்க; "மூவாயிர நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க அணங்காய சோதித், தேவாதி தேவன் திகழ்கின்ற தில்லைத் திருச்சித்ர

கூடஞ் சென்று சேர்மின்களே" என்றார் திருமங்கையாழ்வாரும். அந்தண ரென்பது, அம் தண் அர் என்று பிரிந்து, அழகிய குளிர்ச்சியான அருளை யுடையவர் என்று பொருள்படும்; "அந்தணரென்போர் அறவோர், மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" என்றார் வள்ளுவர். அன்றியே, அந்த அணவு அர் என்று பிரிந்து, அந்தத்தை அணவுவார் அதாவது வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவரென்றும் பொருள்படும். இது பிராமணர்க்குக் காரண இடுகுறிப்பெயர். அம்மான் - அந்த மஹாந், அப்படிப்பட்ட தலைவன்.

உரஸ், மந்த்ரம், முநி, ரக்ஷஸ், மணி, ஆஸநம் - வட சொற்கள். பொழிதர— தா - துணைவினை. 'சித்ரகூடந் தன்னுள் இருந்த அம்மான்தான் மைந்தனே காண்மின்' என முடித்து உரைப்பினுமாம். உ

---

சேவ்வரிநற்கருநெடுங்கண் சீதைக்காகச்
சினவிடையோன் சிலையிறுத்துமழுவாளேந்தி
வெவ்வரிநற்சிலைவாங்கி வென்றிகொண்டு
வேல்வேந்தர் பகைதடிந்தவீரன்தன்னைத்
தெவ்வரஞ்சுநெடும்புரிசை உயர்ந்தபாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
எவ்வருவெஞ்சிலைத்தடக்கை இராமன்தன்னை
இறைஞ்சுவாரிணையடியே இறைஞ்சினேனே. (ங)

பதவுரை.

செவ்வரி—(உத்தம லக்ஷணமான)சிவந்த ரேகைகள் படர்ந்த
நல்—அழகிய
கரு—கருமையான
நெடு—நீண்ட
கண்—கண்களை யுடைய
சீதைக்கு ஆக—ஸீதையை மணம்புரிதற் பொருட்டு
சினம் விடையோன்—கோபத்தை யுடைய ரிஷபத்தை வாஹநமாகவுடையவனை சிவபிரானுடைய
சிலை இறுத்து—வில்லை முறித்து (பின்பு மிதிலாபுரியினின்று மீளும் வழியில்)
மழு வாள் ஏந்தி—கோடாலியாகிய ஆயுதத்தை ஏந்தியவனை பாசுராமனுடைய
வெவ் வரி நல் சிலை—பயங்கரமான கட்டமைந்த சிறந்த வில்லை
வாங்கி—கையிற்கொண்டு (வளைத்து)
வென்றி கொண்டு—(அவனை) வென்று
வேல் வேந்தர் பகை தடிந்த—(தான் அவதரித்த ஜாதியிற் பிறந்த) வேற்படையையுடைய க்ஷத்ரியர்களுக்குப்பகைமையைத் தீர்த்த
வீரன் தன்னை—மஹாவீரனை,—
தெவ்வர்—பகைவர்கள்
அஞ்சு—(கண்டமாத்திரத்திலே, கடக்க வொண்ணாதென்று) அஞ்சும்படியான
நெடு புரிசை—உயர்ந்த மதிளையும்
உயர்ந்த பாங்கர்—ஓங்கிய (அட்டாலை யென்னும்) மதிற்பக்கத் திடத்தையு முடைய
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—; (எழுந்தருளியிருக்கிற)
எவ்வரு வெம் சிலை தட கை இராமன் தன்னை—(வேறொருவரால்) அடக்கியாளுதற்கு அரிய தும் (பகைவர்க்குப்) பயங்கரமுமான வில்லை ஏந்திய பெரிய கையையுடைய இராமபிரானை
இறைஞ்சுவார்-வணங்குகிற அடியார்களுடைய
இணை அடியே—இரண்டு திருவடிகளையே
இறைஞ்சினேன்—வணங்கினேன்.

கருத்துரை :—முன்னொரு காலத்தில் தேவசில்பியான விஸ்வகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டு விற்களுள் ஒன்றைச் சிவபிரானும், மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக்கொண்டார்கள். பின்பு ஒரு காலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளாற் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரைமூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக்கொண்டு பொருகையில், சிவபிரானது வில் சிறிது முறிபட்டது; அவ்வாறு இற்ற வில்லைச் சிவபிரான் ஜநக குலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்ச பரம்பரையாய் ஜநகமஹாராஜனளவும் வந்தது. இது நிற்க: இருத வலியவில்லை விஷ்ணு ரிசீக முனிவனிடம் கொடுத்துச் செல்ல, அது அவன் குமாரனான ஜமதக்நியினிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது. முற்கூறிய ஶிவதநுஸ்ஸை ஸீதைக்குக கந்யாஶுல்கமாக ஜநகன் வைத்திருந்தான்; இராமபிரான் அந்த வில்லை முறித்துத் தன் போராற்றலை விளங்கச்செய்து பிராட்டியை மணந்துகொண்டு மிதிலாபுரியினின்றும் புறப்பட்டு அயோத்திக்கு வரும்போது வழியிடையே செருக்கி வந்த பரசுராமனது கையிலிருந்த விஷ்ணுதநுஸ்ஸைவாங்கி எளிதில் வளைத்து நாணேற்றிக் கணை தொடுத்து 'இவ்வம்புக்கு இலக்கு என்?' என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்ரிய வம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமாயிருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்தமாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினன் என்ற வரலாறுகள் இங்கு அறியத்தக்கவை.

ஸீதா என்ற வடசொல் சீதை யென விகாரப்பட்டது. அச்சொல்லுக்கு - கலப்பை உழுபடைச்சால் ["ஸீதா - லாங்கலபத்ததி:"] என்று முதலிற் பொருள்: ஜநகமஹாராஜன் யாகஞ் செய்வதற்குச் சாலையமைத்தற் பொருட்டு நிலத்தை உழுதபொழுது அப்படைச்சாலினின்று தோன்றியவளாதலால் பிராட்டிக்கு ஸீதை யென்று பெயராயிற்று. இடவாகு பெயராகிய காரணக்குறி. இத்திருநாமம், இவள் மற்றையோர்போல ஒரு தாயின் வயிற்றினின்று பிறந்தவளல்லளெனப் பிராட்டியினது அயோநிஜத்வமாகிய திருவவதாரச் சிறப்புத் தோன்ற நின்றது. இவள் ஜநகமஹாராஜன் வளர்த்த மகள் என்று உணர்க. 'சீதைக்காக' என்பதில் ஆக என்பது - பொருட்டுப் பொருளில் குவ்வுருபின்மேல் வந்த நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு; ஆகி என்ற பாடத்துக்கு எச்சத்திரிபென்க. மழுவாள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஏந்தி - வினையெச்சமன்று; பெயர். இதில், இ - பெயர் விகுதி. [வேல் வேந்தர்] வேல் - மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம். வீரன் தன்னை என்பது இராமன் தன்னை என்பதற்கு விசேஷணம். தெவ்வர் = தெவ் - பகைமை; (உரிச்சொல்.) அதனையுடையவர், தெவ்வர். [பாங்கர்] பாங்கு என்ற மென்றொடர்க் குற்றியலுகரத்துக்கு 'அர்' போலி.

நான்காமடியில் எவ்வரி என்றே நாடெங்கும் ஓதுவர்; அப்பாடத்துக்கு - ஏவரி என்பது எவ்வரியென்று விகாரப்பட்டதெனக் கொண்டு, ஏ - அம்பு தொடுப்பதற்கு உரிய வரி - நீண்ட, என்று கஷ்டப்பட்டுப் பொருள் கொள்ளலாமாயினும்,

" வேறொருத்தரால் அடக்கியாள வொண்ணாதே காணவே
ப்ரதிபக்ஷம் முடியும்படியான ஸ்ரீ ஶார்ங்கம் "

என்ற வியாக்கியானத்திற்கு அப்பாடம் சேராது. எவ்வரு என்றோதுவதே சிறக்கும். ஏவரு என்பது எதுகை நோக்கி 'எவ்வரு' எனக் குறுக்கலும் விரித்தலுமாகிய் விகாரங்களை யடைந்தது. ஏவு - ஏவுதல், அடக்கியாளுதல்; (முதனிலைத் தொழிற்பெயர்.) அரு - ஒண்ணாத; எனவே, அடக்கியாள முடியாத என்றதாயிற்று. திருமாலின் வில் ஸ்ரீ ஶார்ங்க மென்றும், இராமபிரானுடைய வில் கோதண்டமென்றும் பெயர் பெறும்.

[இறைஞ்சுவாரிணை யடியே இறைஞ்சினேனே.] இராமனுக்கு அடியவனை பாதனுக்கு அடிமை பூண்டொழுகின ஶத்ருக்கன் போலப் பாகவத தாஸனாக வேண்டுமென அவாவுகின்றார். ௬.

---

தொத்தலர்பூஞ்சுரிகுழல் கைகேசிசொல்லால்
தொன்னகரம்துறந்து, துறைக்கங்கைதன்னைப்
பத்தியுடைக்குகன்கடத்த வனம்போய்ப்புக்குப்
பரதனுக்குப்பாதுகமும் அரசுமீந்து
சித்திரகூடத்து இருந்தான்தன்னை இன்று
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
எத்தனையும் கண்குளிரக்காணப்பெற்ற
இருநிலத்தார்க்கு இமையவர்நேரொவ்வார்தாமே. (௭)

பதவுரை.

தொத்து அலர்—கொத்துக் கொத்தாக மலர்ந்த
பூ—புஷ்பங்களைச் சூடிய
சுரி குழல்—நுனி சுருண்டகூந்தலை யுடைய
கைகேசி—கைகேயியினது;
சொல்லால்—சொல்லின்படி
தொல் நகரம் துறந்து — தொன்று தொட்டுப் பாம்பரையாய் வருகிற ராஜ்யத்தைக் கைவிட்டு
துறை கங்கை தன்னை—கங்கையின் துறையை
பத்தி உடை குகன் கடத்த — மஹாபக்தனான குஹப்பெருமாள் புணை செலுத்தியோட்டவ, (கடந்து)
வனம் போய் புக்கு—காட்டிற்போய்ச் சேர்ந்து
பரதனுக்கு—(அங்கு வந்த) பரதாழ்வானுக்கு,
பாதுகமும் அரசும் ஈந்து — (தனது) மரவடியையும் ராஜ்யத்தையுங் கொடுத்து
சித்திர கூடத்து இருந்தான் தன்னை — சித்ரகூட பர்வதத்தி லெழுந்தருளியிருந்த ஸ்ரீராமபிரானை
இன்று—இப்பொழுது [பிற்காலத்தில்]
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—;
கண் குளிர காண பெற்ற — கண் குளிரும்படி ஸேவிக்கப் பெற்ற
இரு நிலத்தார்க்கு—பெரிய [சிறந்த] பூலோகத்திலுள்ளவர்களுக்கு
இமையவர்—நித்யஸூரிகளும்
எத்தனையும் நேர் ஒவ்வார் — சிறிதும் ஸமமாக மாட்டார்;
(தாம், ஏ - ஈற்றசைகள்; நேர்த்தமுமாம்.)

கருத்துரை:—இப்பாட்டின் முதலடியிற் குறித்த வரலாறு கீழ்த்திருமொழியின் உரையில் விரிவாகக் காணத்தக்கது.

குகன் - கங்கையில் ஓடம் விடுபவனும், ஆயிரம் ஓடங்களுக்குத் தலைவனும், கங்கைக் கரையிலுள்ள ஶ்ருங்கிபேரபுரத்திற்கு அதிபதியுமாகிய ஒரு வேடர் தலைவன். இராமன் மனைவியுடனும் தம்பியுடனும் அயோத்யா நகரத்தை நீங்கிக் கங்கைத் துறை சேர்கையில் குஹன் இராமனை ஸேவிப்பதற்காகக் காணிக்கைகளுடன் அருகில் வந்து சேர்ந்து வணங்கி நிற்க, ஸ்ரீராமன் அவனை உயிர்த் தோழனாக ஏற்றுக்கொண்டு அவனுடன் அளவளாவி, அவனை ஓடங் கொண்டுவாச் சொல்லி அங்ஙனமே அவன் கொணர்ந்த ஓடத்திலேறிக் கங்கை கடந்து, பிறகு குஹனை நல்வார்த்தை சொல்லி நிறுத்திவிட்டு மூவரும் அப்பாற்சென்று சித்ரகூட மலைச் சாரலில் வாழ்ந்தருளுங் காலத்து, பரதாழ்வான் இராமபிரானை மீட்டுக் கொண்டுபோக வெண்ணிப் பெருந் திரளுடனே அங்குவந்து, அயோத்திக்கு வந்து முடிசூடி அரசாளுமாறு வேண்ட, தந்தை சொற் பழுதுபடாதபடி பதினான்கு வருடம் வனவாஸங் கழித்துப் பின்னர் வருவதாகக் கூறி அதுவரை (பரதனை) அரசாளுமாறு நியமித்து, தனக்குப் பிரதிநிதியாகத் தனது திருவடி நிலைகளைத் தந்து அனுப்பின வரலாறு அறிக.

ஸ்ரீராமாவதாரத்திலே சித்ரகூட பர்வதத்தில் எழுந்தருளியிருந்த இருப்பைப் பிற்பட்டார் கேட்டு அநுபவிக்கப் பெறுவதேயன்றித் தாம் கண்டு அநுபவிக்கப் பெறாமல் கண்விடாய்த்து நிற்கிற குறைதீர எக்காலத்திலு முள்ளார் அநுபவிக்கைக்காக அங்ஙனமே தில்லைத்திருச்சித்திரகூடத்தில் வீற்றிருக்கின்றனன் என்பது பின்னடிகளின் உட்கோள். இருநிலம் - எம்பெருமான் உகந்தருளின திவ்ய தேசங்கள் பலவற்றை யுடைத்தானமையால் ஶ்லாக்யமான பூமி. இமையவர் - கண் இமையாதவர்; எப்பொழுதும் எம்பெருமானையே ஸேவித்துக் கொண்டிருப்பவர்; அகக்கோக்காகிய ஞானக் கண் குவியாதவர். பரமபதத்தில் எம்பெருமானை ஸேவிப்பதற்குப் பிரதிபந்தக மொன்று மில்லாமையாலே அங்கு அவனைக் கண்டு ஆநந்தித்திருப்பதையே பொழுது போக்காகவுடைய விண்ணுலகத்து அடியவர்களிற் காட்டிலும், அக்காட்சிக்குத் தடையான விஷயாந்தரங்கள் பலவற்றையு முடைய இவ்வுலகத்திலேயே அவற்றை யெல்லாம் விட்டு எம்பெருமானைக் காண்கிறவர்கள் மேம்பட்டவர் என்பது ஈற்றடியின் கருத்து. "வேதனை வெண்புரி நூலனை......சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியரே" என்ற திருவிருத்தப் பாட்டில் இவ்வர்த்த விசேஷத்தை விஶதமாகக் காண்க.

'தொத்தலர் பூஞ்சுரி குழற்கைகேசி' என்றது, தனது செயற்கை யழகினாலும் இயற்கை யழகினாலும் தன் கணவனைத் தான் சொன்ன வண்ணம் கேட்டொழுகும்படி வசப்படுத்தியவள் என்றபடி. துறை - இறங்கு துறை. பூஞ்சுரி - பூப்பெயர் முன் இனமென்மை தோன்றிற்று. உடை - உடைய என்பதன் விகாரம். இமைய்வர்=('இமையாதவர்' என்ற பொருளில்) எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது; இமையில் விசேஷமுடையவர்; அதாவது மூடாத இமையையுடையவர் என்று கொண்டால் உடன்பாட்டுப் பெயராம். 'எத்தனையும் கண் குளிர' என அடைவே இயைத்து, மிகுதியாகக் கண்குளிர என்று உரைத்தலும் ஒன்று. இரு நிலம் - பண்புத்தொகை; இருமை - பெருமை. ௪

---

வலிவணக்குவரைநெடுந்தோள் விராதைக்கொன்று
வண்டமிழ்மாமுனி கொடுத்தவரிவில்வாங்கிக்
கலைவணக்குநோக்கரக்கி மூக்கைநீக்கிக்
கரனொடுதூடணன் தன்னுயிரைவாங்கிச்
சிலைவணக்கிமான்மறிய எய்தான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
தலைவணக்கிக்கைகூப்பி ஏத்தவல்லார்
திரிதலால் தவமுடைத்துத் தரணிதானே. (ரு)

பதவுரை.

வலி வணக்கு—(எதிரிகளுடைய) வலிமையைத் தோர்பிக்கின்ற
வரை நெடு தோள்—மலை போன்ற பெரிய தோள்களையுடைய
விராதை—விராத னென்னும் ராக்ஷஸனை
கொன்று—கொன்று,
வண் தமிழ் மா முனி கொடுத்த—சிறந்த தமிழ்ப் பாஷைக்கு உரியவரான அகஸ்திய முனிவர் கொடுத்த
வரி வில்—கட்டமைந்த வில்லை
வாங்கி—பெற்று,—
கலை வணக்கு நோக்கு அரக்கி மூக்கை நீக்கி—மானின் பார்வையைத் தோர்பிக்கும் படியான பார்வை யழகை யுடையவளாய்வந்த சூர்ப்பணகை யென்னும் ராக்ஷஸியின் மூக்கை அறுத்து
கரனொடு தூடணன் தன் உயிரை வாங்கி—கரன் தூஷணன் என்னும் அரக்கர்களின் உயிரை (அவர்க ளுடம்பினின்று) கவர்ந்து,
மான்—மாரீசனுகிய மாயாம்ருகமானது
மறிய—அழியும்படி
சிலை வணக்கி எய்தான் தன்னை—தனது வில்லைவளைத்து அம்புகளை எய்தவனான இராமபிரானை
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—;
தலை வணக்கி கை கூப்பி ஏத்த வல்லார்—தலை வணங்கி அஞ்ஜலி பண்ணித் துதிக்கவல்ல அடியார்கள்
திரிதலால்-(தன்மீது) ஸஞ்சரிக்கப் பெறுதலால்
தரணி—பூமியானது
தவம் உடைத்து—பாக்கிய முடையது.
(தான், ஏ - ஈற்றசைகள் ; தேற்றமுமாம்.)

கருத்துரை :—விராத னென்னும் வடமொழிப் பெயர்க்கு - மிகுதியாய் அபராதஞ் செய்பவன் என்று பொருள். இவன் முதலில் தும்புருவென்னும் பெயருள்ள கந்தருவனுயிருந்து பின்பு குபேரனது சாபத்தால் ராக்ஷஸனுகி வனத்தில் திரிந்து வந்தவன். ராம லக்ஷ்மணர் ஸீதையுடனே தண்டகாரணியத்திற் செல்லுகையில் இவ்வரக்கன் வந்து ஸீதையைத் தூக்கிக்கொள்ள, கண்டு ராம லக்ஷ்மணர் எதிர்க்க, இவன் அவளைவிட்டு அவர்களைத் தூக்கிக்கொண்டுசெல்ல ராகவ வீரர்கள் இவனைத் தோள்களைத் துணித்துக் கொல்லும்போது இவன் தனது பிறப்பை உணர்த்திப் பிரார்த்தித்தபடி பள்ளந் தோண்டி இவனுடம்பைப் புதைத்துச் சென்றன ரென்ற கதை அறிக.

விராது—'விராய' என்ற வடசொற் சிதைவு.

இராமபிரான் பரசுராமனிடமிருந்து விஷ்ணுதநுஸ்ஸைப் பெற்று அவனை வென்றபோது அங்குவந்து தன்னைக் கொண்டாடிய தேவர்களுள் வருணனிடத்திலே அவ்வில்லைக் கொடுத்து அதனைநன்றாகப் பாதுகாத்துவைத்திருந்து உரிய ஸமயத்தில் தன்னிடம் கொணர்ந்து கொடுக்குமாறு சொல்ல, அங்ஙனமே அதனை வாங்கிச் சென்று நன்கு பாதுகாத்துவைத்திருந்தவருணன், பின்பு ஸ்ரீராமன் வநவாஸம்புக்குத் தண்டகாரணியத்தில் அகஸ்தியாஸ்ரமத்திற்கு எழுந்தருளின பொ

அதனை அம்பறாத்தூணியுடனும் வாளுடனும் அம்முனிவர் தர, பெருமான் பெற்றுக்கொண்டனன் என்பது இங்கு அறியத்தக்கது.

சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தது இளைய பெருமாளின் செய்கையாயினும் அதனைப் பெருமாள்மேல் ஏற்றிச் சொன்னது, இராமனது கருத்துக்கு ஏற்ப அவன் கட்டளையிட்டபடி இவன் செய்தனனாதலின் ப்ரயோஜ்ய கர்த்தாவின் வினையாதல்பற்றி யென்க. அன்றியும் "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி இராமபிரானுக்கு லக்ஷ்மணன் வலத்திருக்கை யெனப்படுதலால் அங்ஙனம் கையாகிற லக்ஷ்மணனுடைய செயலை இராமன்மேல் ஒற்றுமைநயம்பற்றி ஏற்றிச் சொல்லுதல் தகுதியே.

சூர்ப்பணகை ராமலக்ஷ்மணர்களிடம் வரும்போது அழகிய வடிவமெடுத்து வந்தனளாதலால் "கலைவணக்கு நோக்கரக்கி" என்றார். "மானின் விழிபெற்று மயில்வந்ததெனவந்தாள்" என்றார் கம்பரும். இங்கே மூக்கு என்றது - மற்றும் அறுபட்ட அவயவங்களுக்கும் உபலக்ஷணம்.

கரன் என்ற பெயர் - கொடியவன் என்று பொருள்படும். இவன் இராவணனுக்குத் தம்பிமுறையாகுபவன். தண்டகாரணியத்தில் சூர்ப்பணகை வலிப்பதற்கென்று ஏற்படுத்திய ஜநஸ்தாநத்தில் அவளுக்கு ரக்ஷையாகவும் அவளிட்ட கட்டளைப்படி நடப்பதற்காகவும் இராவணனால் நியமித்து வைக்கப்பட்ட பெரிய ராக்ஷஸ ஸேனைக்கு முதல் தலைவன். ஸ்ரீராமலக்ஷ்மணரிடத்துக் கறுக்கொண்டு சென்ற சூர்ப்பணகையால் தூண்டப்பட்டுக் கரன் மிகப் பெரிய சேனைகளோடும் அறுபது லக்ஷம் படைவீரர்களோடும் பதினாலாயிரம் ரதாதிபதிகளோடும் சேனைத்தலைவர் பதினால்வரோடும், தூஷணன் த்ரிஸிரஸ் என்னும் முக்கிய ஸேநாதிபதிகளோடும் வந்து எதிர்க்க, இராமன் இளையோனைப் பிராட்டிக்குக் காவலாக வைத்துவிட்டுத் தான் தனியே நின்று பொருது அவர்களனைவரையும் கொன்றிட்டனன்.

பின்பு இராவணன் சூர்ப்பணகையின் வார்த்தையினால் சீதைமேல் காதல்கொண்டு மாரீசனைத் துணையாக வேண்ட, அவன் மாயையாற் பொன்மானுருவங்கொண்டு, ஸ்ரீராமலக்ஷ்மணர் ஜானகியுடன் வஸிக்கிற ஆச்ரமத்தின் அருகிற்சென்று விளையாட, அதனைப் பிராட்டி பார்த்து 'இப்பொன்மானைப் பிடித்துத் தர வேண்டும்' என இராமனைப் பிரார்த்திக்க, அப்பெருமான் அங்ஙனமே பிடித்தற்கு அதன் பின் தொடர்ந்து நெடுந்தூரஞ் சென்றும் அது அகப்படாமல் ஓட்டங்காட்டியதனால் இது மாயையென்று துணிந்து அதன்மேல் அம்பெய்து வதைத்தனன்.

அகஸ்தியர், ஆதியில் சிவபிரான்பக்கல் தமிழை உபதேசம்பெற்று வடதிசையினின்று தென்திசைக்கு வந்து தன் பெயரால் அகத்தியமென்ற இலக்கணநூலை இயற்றி அதனைத் தமது மாணாக்கர்க்குக் கற்பித்துத் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச் செய்தனராதலால் தமிழ்மாமுனி எனப்பட்டனர்.

நான்கா மடியில், "நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய, பாததூளிபடுதலால் இவ்வுலகம் பாக்கியஞ் செய்ததே" என்ற பெரியாழ்வார் திரு

மொழியை நினைக்க. இராமபிரான் திரிதலால் பெற்ற பாக்யத்தினும் அவனடியார் திரிதலால் பெற்ற பாக்கியம் விசேஷமென்க.

உடைத்து—உடைமை என்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. தரணி - வடசோல். (௯)

---

தனமருவு வைதேகி பிரியலுற்றுத்
    தளர்வேய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றி
வனமருவு கவியரசன் காதல்கோண்டு
    வாலியைக்கோன்று இலங்கைநக ரரக்கர்கோமான்
சினமடங்க மாருதியால் சுடுவித்தானைத்
    தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
இனிதமர்ந்த அம்மானை இராமன்தன்னை
    எத்துவா ரிணையடியே எத்தினேனே. (௧௦)

பதவுரை.

தனம் மருவு—(தான்விரும்புஞ்) செல்வமாகப் பொருந்திய
வைதேகி பிரியல் உற்று—பிராட்டி பிரியப்பெற்று
தளர்வு எய்தி — (அதனால்) வருத்தமடைந்து
சடாயுவை—ஜடாயுவென்னும் கழுகரசை
வைகுந்தத்து ஏற்றி—பரமபதத்திற்செலுத்தி
வனம் மருவு—(வாலிக்கு அஞ்சிக்) காட்டில் மறைந்து வசிக்கிற
கவி அரசன்—வாநர ராஜனை சுக்ரீவனுடன்
காதல் கொண்டு—ஸ்நேஹஞ்செய்துகொண்டு
வாலியை கொன்று—(அவனது விருப்பத்தின்படி அவன்தமையனை) வாலியை வதைத்து,
இலங்கை நகர்—இலங்காபுரியை
அரக்கர் கோமான் சினம் அடங்க—(அதற்குத் தலைவனாகிய) ராக்ஷஸராஜனை ராவணனுடைய செருக்கு ஒழியும்படி
மாருதியால் சுடுவித்தானை — அநுமானைக்கொண்டு எரிப்பித்தவனும்
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—;
இனிது அமர்ந்த—இனிமையாய் எழுந்தருளியிருக்கிற
அம்மானை—ஸர்வேச்வரனுமான
இராமன் தன்னை—இராமபிரானை
எத்துவார்—துதிக்கின்ற அடியார்களுடைய
இணை அடியே—உபயபாதத்தையே
எத்தினேன்—துதிக்குந்தன்மையேன் (யான்).

கருத்துரை:—"தனமருவு வைதேகி" என்றவிடத்து, தனம் என்பதை ஸ்தநமென்ற வடசொல்லின் விகாரமாகக்கொண்டு வேறுவகையாகவும் பொருள் கூறலாமாயினும் "விஷ்ணோஃ ஸ்ரீஃ" என்றபடி பெருமானுக்கு யநமான பிராட்டி என்று உரைப்பதே அழகிதாமென்க. யநமென்ற வடசொல் விகாரம்.

இராவணன் மாயமான் வடிவுபூண்ட மாரீசனைக்கொண்டு ஸ்ரீராமலக்ஷ்மணரைப் பிரித்து. ஸீதை தனித்துநின்ற ஸமயம்பார்த்து அவளை வலிய எடுத்துத் தேரின்மேல்வைத்துச் செல்லுமளவிலே அவள் கூக்குரலிட்டதைக் கேட்டுக் கழுகரசான ஜடாயு ஓடிவந்து எதிர்த்துப் பெரும்போர்செய்து அவனது கொடி முதலியவற்றைச் சிதைத்து முடிவில் அவனெறிந்த தெய்வவாளினால் சிறகு அறுபட்டுவிழ, அரக்கன் ஸீதையைக்கொண்டுபோய் இலங்கையில் அசோகவனத்திற் சிறைவைத்திட்டான். பின்புவந்த ராமலக்ஷ்மணர் பர்ணசாலையில் பிராட்டியைக் காணாது கலங்கி அவளைத் தேடிச் செல்லும்வழியில் ஜடாயு வீழ்ந்துகிடக்கக்

கண்டு சோகிக்கையில், குற்றுயிருடன் விழுந்துகிடந்த அந்த ஜடாயு நடந்த செய்தியைச் சிறிதுகூறி உயிர்நீப்ப, இராமபிரான் அவனுக்குப் பரமபதமளித்துச் சரமகைங்கரியஞ்செய்து முடித்தனன். 'ஜடாயு' என்ற வடசொல்லுக்கு - ஜடா ஆயு என்று பதம்பிரித்து, பலமயிர்கள் சேர்த்துத் திரித்தசடைபோலப் பல வாய்மிக்குத் திரண்ட ஆயுளுடையவரென்றும், சிறகில் உயிரையுடையவர் என்றும் பொருள்கூறுவர். ஸௌர்யஸாரதியான அருணனது புத்திரரும் ஸம்பாதியினது தம்பியுமாகிய இவர் தசரதசக்ரவர்த்திக்கு உயிர்த்தோழராயிருந்தனர். இவர் பின்பு தசரதகுமாரர்களான ஸ்ரீராம லக்ஷ்மணர்களைத் தண்டகாரணியத்திற் கண்டு அவர்களைத் தமது புத்திரர்போலவே பாவித்து அன்புபாராட்டி அவர்களுக்குப் பாதுகாவலாய் நிற்க, அவர்களும் தசரதரினும் வயது முதிர்ந்த இவரைத் தமது பெரியதந்தையாகப் பாவித்து வந்தனர்.

வைதேஹீ என்ற வடமொழிப் பெயர் - விதேஹராஜனது மரபில் வளர்ந்தவளென்று பொருள்படும். வாலீ என்ற வடமொழிப் பெயர்க்கு - வாலில் வலிமையுடையவனென்றும், வாலினின்று பிறந்தவனென்றும் காரணப்பொருள் கூறுவர்; இவன் இந்திரன்மகன்; ஸுக்ரீவனது தமையன்; கிஷ்கிந்தா நகரத்தை ஆண்ட வாநர ராஜன்; தன்னை எதிர்ந்தாரது வலிமையிற் பாதி தன்னிடம்வந்து கூடும்படி வரம்பெற்றவன்; இராவணனை ஒருகால் வென்று பின்பு அவனது வேண்டுகோளின்படி அவனோடு அக்நிஸாக்ஷிகமாக நண்புகொண்டவன்.

இராமன் லக்ஷ்மணனுடனே ஸீதையைத் தேடிச்செல்லுகையில் வழியில் எதிர்ப்பட்ட ஹநுமான்மூலமாக ஸூர்யகுமாரனான ஸுக்ரீவனோடு நண்புகொண்டு அவன் வேண்டுகோளின்படி அவனது தமையனும் வாநரராஜனுமான வாலியைத் தந்திரமாகக்கொன்று ஸுக்ரீவனுக்குக் கிஷ்கிந்தையில் முடிசூட்டிவைத்த பின் அவனது உதவியால் இராவணாதியரை அழிப்பவனாயினன். வாலி முன்னமே இராவணனுடன் அக்நிஸாக்ஷிகமாக நட்புக்கொண்டிருந்தமைபற்றி அவனைத் தான் உதவியாகக்கொண்டால் இராவணாதி துஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால் இராமன் வாலியை நண்பனாகக் கொள்ளாமல், சரணமடைந்த ஸுக்ரீவனது வேண்டுகோளின்படி அவ்வாலியை வதைத்திட்டனனென்க. வாலிக்கு அஞ்சின ஸுக்ரீவன் அவ்வாலி வரத்தகாத மதங்காச்ரமத்தில் மறைந்து வஸித்தமைபற்றி வனமருவுகவியரசன் என்றார்.

ஸீதை இருக்குமிடத்தைத் தேடித் தெரிந்துகொள்ளும்பொருட்டு இராமதூதனாய்ச் சென்ற ஹநுமான் கடல்கடந்து இலங்கைபுக்கு அசோகவனத்திற் சீதையைக்கண்டு பேசியபின்பு இராவணனுக்குத் தன்வரவைத் தெரியச்செய்து அவனைத் தான் நேரிற்கண்டு பேசக்கருதி அசோகவனத்தை அழித்ததுமன்றி அதற்காக வந்தெதிர்த்த அரக்கரனைவரையும் அழித்திட்ட காரணத்தால் இராவண குமாரனான இந்திரஜித்துவந்து எதிர்த்து ப்ரஹ்மாஸ்த்ரத்தாற் கட்டிக்கொண்டு சென்றபொழுது அக்குரங்கைக்கொல்லக் கருதிய இராவணனை விபீஷணன் 'தூதரைக் கொல்லலாகாது' என்று நீதிகூறி மறுக்க, பின்பு இராவணனேவலால் அரக்கர்கள் அனுமானது வாலில் கிழிசுற்றி நெய்யாலும் எண்ணெயாலும் நனைத்து நெருப்பு மூட்ட, அதுகொண்டு அவ்வனுமான் இலங்கை முழுவதிலும் ஆவ்

காங்குத் தீப்பற்றவைத்து அந்நகரை எரித்திட்டனன். உத்தமதூதனான இவன் செய்த இச்செயல் தலைவனான இராமனது திருவுள்ளத்துக்குப் பாங்காயிருந்ததனால் "மாருதியாற் சுடுவித்தான்" என்றார்.

மாருதி - வாயுவினது குமாரன்; வடமொழித் தத்திதாந்தநாமம். (௬)

---

குரைகடலை அடலம்பால் மறுகவெய்து
கலைகட்டி மறுகரையை அதனாலேறி
எரிநெடுவே லரக்கரொடும் இலங்கைவேந்தன்
இன்னுயிர்கொண்டு அவன்தம்பிக்கு அரசுமீந்து
திருமகளோ டினிதமர்ந்த செல்வன்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
அரசமர்ந்தா னடிசூடும் அரசையல்லால்
அரசு ஆக எண்ணேன் மற்றரசுதானே. (எ)

பதவுரை.

குரை கடலை—கோஷிக்கின்ற கடலை
அடல் அம்பால்—தீக்ஷ்ணமான அம்பைக்கொண்டு
மறுக எய்து—கலங்கும்படி எய்யத்தொடங்கி,
குலை கட்டி—(அதில்) அணைகட்டி
அதனால்—அந்த அணைவழியாக
மறு கரையை ஏறி—(கடல்கடந்து) அக்கரை சேர்ந்து
எரி நெடு வேல் அரக்கரொடும்—(சத்துருக்களை) எரிக்கின்ற நீண்ட வேற்படையை யுடைய இராக்கதர்களும்
இலங்கை வேந்தன்—இலங்கைக்கு அரசனான இராவணனும் ஆகிய அனைவர்களுடைய
இன் உயிர் கொண்டு—இனிய உயிரைக் கவர்ந்து [கொன்று]
அவன் தம்பிக்கு—அவ்விராவணனது தம்பியான விபீஷணனுக்கு
அரசும் ஈந்து—ராஜ்யத்தைக்கொடுத்து
திருமகளோடு—லக்ஷ்மியின் அவதாரமான பிராட்டியுடனே
இனிது அமர்ந்த—இனிமையாகச்சேர்ந்த
செல்வன் தன்னை—எல்லாவகைச் செல்வங்களுமுடையவனும்
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—;
அரசு அமர்ந்தான்—தனது மேன்மைதோன்ற எழுந்தருளியிருப்பவனுமான இராமபிரானது
அடி சூடும் — திருவடிகளைத் தலைமேற்கொள்ளுதலாகிற
அரசை அல்லால்—அரசாட்சியைப்பெற விரும்புவேனேயன்றி
மற்று அரசு—அதற்கு மாறான ஸ்வாதந்திரியம் பாராட்டுகிற அரசாட்சியை
அரசுஆக எண்ணேன்—ஒரு பொருளாக மதிக்கமாட்டேன்.

கருத்துரை:—இராவணனாற் கவரப்பட்ட பிராட்டி இலங்கையிலிருக்கிற செய்தியைத் திருவடிசென்று அறிந்துவந்து சொன்னபின்பு இராமபிரான் வானர ஸேனையுடனே புறப்பட்டுச் சென்று கடற்கரையை அடைந்து கடலைக்கடக்க உபாயஞ்சொல்லவேண்டுமென்று அக்கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்து அங்குத் தர்ப்பசயனத்திலே படுத்து மூன்றுநாளளவும் பிராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருக்க, ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு அனைவரும் நடந்து செல்லும்படி கடலை வற்றச்செய்வேனென்று ஆக்நேயாஸ்திரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே, வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து அப்பெருமானைச் சரணமடைந்து கடல் வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கிநிற்க, பின்பு இராமபிரான் வானரமுதலிகளைக்கொண்டு மலைகளால் ஸேதுபந்தனஞ்செய்தனன்.

இராமன் ராவணாதிகளை அழிக்கும்பொருட்டுப் பெரிய வாநரஸேனையை ஸித்தப்படுத்திக்கொண்டு புறப்பட்டுக் கடற்கரை சேர்ந்தவளவில், இராவணன் தம்பியான விபீஷணன் தான்சொன்ன நல்ல உபதேசங்களைக்கொள்ளாத தமையனை விட்டுவந்து இராமனைச் சரணமடைய, அப்பெருமான் அவனுக்கு அபயமளித்து அப்பொழுதே அவனை இலங்கைக்கு அரசனென முடிசூட்டி அவனால் இலங்கையின் நிலைமையை அறிந்து அவனுடனே கடல்கடந்து இலங்கைசார்ந்து அங்குப் பெரும் போர்புரிந்து இராவணனைச் சேனையோடும் புத்திரமித்திராதிகளோடும் கொன்று முன் சொன்னபடி விபீஷணனை லங்காதிபதியாக்கி ஸீதையை மீட்டுக்கொண்டு மீண்டனன்.

இப்படி ஸாது பரித்ராணமும் துஷ்ட சிக்ஷணமும் செய்தருளி உலகத்தை உய்வித்தருளிய இராமபிரானது திருவடிகளைச் சிரோபூஷணமாகக் கொள்வதே தமக்குப் பெருந்த ஸாம்ராஜ்யமென்பதை இப்பாட்டால் வெளியிட்டார்.

குரைகடல்—வினைத்தொகை. (௭)

---

அம்பொனெடு மணிமாட வயோத்தியெய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த்தான் முன்கொன்றான்
தன் பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச்செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதைகேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
எம்பெருமான் தன்சரிதை செவியால்கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் மதியோமன்றே. (௮)

பதவுரை.

அம்—அழகிய
நெடு—உயர்ந்த
பொன் மணிமாடம்—பொன்னையும் இரத்தினங்களையுங்கொண்டு அமைக்கப்பட்ட உபரிகை வீடுகளையுடைய
அயோத்தி—அயோத்யா நகரத்துக்கு
எய்தி—மீண்டுவந்து
அரசு எய்தி—அரசாட்சியை அடைந்து
தான் முன் கொன்றான் தன்—தன்னால் முன்பு கொல்லப்பட்டவனான இராவணனுடைய
பெரு தொல் கதை—பெரிய பூர்வ வ்ருத்தாந்தங்களை யெல்லாம்
அகத்தியன் வாய்கேட்டு—அகஸ்திய மகாமுனிவன்வாயாற் சொல்லக்கேட்டு,
மிதிலை செல்வி—மிதிலாநகரத்தில் தோன்றிய பிராட்டி
உலகு உய்ய—உலகமுழுவதும் வாழும்படி
திரு வயிறு வாய்த்த—பெற்ற
மக்கள்—தன்பிள்ளைகளான குசலவர்களுடைய
செம் பவளம் திரள்வாய்—சிவந்த பவழத்துண்டுபோன்ற வாயினால்
தன் சரிதை—தனது சரித்திரமான ஸ்ரீராமாயணத்தை
கேட்டான்—கேட்டருளினவனான
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—; (எழுந்தருளியிருக்கிற)
எம் பெருமான் தன்—எமது தலைவனுடைய
சரிதை—சரித்திரத்தை
செவியால் கண்ணால் பருகுவோம்—காதினாற்கேட்டு (அப்பெருமானைக்) கண்ணால் ஸேவிக்கப் பெறுவோம்யாம்; (அதுவேயன்றி,)
இன் அமுதம்—இனிய தேவாம்ருதத்தையும்
மதியோம்—(ஒரு பொருளாக நன்குமதிக்கமாட்டோம்
(அன்றே—அல்லவா? ஈற்றசை, தேற்றமுமாம்.)

கருத்துரை :—ஆராவமுதமாகவுள்ள எம்பெருமானுடைய ஸேவையின் மிக்க இனிமைக்கும், அங்ஙனமேயுள்ள அப்பிரானுடைய சரித்திரத்தின் மிக்க இனிமைக்கும் தேவாம்ருதத்தின் இனிமை சிறிதும் ஈடாகாதென்னுங் கருத்தால், இன்னமுதமதியோம் என்கிறார். "இன்னமுதமதியோ மொன்றே" என்றும் பாடமுண்டாம்: அமுதம் - அமுதத்தை, ஒன்று - ஒரு பொருளாக, மதியோம் என்றவாறு.

இராமபிரான் பிராட்டியை மீட்டுக்கொண்டு ஸ்ரீவிபீஷணாழ்வானுடனும் அவனைச்சார்ந்த சில அரக்கர்களுடனும் ஸுக்ரீவன் முதலிய வாநரவீரர்களுடனும் தானும் தன் மனைவியும் தம்பியுமாகப் புஷ்பக விமானத்திலேறித் திருவயோத்தி சேர்ந்தனன். அங்கு இராமன் வரவை எதிர்பார்த்திருந்த பரதன் தம்பியான ஶத்ருக்நனுடனே எதிர்கொண்டுவந்து இராமபிரான் முதலானவர்களை வணங்கி உபசரித்து அழைத்துக்கொண்டு செல்ல, அங்கு ஸ்ரீராம பட்டாபிஷேக மஹோத்ஸவம் வஸிஷ்டர் ஸுமந்திரர் முதலிய பெரியோர்களால் வெகு சிறப்பாக நடந்தேறிற்று. இவ்வாறு இராமபிரான் திருவயோத்தியில் திருமுடிசூடி எழுந்தருளியிருக்கையில், அகஸ்தியர், ஜமதக்கி, பரத்வாஜர், வஸிஷ்டர், கௌதமர், கௌஶிகர், காஶ்யபர், அத்ரி, தௌமியர் முதலிய முனிவர்கள் பலர் அந்தச் சக்கரவர்த்தி திருமகனைக்கண்டு கொண்டாடக் கருத்துக்கொண்டு அங்குவந்து சேர, ஸபையில் வீற்றிருந்த இராமபிரான் அவர்களை எதிர்கொண்டு அழைத்து வணங்கி உபசரித்துத் திவ்வியமான ஆஸனங்களில் வீற்றிருக்கச்செய்து யோகக்ஷேமங்களை வினவ, அதற்கு அம்முனிவர்கள் "எங்கட்கும் எல்லோர்க்கும் நெடுநாளாகப் பெருந்துன்பங்களை இழைத்துவந்த கொடிய ராக்ஷஸராஜனை ராவணனையும் அவனுடைய அநுபந்திகளையும் வேரோடு அறுத்தருளிய நுமது கருணையிருக்க எங்களுக்கு என்னகுறை?" என்று கொண்டாடிப்பேச, அது கேட்ட இராகவன் "அவ்வரக்கர்களுடைய பிறப்பும் வலிமையும் செயலும் அவர்கள் பெற்ற வரங்களும் முதலிய வரலாறுகளையெல்லாம் சொல்லவேண்டும்" என்று அம்முனிவர்களை வினவ, அவர்களில் அகத்திய மஹாமுனிவர் அனைத்தையுஞ் சொல்பவராய்ப் புலஸ்த்ய வம்ச வ்ருத்தாந்தத்தையும் பூர்விக ராக்ஷஸர் செய்தியையும் இராவணாதியர் பிறப்பையும் அவர்கள் பெற்ற வரங்களையும் இந்திரஜித்தின் உற்பத்தியையும் இராவணன் திக்விஜயஞ்செய்த விவரத்தையும் அவன் ஆங்காங்குச் சாபம் பெற்றவகை முதலியவற்றையும் கூறினர்.

பின்பு பிராட்டி கர்ப்பிணியாயிருக்கையில், ஒருநாள், இராமன் அவளை நோக்கி 'நீ விரும்புவது ஏதேனும் உளதேல் சொல்லு' என்றதற்கு, அவள், 'கங்கைக்கரையிலுள்ள முனிவர்களின் ஆஶ்ரமங்களிற் சென்று அவ்விடத்தினழகை இன்னொருதரம் அநுபவிக்க விரும்புகின்றேன்' என்று சொல்ல! அதற்குப் பெருமான் 'அப்படியே ஆகட்டும்' என்று அருளிச்செய்தார். பிறகு ஒருநாள், ஓராண்டளவும் இராவணன் வசத்திலிருந்த சீதையைத் தாம் மீள அழைத்துச் சேர்த்துக்கொண்டதைப்பற்றி அவளுடைய கற்புநிலையை அறியாத நாட்டார் சிலர் குறைகூறினர் என்று ஒற்றர் சொல்லக் கேட்டறிந்த ஸ்ரீராமன் லோகாபவாதத்தால் வரும் அபகீர்த்திக்கு அஞ்சி மனைவியைக் காட்டிற் செலுத்தி

விடத்துணிந்து முனிவ ராச்சிரமங்களைக் காணச் செல்வதென்ற வியாஜத்தால் இலக்குமணனைக்கொண்டு சீதையைக் கங்கைக் கரையிலுள்ள வால்மீகி முனிவ ராச்சமத்தருகிற் சேர்த்துவிட்டனர். அங்கு வால்மீகி மாமுனிவர் தம் ஆச்ரமத் தில் தவஞ்செய்யும் மகளிர் பலரைக்கொண்டு பிராட்டியை உபசரித்து வருகை யில், அவள் இரண்டு குமாரரை ஈன்றாள். இரட்டைப் பிள்ளைகளாகப் பிறந்த அவர்கட்கு வால்மீகிமுனிவர் குசனென்றும் லவனென்றும் நாமகரணஞ்செய்து தாம் இயற்றிய ஸ்ரீராமாயணமென்னும் ஆதிகாவ்யத்தைத் தக்க தாளலயைக ளோடு யாழிலிட்டு மதுரமாகப் பாடும்படி அவர்கட்கு இளமையிலேயே பயிற்று வித்தனர் பின்னர் இராமபிரான் அஶ்வமேதயாகஞ் செய்கையில், பெரிய ஸபை சேர்த்து வால்மிகி முனிவருடன்வந்த அவரது சிஷ்யர்களான அக்குமாரர்களின் வாயால் அக் காவ்யத்தைக்கேட்டு உவந்தனர்.

கொன்றான்—கொல்லப்பட்டான் ; செய்வினை, செயப்பாட்டுவினைப் பொரு ளது ; இதில், அகாச்சாரியையும் படுவிகுதியும் தொக்கன வென்னலாம். மிதிலைச் செல்வி—சனககுலத் தலைவனை மிதியென்னும் அரசனால் அமைக்கப்பட்டமை பற்றி மிதிலா என்று பெயர்பெற்ற நகரத்தில், செல்வி = எல்லாச் செல்வங்களுக் கும் உடையவள் ; செல்வமகளான லக்ஷ்மியின் அம்சமானவள்.

குசலவர் இராமாயண ப்ரவசநஞ்செய்து அதனால் உலகத்தை நன்னெறியில் உய்த்தலும், இராமபிரான் காலத்திற்குப்பின் அப்பெருமான்போலவே நீதி முறை தவறாது உலகத்தை இனிது ஆளுதலும் தோன்ற "உலகுய்யத் திரு வயிறுவாய்த்த மக்கள்" என்றார். பவளத்திரள்வாய்—உவமத்தொகை.

செல்வி—செல்வன் என்பதன் பெண்பால் ; இ - விகுதி. திருவயிறுவாய்த் தல்—ப்ரஸவித்தல். சிலவிடங்களில் 'கர்ப்பமாயிருத்தல்' என்ற பொருளுமாம். பவளம்—ப்ரவாளமென்ற வடசொற்சிதைவு. சரிதம் என்ற வடசொல், சரிதை யென விகாரப்பட்டது. செவியாற்பருகுதல்—"பருகுவனன்ன ஆர்வத்தனாகி... செவி வாயாக நெஞ்சு களனாகக், கேட்டவை கேட்டவை விடாது உளத்தமைத் தல்". கண்ணாற் பருகுதல்—"பருகுவான்போல நோக்கி" என்றார் பிறரும். (அ)

---

செறிதவச் சம்புகன்தன்னைச் சென்றுகொன்று
　　செழுமறையோ னுயிர்மீட்டுத் தவத்தோனீந்த
நிறைமணிப்பூ ணணியுங்கொண்டு இலவணன்தன்னைத்
　　தம்பியால் வானேற்றி முனிவன்வேண்டத்
திறல்விளங்கும் இலக்குமனைப் பிரிந்தான்தன்னைத்
　　தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்
உறைவானை மறவாத உள்ளந்தன்னை
　　யுடையோம் மற்றுறுகியர மடையோமன்றே. (கூ)

பதவுரை.

செறி தவம்—மிக்க தபஸ்ஸையுடையனான
சம்புகன் தன்னை—(சூத்ராதியனான) சம்புகனை
சென்று கொன்று—(அவனிருக்குமிடந் தேடிச்) சென்று தலையறுத்து
செழு மறையோன் உயிர் மீட்டு—சிறந்த ப்ராஹ்மண குமாரனுடைய உயிரைமீட்டுக்கொடுத்து,
தவத்தோன் ஈந்த—அகஸ்தியமாமுனிவன் கொடுத்த
நிறை மணி பூண் அணியும் கொண்டு—பெருவிலையுள்ள ரத்னஹாரமான ஆபரணத்தையும் சாத்தியருளி
இலவணன் தன்னை—லவணாஸுரனை
தம்பியால்—சத்ருக்னனைக்கொண்டு
வான் ஏற்றி—வீரஸ்வர்க்கத்திற் குடியேற்றுவித்து
முனிவன் வேண்ட—துர்வாஸமுனிவனது சாபத்தால்
திறல்விளங்கும் இலக்குமனை பிரிந்தான் தன்னை—பலபராக்கிரமம் விளங்கப்பெற்ற லக்ஷ்மணனைத் துறந்தவனும்
தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்—,
உறைவானை—நித்யவாஸம் பண்ணுகிறவனுமான இராமபிரானை
மறவாத உள்ளம் தன்னை உடையோம்—மறவாமல் எப்பொழுதும் தியானிக்கிற மனத்தையுடைய நாம்
மற்று உறு துயரம் அடையோம்—இனி (எம் பெருமானை அநுபவிக்கப் பெற்றிலோமென்று) வருந்துன்பத்தை அடையமாட்டோம்.

(அன்று, வ - ஈற்றசை.)

கருத்துரை :—தன்னை அக்காலத்திற் காணப்பெறாத குறைதீரப் பிற்காலத்தார் காணும்படி தில்லைத் திருச் சித்திரகூடத்தில் அப்படிப்பட்ட திவ்ய மங்கள விக்ரஹத்தோடு நித்யவாஸம் செய்தருளாநின்ற எம்பெருமானை இறையும் மறவாது எப்பொழுதும் தியானிப்போமாகில், 'அக்காலத்தில் எம்பெருமானை அநுபவிக்கப் பெற்றிலோமே!' என்றுவரும் துன்பத்தை அடையமாட்டோம் என்றவாறு.

இராமபிரான் நீதி தவறாது ராஜ்ய பரிபாலனஞ்செய்து வருகையில்; ஒரு நாள் ஒரு ப்ராஹ்மணன் ப்ரேதமான தன் மகனைத் தூக்கிக்கொண்டு அரண்மனை வாயிலில் வந்து விழுந்து 'ஐயோ! எனது ஒரே பேறான மகனுக்கு அகாலத்தில் ம்ருத்யு வந்ததே! என்செய்வேன்? தாய்தந்தையர் இருக்க மகன் மரணமடைவது அரசாட்சியின் தவறேயன்றி வேறன்று. உன் துரைத்தன நெறி வழுவியதனால் ஐந்து பிராயமுள்ள குழந்தையை இழந்த நானும் என் மனைவியும் உன் மாளிகை வாசலிலே உயிர்விடுகிறோம்' என்று பலவாறாகக் கதறிக் குறைகூறுவதைக்கேட்டு, பெருமான் வியாகுலப்பட்டு ஓடிவந்து அவ்வந்தணனை ஸமாதானப்படுத்தி உடனே வஸிஷ்டர் முதலிய தம் வைதிகமந்திரிகளை வரவழைத்து இச்செய்தி அறிவிக்க; அவர்களுள் ஒருவரான நாரதமுனிவர் சற்று ஆலோசித்து 'இது அநதிகாரி செய்யும் அறத்தின்பயனென்று தோன்றுகின்றது; யாரோ அதிகாரமில்லாதவன் தவஞ்செய்கிறான்; அதனை ஆராய்ந்து களைந்தீராயின் இப்பிள்ளை பிழைத்தெழுவான்' என்று உரைத்தனர். அது கேட்டவுடன் இராமபிரான் அந்த ப்ராஹ்மணகுமாரனுடம்பை எண்ணெய்க்குடத்திலிட்டுக் கெடாமற் பாதுகாக்கக் கட்டளையிட்டுப் புஷ்பகவிமானத்தை வருவித்து அதன்மேல் ஏறி ஆகாயமார்க்கத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு எத்திசையிலுந் தேடுகையில், தென்திசையில் சைவலமென்னும் மலையின் அருகில் ஒரு தடாகதீரத்தில் ஓர் மரத்தில் தலைகீழாகநின்று தவமியற்றும் ஒருவனைக்கண்டு ஸந்தேஹித்து அவனை

நோக்கி ‘நீ எந்த வருணத்தான்? யாது பெறவேண்டி இவ்வண்ணம் கடுந்தவமியற்றுகின்றனை? உள்ளபடி சொல்’ என்று வினவியதைக்கேட்டு அந்தத் தாபஸன் ‘ஐயா! நான் சூத்ரஜாதியிற் பிறந்தவன்; என் பெயர் சம்புகன்; இவ்வுடலோடு ஸ்வர்க்கமடையவேண்டுமென இவ்வாறு தவமியற்றுகிறேன்’ என விடைகொடுத்தனன். பின்பு அவனை நோக்கி இராமபிரான் ‘ஓ! சம்புக! இந்த யுகத்தில் சூத்திரனுக்குத் தவஞ்செய்யும் அதிகாரம் இல்லாமையால் நீசெய்வது அறத்திற்கு விபரீதமேயாகின்றது; ஆதலின், அரசனான நான் நீதிப்படி உன்னை வதைப்பதே தண்டம்’ என்று அருளிச்செய்ய, அவனும் ‘ஆகில் அதுவும் எனக்குப் புருஷார்த்தமே’ என உடன்பட்டு நிற்கையில், சக்ரவர்த்தி திருமகனார் வாளெடுத்து அவன்மேல் வீசினார். வீசவே அவன் யாக்கைநீங்கி நற்கதி பெற்றனன். இங்ஙனம் சூத்ரமுனியை வதைத்த முஹூர்த்தத்திலேயே, முன்பு உயிர்நீத்த ப்ராஹ்மண குமாரன் தூங்கியெழுந்தவனபோலப் பிழைத்தெழுந்தனன்.

பின்பு ஸ்ரீராமன் அகஸ்திய முனிவரது ஆஶ்ரமத்துக்குச் சென்று அவரை வணங்க, அம்முனிவர் மிக்க உபசாரங்களோடு அப்பெருமானுக்கு விருந்துசெய்து ஒரு திவ்யாபரணத்தைக்கொடுக்க, அதனைப் பெருமான் அரிதின் வாங்கித் தரித்துக்கொண்டு விளங்கினர். இந்த ஆபரணம் விஶ்வகர்மாவினால் நிருமிக்கப்பட்டது; காந்தியாற் சூரியனைப்போன்றது; ஸ்வர்ணம் வஸ்திரம் ஆபரணம் முதலாக வேண்டுவனவற்றை யெல்லாம் தரவல்லது; ஶ்வேதனென்னும் அரசனால் அகஸ்திய முனிவர்க்குக் கொடுக்கப்பட்டது.

மதுவென்னும் அஸுரனது மகனான லவணனென்பவன் பலபராக்கிரமங்களிற் சிறந்து செருக்கி நல்லோர்களை நலிந்து வருவதை யமுநாதீரவாஸிகளான முனிவர்கள் சொல்லக்கேட்ட இராமபிரான் அவனைக்கொன்று அவனது ராஜ்யத்தில் அரசாளுமாறு ஶத்ருக்நாழ்வானை அனுப்ப அவர் சென்று தந்திரமாகப் பொருது அவனைவதைத்து அவனிருந்த விடத்தில் மதுரையென்னும் நகரத்தை ஸ்தாபித்து அங்கு அரசாண்டனர். போரிற் புறங்கொடாமல் இறந்தவர் வீரஸ்வர்க்கம் புகுவராதலால் ‘தம்பியால் வானேற்றி’ என்றார்.

இராமபிரான் நெடுங்காலம் ராஜ்யாதிபத்தியம் நடத்திய பின்னர் ஒருநாள் காலருத்ரமூர்த்தி ப்ரஹ்மாவினால் ஏவப்பட்டு ஒரு தாபஸவடிவங்கொண்டு இராமனிடம்வந்து ஆசீர்வாதம் கூற, ஸ்வாமி அவர்க்கு முறைப்படி உபசாரமியற்றி ‘தேவரீர் வந்த காரியத்தை அருளிச்செய்யலாம்’ என்று கூற, அவரும் ‘என்னைத் தூதனுப்பிய மாமுனிவரின் வாக்கியங்களைத் திருச்செவிசாத்தத் திருவுள்ளமாயின், நாமிருவரேயன்றி மற்று யாரு மிருத்தல்கூடாது; யாராயினும் நம்முடைய ஸல்லாபத்தை ஒட்டிக் கேட்டாலும் இவ்விடத்து வந்தாலும் அவர்கொலைக்கு உரியராம்படி கட்டளையிடவேண்டும்’ என்றதை அங்கீகரித்த இராமன், இளைய பெருமாளை நோக்கி ‘இங்கு வேறு வாசற்காப்பான் வேண்டா; நீயே இருக்கக்கடவை; யாங்கள் இருவரும் பேசுமிடத்து எவரும் வரவொண்ணாது; ஒட்டிக் கேட்கவும் ஒண்ணாது; அவ்வாறு செய்தால் ப்ராண வியோகதண்டனைக்குப் பாத்திரமாவர்; ஆதலின் நீ நன்று காக்கவேண்டும்’ என்று ஆணையிட்டு ஏகாந்தத்திற்

சென்று அம்முனிவருடன் விரைவில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருள்வதைப் பற்றி ஸம்பாஷித்துக்கொண்டிருக்கையில், துர்வாஸமுனிவர் அரண்மனைவாசலில் வந்து 'விரைவில் என்னை இராமனிடம் அழைத்துக்கொண்டு போகவேண்டும்' என்ன, லக்ஷ்மணர் கைகூப்பிக்கொண்டு 'ஸ்வாமிந்! காரியம்யாது? அடியேன் இருக்கின்றேன் அதனைச் சாதிப்பதற்கு' என்று கூறினர். அது செவிப்பட்டவுடன் கோபாக்நி பொங்கி அம்முனி 'இந்த க்ஷணத்திலேயே இராமனுக்கு நான் வந்ததைத் தெரிவிக்கவேணும்; அப்படிச் செய்யாமற்போனால் உடனே இந்நகரத்தோடு நீங்களும் உங்கள் ஸந்ததியும் அழிந்துபோம்படி சபிப்பேன்; நான் கோபத்தை அடக்கமாட்டேன்' எனவே, லக்ஷ்மணர் 'என் ஒருவனுக்குக் கேடு வந்தாலும் வரட்டும்; என் நிமித்தம் மற்றவர்க்கு வாராதிருந்தாற்போதும்' என்று நிச்சயித்து ஸ்ரீராமனது கட்டளையைக் கடந்து அரண்மனையினுட் சென்று ஸந்நிதியில் இவர் வரவைத் தெரிவித்தார். அவரும் காலனை அனுப்பிவிட்டுக் கோபமுனிவரைக்கண்டு வந்தனஞ்செய்து 'யாது பணி?' என வினவ, அம்முனிவர் 'யான் ஆயிரவருஷமளவும் தவஞ்செய்து முடித்தேன்; இப்போது பெரும்பசியால் வருந்துகின்றேன்; அன்னம் தரவேண்டும்' என்றனர். அங்ஙனமே இராமபிரான் அவர்க்கு விரும்பினபடி போஜநமளிக்க, அவர் புஜித்துத் திருப்தியடைந்து வாழ்த்திச் சென்றனர். பிறகு இராமன் முன்பு காலதேவனுக்குச் செய்துகொடுத்த பிரதிஜ்ஞையினின்று தவறாதிருக்கவேண்டித் தம்பியை நோக்கி 'லக்ஷ்மணா! தக்கவர்க்குக் கைவிடுவதும் வதைப்பதும் ஒக்குமாதலால் உன்னை நான் கைவிட்டேன், என்முன் நில்லாமற் போ' என்றருளிச்செய்ய, இளையவர் கண்ணீர்வாரச் சரயூநதிக்குச்சென்று நீராடிப் பிராணாயாமத்தால் ஸ்வாஸத்தை அடக்கிப் பரமபதம் புக்கனர் என்பது (உத்தர ஸ்ரீராமாயணத்திற் கூறிய) வரலாறாதலால், முனிவன் வேண்ட என்பதற்கு —'முனிவடிவமாய்வந்த காலருத்ர மூர்த்தியின் வேண்டுகோளை நிறைவேற்றவேண்டி' என்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும். திறல் விளங்கும்—தனக்குப் பக்கபலமாய் விளங்குகிற என்றுமாம்.

மீட்டு = மீள்—பகுதி. "அணியுங் கொண்டு" என்ற உம்மை - கதைத்தொடர்ச்சிபற்றிவந்த இறந்தது தழுவிய எச்சப்பொருளது. இலக்குமன் — லக்ஷ்மணன் என்ற வடசொற்சிதைவு. இத்திருநாமம்—உத்தம புருஷலக்ஷணங்களையுடையவனென்றும், பகவத் கைங்கரிய லக்ஷ்மியோடு கூடியவனென்றும் பொருள்படும். உறுதுயரம்—வினைத்தொகை. துயரம்=அம்–சாரியை. (௯)

---

அன்றுசராசரங்களை வைகுந்தத்தேற்றி
அடலரவப்பகையேறி அசுரர்தம்மை
வென்று இலங்குமணிநெடுந்தோள் நான்குந்தோன்ற
விண்முழுதும் எதிர்வரத்தன் தாமம்மேவிச்
சென்று இனிதுவீற்றிருந்த அம்மான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
என்றும்நின்றான் அவனிவனென்றேத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதுந்தொண்டீர் நீரே. (௧௦)

பதவுரை.

அன்று—(தன்னடிச் சோதிக்கு எழுந்தருள்கிற) அந்நாளில்

சர அசரங்களை—(அயோத்யாபுரியிலுள்ள ஜங்கமமும் ஸ்தாவரமுமான எல்லாவுயிர்களையும்

வைகுந்தத்து ஏற்றி—பரமபதத்துக்குப் போகச்செய்து,

அடல் அரவம் பகை ஏறி—வலிமையையுடைய பாம்புகளுக்குப் பகையான கருடன் மேல் ஏறிக்கொண்டு

அசுரர் தம்மை வென்று—அஸுரர்களைஜயித்து

இலங்கும் அணி நெடு தோள் நான்கும் தோன்ற—(அந்த ஜயலக்ஷ்மி) விளங்கப்பெற்ற அழகிய நீண்ட (தனது) திருக்கைகள் நான்கும் விளங்க

விண் முழுதும்—பரமபதத்திலுள்ளாரெல்லாரும்

எதிர்வர—எதிர்கொண்டு உபசரிக்கும்படி

தன் தாமம் மேவி சென்று—தனது ஸ்தாநமான அப்பரமபதத்திலே போய்ப்புக்கு

இனிது வீற்றிருந்த—(தன் மேன்மையெல்லாம் தோன்றும்படி இனிமையாகத் (திவ்யஸிம்ஹாஸநத்தில்) எழுந்தருளியிருந்த

அம்மான் தன்னை—ஸர்வேச்வரனை

தில்லை நகர் திரு சித்ரகூடம் தன்னுள் என்றும் நின்றான் அவன் இவன் என்று ஏத்தி—(அந்த இருப்பில் ஒன்றுங் குறையாமல் அவ்வாறே) தில்லைச் சித்ரகூடத்தில் எந்நாளும் (நமக்காக) நித்யவாஸம்பண்ணுகிற அப்பெருமான் இவ்விராமபிரானே யென்றறிந்து துதித்து

தொண்டீர் நீர்—அவனுக்கு அடியவர்களான நீங்கள்

நாளும் எப்பொழுதும்—தினந்தோறும் எப்பொழுதும்

இறைஞ்சுமின்—வணங்கி உஜ்ஜீவியுங்கள்.
(ஏ—இசைநிறை.)

கருத்துரை:—இளைய பெருமாளைவிட்டுப் பிரிந்ததனால் தரிக்கமாட்டாமல் மிகவும் க்லேசமடைந்த இராமபிரான் ராஜ்யத்தைவிட்டு எழுந்தருளத் தொடங்கியபோது அயோத்யாநகரத்து உயிர்களெல்லாம் பெருமாளைச் சரணமடைந்து 'தேவரீர் எங்குச் சென்றாலும் அடியோங்களையும் கூடவே அழைத்துக்கொண்டு செல்லவேண்டும்' என்று பிரார்த்திக்க, ஸ்ரீராமன் அவர்களுடைய பக்திப்ரகர்ஷத்தைக்கண்டு 'அப்படியே ஆகட்டும்' என்று அருளிச்செய்து, அனைவரையும் தம்மைப் பின்தொடர்ந்து வருமாறு பணித்தருளிப் பிரயாணப்பட்டனர். அப்பொழுது அந்நகரத்திருந்த மனிதர்களேயன்றி விலங்கு பறவை முதலிய அஃறிணை உயிர்களும் அகமகிழ்ந்து பெருமாள்பின் சென்றன. இங்ஙனம் பலரும் புடைசூழ ஸ்ரீபகவான் ஸரயூநதியில் இறங்கித் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளும்போது தம்மிடத்து இடையறாத அன்புகொண்டு பின்பற்றிச் சரயுவில் மூழ்கி உடம்பைத் துறந்த எல்லாவுயிர்கட்கும் ப்ரஹ்ம லோகத்துக்கு மேற்பட்டதாய்ப் பரமபதம்போலவே அபுநராவ்ருத்தியாகிற மேம்பாடுள்ள ஸாந்தாநிகமென்னும் உலகத்தை அளித்தனர். ஸ்ரீராமபிரான் பரமபதத்துக்குச் சென்றபோழ்து, சங்க சக்கரங்களிரண்டையும் தரிக்கிற மேற்பாற் கரமிரண்டும் தோன்றப் பெற்றமை விளங்க, "அசுரர் தம்மை வென்றிலங்குமணி நெடுந்தோள் நான்குந் தோன்ற" என்றார். இந்த அடைமொழியை வீற்றிருந்த என்பதனோடாவது சித்ரகூடந்தன்னுள் நின்றான் என்பதனோடாவது இயைத்தலும் ஏற்கும். அடலரவப் பகையேறி என்றது, தன்தாமமேவி என்றதனோடும், அசுரர்தம்மை வென்று என்றதனோடும் இயைக்கத்தக்கது.

சர - அசரம்; தீர்க்க ஸந்திபெற்ற வடமொழித்தொடர். சரம் - அசையும் பொருள், இயங்குதிணைப் பொருள். அசரம்—அசையாப்பொருள், நிலைத்

திணைப்பொருள். முதலடியின் முற்பகுதிக்கு, “கற்பா ரிராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ, புற்பாமுதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே, நற்பாலயோத்தியில் வாழுஞ் சராசரம் முற்றவும், நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே” என்ற திருவாய்மொழி அநுஸந்திக்கத்தக்கது.

நெடுங்தோள் — ஆஜாநுபாஹு. தாமம்—யாம என்னும் வடசொல்திரிபு. தொண்டீர்—முன்னிலைப்பன்மைக் குறிப்புவினையாலணையும் பெயர்; தொண்டரென்பதன் ஈற்றயல் திரிந்தவிளியுமாம். (க0)

---

தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
திறல்விளங்குமாருதியோடு அமர்ந்தான் தன்னை
எல்லையில்சீர்த்தயரதன் தன்மகனாய்த்தோன்றிற்று
அதுமுதலாத் தன்னுலகம்புக்கதீறாக்
கொல்லியலும்படைத்தானைக் கொற்றவொள்வாள்
கோழியர்கோன்குடைக் குலசேகரன்சொற்செய்த
நல்லியலின்தமிழ்மாலை பத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ் நண்ணுவாரே. (கக)

பதவுரை.

தில்லை நகர் திரு சித்ரகூடம் தன்னுள்—;
திறல் விளங்கும்—பல பராக்கிரமம் விளங்கப் பெற்ற
மாருதியோடு—அநுமானுடனே
அமர்ந்தான் தன்னை—நித்யவாஸம்பண்ணுகிற எம்பெருமானைக்குறித்து,
எல்லை இல் சீர் தயரதன் தன் மகன் ஆய் தோன்றிற்று அது முதல் ஆ தன் உலகம் புக்கது ஈறு ஆ—அளவில்லாத புகழையுடைய தசரத சக்ரவர்த்தியின் குமாரனாய்ப் பிறந்தது முதல் பரமபதம் புக்கது இறுதியாக (ஸ்ரீராமாயண கதை முழுவதையும் ஸங்க்ரஹமாக அமைத்து)
கொல் இயலும் படை தானை கொற்றம் ஒள் வாள் கோழியர் கோன் குடை குலசேகரன் சொல் செய்த—(பகைவர்களைக்) கொல்லுதல் பொருந்திய ஆயுதங்களையுடைய சேனையையும், வெற்றியையும்ஒளியையு முடைய வாளாயுதத்தை யுடையவரும் உறையூரிலுள்ளார்க்குத் தலைவரும் வெண்கொற்றக் குடையையுடையவருமான குலசேகராழ்வார் அருளிச்செய்த
நல் இயல்—சிறந்த இயற்றமிழிலக்கணத்துக்கு இசைந்த
இன் தமிழ் மாலை—இனிய தமிழ்ப் பிரபந்த ரூபமான இப்பத்துப் பாசுரங்களையும்
வல்லார்—கற்று வல்லவர்கள்
நலம் திகழ்—பரமபதத்தில் விளங்குகிற
நாரணன்—ஸ்ரீமந்நாராயணனுடைய
அடி கீழ் நண்ணுவார்—திருவடிகளிற் சேரப் பெறுவார்கள்.

கருத்துரை :—இப்பாட்டு இத்திருமொழியின் பலஶ்ருதியாம். தில்லைத் திருச்சித்திரகூடத் தெம்பெருமான் விஷயமாக ஸ்ரீகுலசேகராழ்வார் அருளிச்செய்த பரமபோக்யமான இத்திருமொழியை ஓதவல்லவர்கள் எம்பெருமானருளாற் பரமபதமடைவரென்க.

பால்யத்தில் ப்ரஹ்மா அளித்த வரத்தினல் சிரஞ்ஜீவியானவரும்,

"காஞ்ரு ஞ்ஜெணா நந ஸஹவிய ராவவதெ
யஸ்ராவகஂ வரித ஜீநவஹ ஜீநஹஜ ।
ஸொஜெஷ்ட ஹஜெ ஹநரோது வாரஸோ! விஸக்ஞிஂ
வஜ்ரா வயஞிய வரிதஂ தவ ஸெவதெஷெள"

[அதிமாநுஷஸ்தவம் - ஆழ்வான்.]

என்றபடி.—ஸ்ரீராமகதை உலகத்திலுள்ளவளவும் தாம் ஜீவித்திருக்குமாறு ஸ்ரீராமனிடம் வரம்வேண்டிப் பெற்றவருமான திருவடி, இராமபிரான் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளியபொழுது அவனைவிட்டுப் பிரியமாட்டாது மனமிரங்க, அந்த உத்தம பக்த சிகாமணியைத் தானும் விடமாட்டாமல் ஸ்ரீராமன் அவருடனே சித்திரகூடத்தில் வந்து வீற்றிருக்கின்றனனும்.

நலம்.—நல்லுலகம்; அன்றியே, கல்யாண குணங்களுமாம்.

[தோன்றிற்றது.] தோன்றிற்று - இறந்தகாலத் தொழிற் பெயர்; அது - முதல் வேற்றுமைச் சொல்லுருபு. (கக)

---

அடி வரவு:—அங்கண் வந்து செவ்வரி தொத்து வலி தனம் குரை அம் பொன் செறி அன்று தில்லை பூநிலா.

குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
பெருமாள் திருமொழி உரை
முற்றுப்பெற்றது.

சாற்றுக்கவி.

"மன்னு மணவாள மாமுனிவன் மாண்புரைக்கு
மன்னபுக ழண்ணங்க ராசிரியன் - சொன்ன
பெருமாள் திருமொழியின் பேருரையைப் பேணி
உருகாதா ரிவ்வுலகி லுண்டோ?"

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

இப் பெருமாள் திருமொழியில் கண்ணபிரானுடைய திவ்ய சரித்திரமும் இராமபிரானுடைய திவ்ய சரித்திரமும் பெரும்பான்மையாக அநுஸந்திக்கப்பட்டிருப்பதனால், ஸ்ரீபாகவதத்தையும் ஸ்ரீ ராமாயணத்தையும் தழுவி அவ்விரண்டவதாரங்களின் சரித்திரம் சுருக்கமாக எழுதப்படுகின்றது.

# ஸ்ரீக்ருஷ்ணாவதார வைபவ ஸங்க்ரஹம்.

திருமகள் கொழுநனான எம்பெருமான் தான் எல்லாவுயிர்கட்கும் அன்னையும் அத்தனுமாயிருந்து நல்லோர் தீயோர் என்ற வாசியின்றி எல்லோரையும் காப்பாற்ற முறையுடையனாயினும்,

“ஹரித்வா ஸ்வாநி ஸத்ருமோஹ்யா ஸிதவைத்யா கரோதிவை ।
ஸக்ருத்க்ஷாராக்நி ஸம்ஸ்காரணி ஸர்வபந்தாய யதா பிதா ॥”

[ஒருவன் தன் மகனது சரீரத்தில் இரத்தக்கட்டி யநுபவத்தாலுண்டாகும் பாதையைக் கண்டிரங்கி, அவனுக்கு அந்த வருத்தத்தைப் போக்க ரத்தக்கட்டியை அறுத்துத் தள்ளுகிறான்; அப்பொழுது அந்த மகன் முன்பு அநுபவித்த துன்பத்தினும் ஆயிரமடங்கு அதிகமாகத் துன்பத்தை அநுபவித்து இதுவரை யிருந்ததுபோலவே அக்கட்டியுடனிருப்பதே நலமென்று நினைத்து வருந்துகிறான். தகப்பன் அவ்வருத்தத்தைக்கண்டு பின்வாங்காமல் மேன்மேலும் சிகித்ஸை செய்வித்து ஆரோக்யப்படுத்தி அம்மகனுக்கு நீண்டகாலம் மகிழ்ச்சியை விளைவிக்கின்றான்: அவ்வாறாகவே, ஸ்ரீமந்நாராயணனும் தன் மக்களாகிய ஜீவர்கள் அஜ்ஞாந மடியாகப் புண்ய பாபங்களைச்செய்து மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து படுகிற அநர்த்தங்களைக் கண்டு இரங்கி அத்துன்பங்களை ஒழித்து அவர்களுக்கு மோக்ஷ மஹாநந்தத்தை உண்டாக்கக் கருதி, அவர்கள்செய்த கருமம் கழிகைக்காக அவர்களை நரகாநுபவம் முதலிய பெருந்துன்பங்களை அநுபவிப்பித்துப் பின்பு ஸுகப்படுத்துகிறான்].

என்று சொல்லுகிறபடியே, அநாதி பாபவாஸனையினால் தீய கருமங்களிலே தகணேறி ஸாதுஜனங்களை நலிந்து திரிகிற துஷ்டர்களைத் தான் நேரேவந்து சிக்ஷித்துத் தன் வடிவழகினாலும் உபதேசங்களினாலும் குணங்களினாலும் அவர்களது நெஞ்சைக் கவர்ந்து மேன்மேலும் அவர்களுக்குத் தீயவழிகளில் நெஞ்சு செல்லாவண்ணம் திருத்துகைக்காகவும், அக்காலத்திலுள்ள ஸஜ்ஜநங்களை ரக்ஷித்தருள்வதற்காகவும், உலகத்தில் தான் ஏற்படுத்தின தர்மம் சிலகாலங் கழிந்தவாறே மாறுபட்டதாகில் அதனை முன்போலவே நிலைநாட்டுதற்காகவும் இந்நில வுலகத்திலே யுகந்தோறும் வந்து அவதரிக்குமவனானமையால், த்வாபரயுகத்தில் க்ருஷ்ணனாய் அவதரித்தானென்பதை விவரிக்கிறோம்.

பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும். ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்பு மூட்டையைத் தாங்குவதுபோல் மிக வருத்தமாம். ஆதலால், த்வாபரயுகத்தில் இப்பூமியின்கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அஸுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையி னுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையை அடைந்து, அச்சபை நடுவில் வீற்றிருக்கும் நான்முகனைவணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்தவேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிதுகாலம் யோசித்து ‘இது நம்மாலாகாது; ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர் மூலமாக இக்காரியத்தை நிறை

வேற்றுவிக்கவேணும்' எனக்கருதி அந்தப்பூமியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமனைத் தொழுது துதித்தனர்.

பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தைகொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி, "ஓ தேவர்களே! உங்கள் கருத்தை அறிந்துகொண்டேன்; முற்காலத்தில் வருணனுடைய சாபத்தினால் கஶ்யபரும் அவரது மனைவியான அதிதியும் இப்பொழுது வஸுதேவ தேவகிகளாகப் பிறந்திருக்கின்றனர்; இப்பிறவியில் அவர்களுக்கு நான் பிள்ளையாகப் பிறக்கிறேனென்று முன் வரமளித்திருக்கிறேன்; அங்ஙனமே நான் அவர்களுடைய கர்ப்பத்தில் தோன்றி ஸாதுபரித்ராணமும் துர்ஜநவிநாஶமும் தர்ம ஸம்ஸ்தாபநமும் செய்யக்கடவேன்; நீங்கள் போகலாம்" என்று சோதிவாய்திறந்து அருளிச்செய்ய; அவர்கள் பரமாநந்தத்துடன் விடைபெற்றுத் தத்தம் ஸ்தானங்களை அடையலாயினர்.

அக்காலத்தில் மதுராநகரத்தில் யதுவம்ஶத்தாரில் உக்ரஸேநன் என்றொரு தார்மிகன் அரசனாயிருந்தான்; அவனது மகன் கம்ஸனென்பான். இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்து கொண்டு பெரியோர்கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன் பலத்தினால் தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காசனத்தினின்று தள்ளிவிட்டுத் தானே அரசாண்டு வருங்காலத்து;—கம்ஸன் தனது உடன்பிறந்தவளாகிய யுக்தவயது வாய்ந்த தேவகியை வஸுதேவர்க்கு விவாஹம் செய்வித்து அவ்விவாஹம் முடிந்தபின் அவளை வஸுதேவர் மாளிகையிற் கொண்டு விடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரைநடத்திக்கொண்டு வரும்போது, ஆகாயத்தில், 'அறிவுகேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ, அத் தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது' என்று ஒரு அசரீரிவாக்குப் பிறக்க, அதனைக் கேட்ட கம்ஸன் மிகவும் திடுக்கிட்டு, 'இனி நாம் தப்ப வழி யாது?' என்று யோசித்து, இவள் பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக் கொன்றுவிடுவோம்' என்று உறுதியிட்டுக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலைசெய்யப்புக, வஸுதேவர் அவனுக்குப் பல தருமங்களையும் காலகதியையும் பார்க்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஓரே பிடிவாதமாய் நிற்க, பின்பு வஸுதேவர் 'அப்பா! உனக்கு இவள்கையால் சாவு இல்லை; இவளுடைய பிள்ளை கையினாலல்லவோ சாவு நேரிடப்போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு என்று சொல்ல; கம்ஸன் அதை யுக்தமென்று கொண்டு இத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான்;

சிலநாள் கழிந்தபின் தேவகி கர்ப்பந்தரித்துப் பிள்ளை பெற்றாள். வஸுதேவர் அப்பொழுதே அப்பிள்ளையைக் கம்ஸனிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிட, அவன் அதைக் காலைப் பிடித்துக் கல்மேல் அறைந்து கொன்றுவிட்டான்; "மக்களறுவரைக் கல்லிடைமோத" என்றபடி இவ்வாறு ஆறுபிள்ளைகளைக் கொன்றான்.

(இனி ஏழாவது கர்ப்பத்தின் வரலாறு.)

எம்பெருமானால் நியமிக்கப்பட்ட யோகநித்திரை யெனப்படும் மாயை, நந்தகோபருடைய கோகுலத்திலிருந்த வஸுதேவபத்தினியான ரோஹிணியின் வயிற்றிலிருந்த வாயுரூபமான ஆறுமாதத்துக் கர்ப்பத்தைக் கலைத்துவிட்டு வஸுதேவருடைய மற்றொரு பத்தினியான தேவகியின் வயிற்றிலிருந்த ஆதிஶேஷாம்ஶமான கர்ப்பத்தைக் கொண்டுபோய் அந்த ரோஹிணியின் வயிற்றிற் சேர்த்திட, இங்ஙனம் வஸுதேவபத்தினிகளுள் தேவகியின் கர்ப்பத்தில் (ஏழாவது கருவாக) ஆறுமாஸமும், ரோஹிணியின் கர்ப்பத்தில் மற்றோர் ஆறுமாஸமுமிருந்து பலராமன் பிறந்தனன்.

பிறகு திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் [ஆவணிமாதம் க்ருஷ்ணாஷ்டமி கூடிய ரோஹிணீ நக்ஷத்திரத்தில் இரவு விருஷபலக்கினத்தில்] ஸ்ரீகிருஷ்ணனாய் அவதரிக்க, அப்போதே வஸுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்றுமுறிந்துவிழ, அக்குழந்தையைக் கம்ஸன் கொல்லக்கூடுமென்ற அச்சத்தினால் தாய்தந்தையர் அத்தெய்வக்குழவியின் அநுமதிபெற்று அந்

தச் சிசுவை அது பிறந்த அர்த்தராத்திரியிலேயே திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்க்கெல்லாம் தலைவரான நந்தகோபரது திருமாளிகையிலே ரஹஸ்யமாகக்கொண்டு சேர்த்துவிட்டு, அங்கு அப்பொழுது அவர் மனைவியான யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப் பிறந்திருந்ததொரு பெண்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து கண்ணனுடைய ஸ்தானத்தில் அமைத்திட, பிறகு அப்பெண் குழவி அழத் தொடங்கிற்று.

அவ்வழுகுரலைக் கேட்டுக் காவற்காரர்கள் விழித்துக்கொண்டு 'தேவகி பிரஸவித்தாள்' என்று கம்ஸனுக்கு அறிவிக்க, அவன் வந்து அந்தச் சிசுவைவாங்கிக் கத்தியினால் இருதுண்டமாக வெட்டுகைக்காக ஆகாசத்திலே எறிய, அப்பெண்குழவி ஆகாயத்திலேறித் தனது துர்க்கா ஸ்வரூபத்தை யெடுத்துக்கொண்டு நின்று கம்ஸனை நோக்கி 'அடா மூர்க்கனே! என்னை ஏன் வெட்டுகின்றாய்? உன்னைக் கொல்லப்பிறந்தவன் ஒளித்து வளர்கிறான்' என்று சொல்லிவிட்டு அந்தர்த்தாநமாய்விட்டது.

பிறகு கம்ஸன் மிகவும் வியாகுலப்பட்டு, தன்னைக் கொல்லுதற்காகத் திருவாய்ப்பாடியில் மறைந்து வளர்கின்ற கண்ணபிரானை எவ்வகையினாலேனும் முடித்துவிடவேண்டுமென நிச்சயித்துத் தன் பரிஜனங்களை நோக்கிப் பற்பல உருவுகொண்டு அங்குப்போய் அவனை முடித்திடுமாறு கட்டளையிட்டான். இது நிற்க;

கோகுலத்தில் நந்தகோபர் தனக்குப் பிள்ளை பிறந்ததாகக் கேள்விப்பட்டு மிக மகிழ்ந்து மஹாஸம்ப்ரமமாக மஹோத்ஸவங் கொண்டாடித் தயிர் நெய்யாடலாடிக் கோதாநங்கள்செய்து ப்ராஹ்மண சந்தர்ப்பணைகள் செய்வித்துக் கோகுலமெங்கு மலங்கரித்து, பேரிமுதலிய வாத்யங்களை முழங்குவிக்க இங்ஙனே திருவாய்ப்பாடியெங்கும் பரமாநந்தமயமாய் நிகழ்ந்தது.

## பூதனையின் முலையைச் சுவைத்து உயிருண்டது.

ஸ்ரீக்ருஷ்ண சிசுவை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுக் கஞ்சன் பல அசுரர்களை ஏவ அவர்களில் ஒருத்தியான பூதனை என்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த க்ருஷ்ணசிசுவை யெடுத்துத் தனது நஞ்சுதீற்றிய முலையைக்கொடுத்துக் கொல்லமுயல, பகவானாகிய குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தருளினன்.

## தாளைநிமிர்த்துச் சகடு முறித்தது.

நந்தகோப கிருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனாள். கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீக்ருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்லமுயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிறபாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதை பட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்தது.

## மருதமுறிய நடை கற்றது.

குழந்தைப் பருவமுள்ள கண்ணன் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற்கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமர [யமளார்ஜுந]த்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம் மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் * குபேர புத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர்.

[* இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒரு காலத்தில் பல அப்ஸரஸ் ஸ்திரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்துகொண்டிருக்கையில் நாரதமாமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கை

யர்அனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபான மயக்கத்தால் வஸ்திரமில்லாமலேயிருக்க, நாரதர்கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வேண்டிக்கொண்டதற்கு இரங்கி 'நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களையடையுஞ் சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னைய வடிவம்பெற்று மீள்வீர்' என்று சாபவிடைகூறிப்போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில், கம்சனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்துக்கிடந்தனர் என்று கொள்ளல் வேண்டும்; "ஒருங்கொத்த விணை மருதம் உன்னிய வந்தவரை" என்றும் "பொய்ம்மாய மருதான வசுரரை" என்றும் பெரியாழ்வார் அருளிச்செய்திருத்தலால்.]

## கண்ணன் வாயினில் வையமேழுங்கண்டது.

ஒருநாள் கண்ணன் வீதியில் விளையாடிக்கொண்டிருக்கையில் பலராமன் வந்து 'அம்மா! கிருஷ்ணன் மண்ணைத்தின்கிறான்' என்று சொல்லக்கேட்ட யசோதை ஓடிப்போய்க் கண்ணனை வாரியெடுத்துக்கொண்டு உள்ளே வந்து 'ஏன் மண்ணைத் தின்றாய்?' என்று வெருட்ட, அதற்குக் கண்ணன் 'அம்மா! நான் மண்ணைத் தின்னவில்லை; பலராமன் என்மேல் வீணாகக் கோட்சொல்லுகிறான், வேணுமாகில் என் வாயைப் பார்' என்று தன்வாயைத் திறந்துகாட்ட, யசோதை அவ்வாய் வழியாக அவனுடைய திருவயிற்றில் ஏழு குலபர்வதங்களையும் ஏழுகடல்களையும் ஏழுதீவுகளையுமுடைய இப்பூமி முழுவதையுங் கண்டு "இவன் ஆயர்புத்திரனல்லன், அருந்தெய்வம்" என்று நிர்ணயித்துப் பின்னையும் சிறிதுநேரத்தில் அந்த புத்திமாறித் தன்னுடைய பாலனாக எண்ணிக் கண்ணனை யெடுத்து முத்தமிட்டாள்.

இக்கதையைப் பெரியாழ்வார் அநுஸந்திக்கும்போது "கையுங் காலும் நிமிர்த்துக் கடாரநீர், பையவாட்டிப் பசுஞ் சிறுமஞ்சளால், ஐயநாவழித்தாளுக் கங்காந்திட, வையமேழுங் கண்டாள் பிள்ளைவாயுளே" என்று - குழந்தைப் பருவமாயிருக்கிற கண்ணனை யசோதைப்பிராட்டி நீராட்டும்போது முடிவில் மஞ்சள் தேய்வையைக்கொண்டு அக்குழந்தையின் நாக்கை வழிக்கப் போகையில், அக்குழந்தையின் திறந்தவாயிலே ஸமஸ்த லோகங்களையும் ஸாக்ஷாத்கரித்தாள் என் அநுஸந்தித்தனர். "என்னை நான் மண்ணுண்டேனாக, அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்து மனைவர்க்குங் காட்டிற்றிலையே" என்ற அப்பெரியாழ்வார் திருமொழியிலேயே முன் குறித்தவாறு கதையையும் யோஜித்துக் கொள்ளலாம். யசோதைப்பிராட்டி இப்படிக் கண்டது - ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுநனுக்கு ஞானக்கண்ணைக் கொடுத்துத் தனது விச்வரூபத்தைக் காட்டினாற்போல, யசோதைப்பிராட்டிக்குத் தன்னுடைய தெய்வத்தன்மையைக் காட்டவேணுமென்று கொண்ட ஸ்வதந்த்ரேச்சையினாலே அவ்யசோதைக்கு ஞானக்கண்ணைக் கொடுத்ததனாலாகியது. [கண்ணன் முலைப்பாலுண்ணும்போது கொட்டாவி விடுகிற வியாஜத்தினால் வாயைத்திறந்து யசோதைக்கு விச்வரூபங்காட்டினனென்பதும் புராணங்களிலுண்டு.]

இப்படி சிறிது நாள் கழிந்தபின் கிருஷ்ணன் * தன்னோராயிரம் பிள்ளைகளோடு சேர்ந்து கன்றுகளை மேய்க்கக் காட்டுக்குப்போய் "சீலைக்குதம்பை ஒருகாது ஒருகாது செந்நிற மேல்தோன்றிப்பூ, கோலப்பணைக் கச்சுங்கூறையுடையும் குளிர்முத்தின் கோடாலமும், காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன்வேடம்" "தழைகளுந் தொங்கலும் ததும்பியெங்கும் தண்ணுமை எக்கம் மத்தளி தாழ்பீலிக், குழல்களுங் கீதமுமாகியெங்குங் கோவிந்தன் வருகின்ற கூட்டம்" என்றபடி பல்வகை அலங்காரங்களுடன் வேணுநாதம் செய்து பசுக்களையுங் கன்றுகளையுங் களிக்கச்செய்து ஆய்ச்சிமார்களின் கண்ணையும் நெஞ்சையுங் கவர்ந்துகொண்டு தாய்தந்தையர்க்கு மிக்க அன்பனாயிருந்தான்.

## பிலம்பாசுரனைப் பிணமாக்கியது.

ப்ரலம்பனென்னும் பெயரையுடைய ஒரு கொடிய அஸுரன் ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களையும் மற்றுமுள்ள கோவலர் யாவரையும் வதைசெய்து தான் வெற்றிபெறக் கருதித் தனது மாயையினால் ஒரு கோபால குமாரனைப்போல் வேஷம்பூண்டு, அக்கோபாலரனைவர்க்கும் தன்னிடத்தில்

ஸஜாதீயபுத்தி பிறக்கும்படி அவர்களை மயக்கி, நெஞ்சிற் கபடத்துடன் அவர்களுடன் கலந்து நேசித்திருந்தான். ஸர்வஜ்ஞனாகிய கண்ணபிரான் இக்கபடச்செய்தியை நன்குணர்ந்து அவனைச் சிக்ஷித்தொழிப்பதற்குத் தக்க சூழ்ச்சிகளைச் செய்துகொண்டிருந்தும், அவ்வஸுரனுக்கு 'இவன் நம்மிடத்தில் மிக்க அன்புகொண்டே யிருக்கிறான்' என்று தோற்றும்படி நடனஞ்செய்து, ஒரு நாள் கோபால குமாரர்களனைவரையும் விளித்து 'நாமனைவரும் ஒன்றுசேர்ந்து இரவி மறையுமளவும், சில சிலைகளை ஓரிடத்தில் ஸ்தாபித்துக் குறிவைத்துப் பந்துகளடித்து அவ்விளையாட்டினால் வருகிற ஜயாபஜயங்களையடைந்து அவற்றுக்குத் தக்க பந்தியங்களையும் அநுபவிப்போம் வாருங்கள்' என்றழைக்க, அனைவரும் அதற்கு உடன்பட்டுவர, பின்பு கண்ணபிரான் தான் ஒரு பேருத்தியும், ஸ்ரீதாமனென்னும் கோபாலன் தனக்கு எதிர்ப்பேருத்தியும், தன்னுடைய பக்ஷத்தில் மாயா கோபாலப்ரலம்பன் ஒரு பேருத்தியும், அவனுக்கெதிர் பலராமன் ஒரு பேருத்தியுமாக ஏற்படுத்தி, மற்ற கோபாலர்களைச் சிறிய உத்திகளான சேவகர்களாக வகுத்து அவர்கள் யாவரையுங் கணக்கு செய்து இரண்டு பக்ஷத்திற்கும் ஸமமாகப் பாகித்து இரண்டு இனமாகப் பிரிந்தவர்களுடன் ஸ்ரீப்ருந்தாவனத்தின் மஹா விசாலமார்க்கங்களிற்சென்று மஹா விருக்ஷங்களையும் பெரிய சிலைகளையும் குறிகளாக்கிக் கைகளிற் பந்துகளேந்திப் பாண்டீரக மென்கிற ஆலமரத்தின் நிழலிற் சேர்ந்து "இவ் வாட்டத்தில் தோற்றவர்கள் ஜயித்தவர்களைச் சுமந்துகொண்டு, பசுக்கூட்டங்கள் பிரிந்து அப்புறம் சிதறிப்போகாமல் அம்மந்தைகளை ப்ரதக்ஷிணமாகவந்து மடக்கவேண்டியது; மஹாவ்ருக்ஷ சிலாலக்ஷ்யங்களைத் தொட்டு அத்தானத்தில்வந்து இறங்கவேண்டியது" என்று எல்லாரும் சபதமேற்படுத்திக்கொண்டு விளையாடிக்கொண்டிருக்கையில், ஒருகால் கண்ணன்வகுப்பில் தோல்வி நேரிட, அப்போது ஸ்ரீதாமனென்பவனைக் கண்ணபிரானும், பலராமனைப் பிரலம்பனும் வாஹநமாகிச் சுமந்துகொண்டு ஸமயபந்தத்தின்படி லக்ஷ்ய ப்ரதக்ஷிணஞ்செய்யப் போனார்கள்; பலராமனைச் சுமந்துகொண்டு செல்லுகிற பிரலம்பன்மாத்திரம் தீயகருத்தினனாய் லக்ஷ்ய ஸ்தானத்தைத் தாண்டிப்போக, பலராமன் தனது சக்தி விசேஷத்தினால் அவனுக்குச் சுமக்க முடியாத பாரமாகிவிட, அவன் மிகவும் வருந்தி நடக்கமாட்டாதவனாய் அந்தக் கோபால வேஷத்தைவிட்டு நிஜாகாரமாகிய கொடிய ராக்ஷஸ ரூபத்தைப்பூண்டு ஊழிப் பெருங்காற்றினுங் கடியனாக விரைந்து ஆகாயமார்க்கத்திற் செல்ல, பலராமன் அவனது கோரமான வடிவைக்கண்டு இவன் அஸுரனேயென்று நிச்சயித்துத் தனது ஸங்கர்ஷணாம்ச பலத்தினால் முஷ்டிபிடித்து அவனது சிரோபாகத்திற்குச் சரியாகப்பாய்ந்து, கைமுட்டியினால் அவன் சிரம் பிளந்து சிந்நபிந்நமாய் அழியும்படி ஓர் அறை அறைந்து ஒரே குட்டாகக் குட்டினார். உடனே அவ்வஸுரன் தலைபிளந்து சிந்நபிந்நமாகச் சிதைய, அவனது சரீரமெங்கும் செந்நீராறாய்ப்பெருக முகத்தினின்றும் ரக்தமாம்ஸங்கள் ஒழுக, கதறிக்கொண்டு பூமியில் விழுந்து உயிரொழிந்தனன். [இங்ஙனம் பலராமனாற் செய்யப்பட்ட இவ்வஸுரவதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாகவும் சில ஆழ்வார்கள் அநுஸந்தித்துப் போருவர்; அது ஒற்றுமைநயம்பற்றியாம்.]

## காளியனுச்சியில் நட்டம் பாய்ந்தது.

இப்படி யிருக்கையில் ஒருநாள் க்ருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத் தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற் சென்றால், யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளிய னென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கிவிடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன; அதைக் கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங் கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின் மேலேறி அம்மடுவிற்குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கல்யபிக்ஷை இட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன்.

## ததிபாண்டனுக்கு முத்தியளித்தல்.

ஒருநாள் கண்ணன் யசோதை முலை கொடாததற்காக வெகுண்டு தயிர்த்தாழிகளை உடைத்து உருட்டிவிட்டு, அதுகண்டு தன்னை அடிக்கக் கோலெடுத்துவந்த அவளுக்கு அகப்படாதபடி ததிபாண்டனென்பவனது மனையிலே ஓடிமறைய, அது கண்ட அவன் கண்ணனது திருவடித்தாமரைகளைப் பிடித்துக்கொண்டு 'எனக்கு முத்தி அளிக்கவேண்டும்' என வேண்ட, கண்ணன் 'எனது தாய் என்னை அடிக்கவருகிறாள், என்காலைவிடு' என்று சொல்ல, அவன் 'நீ எனக்கும் எனக்குவேண்டிய இருபத்தெட்டு மனையிலுள்ளோர்க்கும் நான் விட்டுப்பிரிய முடியாத எனது தயிர்த்தாழிக்கும் பரமபதம் கொடாயானால் யான் உன்காலை விடாமல் உன்னை யசோதை கையிற் காட்டிக்கொடுப்பேன்' என்றுகூற, ஸ்ரீகிருஷ்ணன் உடனே அவன் வேண்டுகோளின் படியே முத்தியருளிச் சென்றனன்.

## தேநுகாஸுரனைத் தொலைத்தருளியது.

பின்பொருநாள் கண்ணபிரான், பலராமனோடும் ஆயர்சிறுவர்களோடும் ஆநிரைமேய்த்துக் கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாஸனைவீசிக்கொண்டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து, அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேநுகாஸுரன் கோபமூண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின்மேல் எறிந்து அழித்து, பிறகு எல்லாருமாய் அங்குள்ள இனிய கனிகளை அருந்திப் பொழுதுபோனவாறே வீடுபோய்ச் சேர்ந்தனர்.

## அரிஷ்டாஸுரனை அழித்தருளியது.

பின்பொருநாள் கம்ஸனுலேவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனது திருவயிற்றின்மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவா, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற் பிடித்து அசையவொட்டாமற் செய்து தன்காலினால் அவன் வயிற்றில் ஓரிடி இடித்து அவன் கழுத்தைப்பிடித்துக் கசக்கி அவனுடைய கொம்புகளில் ஒன்றைப்பறித்து அதனாலேயே அவனை அடித்துக்கொன்றனன்.

## கேசியின் வாயைக் கீண்டெறிந்தது.

பின்பொருநாள் கம்ஸனுலேவப்பட்ட கேசி என்பானோர் அஸுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் தாத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவா, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன்வாயிற்கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப்பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன்.

## கொக்கின்வாயைக் கிழித்தெறிந்தது.

மற்றொருநாள் பகன் என்னும் ஓரஸுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்வதாக நெருங்கிவா, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக்கிழித்து அதனை அழித்தனன்.

## அகாஸுர ஸம்ஹாரம்.

மற்றொருநாள் க்ருஷ்ணன் கன்றுகளை மேய்த்துப் பொழுதுபோனவாறே அக்கன்றுகளை ஓட்டிக்கொண்டு இடைப்பிள்ளைகளுடன் வீட்டுக்கு வந்துகொண்டிருக்கையில் நடுவழியில் அகாஸுரனென்பவன் மலைப்பாம்பினுருவமுடையவனாய்த் தன்வாயைத் திறந்துகொண்டு படுத்திருந்தான். இடைப்பிள்ளைகளும் கன்றுகளும் 'இது வழி' என்று மயங்கி அதன் வாயினுள் நுழைந்தனர். கிருஷ்ணன் அதைக்கண்டு "ஓ! ஓ! அநர்த்தம் விளைந்துவிட்டது, இனி நாம் வீட்டிற்குத்

தனியே போனேனாகில் இப்பிள்ளைகளின் தாய்தந்தையர்வந்து ‘எங்கள் பிள்ளைகள் எங்கே? உன்னைநம்பி அனுப்பினோமே, இன்னும் வரவில்லையே’ என்றால் நான் என்னபதில் சொல்லுவேன்? | பசுக்களெல்லாம் கன்றுகளை யொழியத் தனியேபோனால் என்னைக்கண்டு தீநஸ்வரமாய்க் கத்துமே! அக்குரல் என்னால் கேட்கமுடியாதே! ஆகையால் இவர்கள் இப்பாம்பின் ஜாடராக்நியில் விழுந்து முடிவதற்குமுன் நானும் இப்பாம்பின் வாயினுள் புக்கு இதைக் கொன்றுவிட்டு இவர்களைப் பிழைப்பிக்கவேணும்” என்று தீர்மானித்து, உடனே தானும் அப்பாம்பின்வாயிற் புகுந்தார். இவர் புகுந்தவுடனே பாம்பு வாயை மூடத்தொடங்கிற்று. அப்பொழுது கண்ணபிரான் அதன் வயிற்றிற் சென்று தனது சரீரத்தைப் பெருக்கவே, அவ்வளவு பெரிய சரீரம் அப்பாம்பின்வயிறு பிடியாமல் பாம்பு வெடித்து இறந்தது. பின்பு ஸ்ரீகிருஷ்ணன் கோபால பாலர்களுடன் கன்றுகளையு மோட்டிக்கொண்டு மகிழ்ந்து சென்றனன்.

## கன்றினால் விளாவெறிந்தது.

கம்ஸனாலேவப்பட்ட அசுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன் கீழ்வரும்பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்துநிற்க, அதனையறிந்து கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு வந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தனர். (இது முள்ளைக்கொண்டே முள்ளைக் களைவது போலாம்.)

## குருந்தமரமோசித்தது.

மற்றொருநாள் வேறொரு அஸுரன், கண்ணபிரான் மலர்கொய்தற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரத்திற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து அவனை வீழ்த்திக்கொல்லக் கருதியபோது, மாயவனான கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன் வலிமைகொண்டு முறித்து அழித்தனன்.

## கோவர்த்தனத்தைக் குடையா வெடுத்தது.

கணணபிரானுடைய இப்படிப்பட்ட அதிமாநுஷசீல வ்ருத்த வேஷங்களைக்கண்டு ஆயர்களனைவரும் ‘இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் ஒழுகவேண்டும்’ என்று அறுதியிட்டனர். இங்ஙனமிருக்கையில் சரத்ருது வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக்கண்டு கிருஷ்ணன் ‘ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதினால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜைசெய்வது தகுதி; இக்கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்று மில்லை. ஆகையால் நீங்கள் இப்பூசனையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்’ என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதா ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல்மழையை எழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தநமலையை யெடுத்துக் குடையாகப்பிடித்து மழையைத் தடுத்து எல்லா வுயிர்களையும் காத்தருளினன்.

## க்ருஷ்ண லீலையைப் பிரமன் கண்டு வியந்தது.

கண்ணன் ஆயர் சிறுவர்களுடன் பசுவின் கன்றுகளை மேய்த்துவரும் நாட்களில் ஒருநாள், ப்ரஹ்மா எம்பெருமானது திருவிளையாட்டைக் காணவேணுமென்று கருதிக் கன்றுகளையும் சிறார்களையும் தன் மாயையினால் வானத்தே மறைத்துவைக்க, அச்சுதன் அஃதுணர்ந்து, வண்ணமும்

வனப்பும் தோற்றமும் வடிவும் தொழிலும் குணமும் பூணும் துகிலும் தாரும் குழலும் சிறிதும் வேற்றுமையில்லாமல் தானே சிறுருங் கன்றுமாகித் தத்தம் மனைகட்குப் போய்வந்துகொண்டிருக்க, இங்ஙனமே ஓராண்டு செல்ல, நான்முகன் அதுகண்டு நாணமுற்றுச் சிறார்களையும் கன்றுகளையும் கொணர்ந்து ஸமர்ப்பித்துக் கண்ணனை ப்ரதக்ஷிணஞ்செய்து வணங்கிப் பலவாறு தான் செய்த பிழையைப் பொறுத்தருளும்படி வேண்டிக்கொண்டனன். [சிறுர் - சிறுவர்.]

### கண்ணன் காட்டுத்தீயை விழுங்கியது.

ஒருநாள் ப்ருந்தாவனத்தில் முஞ்சாரணியத்தில் ப்ரவேசித்தபோது தைவிகமாகத் தோன்றித் தங்களைச் சூழ்ந்த பெருங்காட்டுத் தீயில் அகப்பட்டுக்கொண்டு கோபாலர்களும் கோக்களும் முறையிட்டுப் பலவாறு துதிக்கக்கேட்டு, ஸ்ரீக்ருஷ்ணன் 'நீங்கள் யாவரும் பயப்படாமல் உங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள்' என்று நியமித்தருளி, தனது விராட்ஸ்வரூபத்தை வஹித்து அவ்வக்நியை ஜ்வாலையோடும் பானஞ்செய்து அவ்வாயர்களையும் ஆநிரையையும் பாண்டீர மென்னப்பட்ட ஆலமரத்தினடியில் தனது மாயையினுற் கொண்டு வந்து சேர்த்துக் காத்தருளினன்.

### திருக்குரவை கோத்தது.

மற்றொருகால், கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர் மாதருடைய ஆவலைத் தீர்க்கக்கருதி ஶரத்காலத்தில் ஓரிரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதம் செய்ய, அதனைக்கேட்ட இடைப்பெண்களெல்லாரும் மாமியார் மாமனுர் முதலியோரையும் மதியாமல் காவல் கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ண கோஷ்டியில் அந்வயிக்க, அன்றிரவு அவர்களுடன் பரம போக்யமாகக் குரவைக் கூத்தாடினன். [குரவையாவது - ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனைப் பலவடிவெடுத்து நின்று மண்டலித்தாடும் ராஸக்ரீடை] அப்பொழுது கோபிமார்கள் பரமாநந்தத்தின் எல்லையிலே நிற்பதைக்கண்ட கண்ணபிரான் 'இது வெள்ளக்கேடாகவொண்ணுது; இந்த ரஸத்தை மாற்றவேணும்' என நினைத்து அவ்வாயர்மங்கையரைவிட்டுப் பிரிந்துபோய் ஒளிக்க, கோபிகள் கண்ணனைத் தேடிக்காணுமல் காதல் மீதூர்ந்து அப்பிரானைக் காணுமளவும் தாங்கள் உயிர்தரித்திருக்கைக்காக, ஒருத்தி க்ருஷ்ணனுகவும் மற்றொருத்தி காளியனுகவும் வேறொருத்தி வேறொன்றுகவும் பாவனைகள்செய்துகொண்டு க்ருஷ்ணனுடைய செயல்களையெல்லாம் அநுகரித்துத்தரித்திருக்கையில்,

தாஸாமாவிரபூச்சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ: |
பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத: ||

என்றபடி - புன்முறுவல்செய்து பீதகவாடை யுடுத்துப் பரமவிலக்ஷணமான திருக்கோலத்துடனே எழுந்தருளி அவர்களுக்கு ஸேவைஸாதித்து அப்பொழுதே அவர்களது தாபமெல்லாம் ஆறும்படி பலவித லீலைகளைச்செய்து ஆநந்தப்படுத்தினன்.

### ஆய்ச்சியர்க்குத் துகில் தந்தது.

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்த்ரீகள் கண்ணபிரானிடங்கொண்ட வேட்கை மிகுதியினுல் அவன் தம்மிடம்நா தல்விஞ்சுமாறு நோன்புநோற்று அந்நோன்பின் முடிவில் யமுநாநதியிலே நீராட, அப்பொழுது அவர்கள் இடைச்சாதி யொழுக்கத்தின்படி கரையில் அவிழ்த்து வைத்துவிட்டுப் போன ஆடைகளையெல்லாம் கண்ணன் ரஹஸ்யமாகவந்து எடுத்துக்கொண்டு அருகிலிருந்ததொரு மரத்தின்மேலேறியிருந்து சிறிதுபோது அவர்களை அலைக்கழித்துப் பின்பு அவர்கள் கைகூப்பி வணங்கி மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனுல் அவர்களுக்கு அத்துகில்களை அளித்தருளினன்.

### ஏழ்விடை செற்றுப் பின்னை தோள் புணர்ந்தது.

கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனுல் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்து

கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டுசென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனன்.

## ஆயரெல்லாம் பரமபதத்திற் சென்று மீண்டது.

ஒருநாள் யமுனையில் தீர்த்தமாடுகின்ற ஸமயத்தில் ஓரஸுரனால் வருணலோகத்திற் கொண்டுபோய் ஒளிக்கப்பட்ட நந்தகோபரை ஸ்ரீகிருஷ்ணன் அங்கு எழுந்தருளி மீட்டுவந்தபொழுது, தன்னைப் பூஜித்து உத்தமகதியை அடையவிரும்பிய ஸகல கோபாலர்கட்கும் ஞானக்கண்ணைக் கொடுத்து, தனது திவ்ய தேஜோமயமான ஸ்வரூபத்தையும், பரமபதம் முதலிய ஸர்வ புண்ய லோகங்களையும் காணும்படி அருளினன்.

இப்படி கிருஷ்ணபகவானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்கள் நாடோறும் கொழுந்துவிட்டோங்கி வளராநிற்க, நாரதமுனிவர் கம்ஸனிடஞ் சென்று "திருவாய்ப்பாடியில் பலராமனுடன்கூடி மாயாமாநுஷ வேஷதாரியாய் லீலாரஸமநுபவிக்கிற பராத்பரனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே உன்னைக் கொல்லப்போகிறார்" என்று சொல்லிப்போக, கம்ஸன் முன்னைவிட அதிகமாகத் திகிலடைந்து கிருஷ்ணனை எவ்விதத்திலாவது கொன்றே தீரவேண்டுமென்று நிச்சயித்து, **அக்ரூர்** என்னும் தனது ஏவலாளரை அழைத்து "நான் தநுர்யாகம் செய்யப்போகிறேன், அதற்காக நீர்சென்று கிருஷ்ணனையும் பலராமனையும் அழைத்துவாரும்" என்று கட்டளையிட்டனுப்பிவிட்டு, மற்றுள்ள பரிஜநங்களை யழைத்து "கிருஷ்ணன் வரப்போகிறான்; அவன் வரும்வழியில் அவனைக் கொல்லுமாறு நமது குவலயாபீட மதகளிற்றை மதமூட்டி நிறுத்துதல், சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லர்களைப் போர்க்கு ஸித்தப்படுத்திவைத்தல் முதலிய காரியங்களைக் கருத்துடன் நிறைவேற்றுங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே செய்துவைத்தனர்.

## கம்ஸராஜகவதம்.

அக்ரூரர் மதுரையினின்றும் புறப்பட்டு 'ஹா ஹா! இன்று நமக்கு என்னபாக்கியம் வாய்த்தது! இன்றே நமக்கு ஸுதிநம்! கண்ணபிரானைக் கண்ணாரக்கண்டு களிக்கும்நாள் இன்று வாய்த்ததன்றோ!' என்று ஆநந்தம் பூரிக்க அநுஸந்தித்துக்கொண்டு சென்று கண்ணபிரானது கழற்கமலங்களில் வீழ்ந்து வணங்கி விஷயத்தை விஜ்ஞாபித்தார். அப்போதே கண்ணபிரானும் பலராமனும் புறப்பட்டு அக்ரூருடைய தேரில் ஏறிக்கொண்டு மதுராநகரத்தில் ப்ரவேசித்தார்கள். இவர்களது வரவை அறிவிக்கைக்காக அக்ரூரர் முன்னோடிக் கஞ்சனிடம் சென்றார். கிருஷ்ணன், வழியில் கம்ஸனுக்குத் துணி சலவைசெய்து எடுத்துக்கொண்டு போகிற ஒரு வண்ணானைக்கண்டு 'எங்களுக்கு இரண்டு வஸ்திரம் தா' என்று கேட்க அவன் கொடாமையால் அவனைக்கொன்றுவிட்டுத் தங்களுக்கு உரிய வஸ்திரங்களை எடுத்து அணிந்து சென்றனர்.

## சாந்து பெற்றுக் கூன் நிமிர்த்தது.

சிறிது தூரம் சென்றபின் ராஜவீதியில் சந்தனக்கிண்ணத்தைக் கையிலேந்தி வருகிற மங்கைப்பருவமுடைய ஒரு கூனியைக்கண்டு 'நங்காய்! யாருக்கு நீ இந்தப் பூச்சுக்கொண்டு போகிறாய்?' என்று விலாஸத்தோடு கேட்டருள, அக்கக் கூனி இவ்வாறு காதலுடையவன்போலக் கண்ணன் அருளிச்செய்தது கேட்டு அஜனது திருக்கண்களினாலே மனமிழுக்கப்பட்டவளாய் "அழகனே! நான் **நைகவக்கிரை** யென்பவளென்றும் கம்ஸனாலே சந்தநாதிப் பூச்சுக்கள் ஸித்தஞ்செய்யும் வேலையில் வைக்கப்பட்டவளென்றும் நீ அறியாயோ?" என்ன; கண்ணன் 'எங்கள் திருமேனிக்கு ஏற்ற வெகு சேர்த்தியான இந்தப்பூச்சை எங்கட்குக் கொடுக்கவேண்டும்' என்று சொன்னவுடனே, அவள் 'அப்படியே திருவுள்ளம்பற்றுங்கள்' என்று மிக்க அன்போடு ஸமர்ப்பிக்க, அப்பூச்சைத் திருமேனியில் அணிந்து ஸ்ரீகிருஷ்ணன் இவளிடத்து மிகவும் ப்ரஸந்நனாய், நடுவிரலும் அதன் முன்விரலுங்கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கட்டை

யைப் பிடித்துத் தன்திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கி இழுத்துத் தூக்கிக் கோணல் நிமிர்த்து அவளை மகளிரிற் சிறந்த உருவினளாக்கியருளினன்.

## மாலை பெற்று மாலாகாரரை அநுக்ரஹித்தல்.

பின்பு சிறிது தூரம்சென்று பெருந்தெருவைவிட்டு ஒரு சிறுவழியி லெழுந்தருளி அங்குக் கம்ஸனுக்கு மாலைகட்டிக்கொடுக்கிற மாலாகாரருடைய க்ருஹத்தை அடைந்து அவரைநோக்கி "எங்கள் முடிக்குத்தக்க பூமாலை தாரும்." என்ன, அம்மாலாகாரரும் இவர்களுடைய ரூப குணங்களைக்கண்டு இவர்கள் பரமபுருஷர்களென்றறிந்து மிகவும் உகந்து, 'த்ரிலோகநாதராகிய இவர்கள் தாங்கள் போகிற பெருவழியைவிட்டுப் பரமதயாளுக்களாய்க்கொண்டு இக்குறுந்தெருவே போந்து என் அகம் தேடிவந்து என்னை அநுக்ரஹித்தருளினரே! இடக்கை வலக்கை தெரியாத மூடனாய் போக்யவஸ்துவாகிய இப்பூவை அநுபவியாமல் விற்று ஜீவிக்குமவனாய்க் காலங்கழித்துவந்த நான் இப்போது இவர்களுடைய தர்சநத்தினால் மஹா பாக்யவானாய்விட்டேன்; இனி எனக்காரும் நிகரில்லை; இவர்களுக்கு இம்மாலையை ஸமர்ப்பித்துக் கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம் பெறக்கடவேன்' என்று பூமாலையைப் பரமாதரத்துடன் ஸமர்ப்பிக்க அவர்கள் அம்மாலையை வாங்கி அலங்கரித்துக்கொண்டு பெருந்தெருவே திரும்பிவந்து சென்றனர்.

## குவலயாபீட பஞ்ஜநம், மல்லவதம், கம்ஸவதம்

பின்பு கம்ஸனுடைய படைச்சாலையை விசாரித்துக்கொண்டு அங்கே சென்று அவனது வில்லை யெடுத்து முறித்தெறிந்து கம்ஸனது அரண்மனையை நோக்கிச் செல்லுகையில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை கோபித்துவர, அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அவற்றால் அடித்து அவ்யானையை உயிர் தொலைத்துவிட்டு உள்ளே செல்லுகையில், அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்சனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெரு மல்லர்கள் சிலர்வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டுப் பிறகு மஞ்சத்தின்மீது வீற்றிருந்த கம்ஸன்மேல் வேகமாக எழும்பி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான்விழுந்து அவனைக் கொன்றிட்டனன் கண்ணபிரான்.

## உக்ரஸேந பட்டாபிஷேகம்.

இங்ஙனே கம்ஸவதமானபின்பு, மகனிழந்தவனும் தன் மாதாமஹனுமாகிய உக்ரஸேன மஹாராஜனைக் கண்ணபிரான் தளையினின்றும் விடுவித்து வடமதுரையிற் பட்டாபிஷேகஞ் செய்தவுடனே வாயுவை நினைக்க அவனும் உடனே ஸ்வாமி ஸந்நிதிக்குவந்து நிற்க அவனை நோக்கி 'ஓ வாயுவே! ஸுதர்மை என்கிற தேவஸபையானது நம்முடைய உக்ரஸேநமஹாராஜனுக்கே ஏற்றது; அதில்யதுவம்ஸத்தார் வீற்றிருக்கத் தகுந்திருக்கின்றது; ஆதலால் ஒப்பற்ற அந்த ஸபையை மஹாராஜாவுக்கு அனுப்பிவிடுமாறு என் கட்டளையை இந்திரனுக்குத் தெரிவித்துச் சபையைக் கொண்டுவா' என்று நியமித்தவுடனே, அந்த நியமனத்தை வாயுபகவான் சிரமேற்கொண்டு சென்று இந்திரனுக்குத் தெரிவிக்க, அவனும் அச்சபையை வாயுவின் கையிற் கொடுத்தனுப்பிவிட, உடனே வாயு அதைக்கொண்டுவந்து ஸ்வாமி ஸந்நிதியில் ஸமர்ப்பிக்க, அதனை ஸ்வாமி உக்ரஸேனனுக்கு ப்ரஸாதித்தருள அச்சபையிலே யாதவர் யாவரும் வீற்றிருந்தார்கள்.

## ஸாந்தீபினிபுத்திரனை மீட்டுக் கொடுத்தது.

பின்பு சிலநாள் கழிந்தபின் பலராம க்ருஷ்ணர்களிருவரும் வேதாத்யயநஞ் செய்யவிரும்பி அவந்தீ நகரத்திற்குச் சென்று அங்கிருந்த ஸாந்தீபிநி என்னும் ப்ராஹ்மணனைத் தமர் பக்கல் ஸகல

சாஸ்திரங்களையும் அறுபத்திநாலு நாளைக்குள் அதிகரித்து விடைபெறுங் காலத்திலே குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கத் தேடுமளவில், அவ்வாசாரியரும் கண்ணபிரானுடைய அதிமாநுஷ சேஷ்டித சக்தியை அறிந்தவராகையாலே 'பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு ப்ரபாஸதீர்த்த கட்டத்திற் கடலில் மூழ்கி இறந்துபோன என்புத்திரனைக் கொண்டுவந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க, கண்ணன் 'அப்படியே' என்று, அப்புத்திரனைக் கொண்டுபோன, சங்கின் ரூபந்தரித்து ஸமுத்ரஜலத்தில் வாஸஞ்செய்கின்ற பஞ்சஜநன் என்கிற அஸுரனைக்கொன்று, யமபட்டணத்துக்கு எழுந்தருளி அங்கு யாதனையிற்கிடந்த உக்குமாரனைப் பூர்வதேஹத்தில் ஒன்றும் விசேஷமறக் கொண்டுவந்து கொடுத்தருளி ராமகிருஷ்ணரிருவரும் மதுராநகரம் போய்ச் சேர்ந்தனர்.

## த்வாரகை ஏற்படுத்தியது.

## காலயவநன் முடிந்துபோதல்.

பின்பு, **காலயவநன்** என்பவன் செருக்கித் திரிந்து கொண்டிருக்கையில் ஒருநாள் நாரதரைப்பார்த்து "இவ்வுலகினில் சூரானவர் யாராவது உண்டா?" என வினவினன்; 'மதுரையில் யாதவர்கள் இருக்கிறார்கள், அவர்கள் மிக்க பராக்ரமசாலிகள்' என்று நாரதர் சொன்னார். அக்காலயவநன் அதைக்கேட்டவுடனே அங்கிருந்து புறப்பட்டு மதுரைக்கு வந்து யாதவர்களுடன் போர்செய்யத்தொடங்கினன். அப்பொழுது கண்ணபிரான் இதையறிந்து மேற்கடலுக்குச் சென்று அங்கு ஸமுத்ரராஜனை யாசித்துப் பன்னிரண்டு யோஜனை விஸ்தீர்ணமுள்ள இடத்தை வாங்கி அங்கு **த்வாரகை** என்றொரு பட்டணம் அமைத்து மதுரையிலுள்ள யாதவர்களை அங்கு அழைத்துக் கொண்டுபோய் இக்காலயவநனுடைய பயத்தைத் தவிர்த்துவிட்டுப் பிறகு தான் மதுரைக்கு வந்து கையிலாயுதமொன்று மின்றியே வெளியே புறப்பட்டவளவில் அக்காலயவநன் பின்தொடர்ந்து போர்புரியவந்தான். அவனைக்கண்டு கிருஷ்ணன் சரசரவென்று போய் ஒரு மலையின் முழஞ்சில் நுழைந்தார். காலயவநனும் கூடவே நுழைந்து, அங்கு முன் தேவாஸுர யுத்தத்தில் தேவர்களுக்குத் துணையாயிருந்து போர்புரிந்து அஸுரர்களைக்கொன்று வெற்றி பெற்று அந்தச்ரமம் ஆறுகைக்காக நெடுநாள் உறங்கவேணுமென்றும், அப்போது எழுப்புகிறவன் தன்பார்வையினால் உடனே எரிந்துபோகக் கடவனென்றும், உடனே பகவானை ஸேவிக்கவேணுமென்றும், தேவர்களிடம் வரம் பெற்றுவந்து படுத்து அயர்ந்து உறங்குகிற **முசுகுந்தரைக்கண்டு** "இவன் க்ருஷ்ணன், நம்முடன் சண்டை செய்யமாட்டாமல் ஓடிவந்து உறங்குவான் போல் கள்ளவேடம் போடுகிறான்" என்று நினைத்து அந்த முசுகுந்தரைக் காலால் வலிய உதைத்தான். அவர் திடுக்கிட்டெழுந்து காலயவநனைப் பார்க்க, அப்பார்வையினால் அவன் எரிந்து செத்துப்போனான். பின்பு முசுகுந்தர் கண்ணபிரானை ஸேவித்து ஸ்தோத்ரஞ்செய்து க்ருதார்த்தராயினர்.

## ருக்மிணி பரிணயம்.

விதர்ப்பதேசத்தில் குண்டின மென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு ருக்மி என்கிற பிள்ளையும் **ருக்மிணி** யென்கிற பெண்ணுமிருந்தனர். அந்த ருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரம். அவளுக்கு யுக்தவயது வந்தவுடன் கிருஷ்ணன் சென்று இப்பெண்ணை எனக்கு விவாஹஞ் செய்து கொடுக்கவேணுமென்று கேட்க, ருக்மி என்பவன் அவளைச் சேதிதேசத்தரசனான சிசுபாலனுக்குக் கொடுக்க விரும்பியவனாதலால் கிருஷ்ணனுடைய விருப்பத்திற்கு உடன்படாதொழிந்தான். சிலநாள் கழிந்தபின் அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்காக ஸ்வயம்வரம் கோடித்து ஸகலதேசத்தரசர்களையும் ருக்மி வரவழைத்தான். அவர்கள் வந்து சேர்ந்தவுடனே க்ருஷ்ணனும் பலராமன் முதலியவர்களைக் கூட்டிக்கொண்டு அப்பட்டணத்துக்குப் போய்க் கல்யாணத்துக்கு முதல்நாள் அந்த ருக்மிணியை மாயமாய் அபஹரித்துக்கொண்டு வந்துவிட்டான்; பின்பு அங்குள்ள **தந்தவக்த்ரன்** முதலிய பல அரசர்கள் போர் செய்ய எதிர்த்துவர அவர்களைப் பலராமனும் கண்ணபிரானும் முதுகு காட்டி ஓடும்படி செய்துவிட்டனர். பிறகு ருக்மிணிப்பிராட்டியின் தமையனான ருக்மியானவன் 'இப்படி செய்வதாவது என்?' என்று எதிர்பொருது மீட்பதாக நினைத்து வந்து கண்ணனைத்தகைய, அப்போது

ஸ்ரீக்ருஷ்ணன் 'இவனைக்கொன்றால் ருக்மிணி மனம் வருந்துவாள்' என்று அவனைப் பிடித்துத் தனது தேர்க்காலிலே கட்டி அப்பாலே அவனது தலையைச் சிரைத்திட்டு மானபங்கம் செய்துவிட்டுப் பின்பு ருக்மிணியை விதிபூர்வகமாகக் கல்யாணஞ் செய்துகொண்டு அவளிடத்தில் ப்ரத்யும்நனென்ற பிள்ளையைப் பெற்றார்.

## நரகாஸுர வதம். பாரிஜாதாபஹரணம்.

எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக்கோட்டாற் குத்தியெடுத்த பொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்திற்சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான நரகனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்து கொண்டு ஸகலப்ராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக்கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்நபர்வதத்தையும் தேவர் தாயான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக் கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்து, பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தையடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான முரன் முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத் தள்ளி அழித்து, அவன் பலதிசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு, அந்த நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரன் தாயான அதிதி தேவியின்) குண்டலங்களை அவ்வதிதி தேவிக்குக் கொடுக்கும்பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன் தோள்மேலேறிக்கொண்டு தேவலோகத்துக்குச்செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லை யாதலின், அவள் அதனைக்கண்டு விருப்புற்றவளாய் நாதனை நோக்கி 'பிராணநாதனே! இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவி சார்த்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர்செய்த இந்திரனை ஸகல தேவஸைந்யங்களுடன் ரணங்களத்திலே பங்கப்படுத்தி, பின்பு பாரிஜாத மரத்தை த்வாரகைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமை வீட்டுப்புழைக்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன்.

## வாணனாயிரம் தோள் துணித்தது.

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒரு காலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளந்தட்ட, சிவபெருமான் அருள் கூர்ந்து அவனுக்கு ஆயிரங்கைகளையும் நெருப்பு மதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலிற் காவல் செய்திருத்தல் முதலிய வரங்களையும் தந்தருளினன்; அந்தப் பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள் ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய், தனது உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப்புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தன் என்றறிந்து கொண்டு 'அவனைப் பெறுதற்கு உபாயஞ்செய்ய வேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்யை மகிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தாழ்வானைத் தூக்கிக்கொண்டுவந்து அந்த:புரத்திலே விட, உஷை

அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த பாணாஸுரன் தன் ஸேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கியிருந்தபோது, நாரத மஹாமுனிவனால் நடந்தவரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் பெரிய திருவடியை நினைத்தருளி உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடு கூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே அப்பட்டணத்தின் சமீபத்திற் காவல்செய்து கொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவனால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை உண்டாக்கி இதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்டபின்பு, சிவனுடைய அநுசரராகையாற் பாணாசுரனுடைய கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாசுரனோடு போர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவனும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போரிட, கண்ணன்தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தை ப்ரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான ஸுதர்சநமென்கிற தனது திருவாழியாழ்வானை யெடுத்து ப்ரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாகவிருக்கையில் பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு ப்ரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன் கண்ணபிரான்.

## பௌண்ட்ரக பங்கம்.

மற்றொரு கால் பௌண்ட்ரகவாஸுதேவன் என்பானொரு அரசன் பிறந்தான்; பல மூடர்கள் திரண்டு “நீதான் வாஸுதேவன்” என்று அவனைப்புகழ்ந்து கொண்டிருந்தார்கள். அதனால் அவனும் ‘நானே வாஸுதேவன்’ என்று மயங்கி மார்பு நெறித்துச் சங்குசக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்து கொண்டு, தூதனையழைத்து ‘நீ க்ருஷ்ணனிடம் போய் என்பெயரைச்சொல்லி, “இன்னான் வாஸுதேவனாயிருக்க நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக்கூடாது; இன்றுமுதல் விட்டுவிடவேண்டியது; இல்லையாகில் அவனோடு யுத்தஞ்செய்து அவனை வென்றாயாகில் தரிக்கலாம்” என்று சொல்லவேண்டியது” என்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத்தூதன் வந்து க்ருஷ்ணனிடம் அச்செய்தியைச்சொல்ல, கண்ணபிரான் சினமுற்றுப் பெரிய திருவடியின்மீதேறிச் சென்று போர்செய்து அப்பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினால் தலையறுத்துக் கொன்றொழித்தனன்.

## காசீதஹநம்.

பிறகு பௌண்ட்ரகன் இறந்துபோனதை அவனுடைய தோழனாகிய காசிமன்னன் கேள்விப்பட்டு க்ருஷ்ணனையும் மற்றும் யாதவர்களையும் த்வாரகையையும் அழித்திடுவதாகச் சங்கற்பித்து ஒரு பிசாசத்தை ஸ்ருஷ்டித்து ஏவவிட்டான். அப்பிசாசம் த்வாரகைக்கு வந்து ஜனங்களைப் பாதிக்கத்தொடங்கிற்று. இச்செய்தியைச் செவியுற்ற கண்ணபிரான் தனது திருவாழியை ப்ரயோகிக்க, அந்தச்சக்கரம் அந்தப்பிசாசத்தைத் துரத்திக்கொண்டு காசியளவும் போய் அப்பிசாசத்தையும் அத்துடன் சேர்ந்து வந்த கணங்களையும் அந்தக் காசிப்பட்டணத்தையும் நீறாக்கிவிட்டு ஸ்ரீக்ருஷ்ணபகவானருகில் வந்து சேர்ந்தது.

## சிசுபாலனைச் சிரமறுத்தது.

சிசுபாலன், பிறந்தபொழுது, நான்கு கைகளையும் மூன்று கண்களையுமுடையனாயிருந்தான்; அப்பொழுது அனைவரும் இது என்னவென்று வியக்கும்போது, ஆகாயவாணி 'யார் இவனைத் தொடுகையில் இவனது கைகளிரண்டும் மூன்றாம் விழியும் மறையுமோ, அவனால் இவனுக்கு மரணம்' என்று கூறிற்று; அவ்வாறே பலரும் தொடுகையில் மறைபடாத கைகளும் கண்ணும் கண்ணபிரான் தொட்டவளவிலே மறைபட்டன; அதனால் 'இவனைக்கொல்பவன் கண்ணனே' என்றறிந்த இவன் தாய் 'யாது செய்யினும் என்மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனை வேண்ட, அந்த அத்தையின் நன்மொழிக்கு ஒரு சார் இணங்கிய கண்ணன் 'இவன் எனக்கு நூறுபிழை செய்யுமளவும் இவன் பிழையை நான் பொறுப்பேன்' என்று கூறியருளினன். பின்பு, சிசுபாலன், தனக்குக்கண்ணன் சத்துருவென்பதை இளமையிலேயே யறிந்து அதனாலும் பூர்வஜந்மவாஸனையாலும் வளர்ந்த மிக்க பகைமையைப்பாராட்டி, எப்பொழுதும் அப்பெருமானுடைய திவ்யகுணங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும் நிந்திப்பதே தொழிலாக இருந்தான். இவனுக்கு மணஞ்செய்து கொடுப்பதென்று நிச்சயித்திருந்த ருக்மிணியைக்கண்ணன் வலியக் கவர்ந்து மணஞ்செய்து கொண்டது முதல் இவன் கண்ணனிடத்து மிக்க வைரங்கொண்டனன். பின்பு இந்த்ரப்ரஸ்த நகரத்தில் நடந்த ராஜஸூய யாகத்தில் தர்மபுத்திரனாற் கண்ணபிரானுக்கு அக்ரபூஜை செய்யப்பட்டதைக்கண்டு அளவிறந்த வசைச்சொற்களைப்பிதற்றி அதுபற்றிக் கண்ணனது சக்ராயுதத்தால் தலை துணிக்கப்பட்டு இறந்து தேஜோமயமான திவ்யசரீரம் பெற்று எம்பெருமானது திருவடியை அடைந்தனன்.

## வைதிகன் பிள்ளைகளை மீட்டுக்கொடுத்தது.

ஒரு ப்ராஹ்மணனுக்கு முறையே பிறந்த மூன்று பிள்ளைகள் பிறந்த அப்பொழுதே பெற்றவளுங்கூட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே, நாலாம்பிள்ளையை ஸ்த்ரீ ப்ரஸவிக்கப்போகின்ற வளவிலே அந்த அந்தணன் கண்ணபிரான் பக்கலிலே வந்து 'இந்த ஒரு பிள்ளையையாயினும் தேவரீர் ரக்ஷித்துத் தந்தருளல் வேண்டும்' என்று அபேக்ஷிக்க, கிருஷ்ணன் 'அப்படியே செய்கிறோம்' என்று அநுமதி செய்தபின்பு ஒரு யாகத்தில் தீக்ஷிதனானதனால் தான் எழுந்தருளக் கூடவில்லையென்று அர்ஜுநனுடன் சொல்ல, அர்ஜுநன் 'நான் போய் ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்து ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டு போய் ஸூதிகாக்ருஹத்தைச் சுற்றும் காற்றுங்கூட ப்ரவேசிக்கவொண்ணாதபடி சரக்கூடமாகக் கட்டிக் காத்துக்கொண்டிருக்கையிலே, பிறந்த பிள்ளையும் பிறந்தவளவிலே பழையபடியே காணவொண்ணாது போய்விடவே, ப்ராஹ்மணன் வந்து அர்ஜுநனை மறித்து 'க்ஷத்ரியாதமா! உன்னாலேயன்றோ என்பிள்ளை போம்படியாயிற்று; கிருஷ்ணன் எழுந்தருளிக்காப்பதை நீயன்றோ கெடுத்தாய்' என்று நிந்தித்துக் கிருஷ்ணன் பக்கலிலே தள்ளிக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்னகை கொண்டு 'அவனை விடு; உனக்குப் பிள்ளையை நான் கொணர்ந்து தருகிறேன்' என்று அருளிச்செய்து ப்ராஹ்மணனையும் அர்ஜுநனையுங்கூட்டத் தேரிலே கொண்டு ஏறி, அர்ஜுநனைத் தேரை நடத்தச்சொல்லி அத்தேர்க்கும் இவர்கட்கும் திவ்யசக்தியைத் தனது ஸங்கல்பத்தாற் கற்பித்து இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய் அங்கே ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தித் தேஜோரூபமான பரம்பதத்திலே தன்னிலமாகையாலே தானே போய்ப்புக்கு, அங்கு நாய்ச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியம் காட்டுகைக்காகவும் ஸ்ரீ க்ருஷ்ணமூர்த்தியினது திவ்ய ஸௌந்தர்யத்தைக் கண்டுகளிக்கைக்காகவும் அழைப்பித்துவைத்த அந்தப்பிள்ளைகள் நால்வரையும் அங்கு நின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குறையாமற் கொண்டுவந்து கொடுத்தருளினன்.

## மாலிகன் தலையைச் சக்கரத்தாலறுத்தது.

மாலிகன் என்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்திற் பலவகை ஆயுதங்களையும் பயின்று ஒருவர்க்கும் அஞ்சாமல் அஹங்காரியாய் ஸாதுஜநங்களை ஹிம்ஸித்

துக் கொண்டிருக்க, கண்ணபிரான் 'நண்பனுகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்ன செய்யலாம்' என்று வியாகுலப்பட்டு ஒருநாள் அவனை நோக்கி 'நீ இப்படி செய்வது தகாது' என்ன, ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன்வாயில் வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப்பயிற்சி மாத்திரம் செய்விக்கவில்லையே' என்று கண்ணன்மேற் குறைகூற 'இதில் பழகுவது உனக்கு முடியாது, எனக்கே அஸாதாரணமானது' என்ன, 'என்னால் முடியாதது மொன்றுண்டோ? நீ அவச்யம் அதைக்கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் 'இதுதான் தக்க ஸமயம்' என்று திருவுள்ளத்திற் கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றைவிரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்க, 'இது உனக்கு அரிதே' என்று கண்ணன் சொல்லவும் அதை அவன் கேளாமல் அச்சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றியெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன்கைவிரலைக் கழுத்துக்கு அடுத்து வைத்து நிற்க, அச்சக்கரம் சுழன்று வருவதற்கு இடம் போதாமையாலே அதன்வீச்சு இவன்கையிற்பிடிபடாமல் இவன்தலையை அரிந்துவிட்டது. [இவ்வரலாறு, பெரியாழ்வார் திருமொழியில் "மாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" [உ-எ-அ.] என்ற பாசுரத்தில் பெரியாழ்வாரால் அநுஸந்திக்கப்பெற்றது. இது எந்தப்புராணத்திலுள்ளதோ அறியேன்.]

## கண்டாகர்ணனுக்கும் அவனது ஸஹோதரனுக்கும் முத்தியளித்தது.

கைலாஸபர்வதத்தில் சிவனையடுத்துத் தொண்டுபூண்ட பூதகணத்தலைவர்களில் ஒருவன், அச்சிவபக்தியுடன் விஷ்ணுத்வேஷமுங்கொண்டு விஷ்ணு நாமத்தைப் பிறர் சொல்லக்கேட்டலுமாகாதென்று தன் காதுகளில் மணிகளைக்கட்டிக்கொண்டு அவற்றை ஒலிசெய்யுமாறு எப்பொழுதும் கருத்துடன் அசைத்துக்கொண்டிருந்ததனால் கண்டாகர்ணனென்று பெயர் பெற்றான். அவன் ஒருகாலத்திற் சிவபிரானைக் குறித்து அநேகவருடம் தவம்புரிந்து, ரிஷபாரூடனாய்க் காட்சிதந்த அச்சிவனை நோக்கி 'எனக்கு நித்தியமான முத்தியை அளித்தருள்க' என்று பிரார்த்திக்க, அவன் "அதனை அளித்தற்கு உரியவன் ஸ்ரீமந்நாராயணனே; மற்றைப் பிரபஞ்ச வாழ்வில் எது வேண்டினும் யான் தரக்கடவேன்" என்று கூறிச்சென்றனன். அது கேட்டவுடனே கண்டாகர்ணன் காதிற்கட்டிய மணிகளைக் கழற்றியெறிந்து சிவனுக்கு நண்பனான குபேரனிடஞ்சென்று நிகழ்ந்த செய்தியைக்கூற, அவனும் 'அழியாப்பதத்தை அரியே அருள்வன்' என்று சொல்லி அஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தையும் த்வாதசாக்ஷரமந்த்ரத்தையும் உபதேசித்து, அத்திருமால் கிருஷ்ணனாகத் திருவவதரித்து த்வாரகையில் வஸிக்கிற செய்தியையும் சொல்லி, 'எவ்வளவு தீவினை செய்தாலும் விஷ்ணுநாமத்தை உச்சரித்த மாத்திரத்திலே அவ்வினையனைத்தும் தொலையும்' என்று உணர்த்த, அவற்றை அறிந்த கண்டாகர்ணன் தன்னைச்சார்ந்த பூதகணங்களுடனே புறப்பட்டு விஷ்ணுநாமங்களை வாயினாற் சொல்லிக்கொண்டே இடைவழியிலெல்லாம் பசுவதை ப்ராஹ்மண வதை முதலிய அளவிறந்த உயிர்க்கொலைகளைச் செய்துகொண்டு, கங்காநதியுடன் யமுநாநதி சேருமிடமான ப்ரயாகக்ஷேத்ரத்தைச்சேர்ந்து அஷ்டாக்ஷர த்வாதசாக்ஷர மந்த்ரஜபத்துடன் நாராயணனை த்யானித்து அப்பரமனை அகத்திற்கண்டதன்றி அங்குப்புறத்திலே கிருஷ்ணமூர்த்தியைக் கண்ணுற்றுக் களிகூர்ந்து அப்பெருமானது திருவடிகளிற் சரணம்புகுந்து 'எனக்கு அழியாப்பதத்தை அளித்தருள்க' என்று பிரார்த்தித்தான். அதற்குக் கண்ணபிரான் 'நீ ஆதியில் என்னிடத்திற் பகைமைகொண்டபோதிலும், இடைவிடாது என்னை நினைப்பிற்கொண்டிருந்ததனாலும், பின்பு மிக்க நம்பிக்கையுடன் எனது நாமங்கள் பலவற்றை உச்சரித்ததனாலும், பிறகு ஜபம் த்யானம் ஸ்தோத்ரம் முதலிய வழிபாடுகள் செய்ததனாலும் உனது வினைகளெல்லாம் தொலைந்தன; இனிப்பரமபதம் அடைவாய்' என்று அநுக்ரஹித்தான். பின்பு கண்டாகர்ணன் 'அந்த ஸ்ரீவைகுண்டத்தை என்தம்பியான தந்தகனுக்கும் அருள்க' என்று வேண்ட, கண்ணன் 'உன்னைப்போல உன்தம்பியும் என்பக்கல் அன்புடையனோ?' என்ன; இல்லை என்றான்; 'அஃது இயல்லையாயினும், எனது பக்தனை உன்னிடத்திலேனும் அன்புடையனோ?' என்று வாஸுதே

வன் வினவியதற்கு 'அதுவுமில்லை; பாதேவதையான உன்னிடத்திலும், தமையனான என்னிடத்திலும் பகைமையுடையன் அவன்' என்ற கண்டாகரணனை நோக்கிக் கண்ணபிரான், 'ஆயின் என்ன இயைபு கொண்டு அவனுக்கு உயர்கதி அளிப்பேன்?' என்றான். கண்டாகரணன் 'அவனுக்கு என்னிடத்தில் அன்பில்லையாயினும், எனக்கு அவன்மேல் அன்பு உண்டு' என்றுசொல்ல, கண்ணன் அதுகேட்டு மனமகிழ்ந்து 'ஆனால் அவனுக்கும் முத்தி தந்தேன்: எனது அன்பர் எவர்பக்கல் அருள்புரிகின்றனரோ, அவரும் பேறுபெறுதற்கு உரியரே; இனி நீயும் உன்தம்பியும் விமானமேறி வீடுபெறுவீர்? என்று சொல்லி விடையளித்து எழுந்தருள அங்ஙனமே அவ்விருவரும் பரமபதம் புக்கனர்.

இப்படிப்பட்ட க்ருஷ்ணபரமாத்மாவினது அற்புத சரித்திரங்களை ஒன்றொழியாமல் எழுதுவதற்கு ஆயிரங்கைகள் படைத்த கார்த்தவீர்யார்ஜுநனும் வல்லவனல்லன் என்னும்போது அற்பஞானத்தையும் ஸ்வல்ப சக்தியையுமுடையேனாகிய அடியேன் எவ்வளவு எழுதவல்லேன்?

பாண்டவர்கட்குத் துணைநின்று பாரதப்போர் மூட்டி அந்தவ்யாஜத்தினால் எண்ணிறந்த பாபிஷ்டர்களைப் பாழ்படுத்தியதும், அர்ஜுநனை வியாஜமாகக்கொண்டு உலகமனைத்தும் வாழ பகவத்கீதை'என்னும் திவ்யாம்ருதம் அருளிச்செய்ததும், பாண்டவதூதனாயும் பார்த்தஸாரதியாயுமிருந்து தனது ஸௌசீல்ய ஸௌலப்ய வாத்ஸல்ய ஸ்வாமித்வம் முதலிய ஸகல குணங்களையும் விளங்கச் செய்தருளியதும்; த்ரௌபதிக்காகப் படாப்பாடுபட்டு ஆனைத்தொழில்கள் செய்து தனது ஆச்ரித பாரதந்திரியத்தை எல்லைகடந்து வெளிப்படுத்தியதுமாகிய குணகணங்களைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். ... ... ... *

"கண்ணனல்லாலில்லைகண்டீர் சரண் அதுநிற்கவந்து
மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்
திண்ணமா நும்முடைமையுண்டேல் அவனடிசேர்த்துய்மினோ
எண்ணவேண்டா நும்மதாது மவனன்றி மற்றில்லையே."

ஸ்ரீகிருஷ்ணவதார வைபவ ஸங்க்ரஹம்,

முற்றுப்பெற்றது.





ஸ்ரீ

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ஸ்ரீராமாவதார வைபவ ஸங்க்ரஹம்.

"கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ ?."

## ஸ்ரீராமாயண அவதரணம்.

ஸகல பாபங்களையும் தீயினில் தூசாக்கி எல்லாவித நன்மைகளையும் நன்கு அளிக்கவல்ல ஸ்ரீராமசரிதாம்ருதத்தை இந்நிலவுலகத்திலே பெருகச்செய்து அனைவரையும் வாழ்விக்கக் கருதிய பிரமதேவன், தனது மூத்தகுமாரராகிய ஸ்ரீ நாரதமுனிவரை அழைத்து, "நீர் இந்த ஸத்யலோகத்திலுள்ள சதகோடி விஸ்தரமான ஸ்ரீராமாயணத்தைச் சுருக்கி ஸ்ரீவால்மீகி பகவானுக்கு உபதேசித்து அவரைக்கொண்டு இருபத்து நாலாயிரம் க்ரந்தப்பரப்புள்ளதான ஸ்ரீராமாயணத்தைச் செய்வித்துப் பூலோகமெங்கும் பரவச்செய்து உலகத்தை வாழ்விக்கவேணும்" என்று கட்டளையிட, பின்பு அந்நாரதமுனிவர் இந்நிலவுலகத்தே போந்து ஸ்ரீவால்மீகி பகவான் தவஞ்செய்யுமிடத்துச்செல்ல, அவரும், தத்துவஞானிகளிற் சிறந்த முனிவர் வந்தமையை அறிந்து அவரிடம் ப்ரச்நஞ்செய்து தாமறியவேண்டிய ஸகல வேதாந்தப்பொருள்களுமுள்ளடங்கிய ஸ்ரீராமசரித்திரத்தைச் சுருக்கமாக அம்முனிவர்வாய்க் கேட்டுணர்ந்து, பின்பு தமது யோகமஹிமையினால் அதனைப்பரக்க உணர்ந்து, பிறகு நான்முகனது அநுக்ரஹத்தினால் க்ரந்தஞ்செய்யவல்ல சக்தியைப்பெற்று ஸ்ரீராமாயணமென்னும் மஹாகாவ்யத்தைத் திருவாய்மலர்ந்தருளி, தமது அந்தரங்க சிஷ்யர்களான குசலவரென்கிற ஸ்ரீராமகுமாரர்களுக்கு அதனைக்கற்பித்து அவர்கள் முகமாக உலகினில் பரவவிட்டனர். ... ... ... ... ... ... *

## (ஸ்ரீராமன் அவதரிப்பதற்குக் காரணம்.)

### ஜயவிஜயர்கள் சாபம் பெறுதல்.

முன்பொருகால் பரவாஸுதேவனாகிய ஸ்ரீமந்நாராயணன் ஜயவிஜயர்களிருவரையும் வாசற்காவலாளராக நிறுத்தி ஸ்ரீவைகுண்டத்தில் கோப்புடைய சீரிய சிங்காசனத்தில் திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ வீற்றிருந்து யோகு செய்யாநிற்குமளவில், துர்வாஸமாமுனிவர் பரமபுருஷனுடைய பாதபங்கயம் பணியவேண்டி ஸ்ரீவைகுண்டத்தே நேரவந்து கோயிலுள்ளே புகுமளவில், திருவாசற்காவலராகிய ஜயவிஜயர்கள் 'எம்பெருமானது நியமநமின்றி உள்ளேவிரைந்து செல்வது தகாது; சற்றுவாசலில் நில்லும்; ஸமயமறிந்து புகவிடுகிறேன்' என்றுசொல்லித் தங்கள் கைப்பிரம்பினால் அம்முனிவரைத்தகைய, அவர் ஸ்வாதீநகோபராகையால் உடனே மிக்க கோபமடைந்து 'இங்ஙனே அவத்தோரைத் திரஸ்காரஞ்செய்யவோ நீங்கள் இங்கு நியமிக்கப்பட்டிருக்கிறீர்கள்? நீங்கள் கொழுத்திருப்பதனாலன்றோ எங்கள் தவமஹிமையையும் மறக்கலாயிற்று; நல்லது; உங்கள் கதியை இப்போதே காண்மின்' என்று அவர்களை அச்சமுறுத்தி, அவர்கள் எவ்வளவு வணங்கி வேண்டிக்கொண்டவிடத்தும் தணிவற்றவராய் 'நீங்களிருவரும் அப்பகவத்விமுகராய் மிகக்கொடிய அஸுரயோநிகளில் பிறக்கக்கடவீர்கள்' என்று சபிக்க; அவர்கள் நடுங்கி அம்முனிவருடைய பாதாரவிந்தத்தில் பணிந்து 'எங்களிடம் அருள்புரிந்திடுவீர்; எமது சாபத்திற்கு விமோசநகாலமொன்று குறித்தருள்வீர்' என்று பிரார்த்திக்க; முனிவர், நீங்கள்

இவ்வாறாக மூன்று பிறவி பிறந்து பகவானுடன் எதிரம்பு கோத்து அவர் திருக்கையினால் மடிந்து பிறகு இச்சாபத்தைக்கடந்து உங்கள் பதத்து எறுவீர்கள்' என்று அநுக்ரஹித்தனர்.

பிறகு ஜயவிஜயர்களிருவரும் அந்தச் சாபத்தின்படியே தங்கள் பதத்தினின்றும் நழுவிப் புவியில் ஆதியில் ஹிரண்யகசிபு ஹிரண்யாக்ஷனென்ற இரண்டு அஸுரர்களாகப் பிறந்து கோர தவஞ்செய்து பிரமனை ப்ரஸன்னனாக்கித் தங்களுக்கு ஒருவராலும் மாணமுண்டாகாமை வரம் பெற்று மதித்து, லோகங்களை ஹிம்ஸித்துக்கொண்டு தங்களைக்காட்டிலும் வேறு பரதேவதை இல்லையென்று கர்வித்துப் பிறர் தவங்களை அழித்தும் விஷ்ணுவை நிந்தித்தும் இவ்விதமான கொடுந்தொழில்களில் பொழுது போக்கிக்கொண்டு திரிகையில், பகவான் ஆதிவராஹனாக அவதரித்து இளையோனாகிய ஹிரண்யாக்ஷனை ஸம்ஹாரஞ்செய்து, பின்பு ப்ரஹ்லாதாழ்வானை அநுக்ரஹிக்கும் வியாஜமாக நரசிங்கவுருக்கொண்டு தூணில் தோன்றி ஹிரண்யாஸுரனையுங் கொன்றருளினன்.

பிறகு அவ்விரண்டஸுரர்களும் கச்யப ப்ரஜாபதியின் பிள்ளையாகிய விச்ரவஸ்ஸினுடைய கர்ப்பத்தில் வந்து பிறந்தனர். அவர்களில் மூத்தவன் இராவணன்; இளையவன் கும்பகர்ணன். இவர்களும் ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுகளைப்போலே வெகுகாலம் தவம்புரிந்து, மானிடரைத் தவிர்த்து மற்று யாராலும் தங்களுக்குச் சாவு நேரிடாமை வரம்பெற்று இந்திரன் முதலிய அஷ்ட திக்பாலகர்களையும் வென்று அவர்களது ஸம்பத்தையடங்கலும் கொள்ளை கொண்டு அவர்களை ஓரிடத்திற் குடியிருக்கவொட்டாமல் நலிந்து அவர்கள் மனதில் பெருந்தீயை மூட்டி, குபேரன் குடியிருந்த இலங்கையில் அவனை அடித்தோட்டித் தான் குடிபுகுந்து, அவன் ஆண்டுவந்த புஷ்பகவிமானத்தைப்பறித்துத் தம்வசமாக்கிக்கொண்டு மஹர்ஷிகளுக்கும் மற்றும் ஸாதுஜநங்களுக்கும் பலவகைத்தீங்குகளை விளைத்துக்கொண்டு நிகரற்ற துராத்மாக்களாய்த் திரிந்துகொண்டிருந்தனர்:-

அக்காலத்தில் இக்ஷ்வாகுவம்சத்தில் **தசரத**னென்பானோர் அரசன் இருந்தான். இப் பரதகண்டமெல்லாம் அவனுடைய அரசாட்சிக்கு அதீநமாயிருந்தது; அவனுக்கு ஸுமந்திரன் முதலியவர்கள் மந்திரிகள். ப்ரஹ்மாவின் மாநஸிக புத்திரராகிய வஸிஷ்டபகவான் புரோஹிதர், கோஸலநாட்டில் அயோத்திமாநகரம் இராஜதானி. தேவேந்திரன் நண்பன். கௌஸல்யை, ஸுமித்ரை, கைகேயீ என்கிற மூவர் பட்டமஹிஷிகள். இவ்வரசன் போர்க்களத்தில் சம்பராஸுரன் முதலிய பல துஷ்டவீரர்களைக்கொன்று வெற்றிபெற்று விளங்கி வந்தவன். அக்காலத்தில் ப்ரஜைகள் தத்தம் வர்ணாச்ரமாசாரங்களைக் குறையற நடத்திக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது துர்ப்பிக்ஷம் நேருவதேயில்லை. திங்கள் மும்மாரி பெய்து அவ்வக்காலங்களில் ஸகலதானியங்களும் குறையின்றி விளைந்து வந்தன. ஜனங்கள் பிணபசி யென்பவற்றை அறியார்கள். தாய் தந்தையர் இருக்க மக்கள் மரிப்பதில்லை. நீர்க்கண்டம், தீக்கண்டம் என்கிற ஆபத்துக்களின் பெயரும் தெரியாது. பெண்கள் பரபுருஷனை விரும்பார்கள். கீழ்க் குலத்தார் மேற்குலத்தவரை எதிரிடார்கள். இவ்வண்ணமாக இந்த தசரத மஹாராஜன் அறுபதினாயிரமாண்டு இப்பூமியைத் தர்மபரிபாலனஞ் செய்துவந்தான்.

இப்படி பரம தர்மாத்மாவாகிய தசரத சக்ரவர்த்தி நெடுநாளளவும் ஸந்ததியற்றவனாய்ப் பிள்ளையில்லாதவர்களுக்குப் புண்யலோகம் இல்லையே யென்றும், ரகுமஹாராஜன் முதலிய பெரியோர்கள் ஆண்டுவந்த இப்பூமி என்காலத்திற்குப் பிறகு நாதனற்றுப்போய்விடுமேயென்றும், இவ்வளவு செல்வமிருந்தும், ஒரு புத்திரனுண்டாகி அவனை எடுத்து மார்பில் தழுவி முத்தமிட்டு உச்சி மோந்து மழலைச்சொற்களைக் கேட்டுக் களிக்கும்படியான பாக்கியம் பெற்றிலேனே யென்றும் மனம்வருந்தி, வஸிஷ்டர் முதலிய மஹான்களையும் ஸுமந்திரர் முதலிய மந்திரிகளையும் திரட்டி ஆலோசனை ஸபையை அலங்கரித்து அந்துச்சிரிய சிங்காசனத்தில் வீற்றிருந்து தனது குறையை வெளியிட்டு இக்குறையை நீக்கவல்லதோர் உபாயம் கூறவேணுமென்று பிரார்த்திக்க, அவர்களும் இரங்கி ஒருமித்துச் சிந்தித்து அவர்களில் ஒருவனான ஸுமந்திரன் வேந்தனைக்குறித்து—"ஓ ராஜாதிராஜனே! நான் ஒருகால் ஸநத்குமாரரைக் கண்டேன்; அவர் ப்ராஸங்கிகமாகச் சொல்லும்போது, 'அங்கதேசத்தில் **ரோமபாத**னென்றொரு அரசன் உண்டாகப்போகிறான்; அவன் அர

சாட்சி செய்யுங்காலத்தில் ஒரு மழைத்துளி பெய்யாமல் தேசம் வருந்தப்போகிறது; அப்பொழுது அவ்வரசன் விபண்டக மஹர்ஷியின் புத்திரனாகிய ருச்யசிருங்க னென்கிற ரிஷியைத் தன் தேசத்துக்கு வரவழைக்கப் போகிறான்; அந்த ரிஷி வரும்பொழுதே பெருமழை பெய்து தேசம் ஸுகமேவாழப்போகிறது; பின்பொருகால் இக்ஷ்வாகு குலத்தில் தசரதனென்றொரு வேந்தன் அரசாண்டு வருகையில் மக்கட்பேறு இன்றி வருந்தி ரோமபாதனோடு நேசித்து அவன் வழியாக அந்த ருச்யசிருங்கமா முனிவரை வரவழைத்து யஜ்ஞம் செய்யப்போகிறான்; பிறகு அவ்வரசனுக்குப் பிள்ளைகள் நால்வர் உண்டாகப்போகிறார்கள்' என்று சொல்லியிருக்கிறார். ஆகையால் நீர் அம்மஹர்ஷியை வரவழைத்து அவரைக்கொண்டு புத்ரகாமேஷ்டியை நடத்தும்; அவரனுக்ரஹத்தினால் உமக்கு ஸந்ததி உண்டாகப்போகிறது" என்று சொன்னான்.

தசரத மஹாராஜன் அச்சொல்லைக் கேட்டு ரோமபாதனையும் ருச்யசிருங்க முனிவரையும் வரவழைத்து அயோத்யாபுரிக்கு வெளியில் யஜ்ஞசாலை ஏற்படுத்தி யஜ்ஞம் செய்யக்கருதி முதலில் அச்வமேதம் செய்யக் குதிரையை அலங்கரித்துவிட்டு அக்குதிரை தேசம் முழுவதும் சுற்றிவருவதற்குள் யஜ்ஞத்துக்கு வேண்டும் வகைகளை அமைத்துக்கொண்டு ஒருவருஷமானதும் அக்குதிரை மீண்டு வந்தவுடன் அச்வமேதத்தைக் கிரமமாக நடத்திப் பிறகு ரிச்யச்ருங்கரைக்கொண்டு புத்ரகாமேஷ்டியாகத்தை நடத்தத்தொடங்கினான்.

அக்காலத்தில் அந்த யஜ்ஞத்தில் தங்கள் தங்கள் ஹவிர்ப்பாகத்தை வாங்கிக்கொள்ளுகைக்காக ப்ரஹ்மா இந்திரன் முதலிய தேவர்கள் அங்கு இறங்கி வந்து சேர்ந்தனர். அப்பொழுது இராவணாதிகளால் லோகமும் தாங்களும் படும்பாதைக்குப் பரிஹாரம் காணாமல் ப்ரஹ்மாவுடன் சொல்லிக்கொள்ள, அவரும் இவர்களைக் கூட்டிக்கொண்டு திருப்பாற்கடலிற்சென்று பகவானுடைய கல்யாண குணங்களைச் சொல்லித்துதித்தனர்.

ஸகல லோகஸம்ரக்ஷண ஜாகரூகனான ஸ்ரீமந்நாராயணன் இவர்கள் பக்கல் இரக்கங்கொண்டு அப்பாற்கடல் நடுவில் தோன்றித் தனது புன்முறுவலினால் இவர்களது மனக்கவலையை அடியறுத்துக் குசலப்ரச்நஞ்செய்து நீங்கள் வந்தகாரியம் ஏதென்று வினவ, தேவர்கள்—"ஓ பரமபுருஷனே! நீர் அறியாதது ஒன்றில்லை; ஆகிலும் சொல்லுகிறோம்; இராவணனென்கிற ராக்ஷஸன் ப்ரஹ்மாவினிடம் தனக்கு மநுஷ்யர்களைத்தவிர மற்றொருவரால் அழிவு உண்டாகாதபடி வரம்பெற்று உலகமனைத்தையும் மிகவும் வருத்தமுறுத்துகிறான்; தேவரீரே முன்பு மஹாபலியின் கையிலகப்பட்டு வருந்தின எங்கள் இடரைப் போக்கியிருக்கிறது; அவ்வண்ணமே இப்பொழுதும் அவனைக்கொன்று எங்களை ரக்ஷித்தருளவேணும்" என்று பிரார்த்தித்தார்கள்.

பகவான் அதைக்கேட்டு, 'ஓ தேவர்களே! நீங்கள் படும்பாதையையெல்லாம் நான் அறிந்தேன்; இக்காலத்தில் தசரதமஹாராஜன் புத்ரகாமேஷ்டியாகம் செய்துகொண்டிருக்கிறான்; நான் அவனுக்குப்பிள்ளையாய் அவதரித்து இராவணனை ஸம்ஹரித்து உங்கள் மனோரதத்தைத் தலைக்கட்டுவிக்கிறேன்; அப்பொழுது எனக்குத்துணையாக நீங்கள் குரங்கு கரடி முதலிய மிருகங்களிடத்தில் பலபராக்ரமங்களோடு கூடிய ப்ரஜைகளை உண்டாக்குங்கள். இனி உங்கள் மனக்கவலையைவிட்டு இருப்பிடம் போய்ச்சேருங்கள்" என்று செவிக்கினிய செஞ்சொற்களை உரைத்து அப்பொழுதே அந்தர்த்தானமாயினர்.

தேவர்கள் அம்மொழியைக்கேட்டு இராவணனொழிந்தானென்று உறுதிகொண்டு மனமகிழ்ந்து பகவானிடம் விடைபெற்று மீண்டு வருகையில் ப்ரஹ்மா மற்ற தேவர்களைப்பார்த்து, 'பகவான் நம்மிடம் அருள்புரிந்து நமது பாரத்தைத் தாம் என்றுகொண்டார்; இனி நாம் ஸுகமே வாழலாம்; அவரிட்ட கட்டளைப்படி நீங்கள் பலவிதமான வாநரஜாதிகளை உண்டுபண்ணுங்கள்; முன்பு நான் கொட்டாவி விடுகையில் என்வாயினின்றும் 'ஜாம்பவான்' என்றுஒருவன் உண்டாயிருக்கிறான்; இந்திரன் வாலியையும், ஸூர்யன் ஸுக்ரீவனையும் உண்டாக்கியிருக்கிறார்கள். அவர்களும் அவ்வாநரத்திரளுக்குத் தலைவர்களாக இருந்து நம்காரியத்துக்குத் துணையாவர்கள்; பகவான் தன்னடியாரை ஒருநாளும் கைவிடார் என்று நம்புங்கள்' என்று ஸந்தோஷமாகச் சொல்லிக்

கொண்டு தசரத சக்ரவர்த்தியின் யஜ்ஞத்தில் ஹவிர்ப்பாகத்தை வாங்கிக்கொண்டு தத்தம் இடத்திற்குப் போய்ச்சேர்ந்து வாநரம் முதலிய பலயோநிகளிற் பல மிருகங்களை உண்டுபண்ணினார்கள்.

தசரதசக்ரவர்த்தியின் யஜ்ஞஸமாப்தி ஸமயத்தில் அக்நி புருஷன் நான்முகனுடைய நியமநம் பெற்று ஸ்வர்ணபாத்திரத்தில் பாயஸத்தைப் பூரித்துக்கொண்டு வந்து யஜ்ஞகுண்டத்தில் கிளம்பி தசரதனுக்கு அப்பாயஸத்தைக்கொடுத்தான்; தசரதனும் அப்பாயஸத்தை மிக்க மனமகிழ்ச்சியுடன் வாங்கி அதை இரண்டு பாகமாக்கி ஒரு பங்கைத் தன் ப்ரதாநமஹிஷியான கௌஸல்யைக்குக் கொடுத்து, இரண்டாவது பாகத்தை இரண்டாக்கி ஒன்றை ஸுமித்திரைக்குக் கொடுத்து மற்றொரு பாகத்தையும் இரண்டாக்கி அதில் ஒன்றைக் கைகேயிக்குக் கொடுத்து மிகுந்ததை மீண்டும் ஸுமித்திரைக்குக் கொடுத்துவிட்டு யஜ்ஞத்தை ஸாங்கமாகச்செய்து முடித்து அவப்ருத ஸ்நாநஞ்செய்து, ருத்விக்கு முதலியவர்களைக் கிரமப்படி ஸம்மானித்து விடை கொடுத்துத் தான் பட்டமஹிஷிகளைக்கூட்டிக்கொண்டு பரிவாரங்களுடன் அயோத்யா நகரத்தை அடைந்திட்டான்.

## ஸ்ரீராமாதிகளின் திருவவதாரம்.

அதுமுதல் கௌஸல்யை முதலானோர் மூவரும் கர்ப்பலக்ஷணங்களைத் தரித்து மிக்க புகழையுடையவர்களாய் விளங்கிவந்தனர். அக்காலத்தில் பகவான் தான் தேவர்களுக்குக் கொடுத்த வாத்தைத் தலைக்கட்டுகைக்காகத்தான் கௌஸல்யையின் கர்ப்பத்தில் ப்ரவேசித்தான். "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்" என்றபடி - பகவானுக்கு அவ்வக்காலங்களுக்கு உரிய கைங்கரியங்களை நடத்திக்கொண்டு எப்பொழுதும் இணைபிரியாதிருக்கிற ஆதிசேஷன் ஸுமித்திரையின் கர்ப்பத்தில் பிரவேசித்தான். எப்போதும் பகைவரை வென்றுகொண்டு பகவானது திருக்கைமீது பொலிந்து வாழ்கின்ற ஸுதர்ஶந பாஞ்சஜந்யாழ்வார்கள் இருவரும் கைகேயியின் கர்ப்பத்தில் பிரவேசித்தனர்.

இப்படி பதினொரு திங்கள் கழிந்தபின்னர் பன்னிரண்டாவது திங்களாகிய சித்திரை மாதத்தில் சுக்லபக்ஷ நவமிகூடிய புநர்வஸு நக்ஷத்திரத்தில் கர்க்கடலக்நத்தில் பராத்பரனாகிய எம்பெருமான் (ஸ்ரீராமனாகி) ஸ்ரீகௌஸலையாருக்குக் குமாரனாகத் திருவவதரித்தான். புஷ்ய நக்ஷத்திரத்தில் கைகேயி தேவியினிடத்தில் பரதனும், ஆயிலியத்தில் ஸுமித்ரா தேவியிடத்தில் லக்ஷ்மணனும், மகத்தில் அந்த ஸுமித்ரா தேவியிடத்தில் சத்ருக்நனும் அவதரித்தனர்.

இப்புத்ர ஜந்மோத்ஸவத்தை மேலுலகத்தவர்களும் நிலவுலகத்தவர்களும் மிக்க சிறப்பாகக் கொண்டாடினர். பிறகு தசரதமஹாராஜன் அப்புதல்வர்கட்குக் குலகுருவாகிய வஸிஷ்டரைக் கொண்டு விதிபூர்வமாக அவ்வக்காலங்களில் ஜாதகர்ம நாமகரணமுதலிய வைதிகச்சடங்குகளை நடத்திவந்தனன். அந்த ராஜகுமாரர்களும் சுக்லபக்ஷத்துச் சந்திரன்போல நாள்தோறும் கலைகளினால் நன்கு விளங்கினர். தாய் தந்தையரும் மற்றுமுள்ள ப்ரஜைகளும் ஆநந்தத்தின் எல்லையிலே நின்றனர். இக்குமாரர்கள் வேதங்களை ஸாங்கோபாங்கமாகக் கற்று தநுர்வித்யையில் ஒப்புயர்வற்ற தேர்ச்சியைப் பெற்றனர்.

## விச்வாமித்ர ஸமாகமம்.

இங்ஙனே இவர்கள் வளர்ந்துவருங் காலத்தில், ஒருநாள் விச்வாமித்திர மஹர்ஷி தசரதனிடம் வந்து, தான் ஸங்கல்பித்திருக்கும் யாகத்தை இடையூறின்றி நிறைவேற்றுதற் பொருட்டு இராமபிரானை இலக்குமணனோடு கூட்டித் தன்னுடன் அனுப்புமாறு கேட்டுக்கொண்டார்; அச்சொல்லைக்கேட்ட தசரதன் நஞ்சுதீற்றிய நாராசத்தினால் அடியுண்டவன்போல மிகவருந்தி மறுமொழி கூறமாட்டாது மனமகிழ்ந்து நெடும்போது கழித்துத் தெளிந்து "ஓ! மஹர்ஷியே! நான் அறுபதினாயிரம் வருஷம் மலடிருந்து இப்பொழுது தான் இவ்வருமந்த பிள்ளைகளைப் பெற்றேன்; இவர்களை ஒரு க்ஷணகாலமாகிலும் காணேனாகில் நான் உயிர்துறந்திடுவேனே; அதுவுமன்றி

இவர்கள் சிறுகுழந்தைகள்; யுத்தத்திற்கு உரிய பருவம் இல்லை; வருத்தம் பொறுக்ககில்லாத ஸுகுமாரர்கள்; இவர்களை அழைத்துக்கொண்டு போவதனால் உமக்கு யாதொரு பயனும் விளையாது. அந்த முரட்டசுரர்களோடு போர்செய்யவல்ல நான் படைகளைத் திரட்டிக்கொண்டு வந்து அவர்களை வென்று வேள்வியை நிறைவேற்றுவிக்கிறேன். என்னிடம் அருள்கூர்ந்து இச்சிறுவர்களை மறந்துவிடும்" என்று வெகு நயப்புடனே கேட்டுக்கொண்டான்.

பிறகு விச்வாமித்திரர்— 'ஓ அரசனே! இவர்களுடைய வல்லமையை நான் அறிவேன்; என்னைப்போன்ற மற்றவர்களும் அறிவார்கள்; உனக்கு இவர்களுடைய மஹிமை தெரியாது; தெரிந்துகொள்ள வேணுமாகில் உன்னுடைய நன்மையையே நாடிநிற்கும் இந்த வஸிஷ்ட பகவானைக் கேள்' என்றார்.

## வஸிஷ்ட நியமநம்.

இப்படி இருவரும் பேசிக்கொண்டிருக்கையில், வஸிஷ்ட பகவான், 'ஓ வேந்தனே! விச்வாமித்திரர் சொல்வது உண்மையே; அவர் உன்பிள்ளைகளுக்கு நன்மையை விளைவிக்க நினைத்து உன்னிடம் வந்து இவர்களை யாசிக்கிறார். ஒருகுறையும் நேரிடாது; நன்மைகள் நன்கு மிகும்; ஆகையால் இவருடன் உன்பிள்ளைகளை அனுப்பிவிடு' என்று போதித்தனர். அதைக்கேட்டு அரசன் மனக்கவலை தீர்ந்து ராமலக்ஷ்மணர்களை அழைத்து விச்வாமித்ர மஹர்ஷியிடம் அர்ப்பணம் செய்துவிட, அம்மஹர்ஷி இருவரையும் கூட்டிக்கொண்டு போகையில் இவர்களுக்கு இளைப்பு உண்டாகாமைக்காக 'பலை அதிபலை' என்கிற இரண்டுவித்யைகளை உபதேசித்துப் போதுபோக்காகப் பலகதைகளையுஞ் சொல்லிக்கொண்டு போனார்.

## தாடகாவதம்.

போகும்வழியில் தாடகையென்ற ஓர் அரக்கி பெருங்கூச்சலிட்டுக்கொண்டு ஓடிவந்து வழியைத்தகைந்து வெருட்டிக்கொண்டு எதிரே பயங்கரமான உருவங்கொண்டு மலைபோல் நின்று இவர்களைக் கொல்லக்கருதினள். மாமுனிவர் ஒரு உங்காரத்தினால் அவளைத்தகைந்து ஸ்ரீராமனை ஏவ, இராகவன் மஹர்ஷியின் நியமநத்தினால் ஸ்த்ரீ என்று பாராமல் அக்கொடியிலே வில்லை வளைத்து நாணேற்றி அம்புதொடுத்து அவ்வரக்கியின்மீது எய்து அவளை உயிர்தொலைத்திட்டான்.

## ஸுபாஹு மாரீச நிரஸநம்.

பின்பு விச்வாமித்திரர் இராமபிரானுக்குச் சில அஸ்த்ரங்களை உபதேசித்துத் தனது ஸித்தாச்ரமம் சேர்ந்து யாகஞ்செய்யத் தொடங்குகையில், அதனையறிந்த தாடகையின் பிள்ளையாகிய ஸுபாஹு,மாரீசன் என்கிற இருவரும் சிலதுஷ்டர்களுடன் வந்து யாகபூமியில் மாம்ஸம் முதலிய அசுத்தவஸ்துக்களை இறைக்கத் தொடங்கினர். அப்போது ராமலக்ஷ்மணரிருவரும் ஆடையை இறுக்கிக்கட்டிக்கொண்டு மிக்க பரபரப்புடன் ஆகாயத்தை நோக்கி வில்லை வளைத்து அம்புகளைப் பொழிந்து ஸுபாஹுவைக் கொன்று மாரீசனை ஓரம்பினால் கடலின் நடுவே தள்ளியழுத்தி மற்றவர்களைச் சின்னபின்னமாக அடித்து விழவிட்டு நிர்விக்நமாக யாகத்தை நிறைவேற்றுவித்தனர். பிறகு விச்வாமித்திரர் அவபிரதம் நீராடிப் பூர்ணகாமராயினர். யாகத்திற்காக வந்திருந்த ரிஷிகளும் தத்தம் இருப்பிடம் போய்ச்சேர்ந்தனர்.

## மிதிலாநகர்க்குப் புறப்பாடு.

இராமபிரானுடைய அவதார ரஹஸ்யமறிந்த மஹாநுபாவராகிய விச்வாமித்திரர், எம்பெருமானை எக்காலும் இணைபிரியாத பூமகளார் ஜநகமஹாராஜனுடைய யஜ்ஞவாடத்தில் அயோநிஜையா அவதரித்து வளர்ந்துவருகிற ஸீதாபிராட்டியை இராமனுக்கு விவாஹஞ் செய்து வைத்து

க்ருதார்த்தராகக் கருதி இருவரையுங் கூட்டிக்கொண்டு மிதிலாநகரத்துக்கு அழைத்துக் கொண்டு போகையில் வழியிற்கண்ட பற்பல தேசங்களின் சரித்திரங்களைச் சொல்லிக்கொண்டு போனார். ஓரிடத்தில் கங்காநதியில் ஓடமேறி நடக்க, இராமன் கங்காநதியின் வரலாற்றை வினவ, அதனை விரிவாகச் சொன்னார் முனிவர்.

## அஹல்யா சாப மோக்ஷம்.

பின்பு அந்நதியைக் கடந்துபோம்போது வழியில் ஓர் ஆச்ரமத்தைக் கண்டு ஸ்ரீராமன் 'இது யாருடைய ஆஶ்ரமம்?' என வினவ, விச்வாமித்ரர், "இது கௌதம மஹர்ஷியின் பரமபரிசுத்தமான ஆச்ரமம்; முன்பு இவ்வாச்ரமத்தில் அம்முனிவருடைய தர்மபத்நியாகிய அஹல்யாதேவியைப் புணர தேவேந்திரன் ரிஷிவேஷங் கொண்டுவந்து விரும்ப, அவனிடத்தில் அஹல்யையும் காமுற்று இசையவே, இந்திரன் அவளுடன் புணர்ந்து கௌதம முனிவர்க்கு அஞ்சி ஓடிப்போகத் தொடங்கினன்; கௌதமர் அவனைக்கண்டு அவன்செய்த கெடுதியையு மறிந்து அவனை வ்ருஷணமற்றவனும்படி சபித்து, அஹல்யையை நோக்கி 'நீ ஒருவர்க்குங் காணக்கூடாத உருவினளாகக்கடவை' என்று சபித்தனர். பிறகு அவள்வணங்கி வேண்டிக்கொள்ள "இவ்வாஶ்ரமபதத்திற்கு ஸ்ரீராமபிரான் வரப்போகிறான்; அப்போது அவனுடைய பாததூளிபட்டு நீ சாபந்தீர்ந்து என்னை அடையப்போகிறாய்" என்று அநுக்ரஹித்தனர்—ஆகையால் நாம் அங்கே செல்வோம்" என்றார் விச்வாமித்திரர். அப்படியே தாசரதிகள் இருவரும் முனிவருடன்கூடி அவ்வாஶ்ரமத்துக்குச்சென்று கற்பாறையாய்க் கிடந்த அஹல்யையை இராமன் மிதிக்க, அவள் சாபத்தினின்றும் விடுபட்டு சிலாரூபத்தை விட்டு நிஜரூபமடைந்து இராகவனது திருவடிகளில் வணங்கி வழிபாடுகள் செய்தனள். கௌதம முனிவரும் வந்து இராமனைப் புகழ்ந்து பூஜித்தனர். பிறகு அம்மஹர்ஷியிடம் விடைபெற்றுக்கொண்டு மிதிலாபுரி சென்று சேர்ந்தனர். விச்வாமித்ரமாமுனிவர் வருவதைக்கேட்டு ஜநகமஹாராஜன் எதிர்கொண்டு வந்து அழைத்துக்கொண்டுபோய் ஆஸநமிட்டு முறைப்படி உபசாரங்கள் செய்து பிறகு இவ்விரண்டு பாலர்களையும் தசரதமஹாராஜனுடைய புத்திரர்களாக அறிந்து கொண்டாடினன். ஜநகருடைய புரோஹிதராகிய ஶதாநந்தர் தனது தாயாகிய அஹல்யையின் சாபத்தைத் தீர்த்த வரலாற்றைச் செவியுற்று மிகவும் புகழ்ந்து பின்பு விஶ்வாமித்திருடைய ப்ரபாவத்தை இராமபிரானுக்கு விரிய உரைத்தனர்.

பிறகு விச்வாமித்திரர் ஜநகனை நோக்கி 'நீர் கந்யாஶுல்கமாக வைத்திருக்கிற வில்லை இராமனுக்குக் காட்டும்' என்ன; ஜநகன் சென்று ருத்ரனுடையதாகிய அவ்வில்லைப் பூஜித்து எடுத்துக் கொண்டுவந்து இராமன்முன்னே நிறுத்தி 'நான் யாகஞ்செய்கைக்காகப் பூமியை உழுங்காலத்தில் அந்தப்பூமியில் பன்னிரண்டு வயதுள்ளவளாய் ஸகல லக்ஷண ஸம்பந்நையாய்த் திருமகள் போன்றவளான ஒருமகள் கிடைத்தாள்; அவளை நான் வெகு ஆதரத்துடன் எடுத்துக்கொண்டு வந்து உயிரோடொப்ப வளர்த்துவருகிறேன். அவள் இப்போது விவாஹத்துக்கு உரிய வயது உடையவளாயினள். இவளுக்குத் தக்க வரனைக்காணமல் இவ்வில்லை நாணேற்றும் மஹாபுருஷனுக்குத் தாரைவார்த்துக் கொடுப்பதாக நிச்சயித்தேன், இதைப்பலர் வந்து பார்த்து அசைக்கவும் முடியாமல் மீண்டுபோயினர்—என்றுரைத்தான்.

## வில்லிறுத்து மேல்லியல்தோள் தோய்ந்தது.

அதைக்கேட்டு ஸ்ரீராகவன் எழுந்து முனிவருடைய ஆஜ்ஞையைப் பெற்றுக்கொண்டு அந்த வில்லையெடுத்து அவலீலையாக நாணேற்றும்போது அந்தவில் இராமனுடைய பலத்தைப் பொறாமல் முறிந்து வீழ்ந்தது. அதனால் ஸ்ரீராகவனுடைய மஹிமையை ஒப்புயர்வற்றதாக ஜநகமஹாராஜன் அறிந்து இவரை மஹாபுருஷனென்று அறுதியிட்டுத் தனது பெண்ணாகிய ஸீதாதேவியை இராமனுக்குக் கொடுத்து விவாஹஞ் செய்விப்பதாக ப்ரதிஜ்ஞை பண்ணி, தனது கர்ப்பத்தில் உதித்த ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குக் கொடுப்பதாகவும் நிச்சயித்து, தசரதமஹாராஜனுக்கு மணவோலை எழுதிவிட்டு மிதிலாபுரியில் விவாஹகோலங் கோடித்தான்.

தசரத சக்கரவர்த்தி திருமணப்பத்திரிகையைக் கண்டு மிகமகிழ்ந்து பரதசத்ருக்ந ரிருவரையுங் கூட்டிக்கொண்டு புரோஹிதர் மந்திரிகள் முதலிய பரிவாரங்களுடன் பத்நீஸமேதனாய்ப் புறப்பட்டு மிதிலை சேர்ந்து ஜநகனால் பூஜிக்கப்பெற்று, மஹாராஜன் நேரில் மொழிந்த இராமனது வைபவத்தையும் ஸீதாதேவியின் மஹிமையையும் இவ்விருவர்கட்கும் விவாஹம்செய்விக்க முயன்றதையும் ஆவலுற்றுக்கேட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தழுவிக்கொண்டு உச்சிமோந்து ஜநகனை மிகவுங்கொண்டாடி, குஶத்வஜருடைய பெண்களாகிய மாண்டவீ, ஶ்ருதகீர்த்தி என்பவர்களை பரதஶத்ருக்நர்களுக்குக் கொடுப்பதாக நிச்சயித்தபடியையுங் கேட்டுப் பிள்ளைகள் நால்வர்க்கும் கோதாநவ்ரதத்தை ஸாங்கமாக நடத்தினான்.

மறுநாள் ஜநகமஹாராஜன் நகர வீதிகளையும் மாளிகைகளையும் அதிவிசித்திரமாக அலங்கரித்துத் திருமணப்பந்தலைக் கோடித்து அதனிடையில் ரத்நமயமான வேதிகையைக் கற்பித்து அதைச் சுற்றும் முத்துத்தோரணங்களைகாட்டி நான்குபுறத்திலும் ஸுவர்ணகலசங்களையும் பாலிகைகளையும் பரப்பி, மத்தியில், நவமணிகளிழைத்த பூர்ணகும்பத்தை வைத்து மணிமயமான குத்துவிளக்குகளில் மங்களதீபமேற்றி அக்நியை ஸ்தாபித்து தசரதசக்ரவர்த்தியையும் ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்களையும் தானே நேரிற்சென்று அழைத்துக்கொண்டு வந்து அதிவிசித்திரமான ஆஸநங்களையிட்டு மற்றும் சுற்றத்தார் மஹர்ஷிகள் ப்ராஹ்மணர்கள் ராஜபுருஷர்கள் முதலானோரையும், அவரவர்களுக்குத்தக்க ஆஸநங்களில் இருத்தி மங்களவாத்யங்களை முழங்குவித்து, வஸிஷ்டர் ஶதாநந்தர் முதலிய புரோஹிதர்கள் வைதிக க்ருத்யங்களை நிர்வஹிக்க ஹோமம் வளர்த்துப் பொரிகளிறைத்துப் பிள்ளைகள் நால்வர்க்குங் கங்கணங்கட்டி ஸீதாதேவி முதலிய கலியாணப்பெண்களை ஸர்வாபரண பூஷிதைகளாக்கி விவாஹப்பந்தலில் அக்நிக்கெதிராக நிறுத்தி, இக்ஷ்வாகு முதல் தசரதசக்ரவர்த்தியளவாகவும், நிமி முதல் ஜநகனளவாகவும் இருவருடைய வம்ஶபரம்பரைகளையுங் கீர்த்தித்து ஶுபமுஹூர்த்தத்தில் “ ரகு குலதிலகனாகிய ஓ ஸ்ரீராமனே ! என்னுடைய பெண்ணாகிய இந்த ஸீதை உமக்கு தர்மபத்நியாகக்கடவள் ; நீர் உமது செந்தாமரைத் திருக்கையினால் இவளுடைய தளிர்போன்ற கையைப்பிடித்து அங்கீகரியும்” என்று சொல்லிப் பிராட்டியை இராமபிரானுக்குத் தாரைவார்த்துக்கொடுத்தான். பிறகு அடைவே மற்ற மூன்றுகுமாரர்கட்கும் விவாஹமஹோத்ஸவம் நடைபெற்றது. திருக்கல்யாணம் ஐந்துநாளும் பரமவிபவமாகக் கழிந்தபிறகு வந்திருந்தவர்கள் எல்லாரும் யோக்யதாநுகுணமாக ஸம்மானிக்கப்பெற்று விடைபெற்றுத் தத்தம் இருப்பிடம் போய்ச்சேர்ந்தனர்.

## பரசுராம பராஜயம்.

பின்பு தசரதசக்ரவர்த்தி புத்திரர்கள் நால்வரையும் மணாட்டுப்பெண்களுடன்கூட அழைத்துக்கொண்டு ஸபரிவாரமாகப் புறப்பட்டு அயோத்திக்கு மீண்டுவருங்கால் இச்செய்திகளையெல்லாம் அறிந்த பரசுராமன் வெகு கோபத்துடன் எதிர்வந்து ஸ்ரீராமனை நோக்கி ‘ஓ பாலனே ! நீ ஒரு சொத்தை வில்லை முறித்துத் தன்னைப் பலவானாக நினைத்துச் செருக்கியிருக்கிறாய் ; அஃது ஒரு பொருளல்ல ; நீ ஆண்பிள்ளையாகில் இவ்வில்லை முறி, பார்ப்போம்’ என்று தன்கையிலுள்ள தொருவில்லைத் தந்தார். அதை இராமன் அவலீலையாக வாங்கி நாணேற்றி அம்பு தொடுத்துக் கோபத்துடன் ‘ஓ பரசுராமா ! உம்மை அந்தணனென்று பொறுத்தேன் ; ஆகையால் உம்மைக் கொல்லவில்லை ; இந்த அம்புதொடுப்பு வீணாகப்போகாது ; இவ்வம்பு கொண்டு, நீர் தபோபலத்தினால் ஸம்பாதித்திருக்கும் லோகங்களையாவது அழித்துவிடுகிறேன் ; அல்லது உம்முடைய அந்தரிக்ஷத்தில் வாயு வேகமாய்ப்போகிற வழியையாவது அழித்துவிடுகிறேன் ; இவ்விரண்டில் உமக்கு எது இஷ்டம் ?’ என்று கேட்க, பரசுராமன் ‘நீர் ஸாக்ஷாத் விஷ்ணுவே ; மற்றொருவனால் இது நாணேற்ற முடியாது ; நான் இப்பூமியைக் காச்யபருக்குக் கொடுக்கும்போது அவர் என்னை இப்பூமியிலிருக்கக்கூடாதென்று ஶபதம்பண்ணி வாங்கிக்கொண்டாராகையால் நான் இந்நிலத்தில் அடி வையாமலே மஹேந்திரத்திற்குப் போய்விடுகிறேன் ; இனி இவ்வம்பை என்னுடைய லோகங்களில் விட்டுவிடும்’ என்று வெகு தீநஸ்வரமாய்ச் சொல்ல, இராகவனும் அப்பாணத்தி

ஞல் அவருடைய லோகங்களை அழித்துவிட்டார். பின்பு பரசுராமன் ஒளிமழுங்கி மஹேந்திரத்திற்குப் போய்விட்டான். மூன் மூவெழுகால் மன்னரைக்கொன்ற மழுவேந்திய பரசுராமனைக் கண்டு 'நம் பிள்ளைகளுக்கு என்ன தீங்குவருகிறதோ!' என்று திகிலடைந்து மூர்ச்சித்திருந்த தயாதன் பயந்தீர்ந்து மகிழ்ந்து யதாக்ரமமாக அயோத்தி எய்தி நெறி வழுவாது ராஜ்ய நிர்வாஹம் செய்துகொண்டு வந்தான். திருக்குமாரர்கள் நால்வரும் தங்கள் தங்கள் மனைவிகளுடன் கூடி உல்லாஸமடைந்து இனிமையாக வாழ்ந்து கொண்டிருந்தனர். ... ... *

## இராமனுக்கு முடிசூட்ட முயற்சி.

இப்படி சிலநாள் கழிந்தபின்பு கேகயராஜனுடைய மகனாகிய 'யுதாஜித்' என்பவன் தன்னுடைய மருமகனாகிய பரதனைத் தன்தேசத்துக்கு அழைத்துக்கொண்டு போனான். அந்தப் பரதனிடத்தில் மிக்க அன்புற்ற ஶத்ருக்நன் பரதனைவிட்டு நொடியளவும் பிரியமாட்டாத தன்மையனானமையாலே தானும் அவருடன்கூடவே பரிசர்யை பண்ணிக்கொண்டு கேகயதேசம் சென்றான்.

தசரதச்சக்ரவர்த்தி வயது முதிர்ந்தவனானமையால் ராஜ்யபாரத்தை ஸ்ரீராமபிரானிடம் ஒப்புவித்துத் தான் ஸுகமாகக் காலக்ஷேபம் பண்ணிவரக் கருதி மந்திரிகளையும் புரோஹிதர்களையும் ப்ரஜைகளையும் திரட்டித் தன்மனக்கருத்தை வெளியிட்டான். அதைக்கேட்டு அனைவரும் அளவற்ற ஆநந்தமடைந்து 'ஓ அரசரே! நீர் எங்களை இதுவரை வெகு ஒழுங்காகவே ஆண்டுவந்தபோதிலும் எங்கள் மனம் உம்முடைய பிள்ளை பக்கலிலேயே ஊன்றியழுந்திக் கிடக்கிறது. அவருடைய குணங்கள் எண்ணிறந்தவை; எங்களுடைய பாக்கியத்தினால் தான் அவரை முடிசூட்ட உமக்குக் கருத்து உண்டாயிற்று. ஆநந்தம்! பரமாநந்தம்!!; விரைவில் தானே இக்கருத்தை நீர் நிறைவேற்றவேண்டும்' என்று தங்கள் ஆசையை அறிவித்தனர்.

அரசன் அதைக்கேட்டுக் களித்து அடுத்த புஷ்ய நக்ஷத்திரத்தில் இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய நிர்ணயித்தான். கோஸலநாடு முழுதும் ஒரே ஆநந்தமயமாகக் கிடக்கிறது. விசித்திரமான நகராலங்காரங்கள் நடைபெறுகின்றன.

## மந்தரை சூழ்ச்சி.

அக்காலத்தில் கைகேயியின் வேலைக்காரியாகிய மந்தரை என்பவள் [கூனி], மேல் மாளிகையில் நின்றுகொண்டே ஜனங்களின் களிப்பையும் ஊரின் அலங்காரங்களையும் கண்டு பொறாமை கொண்டவளாய் "இவர்களுடைய களிப்பைக் குலைக்கும் வகை ஏதோ?" என்று ஆலோசித்துச் சிறிதுநேரங் கழித்துக் கீழேயிறங்கி, ஸ்ரீராமபட்டாபிஷேகத்தைக் கேட்டு வெகு மகிழ்ச்சியுடனே தன்மாளிகையை அலங்கரித்துத் தானும் ஸர்வாபரண பூஷிதையாய் ஓர் ஆஸநத்தில் உட்கார்ந்து ப்ரியாலாபங்களைச் செய்துகொண்டிருக்கிற கைகேயியினிடஞ் சென்று 'ஓ மூடப்பெண்ணே! நீ இப்படி ஸந்தோஷித்திருப்பதற்கு இதுவா காலம்? மேல்விளைவதை அறியாமல் களிப்புற்றிருக்கிற உன்னைக்கண்டு, உன்சோற்றை உண்டுவளர்ந்த நன்றியறிவாலே என்மனம் மிகவும் வருந்துகின்றது; இப்போது நான் சொல்லும்பேச்சைக் கேளாயாகில் நீ உன் மஹிமையை இழந்தாயாவாய்; உனக்குத்தீமையை விளைக்க நினைத்த உன்கணவனுடைய மனத்தை ஆராய்ந்து இனியாகிலும் உனது நன்மையைத் தேடப்பாராய்' என்று உடம்பலந்து முகம்வாடிக் கண்ணீர் விட்டுக்கொண்டு அவளுக்கு நன்மை உரைப்பதுபோல் தழுதழுத்த குரலுடன் சொல்ல, அதைக்கேட்ட கைகேயி 'ஓ தோழீ! இப்போது எனக்கு விளைந்த தீமையாவது என்? அதை நான் அறிய விரித்து உரையாய்' என்று கேட்க, அதற்கு மந்தரை 'அறிவு கெட்டவளே! நீ இன்னமும் தெரிந்துகொள்ளவில்லையா? இன்றிரவு விடிந்தவாறே இராமனுக்குப் பட்டாபிஷேகமாம்; அதற்கு வேண்டும் வகைகளை அரசன் அமைத்துவிட்டான்; இனிக் கௌஸல்யை ராஜமாதாவாய் அதிகாரம் செலுத்தி உன்னையும் தனக்கு அடிமையாக்கிக்கொண்டு உன்பெருமையை அழித்து உன்னிடத்தில் சக்களத்திக் காய்ச்சலைக் காட்டுவாள். இராமனும் உன்பிள்ளையினுடைய செல்

வத்தையெல்லாம் பிடுங்கிக்கொண்டு அவனைக் காட்டுக்குத் துரத்திவிடுவென்; அல்லது தன்கீழ் இழிதொழிலுக்கு ஆளாக்கிக்கொள்வன், உங்களுக்கு இதைவிட வேறு அவமானம் என்னவேண்டும்? ஆகையால் நீ இப்போது அரசன் முயற்சியைக் குலைத்தாயாகில் ஜீவிக்கலாம்' என்றிப்படி பலவாறாகச் சொல்லக்கேட்டு, கைகேயி, 'ஓ பேதாய்! இராமன் என்னிடத்தில் பெற்றதாயினும் பன்மடங்கு மிக்க அன்பு பூண்டிருக்கின்றான்; ஒருவரையும் வருத்தப்படுத்தவல்ல இயல்பு உடையவனல்லன் அவன். கௌஸல்யா தேவியும் என்னிடத்து அளவுகடந்த அன்பு மிக்கவளே. ஆதலால், நீ அதிசங்கைப்படுவதெல்லாம் வீண்' என்றாள். இப்படி கலக்கமற்ற கைகேயியின் மனத்தை மந்தரையானவள் பல கோட்சொற்களைக்கூறி, மந்தரபர்வதம் கடலைக்கலக்கினாற்போற் கலக்கித் தன்மொழியில் நம்பிக்கை கொள்ளுமாறு செய்துகொண்டாள்.

## கைகேயி வரம் வேண்டல்.

கைகேயி மந்தரையின் கலஹச்சொற்களைக் கேட்டு மனங்கலங்கி இராமனுடைய திருவபிஷேக மஹோத்ஸவத்தைக் குலைத்துவிடக்கருதித் தானணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றியெறிந்துவிட்டுப் புனைந்த கூந்தலைக் குலைத்துக்கொண்டு மூட்டாக்கிட்டு வெறுந்தரையில் படுத்து ஒருவர்க்கும் பதில் சொல்லாமல் கோபவ்யஸநங்களுக்கு அடிமைப்பட்டு, போஜனமுங்கூடச்செய்யாமல் அழுதுகொண்டு படுத்திருந்தாள். தசரதசக்ரவர்த்தி தனக்கு உயிர்க்காதலியாகிய கைகேயியின் அரண்மனைக்குவந்து இவ்வேஷத்துடனே ஒரு மூலையிற்படுத்திருக்கிற அவளைக்கண்டு 'ஓ! பிராணநாயகியே! நீ இப்படி வருந்திக் கிடப்பதற்குக் காரணமென்? உனக்கு யாராவது ஏதேனும் தீங்கு செய்தார்களா? உனக்கு எவ்விதமான குறையுண்டானாலும் தீர்க்க நானிருக்க, என்னுடன் சொல்லாமல் இப்படியிருக்கலாகாது; இப்போது உன் இருப்பைக்கண்டு எனக்குத் தரிப்பது அரிதாயிருக்கிறது; ஆகையால் உனக்கு வேண்டுமவற்றை என்னுடன் சொல்லாய்' என்று வெகு ஆர்த்தியுடன் கேட்டான். அதற்குக் கைகேயி 'ஓ அரசனே! நீர் முன்பு ஒரு காலத்தில் சம்பராஸுரனோடு போர்புரியப்போனீர்; அப்போது உம்முடைய தேரை நடத்தவல்ல பாகனில்லாமையால் நான் இருந்து உமக்கு வெற்றியுண்டாகும்படி தேரை நடத்தினேன். அதனால் நீர் அந்தச் சம்பராஸுரனை வென்று என்மீது மகிழ்ச்சியுற்று 'உனக்கு இரண்டு வரம் தருகிறேன்; உனக்கு இஷ்டமானதை வேண்டிக்கொள்' என்று எனக்குச்சொன்னீர்; அதற்கு நான் அவ்வரங்களை வேண்டும்போது மற்றொருஸமயம் பெற்றுக்கொள்வதாகச் சொல்லியிருக்கிறேனன்றோ? அவ்விரண்டு வரங்களையும் இப்போது எனக்குத் தரவேணும்; இராமனுக்கு இவ்வபிஷேகத்தைத் தவிர்த்துத் தபஸ்விவேஷத்துடன் அவனைக்காட்டுக்கு அனுப்பவேணுமென்பது முதல்வரம்; என்பிள்ளையாகிய பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்விக்கவேணுமென்பது இரண்டாவதுவரம். ஸத்யம் தவறாத நீர் இதைத் தவிரவொண்ணாது. தவறினால் நான் எழுந்திரேன்; போஜனஞ் செய்யேன்; இப்படியே கிடந்து உயிரை விட்டிடுகிறேன்' என்றாள்.

சக்ரவர்த்தி இக்கொடுஞ் சொல்லைக்கேட்டு இடிவிழுந்தவன்போல மூர்ச்சித்துக் கிடந்து சிறிதுநேரங் கழித்து ப்ரஜ்ஞையடைந்து கண்கள் சுழன்று கண்ணீர்வழிந்து உடலம் விதிர்விதிர்த்து நாத்தழுதழுத்து தீனஸ்வரத்துடன் கைகேயியைப்பார்த்து 'ஓ! சண்டீ! நீ என்னவார்த்தைக் கேட்டாய்! ஸ்ரீராமன் உனக்கு என்ன அபகாரம் செய்தான்? அவன் விஷயத்தில் நீ தீமனங்கொள்வது சிறிதும் உரியதன்று, அவன் உன்னைப் பெற்றதாயினும் மிகையாகக் கௌரவித்துக் கொண்டாடாநிற்க, அதற்கு எதிர்த்தட்டாக நீ இப்பாப புத்தி கொண்டாய். இத்தகைய துர்ப்புத்தியை உனக்குக் கற்பித்தவர் யார் கொல்? நான் இராமனது மதிமுகத்தை ஒரு நொடிப்பொழுதாகிலும் காணேனாகில் அந்தோ! உயிர்தரியேனே! உன் சொற்படி செய்தேனாகில் நாட்டார் என்னை எங்ஙனம் பழிப்பர்கள்! 'பெண்சாதி பேச்சைக்கேட்டு ஸ்ரீராமசந்திரனைக் காட்டுக்குத் துரத்திய படுபாவி' என்று பழியார்களோ? இதனால் உனக்குத்தான் என்னபுகழுண்டு? வ்ருத்தையான கௌஸல்யை, வெகுநாள் மலடி நின்று பெற்ற மஹாகுணஶாலியான ஒரு பிள்ளையைக் காட்டுக்குப் போகவிட்ட என்னை என்ன மதிப்பள்? அவளுக்கு நான் என்ன உத்தரம் சொல்வேன்? என்றிப்படி பலவகையாகப் புலம்பினன்.

இப்படி அலற்றுகிற சக்ரவர்த்தியைக்குறித்துக் கைகேயியானவள் ‘ ஓ அரசனே ! நீ எனக்கு முன்கொடுத்த வரத்தை இப்போது இல்லைசெய்யப்பார்க்கிறாய் ; இவ்வரத்தைக் கொடாவிடில் தர்மஹாநியாம் என்று சிறிதும் நினைக்கின்றிலை ; நான் இப்போது உன் முன்னிலையில் தானே உயிரை நீத்துவிடுகிறேன் ’ என்றாற்போலச் சில கடுமையான வார்த்தைகளைச் சொல்ல, அதைக் கேட்டு அரசன் ஒன்றும் தோன்றாமல் மதிகலங்கி மூர்ச்சித்துத் திரும்பி எழுந்திருந்து ஸுமந்திரனையழைத்து ஸ்ரீராமனை அழைத்துக்கொண்டு வருமாறு நியமித்தான். ஸுமந்திரன் அவ்வாஜ்ஞையைச் சிரமேற்கொண்டு ஸ்ரீராமனெழுந்தருளியிருக்கும் அரண்மனைக்குச் சென்று, திருவாசலில் நின்று தூதன்வழியாகத் தன்வரவையறிவித்து விடைபெற்றுக்கொண்டு உள்ளே சென்று ‘ ஸ்வாமீ ! உம்முடைய பிதா உம்மை அழைத்துவரச்சொன்னார் ; வாசலில் தேரை நிறுத்தியிருக்கிறேன், எழுந்தருளீர் ’ என்று விண்ணப்பஞ்செய்தான். ஸ்ரீராமன் அதைக்கேட்டு உடனே புறப்பட, பிராட்டி அவனுக்கு மங்களாஸாஸநம் பண்ணிக்கொண்டு திருவாசலளவும் தொடர்ந்து வர, பெருமாள் பிராட்டியைத் தன்னுடைய ப்ரேமமெல்லாம் தோற்றக் கடாக்ஷித்துவிட்டுத் தான் தேரிலேறி ஸுமந்த்ரனுடன் கைகேயி மாளிகைக்குச் சென்று அங்கு மிக்க பரிதாபமுற்றிருக்கிற தகப்பனாரைக்கண்டு ‘ ஸ்வாமிந் ! நீர் இப்படி பரிதபித்திருப்பதற்குக் காரணமென் ? என்று கேட்க, அதற்குச் சக்கரவர்த்தி மறுமொழி கூறமாட்டாமல் விக்கியிருக்க, அவ்வளவிலே கைகேயி எதிரிலே வந்து ‘ ஓ இராமா ! உம்முடைய தகப்பனார் உம்மைக்காட்டுக்கு அனுப்பும்படியாகவும் பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யும்படியாகவும் வரமளித்திருக்கிறார் ; அதை உமக்குச் சொல்லி உம்மைக்காடேறப் போகவிடுகைக்காக உம்மை இங்குவரவழைத்தார் ; அவர் உம்மிடத்து வைத்துள்ள மிக்க அன்பினால் இதை உம்முடன் சொல்லமாட்டாமலும் தர்மத்துக்கு உட்பட்டுக் கொடுத்தவரத்தைத் தவறமாட்டாமலும் பரிதபிக்கிறார். அவருடைய கருத்தை நான் உமக்கு வெளியிட்டேன் ’ என்றாள்.

## இராமன் வநவாஸப் புறப்பாடு.

ஸ்ரீராமன் இதைக்கேட்டு ‘ அம்மா ! தகப்பனார் கொடுத்தவரத்தைப் பூர்த்திசெய்ய என்னால் யாதொரு தடையும் கிடையாது. நான் காட்டுக்குப்போகிறேன் ; தகப்பனார் வருந்தவேண்டா ’ என்று சொல்லித் தசரதனையும் கைகேயியையும் தண்டனிட்டுப் பிறகு கௌஸலையார் மாளிகைக்குச் சென்று நடந்த கதைகளையறிவிக்க அவள் அதைக்கேட்டு மூர்ச்சித்துப் பலவாறாகப்புலம்பி, அனேக ஹேதுக்களைச் சொல்லிக் காட்டுக்குப் போகக்கூடாதென்று தடைசெய்ய, அதற்கெல்லாம் தக்க ஸமாதாநங்களைச் சொல்லிக் கௌஸலையாரைத் தேற்றிப் பிராட்டியிடஞ்சென்று இச்செய்தியை அறிவித்தார். ஸீதாதேவி இதைக்கேட்டு மிகவும் வருந்திக் கரைகாணாமல் தரிப்பற்றிருக்கிற வளவில் ஸ்ரீராமன் பலவாறாகத்தேற்றி “ நான் பதினாலு வருஷம் வநவாஸம் செய்து வருகிறேன் ; அதுவரையில் நீ தசரதமஹாராஜாவுக்கும் கௌஸலையாருக்கும் ஒரு குறைவு வாராமல் பரிசர்யை செய்துகொண்டிருப்பாய் ” என்று தன்னை நிறுத்திப்போவதாகச் சொல்ல, அது கேட்ட பிராட்டி மிகவும் கோபித்து “ என் தகப்பனார் உம்மை ஒரு ஆண்பிள்ளையாக எண்ணி என்னை உமக்குக்கொடுத்தார் ; ஒருபெண்பெண்டாட்டியைக் கூடக்கூட்டிக்கொண்டு போய்க் காப்பாற்றி ஆளத்தக்க வல்லமையற்ற உம்மை அப்போது அவர் அறிந்திலர் ; இப்போது அவர் இச்செய்தியைக்கேட்டால் உம்மை நன்றாக வெகுமதிப்பர் ; ஒரு பெண்பிள்ளை ஆணுடை உடுத்துவந்து நம்பெண்ணைக் கைக்கொண்டு போய்த்தூக்காண் ’ என்று நினைப்பர், என்று ப்ரணயரோஷம் தோற்ற வார்த்தைசொல்லித் தன்னையுங் கூட்டிக்கொண்டு போகவேணுமென்று நிர்ப்பந்தித்துத் தானுங்கூடப்போக ஒருப்பட்டாள். ஆதிமுதல் நொடியளவும் பிரியாமல் பணிவிடைசெய்து போரும் இளையபெருமாள் இவர்களிருவரும் காட்டுக்குப்போவதாக ஒருப்பட்டதைக்கண்டு ஸ்ரீராகவனுடைய அடியிணைகளை அவலம்பித்துக்கொண்டு ஸீதாதேவியையும் இராகவனையுங் குறித்து ‘ ஸ்வாமீ ! உயிரைப்பிரிந்த உடலும் ஒரு வஸ்துவாக நிலைநிற்பதுண்டோ ? என்னை இங்கு விட்டுவிட்டு நீர் காட்டுக்குப்போமளவில் நான் ஜீவிக்கும் வகை என் ? ஆகையால் என்னையுங்கூட்

டிக்கொண்டே எழுந்தருளவேணும்; அடியேன் உடனாய் மன்னி வழுவிலாவடிமைகள் செய்ய வேணும்' என்று ப்ரார்த்தித்துத்தானும் வனம்போக ஒருமித்தான்.

ஸுமித்ராதேவி, தன்மகன் வனமேகி அங்குள்ள வருத்தங்களுக்கு நெஞ்சிளகி இங்குற்ற இன்பத்தை நினைந்து இராகவனைத் தனியே விட்டிட்டு வருவானோவென்று சங்கித்து லக்ஷ்மணனை யழைத்து 'அப்பா! நீ வனத்திற்சென்று தாய்தந்தையரான எங்களையும் இவ்வூரையும் நினைத்துப் பின்வாங்கவேண்டா; ஸ்ரீராமனே உனக்குத்தகப்பனார்; ஸீதாதேவியே உனக்குத் தாய்; இவ்விருவரும் இருக்க வனமே உனக்கு ஸகல ஸுகங்களையும் அளிக்கப்போகிறது. ஆகையால் நீ ஒருவிதமான அத்ருப்தியும் அடையாமல் ஸ்ரீராமனுக்கு அந்தரங்ககிங்கரனாயிருந்து கொண்டு ஸுகமே வநவாஸம் செய்துவா' என்று ஹிதஞ்சொல்லியனுப்பினாள்.

பிறகு பிராட்டியையும் இளையோனையுங் கூட்டிக்கொண்டு ஸ்ரீராமன் சக்கரவர்த்தியிடஞ் சென்று 'ஸ்வாமிந்! நாங்கள் மூவரும் வநவாஸம் போகிறோம்; விடை கொடுக்கவேணும்' என்று பாதங்களிற்பணிந்து கைகூப்பிப்பிரார்த்திக்க, கைகேயி இவர்களுக்குக் காய்கிழங்குகள் வெட்டி வைத்துக்கொள்ளக் களைக்கொட்டும் சிறிய கூடையும் உடுக்க மரவுரியும் கொண்டுவந்து வைத்தாள். அம்மரவுரியை அவர்கள் மூவரும் அணிந்துகொண்டு ஆபரணங்களையும் பீதாம்பரங்களையும் விட்டுவிட்டு நிற்கக்கண்டு அந்த:புரத்திலுள்ள ஜனங்களெல்லாம் கண்ணீர் விட்டுக் கூக்குரலோடு புலம்பின.

பின்பு சக்கரவர்த்தியினது கட்டளையின்படி ஸுமந்திரன் கொண்டு நிறுத்தின தேரின் மேலேறி இம்மூவரும் அயோத்தியை விட்டுத் தென்திசை நோக்கி நடந்தார்கள். தசரதன் பரிஜனங்களுடன் சிறிது தூரம் வந்து அத்தேரைப் பார்த்துக்கொண்டிருந்து தேர் கண்ணுக்கு மறைந்தவுடனே புலம்பிக்கொண்டு திரும்பிவந்து அரண்மனையை அடைந்தான். நகரத்து ஜனங்களெல்லாம் ஸ்ரீராகவனுடன் கூடவே காடுசெல்ல நிர்ணயித்து அத்தேரைப் பின்தொடர்ந்து சென்று, அன்றிரவு தேரை ஓரிடத்தில் நிறுத்த, அதைச்சுற்றி அனைவரும் படுத்துக்கொண்டு உறங்குகிற ஸமயத்தில் இராகவன் ஸுமந்திரனை ஏவித் தேரைப் புல்மூடிக்கிடந்த வழியல்லாவழியே நடத்திக்கொண்டு வெகுதூரஞ்சென்று சிருங்கிபேரமென்ற ஊரை அடைந்தனர். கூட வந்திருந்து வழியிடையே உறங்கிப்போன ஜனங்கள் காலையில் விழித்துக்கொண்டு தேரைக்காணாமல் சிறிது தூரஞ்சென்று தேடித் தேர்போன வழியையும் அறியாதே 'இராமபிரான் நம்மை வஞ்சனைசெய்து விட்டுப்போனார்' என்று சொல்லி வருந்திக்கொண்டு தத்தம் வீடேற வந்து சேர்ந்தனர்.

பின்பு இராமனும் இளையவனும் மாப்பாலை விட்டுத் தலைமயிரைச் சடையாகக்கட்டிக்கொண்டு அந்த சிருங்கிபேரபுரத்தில் நின்றும் புறப்பட்டுக் கங்கைக்கரையில் வந்து தேரைவிட்டிழிந்து ஸுமந்திரனுக்கு விடை கொடுத்துவிட்டு, அங்கிருந்த வேடர் தலைவனாகிய குஹனென்பவனுடன் நேசித்து அவன்கட்டின தெப்பத்திலேறிக் கங்காநதியைத் தாண்டி, மறுநாள் பாரத்வாஜ மஹாமுனிவருடைய ஆஸ்ரமத்துக்குச் சென்று அவரைப் பணிந்து, அம்மஹா முனிவர் மிக ஆதரத்துடன் செய்த ஸத்காரங்களை ஏற்று அங்கு நின்றும் புறப்பட்டு அம்முனிவர் காட்டிக்கொடுத்த வழியே சென்று, அதிவிசித்திரமாய் அதிரமணீயமாயிருந்துள்ள சித்திரகூட பர்வதத்தையடைந்து அம்மலைச்சாரலில் மூவரும் இனிமையாக வஸித்துக்கொண்டிருந்தனர்.

## தசரத மரணம்.

ஸுமந்த்ரன் கங்கையில் நின்றிருந்து 'இராகவன் மீண்டுவரக்கூடுமோ?' என்று நெடுநேரம் பார்த்திருந்து வரக்காணாமையால் ஆசையற்றுத் திரும்பித் தேரை ஓட்டிக்கொண்டு அயோத்திக்கு வந்து தசரதனிடம் சென்று கங்கைக்கரையளவும் ஸ்ரீராமன் எழுந்தருளின விதங்களை உரைத்தனன். இதைக்கேட்ட சக்கரவர்த்தி வருத்தம் பொறுக்கமாட்டாதானாய்க் கௌஸல்யா தேவியை அழைத்து, தனக்கு முற்காலத்தில் நேர்ந்த ரிஷிசாபத்தை நினைத்து அதற்கு இப்போது காலம் வந்ததென நிச்சயித்து அச்சாபத்தை அவளிடம் சொல்லத் தொடங்கினன்;—"நான் முன்பொரு

கால் காட்டில் வேட்டையாடப் போனேன்; அப்போது அங்குள்ள ஓர் குளத்தில் ஒரு ரிஷிபுத்திரன் குடத்தில் நீர் மொண்டு கொண்டிருக்க அந்த ஶப்தம் யானையதென்று மயங்கி அதனை அடிப்பதற்காக என்னிடத்திலிருந்த ஶப்த வேதி என்கிற பாணத்தை விட்டேன்; அது சென்று அந்த ரிஷிபுத்திரனுடைய மார்பில் பாயவே அவன் 'ஹா!' என்று இரைந்துகொண்டு கீழே விழுந்து விட்டான். நான் அந்த ஓசையைக்கேட்டு 'இவன் யாரோ மனிதன்; யானை அன்று; அவனை ஆராய்வோம்' என்று அந்த த்வநிவழியே அக்குளக்கரைக்குச் சென்று அங்கு விழுந்து கிடக்கிற ரிஷிகுமாரனைப் பார்த்து 'இவன் ப்ராஹ்மணன்' என்றெண்ணி 'அந்தோ! ப்ரஹ்ம ஹத்யாபாபத்தைச் சம்பாதித்துக் கொண்டோமே! யோசனையின்றி அம்பு எய்தோமே!' என்று பரிதபியா நிற்கையில், என்னைக்குறித்து அக்குமாரன் 'ஓ அரசனே! நான் வைஶ்யனுக்கு ஶூத்ரஸ்த்ரீயினிடத்தில் பிறந்தவன்; ஆகையால் உனக்கு ப்ரஹ்மஹத்யாபாபம் நேரிடாது; என் தாய்தந்தையர் இருவரும் கண் தெரியாதவர்கள், வயது முதிர்ந்தவர்கள்; அவர்களுக்கு ஸகல ஶுஶ்ரூஷைகளும் நானே செய்யவேண்டும்; வேறு கதி இல்லை; 'குடிக்க நீர் கொண்டுவா' என்று சொல்லி அவர்கள் என்னை இங்கே யனுப்பினார்கள்; நான் இக்கதியை அடைந்திட்டேன்; நீ சென்று அவர்களுக்கு இச்செய்தியைத் தெரிவித்துத் தேறுதல் செய்யப்பாராய்' என்று சொன்னான். பிறகு நான் சென்று அக்குமாரனுடைய தாய்தந்தைகளைக்கண்டு விநயத்துடன் நான் செய்த பிழையை அறிவிக்க, அவர்கள் மிகவும் வருந்தி, நான் வழிகாட்ட என்னுடன் கூடவே அந்தப்பிள்ளை இருக்குமிடத்திற்கு வந்து, தாங்களும் அப்பிள்ளையுடன் கூடவே உயிர்துறந்திடுவதாகத் துணிந்து என்னைப்பார்த்து 'ஓ ராஜனே! நாங்கள் இப்புத்திரனைப் பிரிந்து அந்த வருத்தம் பொறுக்கமாட்டாமல் ப்ராணனை விடுகிறோம்; இதுபோலவே நீயும் உன்புத்திரனைப் பிரிந்து அந்த வருத்தம் பொறுக்கமாட்டாமல் ப்ராணனை விடப்போகிறாய்' என்று ஶபித்துவிட்டுப் பரலோகமடைந்தனர். அந்தச்சாபம் பலிக்கவேண்டிய காலம் எனக்கு இப்போது வந்தது" என்று சொல்லிப் பலவாறு புலம்பிக்கொண்டு ஸ்ரீராகவனை நினைத்துக்கொண்டே பிராணனைவிட்டு ஸ்வர்க்கலோக மடைந்தனன்.

## பரதாழ்வான் அயோத்திக்கு வருதல்.

பிறகு மந்திரிகள் புரோஹிதர்கள் எல்லாருஞ்சேர்ந்து யோசித்துப் பரதனையழைத்து வரும்படி கேகயராஜன் பட்டணத்துக்குத் தூதர்களைப் போகவிட்டு அரசனை எண்ணெயில் பொறித்தெடுத்து வைத்துக் காப்பாற்றிக்கொண்டிருந்தார்கள்.

அத்தூதர்கள் அயோத்தியில் நின்றும் புறப்பட்டு வெகு வேகமாய்த் தேரை நடத்திக்கொண்டு போய் மூன்றுநாள் கேகயராஜன் பட்டணத்தை யடைந்தனர். அதற்கு முன்னாள் இரவு பரதன், ஸ்ரீராமன் காட்டுக்கு எழுந்தருளினதாகவும் தசரத சக்ரவர்த்தி பரலோகஞ் சென்றதாகவும் கனாக்கண்டு தெளிவற்றிருக்குங் காலத்தில் இந்தத் தூதர்களைக்கண்டு அயோத்தியில் சக்கரவர்த்தி பரலோகமடைந்ததைக் கேள்விப்பட்டு வருந்தி மூர்ச்சித்துச் சிறிதுநேரங் கழித்துத் தெளிந்தெழுந்து சத்ருக்நனும் தானுமாய்த் தேரேறி அயோத்திக்கு வந்து தன் மாதாவாகிய கைகேயியைத் தொழுதுநிற்க, அவள் தன்பிள்ளையைக்கண்டு எழுந்துவந்து தழுவிக்கொண்டு ஆசீர்வதித்து 'அப்பா! இராமனைக் காட்டுக்குப்போகவிட்டு உனக்காக ராஜ்யத்தை அரசனிடம் யாசித்து வாங்கி வைத்திருக்கிறேன்; இராமனது பிரிவைப் பொறாத சக்ரவர்த்தி உயிர்நீத்தார்; இனி நீயே இந்த ராஜ்யத்தை ஆளக்கடவாயாக' என்று சொன்னாள்.

பரதன் அச்சொல்லைக்கேட்டு ஒருநாளும் அநுபவியாத பெருந்துயரம் அடைந்து மூர்ச்சித்துக்கிடந்து, பிறகு தெளிந்து இராமபிரானுடைய விரஹத்தை நினைத்துப்புரண்டழுது தன்மாதாவைப் பலவாறாக நிந்தித்துப் பின்பு தந்தைக்கு நடத்தவேண்டிய சரமக்ரியைகளையெல்லாம் குறையற நடத்திவிட்டான்.

## பரதன் இராமனை அழைத்துவரப் புறப்படுதல்.

பின்பு ஸுமந்த்ரன் முதலிய மந்திரிகளும் வஸிஷ்டர் முதலிய ரிஷிகளும் சேர்ந்து பரதனை ஸபையில் வருவித்து 'ஓ ராஜகுமாரனே! சக்ரவர்த்தி பரலோகமடைந்தார்; ஸ்ரீராமன் கானகமே மிக விரும்பிப்போந்தான்; அரசனற்ற நாட்டில் நியாயம் நடவாது; மழை பெய்யாது; துர்ஜநங்கள் ஸாதுஜனங்களைப் பீடிப்பார்கள்—இவை முதலான பல தீங்குகள் விளையும்; ஆகையால் நீர் பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளவேணும்' என்று சொன்னார்கள்.

பரதன் கர்ணகடோரமான அப்பேச்சைக்கேட்டு 'ஓ வஸிஷ்ட மஹர்ஷியே! நீ எல்லாமறிந்திருந்து இங்ஙனம் சொல்லலாமா? இவ்வம்ஸத்தில் மூத்தாரிருக்க இளையார் முடிசூடுவதுண்டா? இதற்கு மேற்பட்ட அநீதியுண்டோ? இதற்கு நான் இசைந்தேனாகில் எனக்கு மேற்பட்ட கள்ளன் உண்டோ? நன்று சொன்னீர்கள்; இது ஒருநாளும் நடவாத காரியம்; நான் இப்போதே இராமபிரானெழுந்தருளி யிருக்குமிடம் விடைகொண்டு அவரை வணங்கி வேண்டி மீட்டுக்கொண்டு வரப்போகிறேன்' என்று சொல்லி ஸகல பரிஜநங்களையும் திரட்டிக்கொண்டு போவதற்காக வழிகளைச் செப்பனிடும்படி கட்டளையிட்டு, தாய்மார்களையும் வஸிஷ்டாதிகளையும் ஸுமந்த்ராதிகளையும் மற்றுமுள்ள பரிஜநங்களையும் கூட்டிக்கொண்டு ஸத்ருக்நனும் தானுமாய்ப் புறப்பட்டு ஸ்ரீராமன் சென்ற வழியைப் பிடித்துக்கொண்டு சென்று கங்கைக்கரை சேர்ந்தார்.

## குஹப்பெருமாள் பரதனைக்கண்டு அதிசங்கித்தல்.

அங்கிருந்த குஹன் பரதனையும் பெருஞ்சேனையையுங் கண்டு 'இவன் இராமனை நாட்டைவிட்டுக் காட்டுக்குத் துரத்தினது மன்றியில் காட்டிலும் நலியப் படை திரட்டி வருகிறான்' என்று அதிஸங்கைபண்ணி ஓடங்களை அக்கரையில் கட்டிவிட்டு, பரதனிடம் வந்து பேசி அவருடைய நற்கருத்தை நன்கறிந்து அவருடன் நேசித்துப் பிறகு பரிவாரங்களுடன் கூடப் பரதனைக் கங்கை தாண்டுவிக்க, பரதன் அங்குள்ள பரத்வாஜ முனிவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சித்திரகூடம் போதப் புறப்பட்டு யமுனையாற்றைக்கடந்து, ஸ்ரீராமனிருக்குமிடத்திற்கு அடையாளங்களை பரத்வாஜ முனிவரிடம் கேட்டபடியே தூதர்களுக்கு மொழிந்து 'இவ்வடையாளங்கள் எங்கிருக்கின்றனவோ, கண்டு வாருங்கள்' என்று கட்டளையிட, அவர்களும் போய்த்தேடி, தூரத்தில் மேலே கிளம்புகிற புகையைக்கண்டு அதைப் பரதனிடம் வந்தறிவிக்க, பரதன் தம்முடைய சதுரங்கஸேனைகளை யெல்லாம் அங்கே நிறுத்திவிட்டுத் தாய்மார்களை அழைத்துக்கொண்டு வரும்படி வஸிஷ்டருக்குச் சொல்லிவிட்டுத் தான் ஸத்ருக்நனோடும் குஹப்பெருமாளோடுங் கூடப் பாதசாரியாய் ராமாஸ்ரமத்தை நோக்கி நடந்தான்.

## பரதன்மீது இளையபெருமாள் அதிசங்கித்தல்.

அப்போது திருச்சித்திர கூடத்தில் இராமபிரான் இளையபெருமாளைக் கொண்டு தனக்குப் பணிவிடைகள் செய்வித்துக்கொண்டு மஹாநந்தஸாலியாய் அவ்வனத்தின் விநோதங்களைப் பிராட்டிக்குச் சொல்லிக்கொண்டிருக்குங்கால், அக்காட்டில் மிருகங்கள் ஒன்றுக்கொன்று சண்டையிட அப்பேரொலியைக்கேட்டு ஒரு பெரிய மரத்தின்மீது ஏறிப்பார்த்த லக்ஷ்மணன், பரதன் வருவதைக்கண்டு 'இவன் ஸ்ரீராமனைக் காட்டிலுங்கூட நலியக்கருதிப்படை திரட்டிவருகிறான்' என்றெண்ணி இறங்கிவந்து இதை இராகவனிடம் விஜ்ஞாபிக்க, அவர் பரதாழ்வானுடைய ஹ்ருதயத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டறிந்தவராதலால் விரிய உரைத்து இளையபெருமாளுடைய அதிஸங்கையைத் தவிர்த்தருளினார்.

## தாசரதிகள் தசரதற்குத் தர்ப்பணஞ் செய்தல்.

பிறகு பரதன் மிக்க பரபரப்புடன் இராமபிரானுடைய திருவடிவாரத்தில் வந்து வீழ்ந்து ப்ரலாபிக்க, இராமன் பரதனை எடுத்தணைத்துக்கொண்டு பரமப்ரீதியுடன் யோகக்ஷேமம் வினவி, சக்

கரவர்த்தி பரலோகமடைந்ததைத் தெரிந்து கொண்டு மனம் வருந்தி மந்தாகிநிக்குப்போய் நீராடித் தர்ப்பணம் முதலிய மேற்காரியங்களை யெல்லாம் நடத்தி மீண்டும் தமது ஆஶ்ரமத்திற்கு வந்து சேர்ந்தனர்.

## வஸிஷ்டாதிகள் இராமனைக் காணுதல்.

பின்பு வஸிஷ்டர் முதலிய ரிஷிகள், கௌஸலையார் முதலிய தாய்மார்கள், ஸுமந்திரன் முதலிய மந்திரிகள் மற்ற ப்ரஜைகள் எல்லாரும் வந்து இராகவனைக் குஶலப்ரஶ்நஞ்செய்ய, இராகவன் அவரவர்களுடைய யோக்யதைக்கேற்ப ப்ரணமகுஶலப்ரஶ்நாதிகளைப் பண்ணி ஸத்கரிக்கப்பிறகு எல்லோரும் உட்கார்ந்தனர்.

## பரதாழ்வான் பிரார்த்தித்தல்.

பின்பு பரதன் பெருமாளைத் திருவயோத்திக்கு எழுந்தருளும்படி பிரார்த்தித்துத் தன் மாதாவாகிய கைகேயியும் இதற்கு இசைந்தமையைச் சொல்லி, மற்றும் பல நியாயங்களையும் எடுத்துரைத்து, அப்படி எழுந்தருளாவிடில் தான் அங்கேயே ப்ராயோபவேஶம் செய்வதாகவும் சொல்ல, அதற்கு இராமபிரான் பித்ருவாக்ய பரிபாலனத்தின் ஆவஶ்யகதையையும் அதனைத் தவறுவதால் விளையக்கூடிய பெருந்தீங்குகளையும் எடுத்துரைத்துத் தாம் மீண்டு வருவது உசிதமல்ல என்று சொன்னார்.

## ஜாபாலியின் நாஸ்திக வாதம்.

பிறகு ஜாபாலி யென்னும் முனிவர் இராகவனைத் திருவயோத்திக்குத் திரும்பச் செய்கைக்காக வழியல்லா வழியிலிழிந்து நாஸ்திகர் சொல்வதுபோல் சிலவற்றைச் சொல்ல, அதைக்கேட்டு இராகவன் அந்த மஹிர்ஷியின் மேல் கோபிக்க, அம்முனிவர் சொன்னதுக்குக் கருத்து இன்னதென்பதை வஸிஷ்டர் வெளியிட்டு இராமபிரானுடைய சீற்றத்தை மாற்றினர்.

## பரதன் ஸ்ரீராம பாதுகைகளைப் பெற்று மீளுதல்.

பிறகு பரதனுடைய வேண்டுகோளுக்காகப் பெருமாள் தமது திருவடி நிலைகளைக் கொடுத்து 'இதைக்கொண்டு ராஜ்யம் செலுத்தும்' என்று நியமித்து விடை கொடுத்தார். பரதன் அப்பாதுகைகளைத் தன்முடிமீது தரித்துக்கொண்டு 'க்ருதார்த்தனுனேன், தந்யனுனேன்' என்று ஸந்தோஷ ஸம்ப்ரமங்களைப் பண்ணிக்கொண்டு தேரின்மேலேறிக் கூடவந்த பரிவாரங்களுடன் திரும்பி அயோத்தியுள்ளே புகுதற்கு மனம் விரும்பாமல் அங்கதற்கருகிலுள்ள நந்திக்ராமத்தில் ஸ்ரீராம பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தான் தாபஸ வேஷங்கொண்டு வாஸஞ்செய்துகொண்டு அப்பாதுகைகளுக்குத்தான் மந்திரியாயிருந்து ராஜ்யநிர்வாஹஞ் செய்து வந்தான்.

## இராமன் தண்டகாவனம் புகுதல்.

பின்பு இராமபிரான் சித்திரகூடத்தில் நின்றும் புறப்பட்டு அத்ரிபகவானுடைய ஆஶ்ரமத்துக் கெழுந்தருளினர். அம்மஹர்ஷியின் பத்நியாகிய அநஸூயை யென்பவள் பிராட்டியை மிகவும் புகழ்ந்து பதிவ்ரதா தர்மங்களையெல்லாம் உபதேசித்துச் சிலபூஷணங்களையுங் கொடுத்து ஸத்கரித்தாள். ஸ்ரீராம லக்ஷ்மண ஸீதைகள் மூவரும் அன்றிரவு அங்கே வஸித்து மறுநாள் அங்கு நின்றும் புறப்பட்டு, ரிஷிகள் வழிகாட்ட அவ்வழியே தண்டகாவனம் சென்று புகுந்தனர்.

## விராதவதம்.

அங்கே பல மஹர்ஷிகளின் ஸத்காரங்களைப் பெற்று அவர்களிடம் நியமநம் வாங்கிக்கொண்டு அப்பால் ஓர் அரண்யத்திற்போகும்போது விராதனென்பானோர் அரக்கன் தன் குலத்தில் பல

மிருகங்களைக் குத்தியெடுத்துக் கொண்டுவந்து வழியில் இவர்களைப்பார்த்து விரைந்தோடிவந்து ஸீதையை எடுத்துத் தன்மடியில் வைத்துக்கொண்டு 'இவளை நான் பக்ஷித்துவிடுகிறேன்' என்று சொல்லித் தாசரதிகளைப் பலவிதமாக நிந்திக்க அவர்கள் அவன்மேல் அம்புகளை எறிய அவன் பிராட்டியை விட்டுவிட்டு இவர்களைக் கொல்லக்கருதி இவர்கள் மேல் சூலம் முதலிய பல ஆயுதங்களைப்போட்டுக்கொண்டு வந்து இவ்விருவரையும் தனது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு போகையில் இதைக்கண்டு பரிதபிக்க பிராட்டியின் வருத்தம் தீருமாறு இருவரும் தங்கள்கத்தியை எடுத்து விராதனுடைய புஜங்களை வெட்டிவிட்டார்கள். இராம்பாணம் பட்ட மஹிமையினால் விராதன் தனது பூர்வஜந்ம சரிதங்களை நினைத்து 'ஓ புருஷோத்தமனே! நான் ஒரு கந்தர்வன்; ஒருகால் ரம்பையை அணைய விரும்பினேன்; குபேரன், தன் மருகியோடு புணர நினைத்த என்மேல் கோபமுற்று 'நீ அரக்கனாகக் கடவை' என்று என்னைச்சபிக்க. பிறகு நான் வேண்டிக்கொண்ட தன்மேல் அருள்புரிந்து 'இராகவனால் உனக்கு இந்த ஶாபம் தொலையப்போகிறது' என்று அநுக்ரஹித்தான்; அப்படியே நான் இப்போது சாபம் தொலைந்து சதிர்த்தேன்' என்று சொல்லிவிட்டு இவர்களுக்கு ஶரபங்கமாமுனிவருடைய ஆச்ரமத்திற்கு வழிகாட்டிவிட்டுத் தான் சுவர்க்கமடைந்தனன். இராமலக்ஷ்மணர்கள் அங்கு ஓர் பெரிய குழிவெட்டி விராதனுடலை அதில் தள்ளித் துற்றவிட்டுப் பிராட்டியுடன் கூடச் சரபங்காஶ்ரமஞ் சென்றார்கள்.

## சரபங்க முனிவர் முத்தி பெறுதல்.

அக்காலத்தில் சாபங்கமுனிவரை ஸ்வர்க்கலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போவதாக இந்திரன் வந்து அம்மஹர்ஷியை ப்ரார்த்தித்தபடியையும் அந்த ஸ்வர்க்க புருஷார்த்தாநுபவத்தில் விருப்பமற்ற சரபங்கர் இந்திரனுடைய பிரார்த்தனையை அங்கீகரியாமல் அநாதரம் செய்தபடியையும் பார்த்திருந்து அவ்விந்திரன் போனபிறகு அவ்வாஶ்ரமத்திற்கு இவர்கள் எழுந்தருள, ஸர்வஜ்ஞரான மஹர்ஷியானவர் ஸாக்ஷாத் பரப்ரஹ்மாவதாரமான இராகவனுக்குப் பலவகை ஸத்காரங்களைப்பண்ணி அகஸ்த்யருடைய ஆஶ்ரமத்திற்கு வழி சொல்லிவிட்டுத் தாம் ஒரு பெரிய குண்டத்தில் தீயை மூட்டி இராமபிரானுடைய எதிரில் ஹோமாக்நியில் விழுந்து ஶரீரத்தை விட்டுவிட்டு மோக்ஷத்தை அடைந்தனர்.

## பஞ்சவடி சேர்தல்.

பிறகு அவ்வாரண்ய வாஸிகளான மஹர்ஷிகள் அனைவரும் ஸ்ரீராமனிடம் வந்து சரணம் புகுந்து இராவணாதிகளினால் தாங்கள் படும் பாதையையும் அரக்கர் தின்றுவிட்ட தங்கள் சரீரத்தையுங் காட்டி அவ்வரக்கர்களைத் தொலைத்தருளவேணுமென்று பிரார்த்திக்க. அதை இராகவன் அங்கீகரித்து அவர்களை ஸந்தோஷமாகப் போகச்செய்து பிறகு இச்செய்தியை அறிந்த பிராட்டி 'நீர் நாட்டை விட்டுக் காட்டுக்கு வந்தும் இங்ஙனே சிலரைக் கொன்றிடுவதாக ப்ரதிஜ்ஞை செய்து கொடுத்தல் தகாது; நமக்கு ஒரு குற்றமுஞ் செய்யாதவர்களை நாம் அகாரணமாகக் கொல்வது தருமநெறிக்குஞ் சேராது' என்றிப்படி பலவாறாகச் சொல்லி இராமனது புத்தியை மாற்றமுயல, அதுகேட்ட இராமபிரான் 'நங்காய்! நான் என் உயிரைவிட்டாலும் விடுவேன், உடன்பிறந்தவனையும் உன்னையும் விட்டாலும் விட்டிடுவேன்; பிறர்க்கு ஒரு ப்ரதிஜ்ஞை பண்ணித்தந்து அதிலும் அந்தணர்களிடம் பிரதிஜ்ஞைபண்ணிக்கொடுத்து அதைமாத்திரம் நிலைக்கட்டாது பழுதாக்கமாட்டேன்' என்று தமது ஆஶ்ரித பக்ஷபாத மஹாகுணத்தை விளக்கிக்காட்டிப் பிறகு வழியிடையே அகஸ்த்யமுநியின் ஆஶ்ரமஞ்சென்று சேர்ந்து அம்முனிவனால் பூஜிக்கப்பெற்று அவர் அளித்த வைஷ்ணவதநுஸ்ஸையும் பாணத்தையும் வாங்கிக்கொண்டு அவர் காட்டின வழியே சென்று கோதாவரிக்கரையில் பஞ்சவடியில் இனியதோரிடத்தில் தமது நியமநப்படி இளையபெருமாள் பர்ணசாலை அமைத்திட, அங்குப் பரமபோகமாக வாழ்ந்து வந்தனர். ௪

## சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தல்.

இப்படி ஒருவருஷம் பஞ்சவடியில் எழுந்தருளியிருக்கும்போது ஹேமந்தகாலத்தில் சூர்ப்பணகை யென்றொரு அரக்கி அழகியவடிவமெடுத்து வந்து இராகவனைக்கண்டு காமவிகாரமடைந்து

தன்னை மனைவியாகக் கொள்ளுமாறு விரும்ப, இராகவன் 'எனக்கு ஒரு மனைவி இருக்கிறாள்; என் தம்பியாகிய லக்ஷ்மணனை அடைந்தாயாகில் ஸுகமடையலாம்' என்று சொல்ல, அப்படியே அவள் லக்ஷ்மணனிடம் செல்ல, 'நான் ஒருவர்க்கு வேலைக்காரன்; என்னை அடைந்தால் நீயும் வேலைக்காரியாவாய்; ஆகையால் அவரையே அடைவது உனக்கு நலம்' என்று லக்ஷ்மணன் சொல்ல, இப்படி அங்குமிங்குமாய்த் திரிந்து இஷ்டத்தைப்பெறாமல், "நம் இஷ்டத்தை இந்த ஸீதை நிறைவேறவொட்டாமல் செய்கிறாளாகையால் இவளைத் தின்றுவிடுவோம்" என்று அவ்வரக்கி ஸீதாதேவியிடம் ஓட, உடனே இலக்குமணன் இராமபிரானது ஆஜ்ஞையினால் அவளைத் தகைந்து காதையும் மூக்கையும் அறுத்து அங்கபங்கஞ் செய்திட்டார்.

[சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தது இளையபெருமாளின் செய்கையாயினும் இதனை இராமபிரான் மேல் ஏற்றி அநுஸந்திப்பதும் ஆழ்வார்களுக்கு உண்டு; "சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு, அவள் ஆர்க்க அரிந்தானைப்பாடிப்பற" "கலைவணக்கு நோக்கரக்கி மூக்கைநீக்கி" இத்யாதி அருளிச் செயல்கள் காண்க. இங்ஙனம் அருளிச்செய்வது - இராமனது கருத்துக்கு ஏற்ப அவன் கட்டளையிட்டபடி இவன் செய்தனனாதலின் ப்ரயோஜ்ய கர்த்தாவின் வினையாதல் பற்றியென்க. அன்றியும், "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றபடி இராமபிரானுக்கு லக்ஷ்மணன் வலத்திருக்கை எனப்படுதலால் அங்ஙனம் கையாகிற லக்ஷ்மணனுடைய செயலை இராமன் மேல் ஒற்றுமை நயம்பற்றி ஏற்றிச் சொல்லுதலும் தகுதியே. பலராமன் செய்தருளிய ப்ரலம்பாஸுரவதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாக அநுஸந்திப்பதும் இதுபோன்றதேயாம்.]

## ஜநஸ்தாந விநாசநம்.

இங்ஙனம் சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜநஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரன் பக்கல்சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினாள். பிறகு அக்கரன் பதினாலாயிரம் ஸேநாதிபதிகளையும் ஸேனைகளையும், தூஷணன் த்ரிசிரஸ் என்பவர்களையும் இராமபிரானோடு போர்செய்ய அனுப்பினான். இராமன் அவர்களத்தனை பேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட, பிறகு இதனையறிந்த கரன் தானே நேரில்வந்து எதிர்க்க, இராமன் பிராட்டியை ஒருமலைக்குகையில் வைத்து லக்ஷ்மணனைக் காவலிட்டு வந்து அக்கரனுடன் போர்செய்து, அகஸ்த்யர் கொடுத்த வைஷ்ணவ தநுஸ்ஸில் நாணேறிட்டு அம்பு தொடுத்துவிட்டு அவன் தலையை அறுத்துவிட்டு ஜயலக்ஷ்மியுடன் பிராட்டி பக்கல் செல்ல, அவள், அவ்வளவு சூரர்களையும் ஒருவராய் நின்று வென்றிட்ட தன் ப்ராணநாதனை, போர்க்களத்திற்பட்ட அம்புகளினாலுண்டான உள் வெதுப்பெல்லாம் ஆறும்படி வெகு மகிழ்ச்சியுடன் தழுவிக்கொண்டாள்.

## இராவணன் மாரீசனோடு கலந்து யோசித்தல்.

அந்த ஜநஸ்தாநத்தில் இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளித்து ஓடிப்போன அகம்பநன் இலங்கைக்குச்சென்று ஜநஸ்தாநமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்ல முடியாதவனென்பதையும் சொல்லி, 'ஸீதையை அபஹரித்துக்கொண்டு வந்தால் அந்த வருத்தத்தினால் இராமன் முடிந்துவிடக்கூடும்' என்றான். இராவணன் அவனது சொற்படியே 'ஸீதையைக் கொள்ளை கொள்ள உபாயமென்?' என்று யோசித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்து 'நீ எனக்கு ஒருதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் நினைவை வெளியிட, அதுகேட்ட மாரீசன் 'அப்பா! இராவணா! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு த்வேஷம் உதவாது; இந்த இராமன் சிறுபிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்ர யாகத்தில் அவருடைய பாணத்துக்கு இலக்காகி நான் பட்டபாடு இன்னும் மறக்க முடியவில்லை; அத்திருநாமம் செவிப்படும்போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று ஒழுங்காக உபதேசிக்க, அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான்.

பிறகு சூர்ப்பணகை சென்று, தான் மூக்கறுப்புண்ட படியையும், தாசரதிகளுடைய ஸௌந்தர்ய பராக்ரமாதி குணங்கள் எல்லைகடந்திருக்கிறபடியையும், ஸீதையின் இருப்பையும் சொல்லி 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கஞ்செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்ல' என்றுகூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடம் சென்று நயபயங்களினால் அவனைத் தன் சொல்வழிப்படுத்திக்கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தானோரிடத்தில் ஒளித்திருந்தான்.

## மாரீசன் மாண்டொழிதல்.

மாரீசன் பொன்மானின் வடிவெடுத்துக்கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத்தொடங்கினான். அப்பொன்மானை ஸீதை கண்டு அதைப்பிடித்துத் தரவேணுமென்று ஒரே பிடிவாதமாக இராமனிடம் சொன்னாள். அதற்கு இணங்கிய இராகவன் இளையோனைப் பிராட்டிக்குக் காவலாக வைத்துவிட்டுத் தான் வில்லையும் அம்புகளையு மெடுத்துக்கொண்டு மானின்பின்னேபோக, அந்த மான் கொஞ்சங்கொஞ்சமாக ஒதுங்கி ஒதுங்கிப்போய் அக்காட்டில் நெடுந்தூரம் இராகவனை இழுத்துக்கொண்டு போய்விட்டது. அப்பொழுது இராகவன் 'இவன் யாரோ அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனால் அடியுண்ட மாரீசன் மானுருவை விட்டு நிஜரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப்போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான்.

## லக்ஷ்மணன் ஸீதையைப் பிரிந்து செல்லல்.

அந்தக்கூக்குரலை ஸீதாதேவி கேட்டு 'லக்ஷ்மணா! உன்தமையனாருக்கு அரக்கனால் ஏதோ தீங்கு நேரிட்டிருக்கிறது; அதனால் அவர் நம்மை நினைக்கிறார்; நீ விரைந்து சென்று ஆராய்ந்து வா' என்ன; அதற்கு லக்ஷ்மணன் 'அம்மா! இராமனுக்கு ஒரு தீங்குமில்லை; பொன்மானாக வந்த ராக்ஷஸன் இராகவனாற் கொல்லப்பட்டு அவரைப்போல் இப்படி கபடமாகக் கூச்சலிடுகிறான்; உன்னை நான் தனியே விட்டுப்போனால் ராக்ஷஸர்களினால் உனக்கு ஏதாவது தீங்கு விளையும்; ஆகையால் நான் போகமாட்டேன்' என்ன; பிராட்டி இதைக்கேட்டு லக்ஷ்மணனை நோக்கி, சொல்லத்தகாத கடூரமான வார்த்தைகளைச்சொல்ல, லக்ஷ்மணன் அதைப் பொறுக்கமாட்டாமல் ஸீதையை விட்டுவிட்டுத் தான் இராமபிரான் போனவழியே போனான்.

## இராவணன் பிராட்டியைக் கவர்ந்து போதல்.

அப்பொழுது இராவணன் ஸந்ந்யாசி வேஷம்பூண்டு ஸீதையிருக்குமிடம் வந்து பிக்ஷை கேட்டு அவளுடைய வடிவைக்கண்டு மோஹித்துத் தன் செல்வங்களையும் வீரங்களையும் விஜயங்களையும் விஸ்தாரமாகச் சொல்லித் தன்னைக் கணவனாகக் கொள்ளுமாறு பிதற்ற, பிராட்டி அதைக் கேட்டு மிகுந்த கோபத்துடன் அவனை நோக்கிப் பல அவமானச் சொற்களைச்சொல்ல, பின்பு இராவணன் ஸந்ந்யாஸி வேஷத்தை விட்டுத் தன்னுடைய பயங்கரமான நிஜரூபத்தைக் காட்டி இவளைப்பிடித்தெடுத்துத் தேரேற்றிக் கொண்டு போகையில், ஓர் மரத்திலுட்கார்ந்திருந்த ஜடாயு வென்கிற பக்ஷி இவ்வநீதிச் செய்கையைக்கண்டு இராவணனோடு வெகுநேரம் பெரும்போர்செய்து அவனுடைய தேரை முறித்து மானபங்கஞ்செய்ய, பின்பு இராவணன் அந்த ஜடாயுவைத் தன் சக்தியினால் உயிர்நிலையில் அடித்துத் தள்ளிவிட்டு, செந்நாயின் கையில் அகப்பட்ட மான்பேடை போல அஞ்சி நடுங்கிக் கதறுகின்ற ஸீதையைத் தூக்கிக்கொண்டு தேரின்மேலேறி இலங்கைக்குக் கொண்டுபோய்த் தனது அசோகவநிகையில் வைத்து ராக்ஷஸிகளைச் சுற்றும் பாதுகாக்க வைத்து 'இவளை எவ்விதத்திலாவது வசப்படுத்துங்கள்' என்று அவ்வரக்கிகட்குக் கட்டளையிட்டுத் தான் அரண்மனை சேர்ந்தான்.

## இராமன் பிராட்டியைத் தேடி அலற்றிக் கொண்டுவருதல்.

இராமன் மாயமானை முடித்துவிட்டு மீண்டுவருகையில் வழியிடையே இளையோனைக்கண்டு ஸீதையைத் தனியே ஏன் விட்டுவந்தாய்?" என்று கோபித்துக்கொண்டு பஞ்சவடிக்குக் கடுநடை

யிட்டு வந்து அங்கு ஸீதையைக்காணுமல் மிகவும் வருந்தி லக்ஷ்மணனும் தானுமாகச் சுற்றுந் தேடியுங்காணுமல் ஸகல இந்திரியங்களும் தளர்ந்து மனம்வாடி உடல்கருகி ஏங்கி ப்ரலாபித்துக்கொண்டிருக்கையில், அங்குள்ளமான்கள் ஸீதை போனவழியைச் சிறிதுதூரம் ஓடிக்காட்ட, 'இவ்வழியே போயிருப்பதாக மிருகங்கள் சொல்லுகின்றன; ஆகையால் இவ்வழியே போய்த் தேடுவோம்' என்று புறப்பட்டுத் தேடிக்கொண்டு வருகையில், அடியுண்டு குற்றுயிருடன் விழுந்து கிடந்த ஜடாயுவின் அருகே செல்ல, அக்கழுகரசு இராகவனை நோக்கி, ஸீதையை இராவணன் எடுத்துக்கொண்டு போனனென்றும், அவனை எதிர்த்த தன்னை இப்படி உயிர் மாய அடித்தானென்றும் சொல்லி உடனே உயிரை விட்டுவிட, இராகவன், தனக்காகச் சண்டைசெய்து பிராணனை விட்ட ஜடாயுவுக்கு மோக்ஷப்ராப்தியை அநுக்ரஹித்து மிகவும் வருந்தி அந்த ஜடாயுவை தஹநஞ்செய்து தர்ப்பணமுஞ் செய்துவிட்டு அங்கு நின்றும் புறப்பட்டுப் போகையில்,

## இலக்குமணன் அயோமுகியை மூக்கறுத்தல்.

நடுநிசியிலே தாஹங்கொண்டு லக்ஷ்மணனைநோக்கி இராமன் 'தண்ணீர் வேண்டும்' என்ன; அவ்விளைய பெருமாள் நீர் கொண்டுவருவதற்குச் செல்லும் வழியிலே, அயோமுகி என்னுங் கொடிய அரக்கி அந்த லக்ஷ்மணன்மேற் காதல்கொண்டு மோஹந மந்திர பலத்தால் அப்பெருமானை மயக்கி வலியத் தழுவியெடுத்துச் செல்லுமளவில், மோஹம் நீங்கிய லக்ஷ்மணன் அவளுடைய மூக்கைத்துணித்து அவளைஅகற்றி மீள, அப்பால் இருவரும் கவந்தன் வசிக்கும் வனத்தை அடைந்தனர்.

## கவந்தனைக் கோல்லுதல்.

தநுவென்னும் யக்ஷனது மகனய், ஸ்தூலஶிரஸ் என்னும் முனிவனது சாபத்தால் அரக்கனுகி, பிரமனருளால் தீர்க்காயுசு பெற்று, தேவேந்திரனேடு எதிர்த்து அவனது வஜ்ராயுதத்தாற் புடைபட்டுத் தனது தலை வயிற்றில் அழுந்தியமை பற்றிக் கபந்தம்போலுந் தோற்றமுடையனனதால் கபந்தனென்று பெயர்பெற்ற அரக்கன் தண்டகாரணியத்தில் ஒருபக்கத்திலேயிருந்து தனது நீண்ட கைகளிரண்டையும் எட்டியமட்டில் பரப்பித்துழாவி அவற்றிற்குள் அகப்பட்ட ஜீவராசிகளையெல்லாம் வாரிவாய்ப்பெய்து விழுங்கிக்கொண்டிருக்க, அங்குச்சென்று இவன்கைகளினிடையே அகப்பட்டுக்கொண்ட ராம லக்ஷ்மணர்கள் இவன் தோள்களைத் துணித்துத் தள்ளிய வளவில் இவன் முன்னைய சாபமும் முற்பிறப்பின் தீவினையுந் தீர்ந்தவனுகி ராக்ஷஸ சரீரத்தை யொழித்து திவ்யசரீரம் பெற்றுப் பெருமாளைப் பலவாறு துதித்துச் சபரியினிடம் செல்லும்படி சொல்லி நற்கதிக்குச் சென்றனன்.

## சபரிக்கு முத்தியளித்தல்.

ரிச்ய மூககிரியில் மதங்க முனிவரது ஆச்ரமத்தில் வஸித்துக்கொண்டு மதங்க முனிவரது சீடர்களை உபசரித்து வந்த துறவறம்பூண்ட ஒருதவப்பெண்ணுகிய சபரியென்பவள் இராமபிரான் இவ்விடத்திற்கு எழுந்தருள்வதைத் தனது ஞானக்கண்ணுல் முன்னமே உணர்ந்து அப்பிரானுக்கு நிவேதிப்பதற்காக அவ்வாச்சிரமத்திலிருந்த பழங்கள் முதலிய உணவுகளைச் சுவைத்தறிந்து சுவைமிக்கவற்றைத் தனது தவவலிமையாற் கெடாதபடி போற்றிச் சேர்த்து வைத்துக்கொண்டு இராமன் வரவை எதிர்பார்த்திருந்து, அங்ஙனமே தாசரதிகள் பம்பாஸரஸ் தீரத்தேற எழுந்தருளினவாறே சபரியானவள் பரமபக்தியோடு உபசரித்து இராகவனது கடாக்ஷம்பட்ட மாத்திரத்தால் முத்தியடைந்து உய்ந்துபோக, அவள் காட்டியவழியே சென்று பம்பாஸரஸ்ஸை அடைந்தனர்.

## ஸுக்ரீவ ஸமாகமம்

அப் பம்பாஸரஸ்ஸைச் சுற்றி காற்புறங்களிலுமுள்ள அதிரமணீயமான வநப்ரதேசங்களையும் அவற்றில் நாநாவகைப் பறவைகளினுடையவும் மிருகங்களினுடையவும் ஆட்டல் பாடல் முதலிய

உல்லாஸ விலாஸங்களையும் இராமபிரான் கண்டு பிராட்டியின் பிரிவுக்கு இரங்கி ஆற்றாதாய் மனமொழிகளுக்கு எட்டாத வருத்தத்துடன் ரிச்யமூகமென்னும் மலையை அடைந்தான். அம்மலையினுச்சியில் மதங்காச்ரமத்தில், அநுமான் நீலன் முதலிய சிலருடனே வாலிக்கு அஞ்சி மறைந்து வாழ்கிற ஸுக்ரீவன் இவ்விராம லக்ஷ்மணர்களைக்கண்டு 'இவர்கள் நம்மைக் கொல்லும் பொருட்டு வாலியினால் ஏவியனுப்பப்பட்டவர்கள் போலும்' என்று நடுங்குமளவில் அநுமான் ராமலக்ஷ்மணருகிற்சென்று சாதுரியமாகப்பேசி அவர்களை இன்னாரென்று அறிந்துகொண்டு அவர்கட்குத் தங்கள் செய்தியையுங் கூறி அவர்களை ஸுக்ரீவனிடம் அழைத்துவந்து அவர்களோடு ஸுக்ரீவனுக்கு அக்நிஸாக்ஷிகமாக ஸ்நேஹம் செய்வித்தான்.

## ஸுக்ரீவன் தன்துயரை விஜ்ஞாபித்தல்.

பின்பு ஸுக்ரீவனும் இராமனும் ஸம்பாஷணை செய்து கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் பெருமாளுடைய மஹிமையையும் வனத்தைக்குறித்து வந்த வரலாற்றையும், ஸீதையை இராவணன் அபஹரித்துக்கொண்டு போனபடியையும் ஸுக்ரீவனுக்குச் சொல்ல; பின்பு ஸுக்ரீவன், 'இராகவனே! என் அவஸ்தையைக்கேளும்; எனக்கு வாலியென்று ஒரு தமையனுளன்; அவன் என்னை இளவரசனாகக் கொண்டு தான் வாநரராஜனாய்க் கிஷ்கிந்தா பட்டணத்தில் அரசாட்சி செய்துவரும் நாள்களில் ஒருநாள், மாயாவியென்னும் அஸுரவீரன் வந்து வலியப்போர்க்கு அழைக்க, வாலி என்னுடன் சென்று அவனை எதிர்த்துப் பொருகையில் அவன் அஞ்சி ஓடி ஒரு பிலத்தினுள்ளே செல்ல வாலியும் என்னைப்பிலவாயிலிற் காவல் வைத்துவிட்டுப் பிலத்தினுள்ளே சென்று மாயாவியைத் தொடர்ந்து போர் செய்தனனாக, பலமாதங்கள் கழிந்த பின் பிலத்தினுள்ளிருந்து ரக்தவெள்ளம் வெளிப்பட்டமையையும் அதன்பின் பலநாள் கழித்தும் வாலி வெளிப்படாமையையுங்கண்டு நான் அவ்வசுரனால் வாலி கொல்லப்பட்டானென்று கருதி அவ்வசுரன் வெளிவாராதபடி பிலவாயிலைப் பெருங்கல்லால் மூடிவிட்டு வருத்தத்தோடு நகரஞ்சேர்ந்து அமைச்சர்கள் வேண்டுகோளினால் நான் அரசு பெற்று வாழ, பிலத்தினுள்ளே மாயாவியைக் கொன்ற வாலி பாதாள லோகத்து வைபவங்களைப் பலநாள் சுற்றிப்பார்த்துக்கொண்டு பிறகு மீண்டு வரும்போது பிலவழியைக் கல்லால் அடைத்திருத்தல் கண்டு, அக்கல்லைக் காலாலுதைத்துத் தள்ளிவிட்டுக் கிஷ்கிந்தை சேர்ந்து செய்தியறிந்து, அரசாட்சி விருப்பத்தாலும் தன்மனைவியான தாரையைக் கவர்ந்து கொள்ளவேண்டு மென்னுங் கருத்தினாலும் நான் இவ்வாறு செய்ததாக எண்ணி என்மேல் மிக்க கோபங்கொண்டு, நான் போய் அவன் காலில் விழுந்து நடந்தசெய்தியை உள்ளபடி சொல்லி எவ்வளவு வேண்டவும் கேளாமல் ராஜ்யத்தையும் என்மனைவியான ருமையையுங் கவர்ந்துகொண்டு என்னையடித்துத் துரத்தித் தொடர்ந்து சென்று பல இடங்களிலும் பொருது தாக்க, நான் ஓடி வந்து, இந்த ரிச்யமூகபர்வதத்தில் மதங்கமுனிவர் ஆச்ரமங்கொண்டு வீற்றிருக்கின்ற இவ்வனத்தைச் சேர்ந்தேன்; முன்பு வாலி துந்துபியைக்கொன்று அவன் சரீரத்தைச் சுழற்றி எறியும் போது அவ்வுடல் இந்த மதங்காச்ரமத்தில் விழுந்து நாற்புறங்களிலும் ரக்த பிந்துக்கள் சிதறி ஆச்ரமம் அபரிசுத்தமாக, அதைக்கண்ட அம்மதங்கமஹர்ஷி 'இந்தத் தப்புக்காரியத்தைச் செய்தவன் இவ்வாச்ரமத்தைச் சேர்ந்த ப்ரதேசங்களுள் வந்தால் நாசமடையக்கடவன்' என்று சாபம் கொடுத்தபடியால் அதுமுதல் அவ்வாலி இங்கு வருவதில்லை; ஆகையால் இவ்விடமே நமக்குப் புகலிட மென்று நினைத்து ராஜ்யத்தையும் மனைவியையும் அவனுக்குப் பறி கொடுத்து இந்த மலையில் ஒளிந்து வாழ்ந்து வருகிறேன்; என் துயரத்தைப்போக்கியருளவேணும்' என்று சொல்ல, அப்போது இராகவன், வாலியைக்கொன்று ஸுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதாகவும், தனது காரியமாகிய ஸீதையைத்தேடுதற்கும் இராவணவதத்திற்கும் ஸுக்ரீவன் உதவி புரிவதாகவும் அவர்கட்குள் நிபந்தனை ஏற்பட்டது.

## இராமன் துந்துபியின் எலும்பைக் காலால் வீசியெறிதலும் ஏழுமராமரங்களைத் துளைத்தலும்.

ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானஞ் செய்யப்பெற்ற பின்பும் மனம் தெளியாமல் வாலியின் போராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும், துந்துபியின்

உடலெலும்பை ஒரு யோஜனைதூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக்கூறி, இவ்வாறு போராற்றலமைந்தவனை வெல்வது கூடுமோ?" என்று சொல்ல; அதுகேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு விச்வாஸம் இல்லையாயின் இப்போது என்ன செய்யவேண்டுவது?" என்ன; ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும், வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது; ஏழு மராமரங்களையுந் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு வீரற்கடை தூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்புதலுண்டாகும்' என்றுசொல்ல; ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாகுமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது கார்கட்டை விரலினால் இலேசாய்த்தூக்கிப் பத்துயோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன், 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கியெறிந்தான்; இப்போது உலர்ந்து விட்ட இதனைத்தூக்கி எறிதல் ஒரு சிறப்பன்று' என்றுகூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மராமரங்களின் மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச்சென்று மீண்டு அம்பறாத்தூணியை அடைந்தது.

## வாலியைக் கொன்றது.

பின்பு ஸுக்ரீவன் இராமபிரானுடைய நியமனத்தினால் கிஷ்கிந்தைக்குச்சென்று வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி பொறுக்கமாட்டாதவனாய் வெளிக்கிளம்பி வந்து ஸுக்ரீவனோடு யுத்தஞ்செய்யத் தொடங்கினான். அப்போது இராமன் அவ்விருவரில் இன்னான் ஸுக்ரீவன், இன்னான் வாலி என்று வாசி கண்டறியாமையால் வாலிமேல் அம்பு எய்யாதொழியவே, ஸுக்ரீவன் வாலியிடத்துப் பராஜயப்பட்டு வேதனைபொறுக்கமாட்டாமல் ரிச்யமூகபர்வதத்துக்கே மீண்டு ஓடிவந்து சேர, இராமன் அவனைப்பார்த்து 'அப்பா! நான் உங்களிருவரில் பேதமறிந்திலேன்; பாணம் உன்மேலே விழுந்து உனக்கே தீங்கை விளைத்திடுமோ என்றஞ்சி அம்பு எய்யாதொழிந்தேன்; இப்போது உனக்கு ஓர் அடையாளமிடுகிறேன்; மறுபடியும் வாலியை யுத்தத்துக்கு அழை' என்று சொல்லி அவன் கழுத்தில் ஒரு பூமாலையைச் சுற்றிக் கிஷ்கிந்தைக்குப் போகவிட்டார். ஸுக்ரீவன் சென்று முன்போலவே வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி போர்க்குப் புறப்பட, அப்போது அவன் மனைவியாகிய தாரை 'ஓ ப்ராணநாதா! சற்று முன்பு அடிபட்டு ஓடினவன் திரும்பி இப்போதே சண்டைக்கு அழைக்கின்றமையால் இது வெறுமனன்று; ஏதோ ஒரு பெருத்த ஸஹாயத்தை அண்டைகொண்டு வந்திருக்கவேணும்; நீ இப்போது திடீரென்று போர்க்குப்போவது தகுதியல்ல' என்று சொல்லித் தடுத்தவளவிலும் அவள் வார்த்தையைச் செவியிலுங் கொள்ளாமல் சடக்கெனப் புறப்பட்டு வந்து ஸுக்ரீவனுடன் பிணங்கினான். அந்த வாலிஸுக்ரீவர்களிருவரும் ஒருவர்க்கொருவர் கீழே தள்ளுவது மேலே பாய்வது கட்டிக்கொண்டு நெருக்குவது கடிப்பது குத்துவது அடிப்பதாய் வலிதான யுத்தஞ் செய்யுங்காலத்தில், இராகவன் ஒரு மரத்தடியில் மறைந்திருந்து வாலியைப் பாணத்தினாலடித்தார். அந்த பாணத்தினால் வாலி மார்புபிளந்து கீழே விழுந்து விட்டான். இதைத் தாரை கேள்விப்பட்டு அங்கதனென்னும் புத்திரனுடன் கூட ஓடிவந்து வாலியைத் தழுவிக்கொண்டு பலவாறு புலம்பி, பிறகு எதிரில் நின்ற இராமனைப்பார்த்து அவருடைய மஹாபுருஷ லக்ஷணங்களைக் கண்டு இவர் ஸாக்ஷாத்பரமாத்மா வென்று நிச்சயித்துத் துதித்தனள். வாலியும் இராமனோடு வாதாடிப் பல ஸமாதானங்கள் சொல்லக்கேட்டு நன்மதி பெற்றுக் கையைக்கூப்பி இராகவனைத் தொழுது 'ஸுக்ரீவனைப்போல் அங்கதனையும் நோக்கிக்கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்து விட்டு ப்ராணனையும் விட்டான்.

## [வாலிவதத்தில் சில ஆக்ஷேப ஸமாதானங்கள்.]

[இராவணவதத்திற்கு உதவி தேடுகிற இராமன், இராவணனை வெல்லவல்ல வாலியைக் கொன்றுவிட்டு பயங்கொள்ளியான ஸுக்ரீவனை உதவி கொண்டது என்ன புத்திசாலித்தனம்

என்று சிலர் சங்கிப்பர்கள். கேண்மின் ;—வாலி முன்னமே இராவணனுடன் அக்நிஸாக்ஷிகமாக நட்புக்கொண்டிருந்தமைபற்றி, அவனைத்தான் உதவி கொண்டால் இராவணன் முதலிய துஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால், இராமன் ஸுக்ரீவனை நண்பனுகக்கொண்டு அவன் வேண்டுகோளின்படி வாலியை வதைத்திட்டனன். இனிச்செய்யவேண்டிய இராவணவதமாகிய தேவகாரியத்திற்கு இவ்வாலிவதம் அங்கமெனக் கருதத்தக்கது. எவ்வகைப் பெருந்தீங்கு செய்திருந்தாலும் சரணமடைந்தால் அவர்களைப் பாதுகாப்பதென்ற சிறந்த தருமத்தை மேற்கொண்டு நடப்பவனுன இராமபிரான், அத்தருமத்தை முழுவதும் விட்டுச் சுக்கிரீவன் சரணமடைந்த பின்னரும் அவனை மிகவருந்திக் கொல்லத்தொடங்கி அவ்வறத்திற்கு எதிரானமைபற்றி வாலியைக் கொல்லலாயிற்று. அன்றியும், பிறன்மனைவியைக் காதலித்துக் கவர்தலும், தம்பியினிடம் பகை பாராட்டுதலும், வலியழிந்து புறங்கொடுத்து ஓடுகின்றவனைத் துரத்தித் துரத்திக் கொல்லத் தொடங்குதலும் முதலிய தீச்செயல்கள் வாலியினிடம் இருந்ததனுலும், ஏகபத்நீ விரதமுடையவனும், தம்பியரைத் தன்னுயிர்போலக் கொள்பவனும், வலியிழந்த பகைவனை "இன்று போய் நாளைவா" என்று அன்போடு சொல்லி விடுத்தருளும் மஹாவீரனுமான சக்ரவர்த்தித் திருமகன் வாலியை அழிக்கலானுன். மறைந்து நின்று அம்பெய்தது, அரசர் கொடிய விலங்குகளைப் பதுங்கி நின்று அழிக்கும் வேட்டை முறைமையா லென்பர்.

"யதா ஶ்ரமம் ஶ்ரமயாவந்ர்மயாவயெந ஸுஜோ ஜவந்ரு நதா
மந்ரவஷாஹிதவ்ராஜ। தஷ்ரக்ஷேவ தவ ராவவவம்ஸஜவ்ர திபக்ஷா
தெநவஹி விவக்ஷதயொவவார॥"

என்று அதிமாநுஷஸ்தவத்தில் ஆழ்வான் அருளிச்செய்ததுங் காண்க.

அன்றி, முதலிற் சரணமடைந்த ஸுக்ரீவனுக்கு அபயமளித்து வாலியைக் கொல்வதாக வாக்குதத்தஞ் செய்துவிட்ட பெருமாள் பின்னர் வாலியினெதிரில் நின்று போர் செய்தால் அப்பெருமானது திறத்தைக்கண்டு அஞ்சி வாலியும் அவனைச்சரணமடைந்திடுவனுயின் தஞ்சமடைந்தவனைக் கொலைசெய்யக்கூடாமை பற்றி அவனைக் கொல்லாது விடுமிடத்து முன்னைய வாக்குத் தவறிவிடுமே யென்ற நோக்கம் முக்கிய காரணமாம். அன்றியும், எதிர்ந்தார் வலிமையிற் பாதி தன்னிடம் வந்து கூடும்படி வாலி சிவபிரானிடத்துப் பெற்றிருக்கின்ற வரம் பழுதுபடாமலிருக்குமாறு மறைந்து நின்று அம்பெய்தனன் என்றலு மொன்று. அவரவர்கள் தேவதாந்தரங்களிடத்துப் பெற்ற வரங்கள் பழுதுபடாதபடியன்றே எம்பெருமான் காரியஞ்செய்வது. இங்ஙனம் பல காரணங்கள் உள: இங்கு விரிப்பிற் பெருகும். ஸ்ரீராமாயணம் அதன் வியாக்கியானங்கள் வல்லார் வாய்க் கேட்டுணர்க. கடவுளாது நியாயம் நுட்பமானதும் அறிதற்கு அரியதுமாதலால், அது மனிதாது நியாயத்தோடு ஒப்புநோக்கி ஆராய்தற்கு உரியதன்றென்பது உணரத்தக்கது.]

## ஸுக்ரீவனுக்கு அரசளித்தல்.

ஸுக்ரீவன் வாலி இறந்ததற்காக மிகவும் வ்யஸநப்பட்டு இராமனுடைய கட்டளைப்படி வாலிக்கு ஸம்ஸ்காரம் முதலிய க்ரியைகளை நடத்தினன். பிறகு இராமனுடைய நியமநத்தைப் பெற்றுக்கொண்டு இளையபெருமாள் சென்று கிஷ்கிந்தையில் ஸுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்தார்.

## தாசரதிகள் மழைக்காலத்தைக் கழித்தல்.

அப்பொழுது ஸுக்ரீவன், 'இது வர்ஷாகாலமாதலால் வாநரங்களை ஆங்காங்குச் செலுத்திப் பல இடங்களிலும் பிராட்டியைத் தேடச்செய்வதற்கு இக்காலம் உரியதன்றாதலால் இம்முயற்சியை இப்போது நிறுத்திவைத்து இந்த நான்குமாத காலமும் நீங்கள் ப்ரஸ்ரவணகிரியிலே சுகமாகத் தங்கியிருக்கலாம்' என்று லக்ஷ்மணனிடம் சொல்லியனுப்பிவிட, இவர்கள் அந்த நான்கு மாதங்களையும் அம்மலையிலேயிருந்து கழித்தனர். [மழைக்காலம்—ஆடிமுதலிய நான்குமாதங்கள்.]

மாரிகாலத்திற் காடுகளிலுண்டாகும் வைசித்திரியைக் கண்டு ஸீதையை நினைத்துக்கொண்டு பரிதபித்துப் பெருங்கஷ்டப்பட்டு அக்காலத்தைக் கழித்தபின்னர் சரத்காலம் வந்தவளவில் ரமணீயமான வனத்தையும் நிர்மலமான தடாகங்களையும் மறுவற்ற நிலவையும் மழைபெய்து வெளுத்த மேகங்களையும் பார்த்து இராமபிரான், 'அந்தோ! இக்காலத்தில் ஸீதை எங்ஙனம் ஜீவிக்கின்றளோ! என்று பலவாருகச் சிந்தித்துக்கொண்டு ஸுக்ரீவனது வரவை எதிர்பார்த்த வண்ணமாயிருந்தார். அக்குரங்கரசோ வெனில் மழைக்காலம் கழிந்தபிறகு வருவதாகச் சொல்லியிருந்ததை மறந்துவிட்டுத் தாரையோடும் ருமையோடுங்கூடிக் காமபோகங்களை அநுபவித்துக் கொண்டிருந்தனன்.

## பிராட்டியைத் தேட வாநரவீரர்களை அனுப்புதல்.

ஸுக்ரீவன், சொற்படி வாராமையினல் அவன்மீது கறுக்கொண்ட இராமன் 'லக்ஷ்மணு! ஸுக்ரீவன் நம்மால் ராஜ்யத்தை அடைந்து மதித்து இப்போது நம்மை மறந்துவிட்டான்; நீ கிஷ்கிந்தைக்குப்போய் அவன் வருகிருனு? இல்லையா? என்பதை ஆராய்ந்து வா' என்று சொல்லி இளையோனை அனுப்ப; உடனே லக்ஷ்மணன் மிக்க கோபத்துடன் கிஷ்கிந்தைக் கோட்டை வாசலில் வந்து நின்று வில்லில் நாணேறிட்டு இழுத்துத்தட்ட, அங்கிருந்த வானரங்களெல்லாம் இவர் வரவைப்பார்த்தும் நாணின் ஒலியைக்கேட்டும் அஞ்சிக் கூச்சலிட்டுக்கொண்டு ஓடிப்போக, மதுபானம் செய்து மத்தனய்க்கிடந்து உறங்குகிற ஸுக்ரீவன் அவ்வொலியைக் கேட்டுத் திடுக்கிட்டெழுந்து 'இராகவனுக்கு நான் ஒரு கெடுதியுஞ் செய்யவில்லையே; என்மேற் சீறுகைக்கு என்ன காரணம்?' என்று கையைப் பிசைந்துகொண்டிருக்கையில், ஹநுமான் ஓடிவந்து 'மஹாராஜனே! நான் இரண்டு மூன்றுதரம் வந்து அறிவிக்கினும் நீர் உணரவில்லை; லக்ஷ்மணன் சீறிச்சிவந்து வந்திருக்கிருர்; அவர்காலில் சென்று விழுந்து கோபத்தைத் தணிவித்துக்கொள்ளும்' என்ன; ஸுக்ரீவன் 'நான் முன்பு போவதைக்காட்டிலும் தாரைசென்று அவளைப் பணிந்தாளாகில் சிறிது கோபம் தணியும்; பிறகு நான் செல்லுகிறேன்' என்று சொல்லித் தாரையை அனுப்ப; அவள் பதறிவந்து லக்ஷ்மணனுடைய பாதங்களில் விழுந்து 'ஸ்வாமீ! முன்பு சரணமடைந்த இவனுக்கு இவ்வைச்வர்யத்தைக் கொடுத்து, இப்போது ஞானமில்லாத திர்யக்ஜாதி பிழை செய்தால் தலையறுப்பதோ? பொறுத்தருள்வதன்றோ கடமை' என்ருற்போலச் சில சொல்லி அவனது கோபத்தைத்தணிவிக்க. பிறகு ஸுக்ரீவன் வந்து லக்ஷ்மணனையுங் கூட்டிக்கொண்டு மந்திரிகளுடன் இராமபிரானது ஸந்நிதானத்திற்குச் சென்று தன் அரசாட்சிக்கு உட்பட்ட குரங்குகளையெல்லாம் வரவழைத்துப் பிராட்டியைத் தேடுகைக்காகச் சிலரைக்கிழக்கிலும் சிலரை வடக்கிலுமனுப்பி, அவர்களுக்கு இப்பூமியிலுள்ள இடங்களையெல்லாம் விவரமாகச் சொல்லி, முன்பு ஸீதையை இராவணன் எடுத்துக்கொண்டு போம்போது ஸீதை முடிச்சாகக் கட்டி விழவிட்ட ஆபரண முடிப்பைக்கண்டு அண்ணாந்துபார்த்து ஸீதையை இராவணன் எடுத்துக்கொண்டு போவதை உணர்ந்தமையால், பிராட்டி பெரும்பாலும் இலங்கையில்தான் வைக்கப்பட்டிருக்கவேணுமென்றெண்ணி அங்கங்கெல்லாம் போய்த் தேடவேணுமென்று நியமித்து ஹநுமான் ஜாம்பவான் அங்கதன் முதலிய பலிஷ்டர்கள் சிலரை அனுப்பி 'ஒரு மாதத்திற்குள் பிராட்டியிருக்குமிடத்தை அறிந்து வாருங்கள்' என்று கட்டளையிட்டான்.

அக்கட்டளைப்படியே கிழக்கு மேற்கு வடக்கு திக்குக்களில் தேடச் சென்றவர்கள் அத்திக்கு முழுதும்தேடி ஸீதையைக்காணுமல் திரும்பிவந்துவிட்டார்கள்.

## வாநரர்களின் ப்ராயோபவேச ஸங்கல்பம்.

அங்கதன் முதலியவர்கள் புறப்பட்டுத் தென்திசையில் ஒவ்வோரிடங்களையும் ஆராய்ந்துகொண்டு போகையில் பசி தாஹங்களினல் வருந்தி யிளைத்துக் களைத்துத் தண்ணீர் பெறும் விருப்பினராய் ரிக்ஷபிலமென்னும் பெரும்பிலத்தினுள் நுழைந்து வெகு சிரமப்பட்டு உள்ளே சென்று இளைப்பாறிப் பொன்மயமானதொரு வனத்தையடைந்து அங்கிருந்த ஸ்வயம்ப்ரபை

யென்னும் தவப்பெண்ணைக்கண்டு வினவி, அந்த வனம் மயனென்னும் அசுரசிற்பியினல் நிருமிக்கப்பட்டதென்றும், அவனுற் காதலிக்கப்பட்ட ஹேமை யென்னும் அப்ஸரஸ் ஸ்த்ரீக்கு உரியதாயிற்றென்றும் உணர்ந்தபின்பு, தங்களை அப்பிலத்திற்கு வெளியே கொண்டுவிடும்படி அந்த ஸ்வயம்ப்ரபையையே ப்ரார்த்திக்க, அவள் இவர்களைக் கண்களைமூடிக்கொள்ளச்சொல்லித் தனது தவமஹிமையால் வெளியே கொண்டுவந்து சேர்த்திட, பிறகு அனுமான் முதலியவர்கள் ஸீதையைக் கண்டுபிடியாமல் தங்களுக்கு அவதியிட்டகாலம் கடந்துபோனதை நினைத்து, "இனி நாம் ஸுக்ரீவனிடம்போனல் அவன் நம்மைக் கொன்றுவிடுவன் ; அங்குப்போய்க் கொலையுண்பதிற்காட்டிலும் நாமெல்லோரும் இங்கே உயிரை விட்டுவிடுவது நலம்" என்று நிச்சயித்து ப்ராயோபவேசம்செய்யத் துணிந்தார்கள்.

## ஸம்பாதி ஸமாகமம்.

அப்போது அங்கதன் வாநரர்களுடைய மரணத்தை நினைத்துச் சோகித்து, வாநரர்கள் பிறந்து வளர்ந்த கதைகளையும் இராகவன் வனத்திற்கு வந்ததையும் ஸீதையை ராவணன் அபஹரித்ததையும் ஜடாயு மரணமடைந்ததையும் வாலி மாண்டொழிந்ததையும் தாங்கள் புறப்பட்டபடியையும் ஸீதை யகப்படாமல் இப்போது தாங்கள் உயிரைவிடத் துணிந்ததையும் சொல்லிப் புலம்ப, அதைக்கேட்டு அங்கொரு குகையிலிருந்த ஜடாயுவின் தமையனுகிய ஸம்பாதியென்னுங் கழுகு புறப்பட்டுவந்து ஜடாயுவின் மரணத்தை விவரமாகக் கேட்டுணர்ந்து அழுது ஸ்நாநதர்ப்பணங்கள்செய்து பின்பு "ஓ வாநரர்களே ! முன்பொருகால் நானும் ஜடாயுவும் விநோதார்த்தமாக ஆகாயத்தில் நெடுந்தூரம் பறந்து சென்றோம் ; அப்பொழுது ஜடாயுவுக்கு ஸூர்யகிரணங்களினல் தீங்கு நேரிடாமற்படி நான் இறகுகளினல் அவனை மறைத்துக்கொண்டேன் ; என்மேல் ஸூர்யனுடைய வெஞ்சுடர்பட்டு என் இறகுகள் வெந்துபோய் நான் ஆகாசத்தினின்று கீழே விழுந்தேன் ; அப்போது ஒரு மாமுனிவர் என்னைக்கண்டிரங்கி 'ஒருகாலத்தில் வாநரமுதலிகள் இங்கு வருவார்கள் ; அவர்களுக்கு நீ வாக்குஸஹாயம் செய்யப்போகிறாய் ; அப்போது உனக்கு இறகுகள் முளைக்கப்போகின்றன' என்று வரமளித்தார் ; ஓ வாநரர்களே ! ஸுபார்ஸ்வன் என்னும் எனது மகன் ஒருகால் இரைதேடிக்கொண்டிருக்கையில் இராவணன் ஸீதையை இலங்கை நகர்க்கு எடுத்துக்கொண்டுபோகப் பார்த்துவந்து கூறினன் ; ஆகையால் நீங்கள் இவ்வழியேபோய் இலங்கையையடைந்து அங்கு இராவணன் கொண்டுபோய்வைத்திருக்கிற ஸீதையைத் தேடிக் காண்பீர்" என்று சொல்லி இறகு முளைக்கப்பெற்றுத் தன்னிடம்போய் அமர்ந்தது.

## அனுமான் கடலைக் கடத்தல்.

வாநரவீரர்கள் அதுகேட்டு மிகமகிழ்ந்து அங்குநின்றுங் கிளம்பி மஹேந்திரமலையையடைந்து அந்த தெற்கு ஸமுத்ரத்தைக்கண்டு அதைக் கடக்கும்வழியறியாமல் வருத்தப்பட்டுக்கிடக்க, அப்போது ஜாம்பவான் அனுமானைப்பார்த்து "பகவந் ! நீரே இக்கடலைத்தாண்ட வல்லமையுள்ளவர் ; மற்றொருவரால் இது முடியாது ; நீர் பிறக்குங்காலத்தில் ஸூர்யனைப்பார்த்து அவனைப் பிடித்துப் பக்ஷிப்பதாக ஆகாசத்திற் கிளம்பிப்போனீர் ; இந்திரன் அதைக்கண்டு உம்மை வஜ்ராயுதத்தினலடித்தான் ; அதனல் கன்னத்தில் அடிபட்டுக் கீழேவிழுந்தீர் ; அதைக்கண்டு உம்முடைய தகப்பனுகிய வாயு கோபித்துத் தன்னுடைய ஸஞ்சாரத்தை நிறுத்திவிடவே ஜனங்கள் காற்றில்லாமல் வெகுவாய் மாண்டுபோகத் தொடங்கின ; அப்பொழுது ப்ரஹ்மா உம்மிடம்வந்து வாயுவின் ஸந்தோஷத்தின்பொருட்டு நீர் சிரஞ்ஜீவியென்றும் ஒருவராலும் அழிக்க முடியாதவரென்றும் ஒரு அஸ்த்ரமும் உம்மை வாதியாதென்றும் (ப்ரஹ்மாஸ்திரத்தினல்மாத்திரம் ஒரு முஹூர்த்தம் கட்டுப்படுவீரென்றும்) உமக்கு அஸாத்யமான காரியம் ஒன்றுமேயில்லையாதென்றும் இப்படி பலவிதமான வரங்களைக் கொடுத்திருக்கிறார் ; ஆகையால் இப்போது வாநரர்களுடையவும் இராகவனுடையவும் துயரத்தை நீரே போக்கக்கடவீர் ; எழுந்து இக்கடலைக்கடந்து ஸீதாதேவியைப் பார்த்து வருவீராக" என்று புகழ்ந்துபேச, இப்புகழ் மொழியால் அனுமான் மிக்க உத்ஸா

ஹமடைந்து ‘நானே இக்கடலைத் தாண்டக்கடவேன், நீங்கள் யோசிக்கவேண்டாம்’ என்று மற்றவர்களுக்குத் தைரியஞ்சொல்லி ஸமுத்ரத்தைத் தாண்டுகைக்காக மிகப்பெரிய வடிவங்கொண்டு வானத்தை அளாவி மஹேந்திரகிரியின் சிகரத்தையேறி அங்கிருந்து ஆகாயமார்க்கமாகக் கிளம்பிக் கடலைக் கடக்கும்போது, இடையில் தனக்கு இளைப்பாறுமிடமாகவந்த மைநாகமலையை நன்மொழி கூறி விலக்கி, தனது நிழலைப் பிடித்துத் தன்னைத் தடுத்துக்கொல்லவந்த ஸிம்ஹிகையென்னும் அரக்கியின் வாயினுட்புகுந்து அவளுடலைப் பிளந்து வெளிப்பட்டு. தேவர்களின் தூண்டுதலால் தனது பலத்தைப் பரீக்ஷிக்கவந்த ஸுரஸை யென்பவள் தன்னை விழுங்குதற்கு வாய்திறந்தவளவும் தானும் வளர்ந்து உடனே நுண்ணிய வடிவுகொண்டு அவள் வாயினுட்புகுந்து வெளிப்பட்டு அவளைச் செருக்கடக்கி அப்பாற்சென்று அன்று ஸாயங்காலம் ஸமுத்ரத்தின் தென்கரையை அடைந்தார்.

## அனுமான் இலங்கையில் பிராட்டியைத் தேடிக் காணுதல்.

பின்பு ஹநுமான் அத்தீவிலுள்ள இலங்கையையும் அங்குள்ள அரக்கர்களையும் பார்த்து ‘அரக்கர் கண்ணுக்குப் புலப்படாமல் இவ்விலங்கையில் நாம் எவ்வண்ணம் செல்வோம்’ என்று யோசித்துப்பார்த்து, ஸூர்யன் அஸ்தமித்தபின்பு தான் பூனையளவான உருக்கொண்டு இலங்கையின் கோட்டைவாசலில் நுழையும்போது அந்நகர்க்கு அதிதேவதையாய் அதனைக் காவல்செய்து நிற்பவளான இலங்காதேவி யென்பவள் அநுமானை மறித்துப் போர்செய்ய, அவன் அவளைத் தாக்கி வலியழித்து உள்ளே நுழைந்து வீதிகளின் வகுப்புகளையும் ஆங்காங்கு விசித்திரமான கட்டடங்களையும் பலவகை யரக்கர்களையும் அவர்கள் செய்யும் கொடுவினைகளையும் வீடுகளில் வேதகோஷங்களையும் அக்நிஹோத்ரங்களையும் பார்த்துக்கொண்டு ஒவ்வொரு வீட்டிலும் பிராட்டியை ஆராய்ந்துகொண்டு போகும்போது எங்கும் ஸீதையைக் காணாமல் சற்றுப்போது சிந்தித்திருந்து பின்பு தைரியமுற்று அங்கு உயர்ந்ததொரு மதிலின்மேல் ஏறிப்பார்க்க ஒரு அசோகவனமும் அதன் மத்தியில் வெகு அழகாகக் கட்டப்பட்ட ஒரு பெரியவீடும் சுற்றும் பலவகை மரங்களும் இருக்கக்கண்டு அங்கேசென்று தேடிப்பார்க்கையில்,

அங்கொரு மரத்தின்கீழ் அழுக்கடைந்த ஆடையையும் சடைதிரிந்த மயிர்முடியையுமுடையளாய், ஸ்நாநஞ்செய்யாமல் உடம்பு அழுக்கடைந்து ஊணுமுறக்கமுமின்றி உடம்பு இளைத்து இப்படியிருந்தும் தன்னுடைய காந்தியினால் அந்த வனம் முழுவதையும் விளங்கச்செய்துகொண்டு ராமவிரஹத்தினால் மிக வருந்தித் தலையை வணக்கிக்கொண்டு ஸ்ரீராகவனையே தியானித்துப் பெருமூச்செறிந்துகொண்டு, ஏகாக்ஷி ஏககர்ணி முதலிய கொடிய அரக்கியர்களின் நடுவில் உட்கார்ந்திருக்கிற ஸீதையைக்கண்டு இராமபிரான் சொல்லியிருந்த அடையாளங்களைக்கொண்டும் மற்றும் யுக்திகளைக்கொண்டும் ‘இவள்தான் ஸ்ரீராமபத்நி’ என்று நிச்சயித்து அவளுடைய தீநதசையைக்குறித்து மிகவும் வருத்தமுற்று, தான்பட்ட வருத்தமெல்லாம் ஸபலமானதற்கு ஸந்தோஷித்துப் பின்னும் அம்மரத்தின் ஓர் கிளையிலிருந்துகொண்டு அங்கு நிகழும் செய்திகளை நோக்கிக் கொண்டிருந்தான்.

அத்தருணத்தில் இராவணன் அங்குவந்து பிராட்டியை நோக்கித் தன் பெருமைகளையெல்லாம் பலவாறாகப் பாராட்டிக்கூறியும் பயங்கரமான வார்த்தைகளைச் சொல்லியும் தன்னை நயக்கும்படி விரும்ப, சிறிதும் மனஞ்சலியாத பிராட்டி அவனை ஒரு துரும்பாகநினைத்துத் திரஸ்கரித்து வார்த்தைசொல்ல அங்குள்ள அரக்கியர்களை நோக்கி “இவளை அஸஹ்யமான வகைகளில் ஹிம்ஸைபண்ணுங்கள்” என்று கட்டளையிட்டுவிட்டுத் தனது அரண்மனைக்குச் சென்றபிறகு, அவ்வரக்கியர்கள் அனைவரும் படுத்தின உபத்ரவங்களைப் பொறுக்கமாட்டாத பிராட்டி எழுந்து ஓர் கிளையின்கீழே சென்று தன் பின்னலைக் கழுத்திலிட்டுக்கொண்டு உயிரைத் துறப்பதாக முயன்றவளவில் அப்பொழுது தனக்குண்டான நற்சகுனங்களைக் கண்டு “நாம் விரைவில் இராமபிரானுடன் சேரப்போகிறோம்” என்று நிச்சயித்து, மீண்டு முன்பிருந்த இடத்தில்வந்து உட்கார்ந்தாள்.

## பிராட்டி மோதிரம் பெற்று மகிழ்தல்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த திருவடி, ‘ இப்பொழுது நாம் ஸீதையைத் தேற்றாவிடில் இனி இவளை இழக்கவேண்டியதாகும் ’ என்றெண்ணி உடனே மரக்கிளையினின்று மிறங்கிப் பிராட்டியினருகேவந்து தொழுதுநின்று அவள் நன்கு நம்பும்படியான ரீதியிலே தன் வரலாறுகளையெல்லாஞ் செவ்வனே சொல்லி, சில அடையாளங்களையும் விண்ணப்பஞ்செய்து “ ஈதவன்கை மோதிரமே ” என்று ஸ்ரீராம நாமாங்கிதமான மோதிரத்தையும் பிராட்டிகையில் கொடுத்துநிற்க, பிராட்டி பரமாநந்தப்பட்டு ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடைய க்ஷேமத்தை விசாரித்தறிந்து பிரிவுக்கு ஆற்றாது வருந்தினள்.

பின்பு திருவடி ‘ அம்மா ! என் முதுகின்மீது ஏறிக்கொள்ளும் ; நான் இப்போதே உம்மை ஸ்ரீராமஸந்நிதானத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகிறேன் ’ என்று சொல்லி, இவளைக் கொண்டு ஸமுத்ரத்தைத் தாண்டவல்ல சக்தி தனக்குண்டென்று அவள் தெரிந்துகொள்ளுமாறு தன் சரீரத்தை மிகவும் பெரிதாய் வளர்த்திக்காட்டி யறிவிக்க, அதற்குப் பிராட்டி ‘ இங்ஙனம் நீ சொல்வதை நான் அங்கீகரிக்கவல்லேனல்லேன் ; இராமபிரானே நேரில்வந்து இலங்கை பாழாளாகப் படை பொருது என்னை அழைத்துக்கொண்டு போவாராகில் அதுவாய்த்துத் தகுதி ; ஆகையால் அப்பெருமானை விரைவில் இங்கு அழைத்துக்கொண்டு வா ’ என்று பலவாறாக வேண்டிக்கொண்டாள்

## திருவடி சூடாமணி பெறுதல்.

பின்பு ஹநுமான் “ அம்மா ! இராமபிரானிடத்து நான் சென்று விண்ணப்பஞ்செய்யும் வார்த்தைகளை அவர் நம்புமாறு நீர் ஒரு அடையாளம் சொல்லவேணும் ” என்ன ; “ சித்திர கூட மலைச்சாரலிலே பெருமாளும் நானும் ஏகாந்தமாக இருக்கிற ஸமயத்தில் இந்திரன் மகனை ஜயந்தன் தீயகருத்தினனாய்த் தேவ வேஷத்தை மறைத்துக் காகவேஷத்தைப் பூண்டுகொண்டு வந்து (என்மடியிலே பெருமாள் பள்ளிகொண்டருளுகையில்) என் மார்பினிற்குத்த அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி மிகக்கோபங்கொண்டு ஒரு தர்ப்பப்புல்லை யெடுத்து அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்து அதனை அந்தக் காகத்தின் மேல் மந்தகதியாகச் செலுத்த, அக்காகம் அந்த அஸ்த்ரத்துக்குத் தப்ப வழிதேடிப் பலவிடங்களிலு மோடிச் சென்று சேர்ந்தவிடத்தும் ஒருவரும் ஏற்றுக்கொள்ளாமையாலே மீண்டும் பெருமாளையே சரணமடைய, அப்பெருமான் அருள்கொண்டு அக்காகத்துக்கு உயிரைக்கொடுத்து அந்த அஸ்த்ரம் வீண்படாமல் காகத்தின் ஒரு கண்ணை அறுத்தவளவோடு விடும்படி செய்தருளினன் ” என்ற ரஹஸ்யமானதொரு வ்ருத்தாந்தத்தை அடையாளமாகச்சொல்லி, சூடாமணியையும் கழற்றி, ‘ இதையும் அடையாளமாகக்கொடு ’ என்று கொடுத்தாள்.

## அனுமான் அசோகவனத்தை முறித்தல்.

திருவடி அதை ஆதரத்துடன் வாங்கிக்கொண்டு பிராட்டியை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, இராவணனுடைய வலிவைத் தெரிந்துகொள்வதற்காகவும் தன்வரவை அரக்கர்களுக்குப் பிரசாரஞ்செய்தற்காகவும் அசோகவனத்தை முறிக்க, அச்செய்தியைக் காவலாளராலுணர்ந்த இராவணன் பல போர்வீரர்களையும் ப்ரஹஸ்தன் மகனை ஜம்புமாலியையும் விரூபாக்ஷன் முதலிய ஐந்து ஸேனைத்தலைவர்களையும் தன் மகனை அக்ஷகுமாரனையும் சேனைகளுடனே முறையே ஏவியனுப்ப, திருவடி அவர்களெல்லாரையுங் கொன்றுவிட்டு அதற்குமேல் வந்த இந்திரஜித்துடன் வெகுநேரம் சண்டை செய்ய, அவன் இவர்க்குச் சாவில்லையென்றறிந்து இவரை ப்ரஹ்மாஸ்திரத்தினால் கட்ட, அதனால் இவர் கட்டுண்டு கீழேவிழ, ராக்ஷஸர்கள் இவரைச்சணற்கயிற்றால் கட்டி இராவணனிடமிழுத்துக்கொண்டு போனார்கள்.

## லங்கா தஹநம்.

இராவணன் ஹநுமானைப் பார்த்து, முன்பு ஒருகால் தான் கைலாஸம் போம்போது அங்கு நந்திகேஸ்வரன் வாநரரூபமெடுத்து நிற்க, அதனைத்தான் பரிஹஸிக்க, அந்த நந்தி 'இம்மாதிரி குரங்கே உன்பட்டணத்தை அழிக்கப்போகிறது' என்று சொன்னதை ஸ்மரித்து 'அது தானோ இது' என்று அஞ்சி, பக்கத்திலிருந்த ப்ரஹஸ்தனைவிட்டு இதன் வரலாற்றைக் கேட்கச்சொல்ல, திருவடி உள்ளபடியே செய்திகளைச்சொல்லி இராவணனுக்கு ஹிதோபதேஸமுஞ் செய்கையில், அவன் மிக்க கோபமடைந்து 'இக்குரங்கைக் கொன்றுவிடுங்கள்' என்று கட்டளையிட்டான். விபீஷணன் இதைக்கேட்டு 'அண்ணா! தூதனைக் கொல்லக்கூடாதென்று சாஸ்திரம் சொல்லும்; ஆகையால் இவனைக்கொல்லலாகாது; ஏதாவது ஓர் அங்கத்தில் அடையாளம் செய்து அனுப்பலாம்' என்று சொல்ல, அதை இராவணன் அங்கீகரித்து வாலைக்கொளுத்திவிடுங்களென்று கட்டளையிட்டான். அப்படியே ராக்ஷஸர்கள் வாலில் சீலையைச்சுற்றி எண்ணெயில் நனைத்துத் தீமூட்டிப் பேரி யடித்துக்கொண்டு நாற்சந்திகளில் எல்லாரும் வேடிக்கை பார்க்கும்படி பிடித்துக்கொண்டுவர, அதை ராக்ஷஸிகள் ஸீதைக்கு அறிவிக்க ஸீதாதேவி "ஹநுமானுக்கு வாலில் தீ குளிரக்கடவது" என்று அக்நிதேவதையைப் பிரார்த்திக்க அதனால் ஹநுமானுக்கு ஒருபாதையும் நேரிடாமலிருக்க, தன்னைப் பிடித்துக்கொண்டு வருகிற ராக்ஷஸர்களை அடித்துக்கொன்று தான் மேலே கிளம்பி வீடுகள்தோறும் தீயை மூட்டி இலங்கையை முழுதும் தஹித்துவிட்டு அரக்கர்களையும் இராவணனையும் மிகவும் வியாகுலப்படுத்திப் பின்பு தன்வாலைக் கடலில் தோய்த்து அணைத்துவிட்டார்.

## ஸ்ரீராமப்ரப்ருதிகள் கடற்கரை சேர்தல்

பின்பு ஹநுமான் இலங்கைமுழுதும் வெந்துபோனதைக்கண்டு ஸீதாதேவியும் வெந்துபோனதாக நினைத்து மிகவும் திகிலடைந்து ஒன்றுந்தோன்றாமல் தான் ஸ்ரீராமனிடம் போகாமல் எங்கேயாவது ப்ராணத்யாகஞ் செய்திடுவதாக நிச்சயித்திருந்த வளவில் ஆகாசத்தில் போகிற சாரணர் 'இலங்கை முழுதும் வெந்தபோதிலும் ஸீதாதேவி பிழைத்திருப்பது வெகு ஆச்சரியம்' என்று சொல்லக்கேட்டு, அங்கு நின்றும் புறப்பட்டு ஸீதையிடம் சென்று வணங்கி விடைபெற்றுக்கொண்டு தென்கரையினின்றுங் கிளம்பி வடகரையில் மஹேந்திர பர்வதத்தில் வந்து குதித்து அங்கதன் முதலியவர்களுக்குக் கீழ்நடந்த செய்திகளைச் சொல்லி மகிழ்வித்து அங்கு நின்றும் எல்லோரும் கும்பலாகப் புறப்பட்டு மதுவனத்திற்கு வந்து மதுவையெல்லாம் பானஞ்செய்து அவ்வனத்தை அழித்து உடனே கிளம்பி இராமபிரானிருக்குமிடம் வந்து சேர்ந்து பிராட்டி தந்த சூடாமணியை இராகவனிடம் கொடுத்து நடந்த செய்திகளையும் பிராட்டியின் நிலைமையையும் பரக்கச்சொல்லி இராகவனுக்கு யுத்தத்தில் உத்ஸாஹத்தை வளர்த்தி வாநரவீரர்களுடைய பராக்ரமங்களையும் சொல்லி முடிக்க, இராமபிரான் ஹர்ஷ சோகங்களிரண்டுக்கும் பரவசப்பட்டு நல்ல முஹூர்த்தத்தில் படைகளைத் திரட்டிக்கொண்டு இலங்கை நோக்கிப் புறப்பட்டார். அனைவரும் கடலின் தென்கரை சென்று சேர்ந்தனர்.

## இராவணன் விபீஷணனைத் திரஸ்கரித்தல்.

அக்காலத்தில் இலங்கையில் இராவணன் ஸபைகூட்டி "ஸுக்ரீவனுடைய மந்திரியாகிய ஓர் குரங்கு வந்து இலங்கையை அழித்துவிட்டுப் போயிற்று; இனி நாம்வெறுமனிருக்கலாகாது; இப்போது நான் செய்யத்தக்க உபாயமென்? எனக்கு ஸீதையை இராமனுக்குக் கொடுக்க இஷ்டமில்லை; உங்கள் கருத்தைச்சொல்லுங்கள்" என்ன; ப்ரஹஸ்தன் முதலிய மந்திரிகளும் இந்திரஜித்து முதலிய புதல்வர்களும் மற்றும் பந்துவர்க்கங்களும் தாமஸப்ரக்ருதிகளாய் நல்வழியறியாமல் இராவணன் சோற்றையுண்டு அவன் வழியே போமவர்களாகையால் இராவணன் சொன்னதையே அநுமோதித்து அதற்குத்தக்க யுக்திகளையுஞ் சொன்னார்கள். தர்மாத்மாவாகிய விபீஷணனாழ்வான் "அண்ணா! நான் சொல்லும் ஹிதத்தைக்கேளும்" என்று தொடங்கிப் பலவாறாக உஜ்ஜீவிக்கும் வழிகளைக் கூறியவிடத்தும் இராவணன் யமனுக்கு ஆட்பட்டபடியாலே அந்த ஹிதோபதேசங்களை ஆதரியாமல் விபீஷணனை வெகுவாகத் திரஸ்கரித்தான்.

பிறகு விபீஷணாழ்வான் ‘இனி நமக்கு இப்பாவியின் ஸஹவாஸம் நொடிப்பொழுதும் தகாது; ஸ்ரீராமபிரானையே சரணமடைந்து உஜ்ஜீவிக்கத் தகும்’ என்று நிச்சயித்து உடனே அந்தஸபையில்நின்றும் கதாபாணியாய் ஆகாசத்தில் உயரக்கிளம்பினார். அவருடன்கூட அவருடைய நான்கு மந்திரிகளும் கிளம்பினார்கள்.

## விபீஷண சரணாகதி.

விபீஷணன் அந்த மந்திரிகள் நால்வருடன் கூடவந்து தென்கடலுக்கு வடகரையில் இராகவனெழுந்தருளியிருக்குமிடத்தில் ஆகாசத்தில் நின்றவண்ணமாகவே ஸுக்ரீவாதி வானரவீரர்களை முன்னிட்டு, தன் வரலாறுகளையெல்லாஞ் சொல்லித் தன்னைப் பெருமாள் கைக்கொண்டருளுமாறு பிரார்த்தித்துச் சரணம் புகுந்தான். இதைக்கேட்ட வானரர்கள் இராமபிரானிட மோடிச் சென்று “ஸ்வாமின்! இராவணனுடைய தம்பியாம்; கையில் கதையை எடுத்துக்கொண்டு நான்கு அரக்கர்களுடன் கூட வந்திருக்கிறான்; தேவரீரைச் சரணம் புகுந்ததாகச் சொல்லுகிறான்; இவனை உள்ளே புகவிட்டால் ஸமயம்பார்த்துத் தீங்கு விளைத்திடுவான்; இவனை இப்போதே கொன்று விடுவதே நலம். இவனை ஏற்றுக்கொள்வதாகத் திருவுள்ளமுண்டாகிலும் பரிசோதனை செய்யாமல் ஏற்றுக்கொள்ளலாகாது” என்று அவரவர்கட்குத் தோன்றியபடியே தனித்தனி வானர முதலிகள் சொல்ல, பிறகு இராமபிரான், திருவடியின் கருத்தை உணர்ந்துகொண்டு இவ் விபீஷணன் அங்கீகரிக்கத்தக்க நற்குண நற்செய்கைகளை யுடையவனே’ என்று நிர்த்தாரணஞ் செய்து அவனைத் தன்னருகே அழைத்துக்கொண்டு வரும்படி ஸுக்ரீவ மஹாராஜர்க்கு அருள்பாடிட, அவன் விபீஷணாழ்வானை இராமபிரானிட மழைத்துக்கொண்டு செல்ல, விபீஷணன் பெருமாளுடைய பாதாரவிந்தங்களிற் பணிந்து லங்காவ்ருத்தாந்தங்களை யெல்லாம் விண்ணப்பஞ் செய்து, யுத்தத்தில் இராகவனுக்கு வேண்டும் உதவிகளையெல்லாம் செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்ய, இராமபிரான் அந்த விபீஷணனுக்குக் கடலினின்றும் ஜலம் வரவழைத்து “லங்காராஜ்யத்தில் உமக்குப் பட்டாபிஷேகம் பண்ணினோம்” என்று அபிஷேகம் செய்வித்தார்.

## கடலில் அணை கட்டுதல்.

பின்பு விபீஷணன் பெருமாளைப் பார்த்து “ஸ்வாமீ! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக் கடந்து அப்பாற் செல்லவேண்டியதாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம்புகவேணும்” என்ன; இராமபிரான் “கடலைக்கடக்க உபாயம் சொல்லவேண்டும்” என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பசயனத்திலே படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க; ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக்கருதாமல் உபேக்ஷையாயிருந்து விடவே, ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு ‘அனைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச் செய்வேன்’ என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கிய வளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து, கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன் கையினால் நீரில் போகட்ட கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித்திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேது கட்டவேணுமென்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டான். இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப் பிடுங்கிக் கொண்டுவந்து நளன் கையில் கொடுக்கச்செய்து நளன் கையினால் அம்மலைகளை நீரில் போகடுவித்து ஸேது கட்டுவித்தான். அவ்வழியாய் வானர ஸேனைகளெல்லாம் புறப்பட்டு இலங்கைக்கருகிலுள்ள மலைச்சாரலில் போய்ச்சேர்ந்தன.

## ஸீதைக்கு மாயாராம சிரஸ்ஸைக் காட்டுதல்.

பின்பு இராவணன், வானர ஸேனை திரண்டு வந்திருக்கின்றமையைச் சுகஸாரணர் வாயிலாக அறிந்து வித்யுஜ்ஜிஹ்வனென்கிற மாயாவிமூலமாய்ப் பொய்யாகிய இராமன் தலையைக்கொண்டு ஸீதையிடஞ்சென்று ‘இதோ பார்! இராமனுடைய தலையை அறுத்துக்கொண்டு வந்தேன்’ என்றுகாட்ட, ஸீதை மிகவும் வருந்திக் கூக்குரலிட்டு அழத்தொடங்க, அப்பொழுது விபீஷண

னுடைய மனைவியாகிய ஸரமை யென்பவள் வந்து "அம்மா! இது பொய்; இதை நம்பாதே; இவ்வுலகில் இராமனையும் வெல்ல வல்லாருண்டோ? இதோ பார் வாநரவீரர்கள் இலங்கையைச் சுற்றிக்கொண்டு வீரநாதம் செய்கிறார்கள்! நீ வருந்தவேண்டா" என்று ஸமாதாநஞ் சொல்ல, ஸீதை தேறினாள்.

## அங்கதனுடைய அற்புதச் செயல்.

இராவணன் ஸேதுபந்தம் முதலியவற்றைப் பார்த்தாகிலும் புத்தி திருந்தி வருவனோவென்று மநோரதித்த இராமபிரான் அங்கதனை இராவணனிட மனுப்பினார். அங்கதன் சென்று இராவண ஸபையிலுட்கார்ந்து அவனை நோக்கி 'ஓ ராக்ஷஸ ராஜனே! சக்ரவர்த்தி திருமகனார் உனக்கு நியமிக்கிறார்;—'நீ இன்னும் சிலநாள் இவ்வைஸ்வர்யத்துடன் வாழ நினைத்தாயாகில் ஸீதையைக் கொணர்ந்து கொடுத்துவிடு'; மேலும் என்னுடைய தகப்பனாரான வாலி உனக்குத்தெரியுமன்றோ? உன்னைத் தன்வாலினால் சுற்றி எடுத்துக்கொண்டு போய் நான்கு ஸமுத்ரத்திலும் ஒரு சின்ன புழுவைத் தோய்ப்பது போல் தோய்த்தெடுத்த பராக்ரமசாலியன்றோ? அந்த வாலியை இந்த ஸ்ரீராமன் ஒரே அம்பினால் கொன்றுவிட்டார்; இதைக்கேட்டாகிலும் இனி நீ அவரிடத்திற் பகையை ஒழித்து நட்புக்கொள்' என்று சொல்ல, இராவணன் கோபித்து அங்கதனைப்பிடித்துக் கொல்லும்படி அரக்கர்கட்குக் கட்டளையிட, அப்படி பிடித்துக்கொண்ட நான்கு ராக்ஷஸர்களையும் தன் கக்ஷத்திலிடுக்கிக்கொண்டு ஆகாசத்திற் கிளம்பி அவ்வரக்கர்களை இராவணனுடைய விமாநத்தின்மேல் சுழற்றி யடித்து அவ்விமானத்தையும் உடைத்துவிட்டு இராமனிடம் வந்து சேர்ந்தான்.

பிறகு வாநர வீரர்கள் இலங்கையை முழுதும் சூழ்ந்துகொண்டு ராக்ஷஸ ஸேனைகளோடு எதிர்த்துப் போர்புரிந்தனர். அந்த யுத்தத்தில் வாநரர்களும் ராக்ஷஸர்களும் ஒருவர்க்கொருவர் அடித்துக்கொண்டு அநேகர் மாண்டனர். ஒருகால் இந்திரஜித்து வந்து ஸ்ரீராம லக்ஷ்மணர்களோடு யுத்தஞ்செய்து அவ்விருவரையும் நாகபாசத்தினால் கட்டிவிட்டு இராவணனுக்கு அறிவிக்க, இராவணன் ஸீதையை விமாநத்திலேற்றிக்கொண்டு வந்து காண்பிக்க, அப்பொழுது ஸீதை பெரியதிருவடியை த்யாநஞ்செய்ய, ஆகாசத்தில் நின்றும் கருடன் வரும்போது அவருடைய இறகுகளினின்று முண்டான காற்றுப்பட்டு அந்நாகபாசம் நீங்கிவிட்டது. [இராவணாதியரை அழித்தற்பொருட்டுத் திருமால் இராமனாய்த் திருவவதரித்த பொழுது அப்பெருமானது திருவுள்ளத்தின்படி லக்ஷ்மி, சங்கசக்கரங்கள், ஆதிஸேஷன் என்பவர்களும், பிரமன் உருத்திரன் இந்திரன் சூரியன் வாயு அக்நி முதலிய தேவர்களும் ஏற்ற வடிவங்கொண்டு உதவியதுபோல, கருடாழ்வான் நிஜரூபத்துடனேயே இப்பொழுது இங்குவந்து இவ்வாறு உதவி இராவணவதத்திற்குத் துணைமை புரிந்தனனென்க.]

## இராமன் இராவணனை 'இன்று போய் நாளைவா' என்றல்.

ராமராவண யுத்தத்தில் முதல்நாட்போரிலே இராமனம்புகளால் இராவணன் கிரீடங்களையும் ஆயுதங்களையும் சேனைகளையும் இழந்து சோர்ந்து வெள்கி முகங்கறுத்துத் தலைகுனிந்து நின்ற சமயத்தில், இராமபிரான், இப்படி யாவுமிழந்திருக்கின்றவனை இப்பொழுது கொல்லலாகாதென்று திருவுள்ளம்பற்றி, அவனை நோக்கி 'தனியனாய் வெறுங்கையுடனிருக்கின்ற உன்னை இப்பொழுது நான் கொல்வேனல்லேன்; நீ இன்று உயிர்தப்பிச்சென்று, சேனைகளையும் ஆயுதங்களையும்

வித்தஞ்செய்துகொண்டு நாளைக்குப் போர்க்குப் பிரியமிருந்தால் வா' என்று பலவாறு இரக்கத்தோடு சொல்லியனுப்பியருளினன்.

## கும்பகர்ண வதம்.

மற்றொரு நாள் இராவணன் யுத்தத்திற்கு வந்து இராமனை எதிர்த்துச் சண்டை செய்து பின்பு ஸ்ரீராமபாணத்தினலடிபட்டு முன் நிற்கமாட்டாமல் ஓடிப்போய், உறங்கிக்கொண்டிருந்த கும்பகர்ணனை யெழுப்பி யுத்தத்துக்கனுப்பினன். அவனைக்கண்டு வாநரஸேனைகள் அஞ்சியோடின; இராமபிரான் அவனுடைய கைகால்களைத் துண்டம் துண்டமாகத் தறித்துவிட்டு அவனை யமலோகத்துக்கு அதிதியாக்கினர்.

இராவணனுடைய மந்திரிகளையும் ஸேநாபதிகளையும், ஸுக்ரீவன் ஜாம்பவான் ஹநுமான் அங்கதன் முதலிய வாநரவீரர்கள் பற்களால் பிளந்தும் கால்களினல் துகைத்தும் கைகளினல் அறைந்தும் கொன்று விட்டார்கள்.

## இந்திரஜித் வதம்.

மற்றொருநாள் இந்திரஜித்து யுத்தத்திற்கு வந்து சிறிதுநேரம் எதிரில் நின்றும் சிறிது நேரம் மாயையினல் ஆகாசத்தில் மறைந்திருந்தும் யுத்தஞ்செய்து பின்பு சென்று இவர்கள் முன்னே மாயாஸீதையின் தலையை யறுத்து இவர்களுக்கு வ்யஸநத்தையுண்டாக்கி விட்டுத் தான் நிகும்பிலை யென்னும் யாகஞ்செய்யத் தொடங்கினன். இதை விபீஷணனறிந்து ஓடிவந்து ஹநுமான்மேல் லக்ஷ்மணனை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு தானுங்கூட ஸஹாயமாய்ப்போய் அவனுடைய யாகத்தை அழித்து யுத்தஞ்செய்யத் தொடங்க, லக்ஷ்மணன் இந்திரஜித்துடன் மூன்று நாள் யுத்தஞ்செய்து மூன்றுநாள் ஸாயங்காலம் இந்திரஜித்தினுடைய தலையை அறுத்துத் தள்ளிவிட்டார்.

## லக்ஷ்மண சக்தி.

இந்திரஜித்து மாண்டொழிந்ததை இராவணன் கேட்டு வெகு கோபத்துடன் வந்து லக்ஷ்மணன்மேல் சக்தியை எறிந்து அவரை மூர்ச்சையடையச்செய்து இராகவன் மேல் பல பாணங்களைப் பொழிந்து வர, இராமபிரான் அவனை யுத்தத்தில் கால்பாவவொட்டாமல் அடித்துத்துரத்திவிட்டு லக்ஷ்மணனை யெடுத்து மடியில் விட்டுக்கொண்டு மிகவும் ப்ரலாபித்துக் கொண்டிருக்க, பின்பு அனுமான் ஸஞ்ஜீவிமலையைப் பிடுங்கி எடுத்துக்கொண்டு வந்து அதனல் லக்ஷ்மணனை ஸ்வஸ்தப்படுத்தினன்.

## இராவண ஸம்ஹாரம்.

பின்பு கடைசி நாள் யுத்தத்தில் இராவணன் தேரேறி யுத்தத்திற்கு வர, இராமபிரான் கீழே நின்று யுத்தஞ்செய்வது தகுந்ததல்லவென்று தேவேந்திரன் மாதலியோடுகூட அனுப்பிய திவ்ய ரதத்தின்மேலேறி யுத்தஞ்செய்து அவனுடைய பொன்முடிகள் பத்தையும் அறுத்துத்தள்ளிவிட்டு அவனை யமபுரிக்கு அனுப்பிவிட்டார்.

## மண்டோதரி இராமனைத் துதித்தல்.

இராவணன் மாண்டுபோனதைக் கேட்ட மண்டோதரி முதலானவர்கள் வந்துபார்த்து அழுது, இராகவனை மண்டோதரி நிமிர்ந்து பார்த்ததும், இவன் ஸாக்ஷாத் நாராயணனேயாகவேணும்; அல்லாதார் என்பர்த்தாவைக்கொல்ல முக்தரல்லர், என்று சொல்லி இராமனைத் துதித்தனள்.

பிறகு இராமபிரானுடைய நியமநம் பெற்று விபீஷணன் இராவணனைப் பல்லக்கிலேற்றிக்கொண்டு போய் ஸம்ஸ்காரங்களைச்செய்து உத்தரக்ரியைகளை யெல்லாம் குறையற நடத்தினர். அதற்குப் பின்பு இராமன் இளையபெருமாளைக்கொண்டு விபீஷணனுக்கு இலங்கையில் பட்டாபிஷேகம் செய்வித்தார்.

## பிராட்டியின் மஹாகுணம்.

பின்பு பெருமாள் ஹநுமானை நோக்கி 'நீர் போய்ப் பிராட்டியை அழைத்துவாரும்' என்று நியமிக்க, திருவடி சென்று பிராட்டிக்கு இராவணவதத்தையும் ஸ்ரீராமவிஜயத்தையும் அறிவிக்க, அதற்கு அவள் மறுமொழி ஒன்றுங்கூறாதிருக்க, 'அம்மா! ஸந்தோஷ காலத்தில் பேசாதிருக்கைக்குக் காரணமென்?' என்று திருவடி கேட்க; 'உமக்குத் தக்கதான ஒரு கைம்மாறு செய்ய நினைத்து ஒன்றுங் காணாமையால் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன்' என்று பிராட்டி மறுமொழி கூற, 'ஆகில் என்மநோரதத்தை நான் நிறைவேற்றிக்கொள்ளும்படி நியமிக்கவேணும்; அதாவது—இந்த ராக்ஷஸிகள் இராவணன் முடிந்தானென்றறியாமல் முன்போலவே உம்மை நலிகின்றார்கள்; இவர்களைச் சித்ரவதஞ்செய்ய எனக்கு உத்தரவு கொடுக்கவேணும்' என்று கேட்க; அதற்குப் பிராட்டி 'அப்பா வாநரோத்தமனே! இவர்கள் என்ன செய்வார்கள்? இவர்கள் இராவணனுக்கு வசப்பட்டு இப்படி செய்கிறார்கள்; இவர்கள் யஜமாநனுடைய கட்டளையைத்தழுவி யொழுகுவது தப்பன்று; இவர்கள் செய்தது தோஷமென்று உமக்குத் தோன்றினாலும் இவர்கள் பக்கல் கருணையைக் காட்டுவதே நலமாம்; உலகத்தில் அபராதம் செய்யாதாருண்டோ? என்று பலவாறாகச் சொல்லி இரக்கத்தை உண்டாக்கி அவ்வாக்கிகளைப் பாதுகாத்தருளினள்.

## ஸீதையின் அக்நிப்ரவேசம்.

பின்பு பிராட்டி திருவடியோடு கூட இராமபிரானிடம் வர, இராமன் உலகத்தார் பழி சொல்லாமைக்காகப் பிராட்டியை அக்நிப்ரவேசம் செய்வித்துத் தேவர்களுடையவும் மஹர்ஷிகளுடையவும் அநுமதியையுங்கொண்டு சேர்த்துக்கொண்டனர்.

பிறகு சக்ரவர்த்தித் திருமகனார் ஸீதா லக்ஷ்மண ஸமேதராய் ஸுக்ரீவாதிகளையும், யுத்தத்தில் மாண்டுபோய்ப் பின்பு தேவர்களுடைய வரத்தினால் பிழைத்தெழுந்த மற்ற ஸமஸ்த வாநர வீரர்களையும் கூட்டிக்கொண்டு புஷ்பகவிமானத்திலேறி ஆகாசமார்க்கமாய் வந்து பாரத்வாஜாஸ்ரமத்திலிறங்கி அம்முனிவர் 'இந்தவேளை இங்கே தங்கிப்போகவேணும்' என்ன; அதற்கு இசைந்த இராமபிரான் மூர்த்து முன்னம் திருவடியை யனுப்பித் தன்வரவைப் பரதனுக்கறிவித்து மறுநாள் அயோத்திக்கெழுந்தருளினர்.

## ஸ்ரீராமபட்டாபிஷேகம்.

ப்ரதிஜ்ஞைப்படி பதினான்கு வருஷம் நிரம்பியும் இராமபிரானெழுந்தருளக் காணாமையாலே துடித்துக்கொண்டிருந்த பரதாழ்வான் (முதல்நாள்) திருவடி மூலமாக ஸ்ரீராம ஸமாகமத்தை

அறிந்து நகரமுழுதும் தோரணங்கள் கட்டிக் கொடிகளைத் தூக்கித் தெருக்களில் நீர் தெளித்துக் கோலமிட்டு மாளிகைகள் தோறும் பூர்ணகும்பங்களையும் மங்களதீபங்களையும் வைப்பித்து அபரிமிதமான அலங்காரங்களைச் செய்வித்து, பேரீசங்கம் முதலிய வாத்யங்களை எங்கும் முழங்குவித்து மங்களார்த்தமாகப் பொரிகளையும் மோதகங்களையும் பூர்ணகும்பங்களையும் புது வஸ்த்ரங்களையும் புஷ்பங்களையும் பழங்களையும் எடுத்துக்கொண்டு நகரத்திலுள்ள மஹாஜநங்களோடு கூடி ப்ராஹ்மணர் ஸ்வஸ்திவாசநஞ் சொல்லத் தாம் எதிர்கொண்டு சென்று இராமபிரானையும் ஸீதாதேவியையும் திருவடி தொழுது இலக்குமணனை ஆரத்தழுவி, சிலர்ஸ்தோத்ரங்கள்சொல்ல, சிலர்காஹளங்களூத, சில பெண்கள் வெண்சாமரம் வீச, சிலர் மயில் தோகைச்சுருட்டிகளைப் பிடிக்க, சிலர் விசிறிகளெடுத்து வீச, சிலர் கீழ்விரி விரிக்க, முத்துக்குடைகள் பிடிக்க, பெண்கள் மங்களம்பாட, வெகு கோலாஹலத்துடன் இராகவனை நகரப்ரதக்ஷிணமாக எழுந்தருளப்பண்ணிக் கொண்டு போய் நவரத்நமயமான மஹாமண்டபத்தில் திவ்யஸிம்ஹாஸநத்தில் இராமபிரான் வீற்றிருக்க, தானும் சத்ருக்நனும் கைகூப்பி நிற்க, அவ்வளவில் வஸிஷ்ட மஹாமுனிவர் புண்யதீர்த்தங்களினின்றும் தீர்த்தங்களை வரவழைத்து இராகவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார்.

ஸ்ரீராமன் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு கௌஸலையார் முதலிய தாய்மார்களையும் தம்பிகளையும் பரிஜநங்களையும் பௌரஜநங்களையும் ஒருமிடறாக உகப்பித்துக்கொண்டு தீய வழிகளைச் சிதைத்து நல்வழிகளை விளக்கிக்கொண்டு பதினோராயிரம் வருஷ காலம் ராஜ்ய நிர்வாஹஞ்செய்து ஸுகமாக வாழ்ந்திருந்தார்.

ஸ்ரீராமாவதார வைபவ ஸங்க்ரஹம்.

முற்றிற்று.



